த.பா.நி. (க. வெ.) வரிசை எண்—319

# இரட்டையாட்சி

(பட்டப்படிப்பிற்குரியது)

ஆசிரியர்

எஸ். சிங்கராசன், எம்.ஏ., எம்.லிட்.,
இயக்குநர், தமிழ்நாடு ஆவணக் காப்பகம்,
சென்னை-8.






தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition—May, 1972

T.N.T.B.S. (C.P.) No. 319



**DYARCHY**

S. SINGARAJAN

**Net Price Rs. 9 - 00**
(No discount)

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University Level, of Government of India in the Ministry of Education and Social Welfare.'

*Printed by*
The Tranquebar Publishing House,
9, Abirami Street,
Madras - 84.

# அணிந்துரை

## திரு. இரா. நெடுஞ்செழியன்

(தமிழகக் கல்வி–உள்ளாட்சித் துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினோராண்டு கள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.) 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப்படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள் ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவ தற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெரு முயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக் கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், பௌதிகம், வேதி யியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழி பெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'இரட்டையாட்சி' என்ற இந் நூல் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **319** ஆவது வெளியீடாகும் இது வரை **354** நூல்கள் வெளிவந்துள்ளன இந்நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம் தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெற வேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங் களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

பக்கம்



---

List of Abbreviations used,

J. C. I. C. R. — Joint Committee on Indian Constitutional Reform.

MNR. — Madras Newspaper Report from 1874-1936 (The Newspaper Reports from 1874-1896 are officially named as Native Newspaper Reports, and the Reports from 1900 are called Madras Newspaper Reports.) For reference both are termed as MNR.

Confidential.

# 1. முன்னுரை

## 1

### (அ) ஆங்கிலேயருடைய ஆட்சியினுல் ஏற்பட்ட பலன்கள்

ஆங்கிலேயர்கள், தங்கள் ஆட்சியை இந்தியாவில் நிலை நாட்ட எண்ணியதன் விளைவாக, சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த பல அரசியல், நிர்வாக, சமுதாயச்சீர்திருத்தங்களை இங்கு மேற்கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இவைகளில் சில, அவர்கள் அதிகாரத்தைப் பலப்படுத்த ஆதாரமாக அமைந்தனவெனினும், நாளடைவில், அவர்கள் மேற்கொண்ட நடவடிக்கைகள் இந்திய மக்களின் வாழ்வில் புரட்சிகரமான மாற்றங்களை ஏற்படுத்தின. உதாரணமாக, இந்தியாவில் பலம் பொருந்திய மத்தியமாக்கப்பட்ட, ஒருமுகமான ஓர் அரசாங்கத்தைப் பல போர்களின் காரணமாகவும், நிர்வாகத்தின் காரணமாகவும் ஆங்கிலேயர் அடிகோலினர்; ஆனுல், அவர்களுடைய பலம் பொருந்திய அரசாங்கம் உள்நாட்டுப் போராட்டங்களைத் தவிர்க்கவும், மக்களுக்குப் பாதுகாப்பு அளிக்கவும் பேருதவியாக இருந்தது இப்படிப்பட்ட வலிமை பொருந்திய ஓர் அரசாங்கம்[1] முகலாயப் பேரரசின்பின் இந்தியாவில் பெரிதும் தேவைபட்டது. ஏனெனில், முகலாயப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பின்னர் இந்தியாவில் பெருங்குழப்பமும், மக்களிடையே பெருபீதியும், கலவரமும் தாண்டவம் ஆடின. சின்னுபின்னமாக்கப்பட்டமுகலாயப்பேரரசின் அதிகாரம் பலவாருகச் சிதறிக் கிடந்தது. இந்நிலை, மக்களிடையே பாதுகாப்பின்மையை உண்டாக்கியது. ஆகவே, இத் தருணத்தில் இந்தியாவின் ஆட்சியை ஏற்றுக்கொண்ட ஆங்கிலேயர், சிதறிக்கிடந்த இந்த அதிகாரத்தைக் கூட்டி ஒருமைப்படுத்தி, இந்திய நிர்வாகத்திற்குப் புத்துயிர்அளித்து,

[1] See the History of India after the Fall of the Mughal Empire, vide Joint Committee on Indian Constitutional Reform, Proceedings 1933-34, Vol. I, Part II, His Majesty's Stationery Press London 1934, page 473.

மக்களிடையே ஏற்பட்ட போராட்டங்களையும், குழப்பங்களையும் மாற்றி, ஒரு பலம்பொருந்திய அரசாங்கத்தை உருவாக்கினர். இந் நடவடிக்கைகளின் காரணமாகப் பரதகண்டம் அதன் சரித்திரத்தில் முதன்முறையாக ஒற்றுமை அடைந்தது. இதனால், உள்நாட்டு மன்னர்களிடையே நடந்து வந்த போராட்டங்களும், குறுநில மன்னர்களிடையே ஏற்பட்டிருந்த கொரில்லாச் சண்டைகளும் நாளடைவில் மறைந்தன. அந்நியர்களும் உள்நாட்டவர்களும் மக்களுக்கு விளைவித்து வந்த இடையூறுகள் பெரும்பாலும் தவிர்க்கப்பட்டன. நாட்டைச் சூறையாடிய பலரும் ஒடுக்கப்பட்டதனால், நாட்டுமக்கள் கொடுமையிலிருந்தும், வறுமையிலிருந்தும் விடுபட்டனர். நிர்வாக அடிப்படையில் இந்தியத் துணைக்கண்டம் பலம் பொருந்திய ஒரு கவர்னர் ஜெனரலின் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவரப்பட்டதன் காரணமாக, அன்றுவரை ஒன்றுபடாமல்[1] இருந்த இந்தியமக்களின் வாழ்வில் இந் நடவடிக்கை ஒரு பெரும்மாறுதலை உண்டாக்கியது. 1833ஆம் ஆண்டு பஞ்சாப்பையும், 1853ஆம் ஆண்டு சிந்துப் பிரதேசத்தையும் டல்ஹௌசி பிரபு தமது ஆட்சியின்கீழ்க் கொண்டு வந்தார்.[2] இப் பிரதேசங்களில் வாழ்ந்த மக்களும், 1947ஆம் ஆண்டுவரை, இந்திய ஆட்சிக்குக் கட்டுப்பட்டு, இந்திய மக்களோடு ஒருமைப்பட்டு இருந்தனர். இதனால், சரித்திர ஆசிரியர்கள் டல்ஹௌசி பிரபுவை 'நவீன இந்தியாவின் நிர்மாணி' என அழைத்தனர்.

ஒருமுகப்பட்ட ஓர் அரசாங்கத்தை இந்தியாவில் ஏற்படுத்தியதன் பலனாக இந்தியமக்களிடையே ஒரு புதிய அரசியல் ஒருமைஉணர்வு ஏற்பட்டது நாட்டில், நிரந்தரமான ஒரு நிர்வாகத்தையும், சமாதானமான ஒரு சூழ்நிலையையும் உருவாக்க இந்தியர்களுடைய ஒத்துழைப்பும்[3] ஒரு முக்கியக் காரணமாக இருந்தது.[4] பலதரப்பட்ட மக்களும், புதிதாக ஸ்தாபிக்கப்பட்ட இந்திய அரசின் குடிமக்கள் என்ற ஒருமைஉணர்வு பெறுவதற்கு ஆங்கில அரசு காரணமாக இருந்தது. சுதேச மன்னர்கள்

[1] See V. P. Menon, The Story of Integration of the Indian States, Orient Longmans Ltd., London, 1956, page 1.

[2] See B. Pattabi Sitaramayya, The History of the Indian National Congress, 1885-1935, page 8, All India Congress Committee, Allahabad.

[3] The help rendered by the Princes and Indian troops were also responsible for the conquest of India, though the conquest of India by Britain was accidental. British conquest of India proved to be beneficial to Indians. Vide Swadeshabhimany Report on Tamil Newspapers ending with 13th November, 1886.

[4] See Chairman's Report, Joint Committee on Indian Constitutional Reform Proceedings, 1933-34, Vol. I, Part II, 1934, p. 6.

கூட இந்திய அரசாங்கத்தின் பலத்தை அறிந்து இந்திய அரசோடு ஒருமைஉணர்வு பெற்றனர்.

ஆங்கிலேயர்கள் இந்தியாவில் அமைத்த நிர்வாக இயந்திரம் நவீனமானதும் பண்பட்டதுமாகஅமைந்தது.[1] 1857ஆம் ஆண்டு நடந்த இந்தியத் தேசியப் போராட்டத்தின்பின் ஆங்கிலேயர்கள் இந்திய நிர்வாகத்தில் ஏற்படுத்திய சீர்திருத்தங்களும், மாற்றங்களும் நாளடைவில் நிர்வாகத்தை மேலும் விரிவடையச் செய்ததோடு மக்களுக்குப் பெரும்நன்மையைப் பயந்தன. இந்திய நிர்வாகம், முதன்மையான நிர்வாகத்தைப்பெற்ற, நாகரிகமடைந்த முக்கிய நாடுகளில் காணும் நிர்வாகத்தோடு ஒப்பிடப்பட்டது. இந் நிர்வாகத்தின்கீழ், மக்கள் உயிர்க்கும், அவர்கள் உரிமைகளுக்கும் அளிக்கப்பட்ட பாதுகாப்பு, மக்களுக்கு அளிக்கப்பட்ட ஒரு பெரும்பரிசு எனவே போற்றப்பட்டது.[2] ஆங்கிலேயர் காகிதத்தின் மூலமும், சட்டங்களின் மூலமும், மக்களை ஆட்சி செய்ய ஆரம்பித்தனர் (அரசாங்கத்தின் ஆணைகளும், மக்களின் ஊதியமும் காகித வடிவாகவே உள்ளன); ஆயுத பலம் திரைமறைவில் ஒழிந்தது.

இரயில் பாதைகளும், இரயில் வண்டிகளும், துணைக்கண்டமாகிய இந்தியாவின் ஒரு பகுதியிலிருந்து, மற்றொரு பகுதிக்குப் படைகளை அவசரமாகவும், மிகுதியாகவும் கொண்டுசெல்வதற்காக அமைக்கப்பட்டன. ஆனால், இந்த இரயில்பாதைகள் வியாபாரத்திற்கும், தேவையான பொருள்களை ஒரு பகுதியிலிருந்து மற்றொரு பகுதிக்கு விரைவாகவும், அதிகப்படியாகவும் கொண்டுபோகப் பயன்பட்டன.[3] மேலும், இரயில் வண்டிகள், மக்கள் பெரும்பான்மையாகப் பிரயாணம்செய்யவும், வெவ்வேறு மாநிலங்களில் வாழ்கின்றவர்கள் சந்திப்பதற்கும், அம் மக்கள் தங்களிடையே கருத்துகளைப் பரிமாறுவதற்கும் பெரிதும் உதவியன. இவற்றிற்கெல்லாம் மேலாக, ஜாதிமத அடிப்படையில் உயர்வு தாழ்வுகளால் கட்டுண்டுகிடந்த மக்கள் சமமாக ஒருமித்து யாத்திரை செய்வதற்கும் ஒரு பெரும் வாய்ப்பை அளித்தது.[4] இதனால், ஒருமை உணர்வும், தேசிய ஒருமைப்பாட்டு நினைவுகளும் மக்கள் மனத்தில் உதித்தன. இதுபோன்றே தபால்,

[1] See Mazumdar, vide Sir Verney Lovett, A History of the Indian Nationalist Movement, 1921, p. 230.

[2] Ibid

[3] See the Modern Economic History of India by Dr. M. Arokiaswami and T. M. Royappa, vide Chapter IV, Railway Development in India, page 45-48.

[4] Ibid

தந்தி நிறுவனங்கள் அரசாங்க அலுவல்களையும், வியாபாரத்தையும் விரைவுபடுத்தியதோடு, விரிந்த நிலப்பரப்பில் வாழும் மக்கள் மனத்தையும் அருகில் கொண்டுவந்தது.

வெளிநாட்டவர்கள் ஏற்படுத்திய புதிய ஆட்சியில் நாகரிகத்தின் அடிப்படையிலும், நீதியின் அடிப்படையிலும் புதிய சட்டங்கள் அமுலாக்கப்பட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஜாதியாலும், மதத்தாலும், பழக்கவழக்கங்கள் வேறுபட்டு, தொட்டிலிலிருந்து சுடுகாடுமட்டும் சண்டையிடும் பழக்கம் வாய்ந்த இந்திய மக்களிடையே ஆங்கிலேயப் பழக்கவழக்கங்கள் பரப்பப்பட்டன. மேலும், எல்லோரும் சமம் எனக் கூறும் புதிய சட்டங்களும் அமுல் செய்யப்பட்டன.[1] மக்களிடையே உயர்ந்தவர், தாழ்ந்தவர், பணக்காரர், ஏழை என்ற வேறுபாடு அகன்று, எல்லோரும் தாம்பிறந்த நாட்டில் வாழச் சுதந்திரமும், சமத்துவமும் பிறப்புரிமையாக அடைய அடிக்கல் நாட்டியது. இத்தருணத்தில், இந்திய நீதிமன்றங்கள், மக்கள் உரிமைகளை விளக்கும் ஆரம்பக் கல்விநிலையங்களாக அமைந்தன. இக்காரணம் பற்றியே சட்டமன்ற வழக்கறிஞர்கள் வாயிலாக, மக்களாட்சியின் கருத்துகளைப் பொதுமக்களிடையே பரப்புவதற்கு நல்வாய்ப்பு ஏற்பட்டது. உண்மையில், இவ் வழக்கறிஞர்கள் ஜனநாயக அரசாங்கத்தின் தன்மைகளைப் பரப்பும் பேராசிரியர்களாவர். ஆனால், இக்காலங்களில் அவர்கள், இது போன்ற ஒரு சிறந்த பணியில் ஈடுபட்டிருப்பதை உணரவில்லை.[2]

ஆங்கிலேயர்கள், கனயந்திரத் தொழிற்சாலைகளையமைத்து, தொழில் நுட்பக் கருத்துகளையும் பரப்பினர். இதனால், மத்திய (medeival) காலத்திய படைக்கிடு நிலமானிய முறையும் (Feudalism), மத்தியகாலத்துப் பழக்கவழக்கங்களும் நாளடைவில் மறைய ஆரம்பித்தன. மக்களிடையே நவநாகரிகக் கருத்துகள் மேலோங்கின. கிராமத்தின் சிறிய அமைப்பில் வளர்ந்த மக்களுக்கு, விரிந்த மனப்பான்மையும், நாட்டுப்பற்றும் ஏற்பட ஏதுவாயிற்று. உண்மையில் ஆங்கிலேயருடைய ஆட்சி இந்திய சமுதாயத்தில் ஏற்பட்டிருந்த மூடநம்பிக்கைகளை அகற்றவும், பகுத்தறிவுக் கருத்துகளைப் பரப்பவும் பெரிதும் உதவியது.

[1] The Speech of George Nathaniel Curzon in the House of Commons, 28-3-1892, vide A. B. Keith Speeches and Documents on Indian Policy (Oxford University Press, England, 1922) Vol. II, p. 46.

[2] See No. 25 (2) Vivekavartani (Weekly) Nov. 1886, MNR. CI. pp 10-11.

ஆகவே, ஆங்கிலேயர் ஆட்சி, இந்தியா மறுபிறவி அடையச் 'சரித்திரத்தின் புலன்படாத கருவியாக' (Unconscious Tool of History)[1] அமைந்தது.

பலதரப்பட்ட மொழியைப் பேசும் மக்கள் வாழ்கின்ற ஒரு துணைக்கண்டமாக இந்தியா அமைந்த காரணத்தால், ஆங்கிலேயருடைய ஆட்சியில், அவர்கள் பரப்பிவந்த ஆங்கிலமொழி, மக்களிடையே பேதமின்றி, கருத்துகளை எளிதாகப் பரிமாறப் பெரிதும் உதவியது. பல மொழிகள் பேசப்படும் இந்தியத் துணைக்கண்டத்தை, 'மொழி வழித் தீவுகளால் ஆக்கப்பட்ட ஒரு தீபகற்பம்' எனப் பலரும் கருதினர்.[2] ஆனால், ஆங்கில மொழி, இந்தியத் துணைக்கண்டம் பூராவும் ஒரே விதமான கல்வியை அமைத்து, இக் கல்வியினால் ஏற்பட்ட ஒருமுகமான பலனைக் கற்றவர் எல்லோரும் அடையப் பெரிதும் உதவியது. சுருங்கக்கூறின், நாடு ஒருமைப்பட ஆங்கில மொழி பெரிதும் பயன்பட்டது. ஆங்கில மொழியில் தேர்ச்சி பெற்றவர்கள் தென்னிந்தியர்களே. இதில் குறிப்பாகப் பெயர் பெற்றவர்கள் தமிழர்களே.

இதுபோலவே, ஆங்கிலமொழி, மேனாட்டு விஞ்ஞானத்தைப் புதிதாக ஆரம்பிக்கப்பட்ட பல்கலைக்கழகங்களிலும், கல்லூரிகளிலும் விமரிசனம் செய்ய உதவியது.[3] இவற்றுக்கெல்லாம் மேலாக, மேனாட்டுக் கல்வி, 'சுயாட்சி அற்ற நல்ல அரசாங்கம் மக்களின் எல்லாத் தேவைகளையும் பூர்த்திசெய்யப் போதாதென்றும், சுயாட்சி எனக் கூறும் சக்தி உள்ள அரசாங்கம், மக்களே பொறுப்பேற்று நடத்தும் பொறுப்பாட்சியாகும்' என்ற சீரிய அரசியல் கருத்தும் மக்களிடையே வளர உதவியது.[4]

## (ஆ) ஜனநாயகச் செயல்முறைகள்

### அரசியல் ஜனநாயகத்தை உருவாக்கல்

ஆங்கில அரசு, சுயாட்சி, பொறுப்பாட்சி என்ற சிறந்த கொள்கைகள் இந்தியமக்களிடையே வளர்வதற்குக் காரணமாக

[1] See Karl Marx vide V. R. Palme Dutt, India-To-Day (People's Publishing House Ltd., Bombay) 1949, page 89.

[2] See C. Rajagopalachari, Article on 'English for Unity' in Swarajya (weekly, Madras) Feb. 20th 1965, pp. 31-38.

[3] See Public Despatches from England, 12th Aug. & 11th Nov. 1854, and 22nd Feb. 1855.

[4] See JCICR Vol. I, Part II, Preceedings 1933-34, Page 473.

இருந்ததுமல்லாமல் சுயாட்சியையும், பொறுப்பாட்சியையும் இந்தியாவில் செயல்படுத்தியது. இந்தியமக்கள் சுயாட்சியையும் பொறுப்பாட்சியையும் கோரியபோது, அம் மக்கள் மனத்தில் எதிரொலித்த கருத்துகளெல்லாம், ஆங்கிலேயப் பாராளுமன்ற நிறுவனங்கள் இந்தியாவில் நிறுவப்பட வேண்டுமென்பதே.[1] இவ் விலட்சியங்கள் நிறைவேற ஆங்கில அரசு பெரும்முயற்சி எடுத்துக்கொண்டது. ஒரு ஜனநாயக முறையை இந்தியாவில் அமைப்பதற்கு,[2] ஜாதிமத வேறுபாடுகள் பெரும்தடையாக இருந்தபோதிலும், இந்திய சமுதாயத்தில் பலதரப்பட்ட மக்களும் ஜனநாயக உரிமைகளைப் பெற்று, அம் மக்கள் சுயாட்சி நடத்தத் தகுதி பெற்றபோது, அம் மக்கட்கு அரசியல் அதிகாரம் அளித்ததோடு அவர்களுடைய சமுதாய அமைப்பிலும் ஜனநாயகம் வந்தெய்தப் பேருதவி புரிந்தது.[3] 1861ஆம் ஆண்டு பிரதிநிதித்துவ அடிப்படையில் அமைந்த சட்டமன்றங்கள் இந்திய அரசியலுக்குப் புதிதாகவே இருந்தன. இந்தியாவில் தனிப்பட்ட மன்னர்கள் ஆட்சி ஓங்கிஇருந்த காலங்களில்[4] பிரதிநிதித்துவ நிறுவனங்களைக் காண்பது அரிது. இந்திய மக்களிடையே, சில குறிப்பிட்ட சமுதாயத்தினரிடையேயும், சோழர் ஆட்சியில் அந் நாட்டு கிராமமக்களிடையேயும் காணப்பட்ட பொறுப்பாட்சி நிரந்தரமாக நாடு பூராவிலும் இயங்கவில்லை. இந்திய சமுதாயத்தில், ஜாதியினால் ஏற்பட்ட ஏற்றத்தாழ்வுகள், ஜனநாயகக் கொள்கைகளுக்கு முரண்பட்டதாக இருந்தன.

இந்தியர்களுக்கு ஜனநாயகமும், சுதந்திரமும், ஆங்கிலேயர் பெருமனத்தோடு அளித்த நன்கொடைகளாகும்.[5] 1919ஆம் ஆண்டுச் சீர்திருத்தத்தின் அடிப்படையில் ஆரம்பிக்கப்பட்ட புதிய சட்டசபையை 1921ஆம் ஆண்டு தொடங்கிவைத்த கன்னுட்பிரபு (Duke of Cannaught) உலக சரித்திரத்தில் அப்பொழுது நடந்த வைபவத்திற்கு ஒப்பாக அரசியல் மாற்றத்தை ஏற்படுத்தும் ஒரு வைபவம் அன்றுவரை நடந்ததில்லையென்றும், நிச்சயமாக அன்று அரசியல் மாற்றப்படும் முறைக்குச் சமமான ஒருவைபவம்

[1] Ibid, page 59.

[2] See Marquiss of Salisbury, Parlimentary Debates, House of Lords, 3rd. July 1935. Series 5, Vol. 97, 1934-35, p. 1175.

[3] See S. Krishnaswamy Iyengar, Evolution of Hindu Administrative Institutions in South India (Sir William Meyars Lectures 1929-30, published by University of Madras) 1931, Introduction, page 4.

[4] K. P. Krishnan Shetty, The Constitution of India and Hindu Jurisprudence, The bulletin of the institute of Traditional Cultures, University Buildings, Madras, Part II, 1964, pp. 199-200.

[5] See the Proclamation of King Emperor, 23rd Dec. 1919, vide A. B. Keith, op. Vol. II. p. 330.

என்றும் உலக சரித்திரத்தில் நடந்ததில்லை எனவும் கூறினர். ஏனைய நாடுகளில் அரசியல் சுதந்திரம் புரட்சியினாலும், கொந்தளிப்பினாலும் உள்நாட்டுப் போர்களினாலும் அடையப்பட்டது என்றும், அவ்வாறு சுதந்திரம் அடைவதற்கு, நாட்டின் சமாதானமும், பொதுமக்களின் பாதுகாப்பும் பலியிடப்பட்டன என்றும் தெளிவுபடுத்தினர். ஆனால், ஒரு நாட்டு மக்கள், அன்பளிப்பாக மற்றொரு நாட்டு மக்களுக்கு அரசியல் உரிமைகள் அளித்து, அவ் வுரிமைகளை அம் மக்கள் அனுபவிக்கத் தகுதி உடையவர்கள் என அறிந்தவுடன், மேலும் அரசியல் பொறுப்புகள் அளிக்கப்பட்ட முறைக்கு உவமை சரித்திரத்தில் இல்லை எனவும்கூறினர்.[1]

1861ஆம் ஆண்டு மத்திய அரசாங்கத்திலும், மாகாணங்களிலும் ஆலோசனை மன்றங்கள் அமைக்கப்பட்டன. அவை மேலும் 1892ஆம் ஆண்டிலும், 1909ஆம் ஆண்டிலும் விஸ்தரிக்கப்பட்டன. ஆனால் 1919ஆம் ஆண்டிலும், 1935ஆம் ஆண்டிலும் செயல்படுத்தப்பட்ட சீர்திருத்தங்கள் இந்தியர்களுக்கு முறையே பகுதிப் பொறுப்பாட்சியையும், மாகாண சுயாட்சியையும் வழங்கின. இப் பாராளுமன்றச் சீர்திருத்தங்கள், மக்களுக்கு அரசியல் உரிமைகளையும், பொறுப்புகளையும் வழங்கியதோடு, புதிதாக அமைக்கப்படும் அரசியல் நிறுவனங்கள், சமூக அடிப்படையிலும், ஜனநாயக அடிப்படையிலும், மேலும் பலப்பட்டு ஓங்கிவளர, எல்லா நடவடிக்கைகளையும் மேற்கொண்டது. இந்தியமக்களின் சுதந்திர உணர்ச்சியைப் பாராட்டி, அம் மக்களும், நாளடைவில் ஆங்கில அரசாங்கத்தைப் போன்று பொறுப்பாட்சியை ஏற்படுத்த வேண்டும் என்ற நல்லெண்ணத்தால்தான், ஆங்கிலஅரசு இந்தியமக்களுக்குப் பல சீர்திருத்தங்களின் வழியாக அரசியல் சலுகைகளை நல்கியது. இச் சலுகைகள் சமுதாயத்தில் புதிய விழிப்பையும், பொறுப்புணர்ச்சியையும் தூண்டின. இவ் வுணர்ச்சிகள் ஒரு ஜனநாயக அரசாங்கத்தின் முன்னோடிகள்.[2]

ஆகவே, அரசியல் சலுகைகளை மக்கள் சமமாக அனுபவிக்கச் சமுதாயத்தில் ஜனநாயகக் கொள்கைகளை உருவாக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆனால், இந்திய சமுதாயத்தினரிடையே யுள்ள ஏற்றத்தாழ்வுகளும், அவர்களிடையே உருவான சாதி மதச் சண்டைகளும் அரசியல் ஜனநாயகம் நிலைநாட்டப்படு

1 Ibid page, 336.

2 See Raja Vasudev Raja, Valia Nambidi of Kollangode, papers relating to Constitutional Reforms in India, 1908, Government of India, (Culcutta) Vol. II, page 71.

வதற்குத் தடையாக இருந்தன. இக் காரணம் பற்றியே, ஆங்கிலேயப் பாராளுமன்றம் இந்தியத் தேசியப்போராட்டத்தின் தீவிரப் போக்கை மாற்றியமைத்து, புதிதாக அமைக்கப்படும் ஜன நாயக முறைகளை[1] 'எச் சமுதாயத்திற்கும் கேடு உண்டாக்காமலும், எல்லாச்சமுதாயத்திற்கும் நன்மை பயக்கும்முறையிலும் ('with Justice towards all and malice towards none') அமைத்தது. டி. கிரகாம் போல் (D. Graham Pole) என்பவர் கூறியது போல, இந்தியமக்களின் அதிகாரத்திற்கு இந்தியஅரசின் பொறுப்பை மாற்றுவது வெறும்அரசியல் பிரச்சினை அன்று; அது பலசமுதாயப் பிரச்சினைகளைத் தன்னுள்கொண்டதாக இருந்தது.[2] ஏனெனில், இந்திய ஜனத்தொகை[3] பல மதத்தவரையும், பல மொழி பேசும் மக்களையும், பல ஜாதியினரையும் தன்னுள் கொண்டதாகும். மேலும், ஜாதி அடிப்படையில், இம் மக்கள் பல சிறிய பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பிரிவினரும் பொருமையினுல் அவதிப்பட்டனர். ஒரு சாதியினருடைய பொருளாதார முற்போக்கிற்குப் பாதகமான பழக்கவழக்கங்களை மற்ருெரு ஜாதியினர் மேற்கொள்ளும் முறையும் இருந்து வந்தது. மத அடிப்படையில் இந்துக்களும், முஸ்லிம்களும் முரண்பட்டு இருந்தனர். பல கடவுள்களை வழிபட அனுமதிக்கும் இந்துமத அமைப்பும்; கடவுள் ஒருவரே, எல்லோரும் சகோதரர்கள் என்று கூறிச் சமுதாயத்தில் சமத்துவத்தை விளக்கிக் காட்டிய முகமதிய மதமும் ஒன்றுக்கொன்று முரண்பட்டு விளங்கின. இம் மக்களிடையே நாகரிகம் பெருமளவில் வேறுபட்டிருந்தது. கிறிஸ்துவமதத்தைப் பின்பற்றிய மக்களிடையேயும், சமுதாயத்தில் ஏற்பட்ட பிரிவினைகள் எதிரொலித்தன.

இந்து மதத்தில், சாதி அடிப்படையிலுள்ள பாகுபாடு, அரசியலில் பொதுமக்களைப் பல சிறியபகுதிகளாகப் பிரித்து, அப் பகுதியினர் தங்களுடைய முற்போக்கை மட்டும் கவனிக்கும் சுயநலக் கொள்கையினுல், பொதுப்படையான ஒரு தேசிய வாழ்வுக்கு, அம் மக்கள் தங்களைச் சீர்திருத்தி அமைத்துக்கொள்ள முடியாமற் போயிற்று.[4] இச் சாதிப் பிரிவுகள் தனிப்பட்ட நபர்களுடைய மன உணர்ச்சியைக் குறுக்கியதோடல்லாமல், பிற மக்கள் சமுதாயத்தோடு நெருங்கிய உறவுகொள்ள முடியா

[1] JCICR. p. 61.

[2] See D. Graham Pole, India in transition, Leonard and Virginia Wolf at the Hogarth Press, London, 1932, p. 371.

[3] See Minutes of Lord Dufferin, Indian Constitutional Reform Report, (Montagu Chelsmford) Govt. of India Press, Simla, 1918, p. 69.

[4] See Sir George Schuster and Guy Wint, India and Democracy, Macmillan and Co. London, 1941, p. 39.

மல் செய்து, தனிப்பட்ட ஜாதியினர்கள் தாங்கள் ஒரு தனி உலகத்தில் வாழும் சிறிய மனப்பான்மையை உருவாக்கியது.[1] மேலும், இந்தச் சமுதாய அமைப்பு மக்களை உயர்ந்தவர்கள் என்றும், தாழ்ந்தவர்கள் என்றும் பிரித்து வைத்தது. சென்னை மாகாணத்தில் ஜாதி அடிப்படையில் இந்து மதத்திற்குள் மொத்த ஜனத்தொகையில் மூன்று சதவிகிதம் உள்ள பிராமணர்கள் பரம்பரை பரம்பரையாக உள்ள சுயநலத்தினுலும், மற்ற ஜாதியினரைக் கொடுமைப்படுத்தும் எண்ணத்தினுலும்,[2] சமுதாயத்தில் எல்லா உரிமைகளையும் தாங்களே அனுபவிக்க வேண்டும் என்ற ஆசையினுலும், அரசாங்க நிர்வாகத்திலும், நீதித்துறையிலும், சட்ட மன்றங்களிலும் பொதுமக்களுக்கு அளிக்கப்பட்ட எல்லாப் பொறுப்புகளையும் தாங்களே அபகரித்து வந்தனர். அதேசமயம் இந்திய சமுதாயத்தின் மறு பகுதியில் மொத்த ஜனத்தொகையில் 17 சதவிகிதம் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் உழைத்து உருக்குலைந்தவராகவும், அடிமைகளாகவும் ஜாதிக்குப் புறம்பானவர்களாகவும் நடத்தப்பட்டு வந்தனர். இவ்வித ஏற்றத்தாழ்வுக்கிடையே, இந்துக்கள், ஆயிரக்கணக்கான ஜாதிகளாகப் பிரிக்கப்பட்டு, அவரவர் பொருளாதார வசதிக்கு ஏற்பத் தீண்டப்படுவோர் தீண்டப்படாதவர் எனப் பிரிக்கப்பட்டனர். இவர்கள் மொத்த ஜனத்தொகையில் 60 சதவிகிதம் ஆவர். ஜாதிக்குப் புறம்பான மக்கள் மொத்த இந்திய ஜனத்தொகையில் 30 சதவிகிதம் ஆவர் எனக் கணக்கெடுக்கப்பட்டது.

செங்குத்தாக சமுதாயம் இவ்வாறு, பிறப்பினுல் உயர்ந்தவர், தாழ்ந்தவர் எனப் பிரிக்கப்பட்டதோடு, கிடைநிலையாகப் பல மாவட்ட ஜாதிகளாகவும் பிரிக்கப்பட்டது.[3] இதனுல், ஜாதி அமைப்பு ஒரு ஜனநாயகத் தன்மையற்றதாகவும், ஒரு சிலர் அதிகாரம் பெற்றவர்களாகவும், அவ்வமைப்பின் அடித்தளத்திலுள்ள மக்கள் அனுபவித்து வந்த தீண்டாமை மனித சமுதாயத்திற்கு முற்றும் விரோதமான ஒரு நிறுவனமாகவும் அமைந்தது.[4] ஜாதி அடிப்படை இந்துமதத்தின் இரும்புத் தூணுகக் காட்சியளித்தது. மொத்தத்தில் 3,000 ஜாதிகள் இந்தியாவில் இருந்

[1] See E. A. H. Blunt, Note explaining the origin and nature of the backward classes, The Indian Franchise Committee, (Government of India, Calcutta, 1932, Vol. II, page 303.

[2] See Rev. M. A. Sherring, Hindu Tribes and Castes, (Thacker Spink and Co., Calcutta) 1879, Vol. III, p. 228.

[3] See Selig S. Harrison, India and the United States (Macmillan and Co New York) 1961, page 6.

[4] See A. R. Desai, Social Backwardness of Indian nationalities (Oxford University Press, London) 1954, p. 231.

தன. ஜாதிகள் விரிவடைந்த ஒருகுடும்பமாகக் காட்சியளித்தது. பொதுவாக இந்துக்கள், தங்கள் ஜாதிக்கு வெளியில் ஒரு சமுதாயம் இருப்பதாகவே நினைப்பதில்லை.[1] இவ்வாறு ஜாதி அடிப்படையில் சமுதாயத்திலிருந்து பிரிந்து காட்சியளிக்கும் தன்மையும், தீண்டாமையும், இந்து சமுதாய அமைப்பை ஜனநாயகக் கொள்கையற்றதாகவும், இந்துமதத்தை உலகத்தில் கொடுமை நிறைந்த மதமாகவும் ஆக்கியது.

மேற்கூறிய காரணங்களினால் இந்து[2] சமுதாயங்களின் அமைப்பு ஒருகோபுரம்போல் காட்சியளித்தது. இக் கோபுரத்தின் உச்சியில் உயர்ந்த ஜாதியினரும், கோபுரத்தின் அடித்தளங்களில் பின்தங்கிய வகுப்பினர்களும், தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுமாகக் காட்சியளித்தனர்.[3] இக் கோபுர அமைப்பின் கோரக்காட்சி யாதெனின், அடித்தளத்தின் அஸ்திவாரத்தில் வாழ்ந்துவந்த பஞ்சமர்கள் வாழ்க்கை ஆகும். அவர்கள் சமுதாயத்தில் அடியாளர்களுக்கும் அடியாளர்களாய் வாழ்ந்து வந்தனர். சமுதாயப் பெருங்கடலில் மூழ்கி, தீண்டாமையால் பாதிக்கப்பட்ட இம் மக்கள், மொத்த இந்திய ஜனத்தொகையில் 1/6 பாகம் எனக் கணக்கிடப்பட்டது. இம் மக்களுக்கு எந்தவிதமான உரிமையோ, சுதந்திரமோ சமுதாயத்தில் இல்லை. பொதுப்பாதைகளிலும், கிணறுகளிலும், பொது நிறுவனங்களிலும் நுழைவதற்கு உரிமையில்லாதவர்களாய் இருந்தனர். கோரமான அவர்களது ஏழ்மையும், மூடத்தன்மையும், கல்வி இல்லாத வாழ்வும் மற்றச் சாதியினரின் வெறுப்புக்கு அவர்களைப் பாத்திரமாக்கி, கொடுமையாக அவர்களைச் சமுதாயத்திலிருந்து பிரித்து, வாழ வழியற்றவர்களாக ஆக்கிற்று. இந்தியமக்கள் சுதந்திரத்தையும், சீர்திருத்தத்தையும் கேட்டபோது உயர்வு தாழ்வினால் சமுதாயத்தில் ஏற்பட்ட பெரும்பிரச்சினைகள் ஆங்கிலேய ஆட்சியாளர்களின் ஜனநாயகக் கொள்கையையும், சமதர்மத்தையும், நீதிநியாயத்தையும் நேருக்குநேர் நோக்கியது. முதல் இந்திய சுதந்திரப் போராட்டத்திற்குப்பின் ஆங்கிலேய அரசாங்கம் இந்திய மத விவகாரங்களில் தலையிடுவதில்லை என அறிவித்துவிட்டது. ஆகவே, மதக்கொள்கைகளில் நடுநிலைமை வகித்து, அன்றிலிருந்து பொதுவாக மதச் சீர்திருத்தங்களுக்கு வேண்டிய

[1] See K. M. Panikkar, vide Selig, S. Harrison, India the most dangerous decades, (Princeton) 1960, page 98.

[2] See A. Ramaswamy Mudaliar, Justice Year Book, (The Justice Press, Madras) 1929, page 95.

[3] See Fred B. Fisher, India's Silent Revolution, (Macmillan and Co., New York) 1920, page 94.

நடவடிக்கைகளை இந்தியர்கள் வசமே ஒப்படைத்து வந்தது. ஆனால், பொதுவாக இந்துக்கள் கொண்டுவந்த சீர்திருத்தங்கள் அரசாங்கத்தால் ஒப்புக்கொள்ளப்பட்டபோது, அச் சீர்திருத்தங்கள் சமுதாயத்தில் தேவையான மாற்றங்களை உண்டாக்குவதற்கு ஏதுவாக அமுல் செய்யப்பட்டது. ஆனால், இந்து மதத் தலைவர்கள், மத அடிப்படையில் புரட்சிகரமான மாற்றங்களைக் கொண்டுவர அனுமதிக்காததன் காரணமாக ஆங்கிலப் பாராளுமன்றம் இப் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண முடிவு செய்தது.[1]

பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டங்களின் அடிப்படை மாற்றங்களைப் பார்க்கும்போது, பாராளுமன்றத்தின் அரசியல் தீர்ப்புகள் கால அளவில் இந்திய சமுதாயத்தில் ஒவ்வொரு சாதியினரையும், கோபுரத்தில் மேலிருந்து கீழாக விடுதலை செய்தது. இவ் விடுதலைக்கு வேண்டிய ஆரம்பம், ரிப்பன் காலத்திய சீர்திருத்தத்திலிருந்து தொடங்கியது எனக் கூறலாம். அதன்பின் காங்கிரஸ் ஸ்தாபனம் 1885ஆம் ஆண்டிலிருந்து பல கோரிக்கைகளை முன்வைத்தது. 1892ஆம் ஆண்டு அமுல்செய்த சீர்திருத்தத்தின் அடிப்படையில் மாகாணச் சட்டசபைகளில் பொருளாதார அடிப்படையில் முன்னேறிய சாதிகளுக்கும், இதர நலன்களுக்கும் பிரதிநிதித்துவம் அளித்து இச் சட்டசபைகள் விரிவாக்கப்பட்டன. அதைத் தொடர்ந்து இச் சட்டமன்றங்கள் 1909ஆம் ஆண்டு மேலும் விரிவடைந்தன. இச் சீர்திருத்தத்தின் கீழ், பிராமணர் அல்லாத சமூகங்களின் மேல்வகுப்பினர்கள் அரசியல் அதிகாரங்களில் பயிற்சி பெற்று, அரசியல் பொறுப்புகளைக் கால அளவில் பொறுப்பேற்று நடத்த வாய்ப்புப்பெற்றனர். 1909 ஆம் ஆண்டுச் சீர்திருத்தத் திட்டத்தின் காரணமாகத்தான், சென்னையில் ஒரு பெரும் ஜனநாயகப் புரட்சி ஏற்பட்டு, பிராமணரல்லாதவர் இயக்கம் 1920ஆம் ஆண்டு அரசு பொறுப்பேற்று, இரட்டையாட்சியின்கீழ்க்[2] கொடுக்கப்பட்ட பொறுப்பாட்சியை, மேலும் சமுதாயத்தில் மறுமலர்ச்சி ஏற்படும் முறையில் ஆட்சி நடத்த வாய்ப்பு ஏற்பட்டது.[3]

மேலும், 1920 ஆம் ஆண்டிலிருந்து தாழ்த்தப்பட்ட சமூகங்களுக்குப் படிப்படியாக உயர்வளித்து, 1935ஆம்ஆண்டு சீர்திருத்தச் சட்டம் அமுல் செய்யப்பட்டபோது, தீண்டாமையினால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு அரசியல் அடிப்படையில், சட்டசபை

1. See Fred B. Fisher, India's Silent Revolution, (Macmillan and Co , New York) 1920, page 4.

2. No. 147, Sambad Abdhyudaya, 30th Jan. 1918, MNR, Cl. p. 194.

3. Ibid

களில், அவர்கள் ஜனத்தொகைக்கேற்ப, பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டது. இதற்கும் மேலாக, மாகாண சுயாட்சி ஆரம்பித்த காலத்தில் அச் சமுதாயத்தைச் சார்ந்தவர்க்களுக்குப் பொறுப்பாட்சியின் அடிப்படையில் மாகாண மந்திரிசபைகளில் பிரதிநிதித்துவம் கொடுக்கப்பட்டது.[1]

இந்தியர்கள் ஆங்கிலேயர்களை எதிர்த்து நடத்திய சுதந்திரப் போராட்டம்[2] இந்திய மக்களுள் நடந்த ஒரு சமூகப் போராட்டம் எனக் கூறலாம். இந்தியர்கள் செய்யத் தவறிய சீர்திருத்தங்களை ஆங்கிலப் பாராளுமன்றம் செய்து முடித்தது. இந்தியத் தேசியப் போராட்டம் ஓரளவு மிதவாதிகளின் கருத்து களடங்கிய போராட்டம் எனக் கொள்ளவேண்டும்.[3] தீவிர வாதிகள் இந்தியாவில் நடத்திய போராட்டங்கள் தோல்வி யுற்றன. இந்திய அரசியலில் பலாத்காரமும், ஹிம்சையும் பொருத்தமற்றதாகும். தீவிரவாதிகளை ஆங்கில அரசாங்கம் தடுத்து நிறுத்தியதோடு இந்திய மக்களின் பொறுமையின்மை யைத் தடுத்து, அவர்கட்குப் பொறுமையை அளித்தனர்.

ஆங்கிலேயர்கள் இந்தியாவிலுள்ள பல தாழ்த்தப்பட்ட சாதியினருக்கு விடுதலை அளித்தனர் எனக் கூறும்போது, இந்திய மக்களிடையே ஏற்பட்டிருந்த பிளவுகளை அவர்கள் பயன்படுத்தி, அவர்கள் ஆட்சியை நீடிக்கச் செய்தனர் எனக் கூறுவாரும் உளர். ஆனல், எல்லாச் சமுதாயத்தினரும், நிர்வாக அடிப்படையிலும், அரசியல் அடிப்படையிலும், சமுதாய அடிப் படையிலும், மத அடிப்படையிலும் தாங்கள் அடைந்த உரிமை கள், ஆங்கிலேயர்களை மட்டும் எதிர்த்துப் போராடி அடைந்த வை அல்ல; அவை இந்தியர்களையும் எதிர்த்துப் போராடி அடைந்த உரிமைகளாகும்.[4]

இந்திய சரித்திரத்தில் ஆங்கிலப் பாராளுமன்றத்தின் புதிய சீர்திருத்தங்கள் சுமார் ஒவ்வொரு 10 ஆண்டு கால அளவில் புகுத்தப்பட்டது. 1909-ல் சட்டமன்றங்கள் விரிவு பெற்றன. 1919-ல் குறிப்பிட்ட அளவு பொறுப்பாட்சியும், 1935ஆம் ஆண்டு மாகாணங்களுக்குச் சுயாட்சியும் (இரட்டை ஆட்சியை இந்தி

[1] See Verney Lovett. op. p. 238.

[2] See M. K. Gandhi, India of my dream, (C. Navajivan Publishing House, Ahamadabad) 1957, page 17.

[3] Ibid

[4] See K. B. Krishna - The Problem of Minorities or Communal representation (George Allen and Garison and Company Limited, London) 939, A Criticism of the title.

யர்கள் ஏற்று நடத்தி இருப்பின் 1935ஆம் ஆண்டுச் சீர்திருத்தங்கள் 1929ஆம் ஆண்டில் அமுல் செய்யப்பட்டிருக்கும்), 1947ஆம் ஆண்டு இந்தியர்களுக்குச் சுதந்திரமும் அளித்தன. இந்திய மக்கள் கைக்கு அதிகாரத்தை மாற்றிக் கொடுத்த மவுண்ட் பேட்டன் பிரபு,[1] 1947ஆம் ஆண்டு ஆகஸ்டு 15ஆம் தேதி நடந்த வைபவம் இந்திய மக்களுக்கும், ஆங்கிலேயருக்கும் நடந்த 'போரற்ற ஒரு சமாதான உடன்படிக்கை' ('A peace treaty without a war') எனக் கூறினர். 'இந்தியர்களும், ஆங்கிலேயர்களும் நல்லெண்ணத்தோடு, அதிகாரத்தைக் கைமாற்றம் செய்து கொண்டனர்' என்று அட்லி பிரபு பெருமையுடன் சுட்டிக் காட்டினர்.

## 2

## முதல் இந்திய சுதந்திரப் போராட்டமும் அதன் எதிரொலிகளும்

1857ஆம் ஆண்டு இந்தியாவில் நடந்த முதல் சுதந்திரப் போராட்டத்தின் விளைவாகக் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சி ஒழிக்கப்பட்டு இந்திய அரசின் பொறுப்புகள் ஆங்கில மன்னர் வசம் ஒப்படைக்கப்பட்டது இதன் விளைவாக ஆங்கிலப் பாராளுமன்றம், இந்தியப் பிரச்சினைகளை நேரடியாகக் கண்காணிக்கப் பெரும் வாய்ப்பு ஏற்பட்டது. கிழக்கிந்தியக் கம்பெனியார் தங்கள் ஆட்சியை நீடிக்க வேண்டும் எனக் கோரிக் கொடுத்த மனுவிற்கு, இங்கிலாந்தின் பிரதமர் பல்மர்ஸ்டன்[2], பாராளுமன்றத்தில் அம் மனுவைப் பற்றிப் பேசும்போது, 'ஆங்கில அரசிற்கு இந்தியாவில் நிறைவேற்ற வேண்டிய பெரிய கடமை ஒன்று உள்ளது என்று வலியுறுத்தினர். இக் கடமையைச் செவ்வனே நிறைவேற்ற இந்திய அரசின் அதிகாரங்கள் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ளதாக இருக்கவேண்டும் எனவும், அந் நேரடி மேற்பார்வை வழிதான், பொறுப்புள்ள தங்கள் கடமைகளை இந்திய அரசாங்கம் எவ்வாறு படிப்படியாகச்செய்து முடிக்கின்றது என்பதை ஆங்கில மக்களுக்கு அறிவிக்க முடியும் எனவும் குறிப்பிட்டார். மேலும், வெறும் வியாபார நோக்கங்களுக்காக இந்தியா ஆட்சி செய்யப்பட்டது என்ற நிலைமாறி 'வியாபாரத்தைப் பெருக்குவதோடு இங்கிலாந்தின் மதிப்பும் பெருகப் பாராளுமன்றம் எடுத்துக்கொண்ட பொறுப்புகள் உதவும்' என்றும்

1. 'Hindu" dated 26th January 1964, page 4.

2. Speech of Palmerston in the House of Commons, 1858, vide A. B. Keith, op. cit. Vol. I, page 341.

குறிப்பிட்டார்.[1] பாராளுமன்றத்தின் குறிக்கோளை மேலும் விளக்கியபோது, 'சுதந்திரமான ஓர் அரசாங்கம் கொடுக்கப் படாத ஒரு மக்களுக்கு ஒரு நல்ல அரசாங்கமாவது கொடுக்க வேண்டும்' என்று மெகாலே பிரபு வலியுறுத்தியதை ஞாபக மூட்டினார்.[2]

இதைத் தொடர்ந்து 1858ஆம் ஆண்டு ஆங்கிலப் பாராளு மன்றச் சட்டத்தின்படி இந்திய விவகாரங்கள் பொறுப்புள்ள ஒரு முக்கியப் பாராளுமன்றக் காரியதரிசியிடம்[3] ஒப்படைக்கப் பட்டது. இவருக்குத் துணையாக ஓர் உதவிக் காரியதரிசி ஏற்படுத்தப்பட்டார். இருவருக்கும் உதவியாக இந்திய சபை ஒன்றும் நிறுவப்பட்டது. இச் சபையில் 7 உறுப்பினர்கள் மட்டும் முன்னாள் கிழக்கிந்தியக் கம்பெனியின் வாரிய இயக்குநர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இதைத் தொடர்ந்து இந்திய விவகா ரங்களை அறிய இந்தியாவுக்கும், இங்கிலாந்துக்குமிடையே 'கடல் மார்க்கத் தந்திச் செய்தி' ('Submarine Cable Communication')[4] நிறுவப்பட்டது. 1858ஆம் ஆண்டு விக்டோரியா ராணியார் 'இந்தியாவின் அரசி' என அறிவிக்கப்பட்டார். கானிங் பிரபு இந்தியாவின் முதல் அரசப் பிரதிநிதியாக (Viceroy) பதவி ஏற்றார். அரசியார், தம் பிரகடனத்தில் 'இந்திய மக்களின் முன்னேற்றந்தான் தங்களின் பலம் எனவும், அம் மக்களின் திருப்திதான் தங்களுக்குக் கிடைக்கும் சிறந்த சன்மானம்' எனவும் அறிவித்தார். இப் பெயர்பெற்ற பிரமாணந்தான், 60 ஆண்டுகள் கழித்து, 'இந்தியாவில் பொறுப்பாட்சி ஏற்படுத்து வதே ஆங்கிலேயரின் இலட்சியம் என 1917ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் மாண்டேகு அறிவிப்பதற்கு அடிப்படையான காரணமாக அமைந்தது. அரசியார் இந்திய ஆட்சிப் பொறுப்பை ஏற்றெடுத்ததும், ஆங்கிலேயர்கள் இந்திய மக்களுக் குச் செய்த பல சீர்திருத்தங்கள்பற்றிப் பாராட்டிப் பேசினார். சுருங்கக் கூறின், பாராளுமன்றத்தின் மேற்பார்வை இந்திய முன்னேற்றத்திற்குப் பேருதவியாக இருந்தது.

[1] Edmund Burke on the Impeachment of Warren Hastings, 15th - 19th Feb. 1718, vide A. B. Keith, op. cit. p. 123.

[2] See Thomas Babington Macaulay, House of Commons, 19th July 1833 vide A. B. Keith, op. cit. p. 233.

[3] The Secretary of State with his Under-Secretary were to be paid from Indian Revenues. This was a point of a constant criticism by the educated classes.

[4] See J. Allen and others - The Cambridge Shorter History of India, (S. Chand and Co., Delhi) 1955, p. 603.

1858ஆம் ஆண்டு வெளிவந்த விக்டோரியா ராணியின் பிரகடனம் எல்லா மதக்கோட்பாடு உடையவர்களுக்கும் ஒரு சுதந்திர சாசனமாக அமைந்தது.[1] ஆனால், இப் பிரகடனத்தின் அடிப்படையில், ஆங்கில ஆட்சியாளர்கள், இந்திய மக்களுடைய மதக் கோட்பாடுகளில் தலையிடுவது இல்லை என முடிவு செய்தனர். இதனால் சாதியால் பிளவுபட்ட இந்து மதத்தை, மத அடிப்படையில், ஆங்கிலேயர்களாலும் நேரடியாகச் சீர்திருத்த முடியாமற்போயிற்று எனக் கூறுவர். இக் காரணம் பற்றியே, பின்தங்கிய வகுப்பினருக்கு வேண்டிய சமுதாய உரிமைகள் அளிக்க, புதிய அரசியல் வழிகள் திறக்கப்பட்டன (Social salvation through the political door). இப் புதிய வழிகள் மூலமாகத்தான் எல்லா வகுப்பினர்களும் பிற்காலத்தில் இந்தியாவில் சீரமைப்புப் பெற்ற சட்டமன்றங்களில் இடம்பெற்றனர். சமுதாய சுதந்திரத்தை அரசியல் சலுகைகள் மூலம் மக்கள் எவ்வாறு அடைந்தனர் என்பதே பாராளுமன்றச் சீர்திருத்தங்களின் இரகசியமாகும்.[2]

## 3

## இந்திய நிர்வாகத்தில் முதல் திருப்பம்

### 1861ஆம் ஆண்டு அமைக்கப்பட்ட புதிய சட்ட மன்றங்கள்

1858ஆம் ஆண்டு, பாராளுமன்றத்தில் டிஸ்ரேலி என்பவர் இந்திய அரசாங்கம் யாரால் நடத்தப்படுகிறது என்ற ஒரு வினாவை எழுப்பினார்.[3] இந்த வினாவிற்குப் பதில்அளிக்கும் வகையில்தான்1861ஆம் ஆண்டு பாராளுமன்றத்தில் ஒரு சட்டம் இயற்றப்பட்டது. இச் சட்டத்தின் அடிப்படையில் சட்டத்தைச் செயல்படுத்தும் குழு அரசின் முக்கியக் கொள்கைகளைக் கலந்து ஆலோசனை செய்யப் புதிய சட்டமன்றங்கள்[4] மத்தியிலும், மாகாணத்திலும் அமைக்கப்பட்டன. இம் மன்றங்கள், அந் நாளில் கிழக்கத்திய மன்னர்கள் மந்திராலோசனை நடத்தத் தேர்ந்தெடுக்கும் ஆலோசனைசபைபோல் அமைந்தது. இச் சபைகள் மக்களின் விருப்பு, வெறுப்புகளை அறிய வழி வகுத்தது. சட்டத்தைச் செயல்படுத்தும் பொறுப்பு அதிகாரிகளிடம் இருந்து

[1] See Proclamation of Queen Victoria to the Princes, Chiefs, and the people of India, 19th Nov. 1858, A. B. Keith, op. cit. Vol. I, p. 386.

[2] Ibid.

[3] Sir Charles Wood, House of Commons, 6th June 1861, vide A. B. Keith, op. cit. Vol. II, page 5.

[4] A. B. Keith, op. cit. p. 12-13, Vol. II.

வந்தது. 1861 ஆம் ஆண்டு கவர்னர் ஜெனரல் தம் ஆலோசனை சபையில் 6 முதல் 12 வரை அதிக உறுப்பினர்களை நியமனம் செய்ய அங்கீகாரம் வழங்கப்பட்டது.[1] இவர்கள், அரசு மேற்கொள்ள நினைக்கும் சட்டதிட்டங்களை இயற்றுவதற்கு ஆலோசனை கூறினர். இதில் அதிகப்படி உறுப்பினர்கள் அரசாங்க அதிகாரிகள் அல்லாதவர்கள். மாகாணங்களில், புதிய உறுப்பினர்கள் எட்டுக்குக் குறைவில்லாமலும், எட்டுக்கு மேற்படாமலும் ஆங்கிலேயர்களோ, இந்தியர்களோ கவர்னருக்கு ஆலோசனை கூறும்பொருட்டு நியமனம் பெற அனுமதி வழங்கப்பட்டது. இவர்கள் அரசாங்க அதிகாரிகளல்லாமல் இருத்தல் வேண்டும்.

ஆனால், கவர்னர் ஜெனரலுக்கு மாகாணங்களுக்கு வழங்கப்பட்ட அதிகாரங்களுக்கு உட்பட்ட துறைகளைப் பற்றியும் கூடச் சட்டம் இயற்றும் அதிகாரம் (Concurrent Powers[2]) வழங்கப்பட்டது. ஆலோசனை கூற அதிகாரம் வழங்கப்பட்ட அங்கத்தினர்களை நியமனம் செய்யும் அதிகாரம் பிற்காலத்தில் நாட்டு மக்களுக்குப் பிரதிநிதித்துவம் கொடுக்க உதவியது. 1885 ஆம் ஆண்டில் இங்ஙனம் ஆலோசனை கூறும் சபையின் எண் 50 ஆக மாற்றப்பட வேண்டும் எனக் காங்கிரஸ் தரப்பில் கோரப்பட்டது.[3] இக்காலங்களில் இன அடிப்படையில் ஒதுங்கி வாழ்ந்த ஐரோப்பியர்களின் போக்கை இந்தியர்கள் கண்டித்தனர்.

மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தத்தின் அடிப்படையில், மாகாணங்களில் மாற்றப்பட்ட இலாக்காகளில் பொறுப்பாட்சி வழங்கவேண்டும் என்ற தணிக்கை பின்வருமாறு கூறியது. '1861-ஆம் ஆண்டில் ஆரம்பித்து 1919-ஆம் ஆண்டு வரை செயலாற்றிய இந்தியச் சட்டமன்றச் சீர்திருத்தம் ஒரு முக்கிய அத்தியாயத்தை முடிவுறச் செய்தது. 1919 ஆம் ஆண்டு வரை உள்ள சீர்திருத்தங்கள் எல்லாம் அரசாங்கத்தின் நிர்வாக வடிவமைப்பின் நுட்பங்களைச் செய்து முடிப்பதாக இருந்தன. 1861 ஆம் ஆண்டின்பின், இந்தியாவில் பெரிய மாகாணங்களாகிய, சென்னை, வங்காளம், பம்பாய் ஆகிய மூன்றும் ஆங்கில அதிகாரத்தின்கீழ், சட்ட ரீதியாகக் கொண்டுவரப்பட்டதோடு, நிர்வாக சபையில் கவர்னர் ஜெனரலின் அதிகாரம் இம் மூன்று மாகாணங்கள்மீதும், அங்கு வாழும் மக்கள்மீதும் விஸ்தரிக்கப

[1] Clause 10, Indian Councils Act of 1861, A. B. Keith, op. cit p. 25.

[2] A. B. Keith, Op. cit. Vol. II, p. 35.

[3] Swadesamitran, 15th August 1885, MNR, Cl. p. 4.

பட்டதோடு, அம்மாகாணங்களில் வாழும் மக்களுக்குத் தனித் தேவைகள் என்ன என்பதை அறிவதற்கும், அவர்கள் அத் தேவைகளைத் திருப்தி செய்ய என்ன ஆலோசனை கூறுகிறார்கள் என்பதை அறியவும் வாய்ப்பு அளிக்கப்பட்டது'.[1] ஆனால், 1861ஆம் ஆண்டு, சட்டத்தின் நுட்பமாவது, 'வாரன்ஹேஸ்டிங் கினுடைய காலத்தில் சட்டத்தை அமுல் நடத்தும் அதிகாரத்தைச் சட்டம் இயற்றும் சபை பல முறை உடைத்து எறியத் துணிந்ததை மாற்றி, விரிவாக்கப்பட்ட மன்றங்கள், அரசாங்கத்தின் சட்டம் இயற்றும் ஒருகமிட்டி மட்டுமே எனவும், அவைகள் பொறுப்பாட்சி பெறுவதற்குப் பாராளுமன்ற அடிப் படையில் ஏற்பட்ட சபைகள் அல்ல எனவும், தெளிவாக எடுத்துக் கூறியது. இப்படி அமைக்கப்பட்ட ஆலோசனை சபைகளை ஒரு சில ஆங்கிலேயர்கள் உண்மைப் பாராளுமன்றங்க ளாகவே மாற்ற முயற்சிசெய்தனர். இம்முயற்சிகளினால், பாராளுமன்றக் கொள்கையின் அடிப்படையில் அரசியல் ஸ்தாபனங்களை வளர விடாமல் சிலகாலம் தடுத்தனர் என்றே கூறவேண்டும்.'

## 4

## ரிப்பன் துரையின் இரு பெரும் சீர்திருத்தங்கள்

### ஸ்தல ஸ்தாபனங்களுக்கு ஜனநாயக உரிமைகளும், இந்திய நீதிபதிகளுக்குப் புதிய அதிகாரங்களும்

1882ஆம் ஆண்டு இந்திய கவர்னர் ஜெனரலாக இருந்த ரிப்பன் துரை இந்தியாவிலுள்ள ஸ்தல சுய ஆட்சி ஸ்தாபனங் களைப்[2] பலப்படுத்தி மக்களுக்கு அரசியல் கல்வி புகட்ட எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் மிகவும் பாரட்டத் தக்கவை. புதிதாக மக்களிடையே அப்போது காணப்பட்ட உணர்ச்சிகளைத் தடுப் பது அபாயம் என்றும், அந்த உணர்ச்சிகளை நல்ல பாதையில் திருப்ப வேண்டும் என்வும் கருதினார். தேர்வுக் கொள்கைகளை மக்கள் மத்தியில் பரப்பிச் சமுதாயத்தில் உள்ள நல்லறிஞர் களுக்குப் பயிற்சி அளித்து, ஸ்தல சுய ஆட்சி ஸ்தாபனங் களுககு அதிக அதிகாரம் வழங்கி அரசாங்கத் தலையீடுகளைக் குறைக்கவும் வேண்டும் என வேண்டினார். இத்திட்டம் மக்கள்

[1] Sec Indian Constitutianul Reform Report—(Montaguchemsford) Govt. of India, Simla. 1918.

[2] Ishwari Prasad and Subbedar, History of Modern India, (The Indian Press Limited, Allahabad) 1951, Pago 299.

தங்களைத் தாங்களே ஆளவேண்டும் என்ற ஜனநாயகக் கொள்கைக்கு இலக்கணமாக விளங்கியது.[1] 1881ஆம் ஆண்டே இந்திய அரசாங்கத்தின் முடிவின்படி மாகாண அரசாங்கங்கள் ஸ்தலஸ்தாபனங்களை நடத்துவதற்குவேண்டிய வரவு செலவுகளை ஸ்தலஸ்தாபனங்களுக்கு விட்டுக் கொடுக்க வேண்டும் எனக் கூறியது.[2] கல்வி, மருத்துவம், பொது மாரமத்து போன்ற துறைகள் ஸ்தலஸ்தாபனங்களின் வேலைக்கு உகந்த பொறுப்புகள் எனக் கூறியது.

உண்மையில் அக்காலங்களில் ஸ்தலஸ்தாபனங்கள் சென்னையில்[3] மிகவும் முன்னேறி இருந்தது. இந்த நிறுவனங்களுக்குக் கலெக்டர் தலைமை வகித்தார். அரசாங்கத் தலையீடு ஓரளவுக்கு அவசியம்எனவும் கருதப்பட்டது. 1881ஆம் ஆண்டு முடிவின்படி ஸ்தல ஸ்தாபனங்கள் ஒரு தாலுக்காவின் அடிப் படையில்தான் இருக்கவேண்டும் என்றும், இந்த ஸ்தல ஸ்தாபனங்களின் போர்டுகளில் 2/3 உறுப்பினர் மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவராக இருக்கவேண்டும் எனவும் கூறப் பட்டது. இக்காலங்களில் ஸ்தல ஸ்தாபனங்களின் அதிகாரங்களை நிர்ணயிக்க ஒரு கமிட்டி நியமனம் செய்யப்பட்டது. இக்கமிட்டியில் கலெக்டர் தொடர்ந்து ஸ்தலஸ்தாபனங்களின் தலைவராக இருக்கவேண்டும் என்றும், மக்கள் பொதுப்பணங்களைப் பராமரிப் பதில் பக்குவப்படவில்லையாதலால், நிதி விவகாரங்களை மக்கள் கைக்கு விடலாகாது எனவும் திரு. எஸ். சுப்பிரமணியம்[4] கூறினர். சமுதாயம் சுரண்டல் நிறைந்து இருப்பதினால், ஸ்தல ஸ்தாபனங் களின் வசூல்களையும், செலவுகளையும் மக்கள்வசம் பொறுப்பு கட்டுவது சரியன்று எனக் கூறினர். கோவில்களின் நிதியும், அற நிலையங்களின் நிதியையும் கூட நல்ல முறையில் பரிபாலிக்கப் படவில்லை எனக் காரணம் காட்டினர். பல ஜாதிகளையும், மதங் களையும் சார்ந்தவர்கள் ஸ்தல ஸ்தாபன சபைகளில் தங்களுக்குப் பிரதிநிதித்துவம் வேண்டும் எனக் கேட்டுக் கொண்டிருந்தனர். இச்சாதியினர்களிடையே ஏற்பட்ட போட்டி, மக்கள் இன்னும் ஒருமைப்படவில்லை என்பதை விளக்கிக் காட்டியது.[5]

[1] Jarida—Irozgar, Report on Hindustani Newspapers examined for the month of March,1883,MNR,Cl. q-1o.

[2] Report of the Committee on Local Self-Government, Madras, 1882, p.3, para 2 (30th September 1881, No.3353)

[3] Reqort of the Committee on Local Self-Government, in Madras, (Govt. of Madras) 9th February, 1882,No.217, p.s.

[4] Ibid, p. 122

[5] Ibid

மக்களின் பிற்போக்கின் காரணமாக, ஒருசில மாவட்டங்களில் மட்டும் ஸ்தல ஸ்தாபன ஆட்சி ஏற்பட்டது. ரிப்பனுடைய காலத்தில் ஸ்தல ஸ்தாபன போர்டுகளில் கலெக்டர் தலைவராக இருந்தார்.[1] பணம் படைந்தவர்கள் மிகுதியாக அங்கத்தினர்களாக நியமிக்கப்பட்டனர். கிராமங்கள் சுத்தி செய்யப் படாமலயே இருந்தன. இந்திய மண்ணில், ஸ்தல ஸ்தாபன ஆட்சி, ரிப்பனுடைய எண்ணம் போலப்பலப்படாது எனப் பலரும் கருதினர். ஆனால், 1907ஆம் ஆண்டு மார்லி பிரபு இங்கிலாந்துக்கு அனுப்பிய தமது கொள்கையின் அடிப்படையிலும், 1917ஆம் ஆண்டு மாண்டேகு குறிப்பிட்ட 'மூன்று பாதைகள்' என்ற அடிப்படையிலும், ஸ்தல ஸ்தாபன ஆட்சி மேலும் வளர வழி வகுக்கப்பட்டது. 1842ஆம் ஆண்டு முதல் மாவட்டங்களில் ஸ்தல ஸ்தாபன ஆட்சி ஏற்படுத்தப்பட்ட போதிலும், ரிப்பன் ஆட்சியில் இந்த ஸ்தாபனங்கள் பலப்படுத்தப்பட்டன. சுதந்திரம்தான் சுதந்திரத்தின்[2] பயிற்சி நிலையம் எனக் கிளாட்ஸ்டோன் (Gladstone) துரை கூறிய உண்மை ரிப்பன்துரையின் திட்டத்தில் புலனாகியது. 1882ஆம் ஆண்டு நெவாக்ரோனியா (Nevoc Urona)[3] என்ற ருசியப் பத்திரிக்கை ' ஆங்கிலேயர்கள் இந்தியாவை விட்டு இன்று அல்லது நாளை போய் விடுவர் என்றும், அதற்கு ரிப்பன் துரையின் நடவடிக்கைகள் ஆங்கிலேயர் மன மகிழ்ச்சியோடு இந்தியாவை விட்டுப் போவதற்கு எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் ' எனக் குறிப்பிட்டது.உண்மையில் ஸ்தல ஸ்தாபன ஆட்சி நிலையங்களில் பயிற்சி பெற்ற மக்கள் பிற்காலத்தில் சீர் திருத்தப்பட்ட சட்டசபைகளில் பிரதிநிதித்துவம் பெற்றுப் பொறுப்பாட்சி வழங்கப்பட்டபோது அரசாங்கப் பொறுப்பையும் ஏற்று நடத்தினர்.

இந்தியக் குற்றவியல் நீதிபதிகளுக்கு (Indian Magistrates) ஆங்கிலேயர்களை விசாரணைசெய்ய அதிகாரம் வழங்க ரிப்பன் பிரபு கொண்டுவந்த 'இல்பர்ட் பிரேரணை' இந்திய மக்களிடையே பெரும்ஆதரவு பெற்றது. ஆங்கிலேயர்கள் தீவிரமாக எதிர்த்த போதும்[1] ரிப்பன் துரை தம் கொள்கையைக் கைவிடவில்லை. இந்தியாவில் குற்றம் செய்த ஆங்கிலேயர் தண்டனை இன்றித் தப்பினர் என்ற குற்றச்சாட்டின் பலனாகவே,

[1] Tatvavivechini-Report on Tamil Newspapers, 19th April 1884, MNR, Cl. p.3.

[2] Vide No.6, Vivekavardhani, Report on Telugu Newspapers, April 1883, MNR, Cl. p.4.

[3] Ibid

[4] Jarida-i-Rozgar, Report on Hindustani Newspapers, 17th March 1883 MNR, Cl. p.12.

ரிப்பன் இப் புதிய சட்டத்தைக் கொண்டு வந்தார். ஆனல், இந்திய மக்கள் சமயக்கோட்பாடுகளின் காரணமாகப் பின்தங்கிய நிலையில் இருந்ததால், பொறுப்புகளையேற்று நடத்த இன்னும் தகுதி அடையவில்லை[4] என்று அறிந்து ஐரோப்பியர்களை இந்திய மாஜிஸ்ட்ரேட்டுகள் விசாரணை செய்யும்போது ஆங்கிலேயர் களைக் கொண்ட ஒரு நடுவரின் அபிப்பிராயம் வேண்டும் என அம்மசோதா திருத்தம் பெற்றுச் சட்டமாக இயற்றப்பட்டது. உண்மையில் ரிப்பனுடைய இரு சீர்திருத்தங்களும் இந்தியாவின் சுதந்திரத்தை[1] அருகில் கொண்டுவந்தது எனக் கூறுவர். இக்காரணங்களினல் ரிப்பன் துரையை 'ரிப்பன் எங்கள் அப்பன்' என இந்தியர்கள் கூறினர்.

## இந்தியத் தேசியக் காங்கிரசின் தோற்றம்

இந்திய சுதந்திரத்திற்காக ஆரம்பிக்கப்பட்ட பல ஸ்தா பனங்கள் ஆங்கிலேயர்களினல் ஆரம்பிக்கப்பட்டன. இதற்கு இந்திய தேசிய காங்கிரசும்[2] ஒரு சிறந்த எடுதுக்காட்டாகும். ஆண்டில் ஒருமுறை, மக்கள் பிரதிநிதிகள் நாட்டிற்கு நலந்தரும் திட்டங்களை விவாதிக்க வேண்டிச் சந்திக்க வேண்டும் என 1885ஆம் ஆண்டு சிம்லாவில் ஏ. ஓ. ஹ்யூம் அவர்கள் டவ்வரின் (Dufferin) துரையுடன் பேசியபோது முடிவு செய்தார். ஆண்டு தோறும் இந்திய தேசிய ஐக்கிய சபை ஒன்று கூட்டப்பட வேண்டும் என்ற கருத்தைக் கொண்டிருந்த ஹ்யூம் அரசியல் அடிப்படையில் ஒரு கூட்டத்தைக் கூட்ட முடிவு செய்தார். இங்கிலாந்தில் எதிர்க்கட்சி ஆற்றும் பணியை இந்தியாவில் ஏற்று நடத்துவதற்கு இதுபோன்ற ஒரு சங்கத்தை நிறுவ ஏற்பாடு செய்தார். 1855ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் பம்பாயில் முதற்காங்கிரஸ் மகாசபை கூடிற்று. 1886-ம் ஆண்டு கல்கத்தாவில் நடந்த காங்கிரஸ் மாநாட்டிற்கு வந்திருந்த பிரதிநிதிகளை டவ்வரின் துரை அழைத்து ஒரு பேட்டி அளித் தார்.[3] ஆரம்ப காலங்களில் காங்கிரஸ் ஸ்தாபனம் தேசிய அடிப் படையில் பிரதிநிதித்துவம் பெறவில்லை. படித்து முன்னேறிய வகுப்பைச் சார்ந்தவர்களும்,[4] சமீன்தார்களும், பணக்காரர்களும்

1 See Travancore Abhimani, Report on Tamil Newspapers for the week ending 24th March, 1883 MNR, Cl. p.5.

2 No. 7, London Times as quoted in Ashan-ul-Jaraid, 5th April 1883, Report on Hindustani Newspapers, MNR, Cl. 1883, p. 7.

3 Ishwari Prasad and Subedar, op. cit. p. 313.

4 Halide Edib, Inside Asia, 1937, p. 251.

5 No. 45, Vrittanta Patrika, 13th Jan. 1898. MNR, Cl. 1898, p. 14.

அங்கத்தினர்களானுர்கள்.[1] பின்தங்கிய சமூகத்தினர் அங்கம் வகிக்கவில்லை. என்றாலும், ஒரு தேசிய சக்தி வளர ஹென்றி, காப்டன் ஜார்ஜ் யூல், சர். வில்லியம், வெட்டபெல்லோ என்பவர்கள், காங்கிரஸ் நிறுவனம் வளர ஆதரவு அளித்தனர். இக் காலங்களில், திருவிதாங்கூர் இராச்சியத்தில் நடந்தப் பின்தங்கிய வகுப்பினரின் உரிமைப் போராட்டம் பல தோல்வியடைந்தன.[2]

ஆனுல், காங்கிரஸ் அங்கத்தினர்கள், ஜனநாயக அடிப் படையில் அரசாங்கத்தை உடனடியாக இந்தியாவில் மாற்றி யமைக்க வேண்டும் எனக் கோரினர். நூற்றுக் கணக்கான வருடங்கள் பயிற்சியினுல் பெற்ற ஆங்கிலப் பாராளுமன்ற அமைப்பை, இந்தியாவில் உடனடியாக அமைக்கக் காங்கிரஸ் காரர்கள் பேராசை கொண்டனர் என டவ்வரின்[3] சுட்டிக் காட்டினுர். அரசாங்கத்தின் நிதியை உடனே கட்டுப்படுத்த காங்கிரஸ் அங்கத்தினர்கள் விரும்புகிருர்கள் எனவும் குறை கூறினுர். காங்கிரஸ் சார்பில் தெலாங் (Telang) என்பவர், காங்கிரஸ் ஸ்தாபனத்திற்கு அரசாங்கத்தின் வரவு செலவு கணக்குகளைக் கட்டுப்படுத்த எண்ணமில்லை எனக் கூறினுர். இக்காலங்களில், ஆங்கிலம் தெரிந்தவர்கள் நூற்றுக்கு ஒரு சதவிகிதமே இந்தியாவில் இருந்தனர். பொறுப்பாட்சியும், ஜனநாயகமும் தழைக்கச் சமுதாய மதச்சீர்திருத்தங்கள் தேவை என்பதை விளக்கி ஜனநாயக அடிப்படை பலப்பட, எல்லா ஜாதி மதத்தினரும் சீர்திருத்தம் பெறவேண்டும் என அரசியல் தலைவர்கள் உணர்ந்தனர். ஆனுல், பத்தொன்பதாம் நூற்றுண்டில் காங்கிரஸ் கட்சியின் வருடாந்திர மகாநாட்டில், சமுதாய சீர்திருத்த மகாநாடுகள், காங்கிரஸ் பந்தலுக்கு வெளியேதான் நடத்தப்பட்டன. இதனுல், முகமதியர்களும்,[4] பிராமணரல்லாதவர்களும், காங்கிரஸ் கட்சிக்கு வெளியே இருந் தனர்.[5] 1888ஆம் ஆண்டு முஸ்லீம்கள் தனியே இந்திய தேசியப் பற்று உள்ள சங்கம் (Indian Patriotic Association) ஒன்று ஆரம் பித்தனர். 1891ஆம் ஆண்டு காலிகட் (Calicut) முஸ்லீம்கள் 'ஹிமயத்துள் இஸ்லாம் சங்கம்' ("Himayathal Islam Association) என்ற ஸ்தாபனத்தை நிறுவினர். 1894ஆம் ஆண்டு மத்திய முஸ்லீம்கள் சங்கம் (Central Muhammaden Association)

1 No. 29, The Priyan, MNR, Cl. 1894, p. 3671.
2 Ibid P. 3671
3 The Hindu dated 17th January, 1900.
4 Jaridah-i Rozgar, 3rd Dec. 1887, MNR
5 No. 74, Anthra Patrika, Jan. 15, 1915, MNR, CI. p, 228.

உருவாயிற்று, 1907ஆம் ஆண்டு பின் தங்கிய சமுதாயத்தினருடைய சங்கம் ஒன்று பம்பாயில் உருவாயிற்று.[1]

## 6

## இந்திய சிவில் சர்வீஸ் தேர்வு
## (I. C. S. EXAMINATION)

இங்கிலாந்திலும், இந்தியாவிலும், இந்திய சிவில் சர்வீஸ் தேர்வுகள் நடத்த வேண்டும் எனக் காங்கிரஸ் அதன் ஆரம்பக் காலத்திலிருந்து கூறி வந்தது. இச்சலுகையால், ஆங்கிலேயர்களுக்கும், இந்தியர்களுக்கும் சமத்துவம் ஏற்படும் எனப் பச்சையப்பர் கூடத்தில் நடந்த கூட்டத்தில் பலரும் பேசினர்.[2] ஆனால் தீண்டப்படாதவர்கள் இதை எதிர்த்துப் பிரச்சாரம் செய்தனர்,[3] பிராமணர்களும், வங்கத்தினர்களும் சுயநலத்தோடுதான் இது போன்ற உரிமைகளைக் கேட்கின்றனர் எனக் கூறினர்.[4] தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் முன் வரும் வரையில் உயர்தர வகுப்பினருக்குச் சலுகைகள் கொடுப்பின், அது மேலும் கொடுமைகள் செய்ய வாய்ப்பளிக்கும் எனக் கூறினர்.[5] இக்காலங்களில் பார்ப்பனர்கள் பெருமளவில் அரசாங்க வேலைகளில் அமர்ந்துள்ளனர் என்றும் குறை கூறினர்.

1854ஆம் ஆண்டு ஏற்படுத்தப்பட்ட சித்திரவதைக் கமிஷன்[6] விரிவான விசாரணைகள் நடத்தியதின்பின் சென்னை மாகாணம் பூராவிலும் போலீஸ் நிர்வாகத்திலும், ரெவின்யூ நிர்வாகத்திலும் பல கொடுமைகள் நிரந்தரமாக நடத்தப்பட்டு வருவதைக் குறித்து, அதன் காரணம் அரசாங்கத்தில் மேற்கூறப்பட்ட இலாக்காக்களில் மாமூல், லஞ்சம் உபரியானவரி இவைகள் வாங்குவதற்கு அரசாங்கத்தில் பலதரப்பட்ட பதவிகளை வகித்துக் கூட்டாகச் செயல்படும் மகாராஷ்டிர பிராமணர்கள்தான் இதற்குக் காரணம் என அறிவித்தனர். இத்தருணம் இந்தியாவில் குற்றவியல் நீதிபதியாக இருந்த பல உயர் ஜாதியினர், மதக் கொள்கைகளில் பண்படாமல் இருந்த நிலை காரணமாகத் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் துன்புறுத்தப்பட்டதைப் பத்திரிகைகள் எடுத்துரைத்தன. இக்கமிஷன் வருவாய் வாரியத்தில் மராட்டிய மொழிக்குப்

1. No. 30, The Pariyan, 22nd September, 1894, MNR, Cl. p. 368.
2. No. 30, The Pariyan, 22nd September, 1894, MNR, Cl, p. 368.
3. No. 25, Kerala Sanchari, 10th Jan. 1894, MNR, Cl. p. 7.
4. No. 19, Hindujana SamsKarini, Jan. 1894, MNR, Cl.
5. No. 30, The Pariyan, 22nd September, 1894, MNR Cl. p. 368.
6. See the Report of the Torture Commission.

பதிலாக ஆங்கிலமும், மாவட்ட அலுவலகங்களில் தமிழும் ஆட்சி மொழியாக இருக்க வேண்டுமெனச் சிபாரிசு செய்தது, இச் சூழ் நிலையில் 3,500 தாழ்த்தப்பட்ட வகுப்பினர் கையெழுத்திட்ட ஒரு மனுவில் இந்திய சிவில் சர்வீஸ் தேர்வு இந்தியாவில் நடைபெறக் கூடாது என அரசாங்கத்தை வேண்டிக் கொண்டனர். இந்தியாவிலுள்ள குறைபாடுகளை அறிந்து, இந்தியப் பாராளு மன்றக் காரியதரிசியாகப் பணியாற்றிய பெஃலர் (Fowler, Secretary of State) என்பவர் இந்தியர்கள் தங்களை ஆளுவதற்கு முடியாமல்போன காரணம் அவர்களிடையே காணப்பட்ட ஜாதித்துவேஷம் என அறிவித்தார்.[1]

## 7

## 1892 ஆம் ஆண்டு இந்திய மன்றம் (Indian Councils Act of 1892)

1861ஆம் ஆண்டு இந்தியக் கௌன்சில் சட்டத்தை மாற்றி மக்கள் பிரதிநிதித்துவம் அமைந்த மாகாண சபையும், மத்திய சபையும் அமைய வேண்டும் என மக்கள் விரும்பினர். இந்தியப் பாராளுமன்ற அமைப்பு வேண்டும் என மக்கள் ஆசை கொண்டனர்[2] ஆனால், இச்சபைக்கு மக்கள் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமா அல்லது அரசாங்கம் மக்கள் பிரதிநிதிகளை நியமிக்க வேண்டுமா? என்பதைப் பற்றிய மாறுபட்ட கருத்துக்கள் மக்களிடையே இருந்து வந்தன.[3]

1853ஆம் ஆண்டு சென்னை சட்டமன்றத்தில் 50 பிரதிநிதிகள் வேண்டும் என மக்கள் கோரினர். வரவு செலவுகள் இச்சபைகளின் அதிகாரத்தின்கீழ் இருக்க வேண்டும் எனக் கூறினர்.[4] ஆனால், பிரதிநிதித்துவம், முடிவு பெறும் வரை இச்சபைகள் திடீரென விரிவு அடையாமல் இருக்கவேண்டும் என மகமதியர் கருதினர். தேர்தலா? அல்லது நியமனமா? என்பதுதான் இந்திய அரசியலின் பெரும் பிரச்சினையாக இருந்தது.

இப்பிரச்சினைகளுக்கிடையே, அரசாங்கம் 1888ஆம் ஆண்டு சர். ஜார்ஜ் செஸ்ட்னி (Sir George Chestney) என்பவரைத்

[1] No. 3, The Pariyan, 22nd Sept. 1894, MNR Cl. p. 368

[2] Swadesi-Report on Telugu Newspapers for the month of May, 1876.

[3] No. 36 Hindu Janabhooshany, 18th August, 1888, MNR, Cl. p. 195.

[4] Swadesamitran-Report on Tamil Newspapers, 15th August 1885, MNR.

தலைவராகக்கொண்ட குழு ஒன்றை அமைத்துச் சீர்திருத்தத்தைப் பற்றி அரசாங்கத்திற்குத் தணிக்கை ஒன்று அனுப்ப, டவ்வரின் துரை ஏற்பாடு செய்தார்.[1] டவ்வரின் துரை தன்னுடைய நிகழ்ச்சிப் பதிவேட்டில் இந்தியர்களைத் தாராளமாகச் சட்டமன்றங்களில் நியமிக்க வேண்டுமென்றும், சட்டம் இயற்றும் அதிகாரங்களைப் பெருக்க வேண்டும் எனவும், தம் கருத்தைத் தெரிவித்தார். ஆனால், ஜாதி, மதம், மொழி போன்ற பாகுபாடுள்ள ஒருநாட்டில் பிரதிநிதித்துவம் என்பது ஒருபெரும் பிரச்சினை என்றும், பெருவாரி மக்கள் இதைக் கோராவிடில் அது பொறுப்பாட்சியைக் கோரியதாகாது எனவும் குறிப்பிட்டார்.

1892ஆம் ஆண்டு புதிய சட்டத்தின்படி (1) அரசாங்கத்தின் வருடாந்திர வரவு, செலவு கணக்குகளை மக்கள் விவாதிக்க உரிமை வழங்கப்பட்டது. (2) அரசாங்கத்தின் கொள்கைகளையும் நடவடிக்கைகளையும் பற்றிக் கேள்வி கேட்கும் உரிமை வழங்கப் பட்டது. (3) மத்திய சபையிலும், மாகாண சபையிலும் மக்கள் அதிக அளவில் பிரதிநிதித்துவம் பெற உரிமை அளிக்கப்பட்டது. மாகாண சபைகளில்[2] எட்டுக்கு அதிகமாகவும், 20க்கு அதிகப் படாமலும், பிரதிநிதிகள் இடம்பெற அங்கீகாரம் வழங்கப்பட்டது. மத்தியசபையில் 10-க்கு அதிகமாகவும், 16-க்குஅதிகப்படாமலும், பிரதிநிதிகள் இடம்பெற அங்கீகாரம் அளிக்கப்பட்டது. ஆனால், இந்திய சீரமைப்புச் சட்டத்தைப் பாராளுமன்றத்தில் கர்சன் துரை[3] கொண்டு வந்தார். தேர்தலின் அடிப்படையில் பிரதி நிதிகள் சட்டசபைகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்என்ற திருத்தப் பிரேரணையைப் பற்றிப் பேசும்போது அவர் குறிப் பிட்டதாவது இந்திய மக்களுக்குத் தேர்வுக் கொள்கை அவர் களுக்கு அளிக்கும் நல்ல அரசாங்கத்தோடு பொருந்திப் போகாது எனக் கூறினர். இந்திய மக்கள் என்பது பேச்சற்று, கல்வியற்று, தீண்டாமையினால் முற்போக்கற்றுக் கிடக்கும் கோடானுகோடிமக்கள் என விவரித்தார். படித்தவர்கள் என்பவர்கள் சமுதாயத்தில் 3 அல்லது 4 சதவிகிதமே இருந் தனர். அறியாமைப் பனியால் மூடப்பட்டிருக்கும் சமுதாயத்தில் சூரியோதயத்தின்போது, ஆங்காங்கே காணப்படும் மலைச் சிகரங்கள் எனக் குறிப்பிட்டார்.[4] என்றாலும், 1892ஆம் ஆண்டு மார்ச் மாதம் 6ஆம் தேதி பாராளுமன்ற மேல்சபையில் இச்சட்டம்

1. Minute of Lord Dufferin, the Constitutional Reforms Report, (Montagu Chelmsford), 1918 p. 68.

2. Vide A. B. Keith, op. cit. Vol. II.

3. See George Nathaniel Curzon, House of Commons, 28th March 1892, A. B. Keith, op. cit. Vol. II, p. 64.

4 See George Nathaniel Curzon, House of Commons, 28th March 1892, A. B. Keith, op. cit. Vol. II, page 64,

நார்த் ப்ருக் துரையின் (Lord Northbrooke) கருத்தோடு தேர்வு பெற்றது.[1] அதில் நியமனம் மட்டும் அல்லாமல் 'தேர்வு' அல்லது 'தெரிந்தெடுப்பு' என்ற கொள்கை சேர்க்கப்பட்டு, மசோதா நிறைவேற்றப்பட்டது.[2] தேர்வு எனக் கூறும்போது, தொகுதிகள் தேவை என்பதைச் சாலிஸ்பரி[4] துரை (Lord Salisbury) ஞாபகப் படுத்தினர். கடைசியாகத் 'தேர்தல்' என்ற பிரச்சினை இந்திய அரசாங்கத்தின் விருப்பத்திற்கு விடப்பட்டது.

1892ஆம் ஆண்டு சட்டத்தின்படி, மாகாண வரவு செலவுத் திட்டம், வருடாந்திர நிதி நிலை அறிக்கை என அழைக்கப் பட்டது. இந் நிதிநிலை அறிக்கை உறுப்பினர்களுக்கு அச்சிட்டுக் கொடுக்கப்பட்டதோடு அரசாங்கம் மேற்படி உறுப்பினர்களுக்கு நிதிநிலையை விளக்கிக்கூற வாய்ப்பு அளிக்கப்பட்டது. சட்ட மன்றங்களுக்குக் கேள்விகேட்கும் உரிமைகளும் வழங்கப்பட்டன. ஆனால், இக்கேள்விகள் அரசாங்கத்தினிடம் தாழ்மையாய்க்கேட்டு அறியும்படியாக அமைய வேண்டும். கேள்விகளில் வாதங்களோ, யூகங்களோ குறைகளோ இருத்தலாகாது. பாராளுமன்றத்தில் தாதாபாய் நௌரோஜி தலைமையில் அமைக்கப்பட்ட இந்தியப் பாராளுமன்றசபை இப் புதியசட்டத்தை வரவேற்றது.[3] 1892ஆம் ஆண்டு சென்னை வர்த்தக சங்கம், சென்னை முனிசிபல் கமிஷன், சென்னைப் பல்கலைக் கழகத்தின் செனேட் சபை, சென்னை மாகா ணத்தில் தேர்தலுக்கெனத் தொகுக்கப்பட்ட நகராண்மைக் கழகங்கள் இவைகள் நியமித்த அங்கத்தினர்களை அரசாங்கம் சட்டமன்ற அங்கத்தினர்களாக ஒப்புக் கொண்டது.[4] மொத்த அங்கத்தினர்களில் ஒருபகுதியை அரசாங்கமே நியமனம் செய்தது. இச்சீர்திருத்தம் மக்களிடையே ஜனநாயக உணர்ச்சியை அதிகப்படுத்தியது. 1893ஆம் ஆண்டு காங்கிரஸ் ஸ்தாபனததை ஒரு நிரந்தரமான அரசியல் ஸ்தாபனமாக, மக்கள் மாற்ற வேண்டும் எனக் கருதினர்.[5] ஆங்கிலேயக் காங்கிரஸ் கமிட்டி இந்தியச் சீர்திருத்தத்துக்கு வேண்டிச் செய்த தொண்டு களைக் காங்கிரஸ் ஸ்தாபனம் பாராட்டியது.

[1] Memorandum by the British Committee of Indian National Congress Vide the Indian Councils Act and the Acts amending it with all the official papers connected there with etc. (The National Press, Madras) 1893, pp.21-22

[2] Ibid

[3] Ibid, pp. 23-24

[4] No. 51, Swadesamitran, 17th July 1892, MNR, Cl. p. 232.

[5] See No. 48, Kerala Patrika, 20th July 1893, MNR, Cl. p. 199.

1892ஆம் ஆண்டு இரத்தினசபாபதி பிள்ளை[1] 'குழந்தைகள் திருமணம்' (child marriage) அகற்றப்பட வேண்டும் என்றும், திருமண வயதைப் பெண்களுக்கு 10 என்றும், ஆண்களுக்கு 16 என்றும் உயர்த்தப்பட வேண்டும் எனக் கோரிய மசோதா, பிராமணர்களின் எதிர்ப்பினால் தோற்றது, பிராயப் பூர்த்தியான பெண்கள் திருமணம் செய்யக்கூடாது என இந்து மதம் கூறிய தாகப் பிராமணர்கள் கருதினர். இதனால், 2 வயது பெண் 60 வயதான ஆணை மணக்க நேரிட்டது. மதவாதிகள் புதிய சட்டங்கள் மதக் கொள்கைகளில் குறுக்கிடும் எனக் கூறினர், இந்துக்கள் மதம்தான் மேல் எனக் கருதி வந்தனர்.[2] 1933ஆம் ஆண்டுதான் சாரதா சட்டத்தின்படி இளம் குழந்தைகளைக் கிழவர் களுக்குத் திருமணம் செய்யும் கொள்கை நிறுத்தப்பட்டது. இது போன்ற மசோதாக்கள் இந்திய அரசியல் முன்னேற்றத்திற்கு முன்னோடியாக இருந்து, இந்துசமுதாயம் புனர்ஜென்மம் அடைய வேண்டும் என்ற உண்மையை விளக்கியது.

## 8

## பத்திரிகைகளும், பொதுமக்கள் அபிப்பிராயங்களும் (Press and Public Opinion)

இந்தியாவில் சுதந்திர உணர்ச்சியை உண்டாக்கப் பத்திரி கைகள் பெரும் உதவி அளித்தன. பத்திரிகைகளின் சுதந்திரம் 1835ஆம் ஆண்டு வழங்கப்பட்டது.[4] ஐரோப்பியர்கள் அல்லாமல், இந்தியர்கள் நடத்தி வந்த பத்திரிகைள், ஆங்கில அரசாங் கத்தின் நன்மைகளைப் பெருமளவில் மக்களுக்கு எடுத்துக் கூறி வந்தன.[5] ஆங்கிலேயர் ஆட்சியில் நடந்து வந்த சமத்துவம், கல்வி முன்னேற்றம், புதிய ஆட்சித் துறைகள், புதிய சட்டங்கள், நீதி மன்றங்கள், குடிமுறை சீர்திருத்தச் சட்டங்கள் போன்ற நடவடிக்கைகளைப் பத்திரிகைகள் வியந்து பேசின. என்றாலும், மக்களிடையே காணப்படும் குறைபாடுகளையும், அவ்வப்போது விளக்கி வந்தன. உயர்ந்த சாதியினரால் நடத்தப்பட்ட பத்திரி கைகள், அரசாங்கத்தின் அரசியல் கொள்கைகளை எதிர்த்தும், நாட்டுப் பழக்க வழக்கங்களை உயர்த்தியும் பேசின. ஆனால்,

1. See No. 46, Kerala Patrika, 6th May 1893, MNR, Cl. p. 125
2. No. 35, Vijathavajam, February 1898, MNR, Cl, p. 47.
3. Ibid.
4. R. Palme Dutt, op. cit, Chapter 4, p. 90.
5. Vetticodiyon, 1st June, 1878, Report on Tamil Newspaper for the week ending with 8th June, 1878, MNR, Cl. p.l.

தாழ்ந்த வகுப்பினர் நடத்திவந்த பத்திரிகைகள் அரசாங்கத்தை உயர்த்தியும், சமூகக் கோட்பாடுகளைக் கண்டித்தும் எழுதி வந்தன. பொதுவாகத் தேசிய உணர்ச்சியை வளர்க்க வட்டார மொழிகள் பெரிதும் உதவின. இந்திய சுதந்திரப் போராட்டத்தின்போது அடைந்த வெற்றி, தோல்விகள், இந்திய சமுதாயத்தில் ஏற்பட்ட ஏற்றத்தாழ்வுகளைப் பிரதிபலிப்பதே யாகும்.

## 9

## 1909ஆம் ஆண்டின் மிண்டோ-மார்லி சீர்திருத்தங்களும், பிராமணரல்லாதவர்கள் விடுதலையும்

இந்தியச் சட்டமன்றத்தை விரிவுபடுத்த வேண்டும் என இந்தியர்கள் கேட்டு வந்த கோரிக்கைகள் 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மக்களிடையே ஓங்கி வளர்ந்தது.[1] உடனடியாகப் பாராளுமன்ற அடிப்படையான அரசாங்கம் இந்தியாவில் அமைய வேண்டும் எனத் தீவிரவாதிகள் விரும்பினர். காங்கிரஸ் இயக்கம் இதனால் பிளவுபட்டது. தீவிரவாதிகள் அரசாங்கத்தை அதிகாரப் பிரிவினையின் அடிப்படையில் பிரித்து, அரசாங்க நிர்வாகம் மக்களுக்குப் பொறுப்புள்ளதாக இருக்க வேண்டும் எனக் கூறினர். சட்டமன்ற மேலவையில் எல்லா அங்கத்தினர்களும் தேர்வு பெற்றவர்களாக இருக்க வேண்டும் என்றும், இச் சபைகளுக்கு வரவு, செலவுகளை நிர்ணயிக்க அதிகாரம் வேண்டும் எனவும், கூறினர்.[2] அன்றிருந்த சட்டமன்றங்கள் உயிரற்ற மன்றங்கள் எனக் கூறினர்.[3] தீவிரவாதிகள் அயர்லாந்து நாட்டின் உதாரணத்தை முன் வைத்து,[4] போராட்டத்தினாலும், பலாத்கார முறையினாலும் சுதந்திரம் பெற வேண்டும் எனக் கருதினர். கோரிக்கை, மனு, பிரார்த்தனை (Plea, petition and prayer) என்ற பாரம்பரியமான வழியை விட்டு, அரசாங்கத்தைக் குறை கூறி, அரசாங்கத்தைக் கவிழ்க்க முயற்சி செய்தனர். ஆங்கிலப்பாராளுமன்றத்தில் கெயின், வெட்டர்பர்ன், நௌரோஜி முதலியோர் இந்தியாவின் ஆட்சி பற்றிப் பல கேள்விகளை எழுப்பினர்.[5]

1. No. 59, Raja Yogi, 20th June 1894, MNR, CI. p. 198.
2. No. 16, The Hindu Nesan, 7th June 1902, MNR, p. 208.
3. No. 11, The Hindu Nesan, 9th March, 1904, MNR, p. 114.
4. See Alfred Webb M.P., and President of the Congress vide No. 74, Rajayogi, 9th March, 1895, MNR, CI p. 106.
5. No. 50, Swadesamitran, 21st May, 1894, MNR, Cl. p. 172.

திலகரும், அவரைப் பின்பற்றிய தீவிரவாதிகளும் கேசரி என்ற பத்திரிகையில் சிவாஜியினுடைய பெருமைகளைச் சுட்டிக் காட்டி இந்தியா உடனடியாகச் சுதந்திரம் அடைய வேண்டும் என்ற கொள்கையைப் பரப்பி வந்தனர். 1895ஆம் ஆண்டு பூனாவில் சிவாஜியின் சிலை நிறுவப்பட்டது.[1] '1897ஆம் ஆண்டு தீவிரவாதிகளின் கலகக் கருத்துக்களும், பலாத்காரமும் நாட்டின் சுதந்திரப் போராட்டத்திற்குத் தேவை', என அவர் வெளியிட்ட கருத்துக்களுக்காகக் கைது செய்யப்பட்டார்.[2] அவர் குற்றவாளி எனத் தண்டிக்கவும் பட்டார். பம்பாயில் ராண்டும், ஆயர்ஸ்ட்டும் (ஆங்கிலேயர்கள்) கொலை செய்யப்பட்டனர். இதற்காகப் பம்பாயிலுள்ள பார்ப்பனர்களை அரசாங்கம் குற்றம் சாட்டியது.[3]

1901ஆம் ஆண்டு படித்த சமூகத்தின் பிரதிநிதிகள், மாகாண சட்ட மன்றங்களிலிருந்து வெளி நடந்தனர். ஊட்டியில் நடந்த சென்னை மாகாண சட்டமன்றத்தில் பல கேள்விகள் தீவிர வாதிகள் சார்பில் கேட்கப்பட்டன. இக்காலத்தில் கர்சன் துரை வங்காளத்தை இரண்டாகப் பிரித்துவிட வேண்டும் எனக் கருதினார். பெரிய மாகாணமாக இருந்தபடியினால், ஆங்கிலேயர் இம்முடிவை ஏற்றுக்கொண்டனர். முஸ்லீம்களும் இதை ஆதரித்தனர்.[4] இந்துக்கள் இதை எதிர்த்தனர். வங்காளத்தினர் இங்கிலாந்திலிருந்து இறக்குமதியான பொருள்களைத் தெருக்களில் உடைத்தனர். இக்காலத்தில் சுதேசி இயக்கம் வலுப்பெற்றது. சுதேசி அரசாங்கம் வேண்டும் என்றும், சுதேசிப் பொருள்களை மக்கள் உபயோகிக்க வேண்டும்[5] என்றும், தேசிய கல்வி சுதேசிக் கல்வியாக இருக்கும் என்றும் கடும் தீவிரவாதிகள் வாதாடினர். என்றாலும், 1911ஆம் ஆண்டு வங்காளத்தின் பிரிவினை அகற்றப் பட்டது.[6] ஆனால், முஸ்லீம்கள் இதனால், மகிழ்ச்சிஅடையவில்லை. 1907ஆம் ஆண்டு வ.உ. சிதம்பரம் பிள்ளை இந்திய சுதேசிகப்பல் கம்பெனியை ஆரம்பித்தார். திருநெல்வேலியிலும், தூத்துக் குடியிலும் சுதேசிக்கொள்கைகள் விரிவாகப் பரவிவந்தன. ஆனால், வங்காளத்தில் அதிதீவிர வாதிகள் அரசியல் கொலைகளுக்கும் துணிந்தனர். ஆங்கிலநாட்டிலிருந்து இறக்குமதியாகும் பொருள்களை வாங்க மறுத்தனர். ஆனால், மக்கள் பொறுப்பாட்

1. No. 94, Kerala Patrika, 31st July 1894, MNR, Cl. p. 213.
2. No. 32, The Swadesamitran, 29th July 1897, MNR, Cl.
3. No. 66, The Swadesamitran, 5th March, 1898, MNR, Cl. p. 109.
4. No. 19, The Swadesamitran, 2nd Nov. 1905, MNR, Cl. p. 407.
5. No. 10, The Swadesamitran, 11th August, 1905, MNR, Cl. p. 301.
6. No. 4, The Desabhimani, 16th December, 1911, MNR, Cl. p. 144.

சிக்கும், சுயாட்சிக்கும் பக்குவப்படவில்லை எனப் பத்திரிகைகள் கூறின. ஜாதியால் ஏற்பட்ட தீமைகளைத் திலகரும் ஒப்புக் கொண்டார். ஜாதி அடிப்படையில் ஏற்பட்ட உயர்வு தாழ்வுகள் சுயாட்சிக்கு எதிராக இருந்தன எனக் குறிப்பிட்டார்.[1] ஆனால், இந்திய அரசாங்கம் 1906ஆம் ஆண்டு அரசியல் அமைப்பில் மாற்றங்கள் ஏற்படுத்த ஒரு குழுவை அமைத்தது. அக்குழுவின் வேண்டுகோட்களாவன[2]

1. மத்தியில், அரசர்களும், அதிகாரிகளும் கொண்ட ஒரு சபையை அமைப்பது;

2. மக்கள் பிரதிநிதித்துவம் வாய்ந்த மத்திய சபையும், மாகாண சபையும் அமைப்பது;

3. மாவட்ட மன்றங்களில் மக்களுக்குப் பிரதிநிதித்துவம் வழங்குவது;

4. கவர்னர் ஜெனரலின் நிர்வாக சபையில் இந்தியருக்கு இடமளிப்பது;

5. மாகாணங்களில் கவர்னருடைய நிர்வாக சபையில் ஒரு இந்தியரை நியமிப்பது;

6. மத்தியில் கல்வி இலாக்கா ஒன்று அமைப்பது;

7. வங்காளத்திலும், உத்திரப்பிரதேசத்திலும் புதிதாக மாகாண சட்டமன்றங்கள் அமைப்பது;

8. மாகாணங்களிலும், மத்தியிலும் ஆலோசனை சபைகள் நியமிப்பது;

ஆனால், ஆலோசனை சபைகளைப் பற்றிய வேண்டுகோள் களைத் தவிர மற்ற எல்லாக் கருத்துக்களையும் மிண்டோ ஒப்புக் கொண்டார். மார்லியினுடைய முற்போக்குக் கருத்துக்களை மக்கள் பெரிதும் பாராட்டினர். கவர்னர் ஜெனரலின் நிர்வாக சபையிலும், கவர்னரின் நிர்வாக சபையிலும் இந்தியரை நியமிப் பதை மக்கள் மிகவும் போற்றினர்.

1. No. 1, The Liberal, 15th March 1908, MNR, Cl. p. 144.
2. See No. 6, The Carlylean, Third Week of September 1907, MNR, Cl. p. 495.
3. Vide R. R. Sethi and V. D. Mahajan, Constitutional History of India, (S. Chand and Co, Delhi) 1956, pp. 62-63.

மிண்டோ - மார்லி சீர்திருத்தங்களின் அடிப்படையில் பொருளாதார முன்னேற்றமடைந்த சாதியினருக்கும், எல்லா முக்கிய மதத்தினருக்கும் பிரதிநிதித்துவம் (Communal representation)[1] அளிக்க வாய்ப்பு ஏற்பட்டது. பல ஜாதியினரும், தங்களிடையே சண்டையிட்டு அரசிடம் பிரதிநிதித்துவத்தைப் பற்றி வாதாடமல் இருக்க இது தகுந்த வழி எனப் பத்திரிகைகள் எடுத்துக் கூறின. ஆனால், உயர்ந்த ஜாதியினர், மாவட்டப் பிரதிநிதித்துவம் (Territorial representation) வேண்டும் எனக் கேட்டனர். ஆனால், மூன்று அல்லது நான்கு சதவிகிதம் படித்தவர்கள் எல்லா மக்களையும் பிரதிநிதித்துவம் வகிக்க விரும்பியதைத் தாழ்த்தப்பட்டவர்களும், முஸ்லீம்களும், கிறிஸ்தவர்களும் ஒப்புக்கொள்ளவில்லை. மேலும், இம்மக்கள் சட்ட ரீதியாகவும், சாத்வீக முறையிலும் முன்னேற்றம் அடைய விரும்பினர்.

மார்லியினுடைய சீர்திருத்தச் சட்டங்கள் 1909ஆம் ஆண்டு நடைமுறைக்கு வந்தது.[2] சென்னையில் 19 பிரதிநிதிகள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட அனுமதிக்கப்பட்டனர். கவர்னர் 23 அங்கத்தினர்களை நியமனம் செய்ய அதிகாரம் வழங்கப் பட்டார். அதில் 16 பேருக்கு அதிகப்படாமல், அதிகாரிகளாக இருக்க வேண்டும் என்று குறிப்பிடப்பட்டது. தேர்தெடுக்கப் பட்ட அங்கத்தினர்கள் எண்ணிக்கை நாளடைவில் 23 ஆக மாறியது. கவர்னர் தம் விருப்பப்படி இரண்டு நிபுணர்களைச் சட்டமன்றத்தில் நியமனம் செய்யவும் அதிகாரம் வழங்கப் பட்டது.[3]

1909ஆம் ஆண்டு பாராளுமன்றச் சட்டத்தின்படி (1) மத்திய சட்ட மன்றத்திலும், அதிகப்படி அங்கத்தினர்கள் நியமனம் செய்யப்பட்டனர். (2) கல்கத்தாவில் ஒரு லெப்டினன்ட் கவர்னரை நியமித்தனர். (3, வரவு செலவு கணக்கு பற்றிச் சட்டமன்ற அங்கத்தினர்கள் கேள்வி கேட்க வாய்ப்பு அளிக்கப்பட்டது.

சென்னையில் 1909ஆம் ஆண்டில் பாராளுமன்றச்சட்டத்தின் அடிப்படையில் மொத்தம் அதிகப்படியான அங்கத்தினர்கள் 42

1. No. 4, The Indian Patriot, 31st August 1907, MNR, CL.P. 398
2. Proceedings of the Government of Madras in the Legislative Department for the month of November, 1909, G.O. No. 50, 16th November 1909.
3. Ibid

என நிர்ணயிக்கப்பட்டது.[1] இதில் 19 பேர் பொதுத் தொகுதிகளால் தேர்ந்தெடுக்கப்படுவர். எஞ்சிய 23 பேரும் அரசாங்கத்தாரால் தேர்ந்தெடுக்கப்படுவர். இந்த 23 பேர்களில் 16-க்கு அதிகப்படாமல் அதிகாரிகளாக இருப்பர். இதில் ஒருவர் இந்திய வியாபாரச் சமுதாயத்தைச் சேர்ந்தவராக இருப்பார். அதிகாரிகள் அல்லாதவர் எண்ணிக்கை அதிகப்படியாக (majority) குறிப்பிடப்பட்ட போதிலும், அதிகப்படியானவர்கள், அதிகாரிகள் அல்லாமல் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அல்ல எனினும், நாளடைவில் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் எண்ணிக்கை 23 ஆக அதிகரித்தது. மொத்தம் 42 எனக்குறிப்பிட்ட அங்கத்தினர்கள் எண்ணிக்கை 44 ஆக மாறியது.

தேர்ந்கெடுக்கப்பட்ட 19 அங்கத்தினர்கள் பின்வரும் தொகுதியிலிருந்து தேர்வு பெற ஆணையிடப்பட்டது.[2] இருதரப்

1. சென்னை நகரசபை (Corporation of Madras) .... 1
2. சென்னைப் பல்கலைக்கழகம் (University of Madras) ... 1
3. நகராட்சிக் கழகங்கள், மாவட்டக் கழகங்கள் (Municipalities, District Boards and Taluk Boards) .... 8
4. சமீன்தார்கள் (Zamindars) .... 2
5. நிலச்சுவான்தார்களும், சமீன்தார் அல்லாதவர்களும் (Landlords and other than Zamindars) .... 2
6. சென்னை வர்த்தகர் சங்கம் (By Madras Commerce) .... 2
7. சென்னை வர்த்தகக் குழு (By Madras Chamber of Commerce) ... 1
8. சென்னை வியாபார வர்த்தக சபை (By Madras Trade Association) .... 1
9. சென்னை தோட்ட முதலாளிகள் (Planting Community) .... 1
10. முஸ்லீம்கள் (Muhammadans) ... 2

1. Proceedings of the Government of Madras in the Legislalive Department for the month of November 1909, G.O.No. 50, 16th November, 1909.

2. Ibid

பட்ட முனிசிபாலிட்டிகளில் வடக்கு, தெற்கு என்ற இடங்களில் தனி வாக்காளர் பட்டியல் ஒதுக்கப்பட்டது.[1]

அங்கத்தினர் தகுதியுரிமை :

1. பெண்கள் தேர்தலுக்குப் போட்டியிடத் தகுதியில்லை.
2. 25 வயத்திற்கு கீழ்ப்பட்டவர்கள் தேர்தல் பெறஉரிமை யில்லை.
3. மனக்கோளாறு உள்ளவர்களும், மஞ்சள் காகிதம் கொடுத்தவர்களும், அரசாங்க வேலையிலிருந்து நீக்கப் பட்டவர்களும், குற்றவியல் நீதி மன்றத்தில் தண்டனை பெற்றவர்களும் அங்கத்தினர் ஆக முடியாது.[2]

செயல் முறை :

சீர்திருத்தம் செயல்படும் முறையைப் பார்க்கின், நாள டைவில் பிரதிநிதிகளுக்கிடையே நல்ல ஒத்துழைப்பு ஏற்பட்டது.[3] 1910ஆம் ஆண்டு ஜனவரி மாதம் கூடிய சபையில எல்லா வியாபார நிறுவனங்களும், தொழில் ஸ்தாபனங்களும், வியாபாரத் திலும், தொழிலிலும் முன்னேற்றமடைந்த சாதியினரும் அங்கத் தினராய்த் திகழ்ந்தனர்.[4] காங்கிரஸ் கட்சியைச் சார்ந்த அங்கந் தினர்களும் கூட அரசாங்கத்துடன் நல்லுறவு கொண்டனர். அதிகாரிகளும் மக்கள் பிரதிநிதிகளும், ஒருவரோடொருவர் நட்பு கொண்டனர். மிண்டோ துரை இந்தியப் பாராளுமன்றத்தின், சைமன் டி-மாண்போர்டு(Simon De-Monford) ஆகத் திகழ்ந்தார்[5] எனப் பத்திரிகைகள் கூறின. ஆனல், 1909ஆம் ஆண்டின் சீர்திருத்தம் பொறுப்பாட்சியை ஏற்படுத்தவில்லை.

சபையின் சுமுகமான அமைப்பின் காரணமாகத் தீவிர வாதிகள் மிகவும் கண்டிக்கப்பட்டனர். 1910ஆம் ஆண்டிலிருந்து புதிய கல்வி நிலையங்கள் சென்னைமாகாணத்தின் பல இடங் களில் ஆரம்பிக்கப்பட்டன.[6] 1914ஆம் ஆண்டு வி. எஸ். எஸ்.

1. Ibid
2. Proceedings of the Government of Madras in the Legislative Department for the month of November 1909, G. O. No. 50, 16th Nov. 1909.
3. No. 27, Swadesamitran, 5th Jan. 1910, MNR, Cl. p. 70.
4. No. 37, Veera Kesari, 25th Dec. 1907 in MNR, 1910, Cl. p. 35.
5. No. 14, Indian Patriot, 19th Sept. 1910, MNR, Cl. p. 1216.
6. See Anantha Rao, No. 6, The Mysore Times, 9th Oct. 1910, MNR, Cl. p. 1332.

சாஸ்திரி[1] (V.S S. Sastri) பெண்கள் ருதுவான பின்பு நடந்த திருமணங்கள் அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்று கொண்டுவந்த மசோதா நிறைவேறவில்லை. பிற்போக்கு சமுதாயத்தில் குந்ழதைகள் திருமணத்தை எதிர்ப்பது அக்காலத்தில், பெரும் போராட்டமாக இருந்தது. அதைப்பற்றிப் பிராமணர்களிடையே பெரும் வாக்குவாதம் நடந்தது.

அக்காலத்தில், கவர்னருடைய சபையிலும், கவர்னர் பொதுச் சபையிலும் எந்த இந்தியரை நியமிப்பது என்பது பற்றி வாக்குவாதம் நடந்தது. 1910ஆம் ஆண்டு சென்னையில் போபிலி ராஜா (Raja of Bobbili) கவர்னருடையசபையில் இடம் பெற்றார்.[2] பிராமணர்கள் இதைப்பெரிதும் எதிர்த்தனர். இராம்சே மாக்டொனல்ட் பாராளுமன்றத்தில் போபிலி மகாராஜாவுக்குச் சென்னை நிலச்சுவான்தார் சங்கத்தின் பின்பலம் உண்டு என அறிவித்தார்.[3] என்றாலும், 1911ஆம் ஆண்டு போபிலி ராஜா ராஜிநாமா செய்தார். அவ்விடத்தில் நீதிபதி கிருஷ்ணசாமி அய்யர் நியமனம் செய்யப்பட்டார். அவர் காலத்திற்குப்பின், 1912ஆம் ஆண்டு பி. சிவகாமி அய்யர் நியமனம் பெற்றார். 1917ஆம் ஆண்டு பி. இராஜகோபாலாச்சாரியாரும்,[4] பின் சி. பி. இராமசுவாமி அய்யரும் நியமனம் பெற்றனர்.

மத்தியசபையிலும் எஸ். பி. சின்ஹா[5] என்பவர் நியமனம் பெற்றார். 1919ஆம் ஆண்டு சட்டத்தின் அடிப்படையில் கவர்னர் சபையில் இரண்டு இந்தியர்களுக்கு இடம் அளிக்கப்பட்டது. 1921ஆம் ஆண்டு கான்பகதூர் முகமது அபிபுல்லா சாகிப், சீனிவாச அய்யங்கார் என்பவர்கள் நியமிக்கப்பட்டனர். 1922ஆம் ஆண்டு முகமது இஸ்மாயிலும், சி. பி. இராமசுவாமி அய்யரும் அங்கத்தினர்களானார்கள். எனினும், இந்த அங்கத்தினர்கள் ஆங்கில அரசாங்கத்தைச் சார்ந்தே நின்றனர்.

1909ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சட்டத்தின் அடிப்படையில் பல புதிய சீர்திருத்தச்சட்டங்கள் ஆங்கில அரசு இந்திய மக்களுக்கு அளிக்கும் என அரசியல் வாதிகளிடையே நம்பிக்கை பிறந்தது. பாராளுமன்ற அடிப்படையில் பொறுப்பாட்சி

1 G. O. No. 148, 30th Nov. 1914, Legislative Department, Government of Madras.

2 No. 11, The Indian Patriot, 5th March, 1910, MNR, CL.P. 329.

3 No. 6, The Hindu, 23rd April 1910, MNR, CL.P. 569.

4 G.O.No.304, 17th March 1917, Public Department, Government of Madras.

5 No.4, The Indian Patriot, 24th March 1909, MNR, Cl.P.193.

கொடுக்கப்படாமல் இருந்த போதிலும், மக்கள் பயிற்சி பெற மிண்டோ மார்லி சீர்திருத்தம் பெரும் வாய்ப்பளித்தது. 1919ஆம் ஆண்டு நடந்த தேர்தலில், 21 தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களுள் 16 பேர் பிராமணர் அல்லாதவரும், 5 பிராமணர்களும் இருந்தனர். விவசாயத்தைப்பற்றியே எப்போதும் சிந்தனை கொண்ட பிராமணர் அல்லாத மக்களும், அரசியல் வாழ்வில் முன்னேற ஒரு வாய்ப்பு கிடைத்தது.[1] உண்மையில் 1916ஆம் ஆண்டு நிலைநாட்டப்பெற்ற தென்னிந்திய மிதவாத கூட்டமைப்பு (South Indian Liberal Federation) என்ற கட்சி ஏற்படவும், வளரவும், மிண்டோ மார்லி சீர்திருத்தம் பெரிதும் உதவியது. 1910ஆம் ஆண்டு பின் தங்கிய சமுதாயத்தினர் தங்களுக்குச் சட்டமன்றத்தில் பிரதிநிதித்துவம் வேண்டும் எனக் கேட்டதற்கு அவர்கள் தீண்டாமையால் ஒதுக்கப்பட்ட சாதியினர் எனக்கருதி, 1909ஆம்ஆண்டு சட்டத்தின்படி,சட்டமன்றத்தில் அவர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கப்படவில்லை. இந்திய சமுதாயம் மதத்தாலும், சாதியாலும் பிரிக்கப்பட்ட கொடுமையும், ஜாதிகளுக்குத் தனிப்பிரதிநிதித்துவம் கொடுக்கவேண்டிய அவசியமும் மிண்டோ மார்லி சீர்திருத்தங்களினால் புலனாகும். இந்தியப் பாராளுமன்றச் சரித்திரம், ஆங்கிலேயர் சரித்திரம் போலல்லாமல் சிக்கலான பாதையில் சென்றது. என்றாலும், இச் சீர்திருத்தங்கள் பெரும் சமுதாய—அரசியல் புரட்சிக்கு அடிப்படையாக இருந்தன.

1. No. 84, Kristna Patrika, 16th August, 1919, MNR, CI. P.1296.

# 2. மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தமும், இரட்டை ஆட்சியும்

## 1

### அன்னிபெசண்ட் அம்மையாரின் தலைமையில் தன்னாட்சி இயக்கம்

1909-ஆம் ஆண்டின் சீர்திருத்தத்தின் அடிப்படையில், இந்து சமுதாயத்தின்மேல் சாதியினர் பல நன்மைகளை அடைந்த போதிலும், இச் சீர்திருத்தங்கள் அவர்கட்குப் பெரும் பாதகமாக விளைந்ததெனக் கருதினர். தீவிரவாதிகள் தொடர்ந்து சுயராஜ்யமும், சுயாட்சியும் உடனடி வேண்டும் எனக் கோரினர். இவர்களுக்குத் தலைமை வகித்த திருமதி அன்னிபெசன்ட் அம்மையார் தன்னாட்சி (Home rule) உடனடியாக வேண்டும் எனப் போராடினர்.

பொதுப்பண்பு மீறி (eccentric) இருப்பது தனிப்பெருமை யெனப் பெருங்குடியில் பிறந்த ஆங்கிலேயர் ஒவ்வொருவரும் கருதுவதுண்டு.[1] அன்னிபெசண்ட் அம்மையார்[2] பெருங்குடியில் பிறந்த ஆங்கிலேய மரபில் தோன்றியதுமல்லாமல் பொதுப் பணி மீறி இருப்பது ஆங்கில வம்சத்தைச் சார்ந்த எந்த ஆண் மகனுடையவும் தனி உரிமையல்ல என்பதற்கு எடுத்துக்காட்டாக வும் விளங்கினர். இவர் 1847ஆம் ஆண்டு அக்டோபர் முதல் தேதியன்று வில்லியம் பேஜ்வுட் (Dr. William Page Wood) என்ற இலண்டன் டாக்டருக்கும், அயர்லாந்து நாட்டு அம்மை யார் ஒருவருக்கும் பிறந்தார். 1867ஆம் ஆண்டு ரெவரண்ட் திரு. பிரேன்க் பெசண்ட் (Mr. Frank Besant) என்பவரைத்

[1] See, William Roys Smith's, Nationalism and Reform in India, 1938, Chapter II, (The Nationalist Movement, 1885-1917) Page 56.

[2] Ibid

திருமணம் செய்து கொண்டார். ஆனல், 1873-ஆம் ஆண்டு அவர்கள் இருவரும் பிரிந்து விட்டனர். ஒரு சில ஆண்டுகள் கழிந்த பின்னர் இவ்வம்மையார், திரு. சார்லஸ் பிராட்லா (Mr. Charles Bradlaugh) என்பவருடைய கொள்கைகளை மேற் கொண்டு கிறித்துவ மதத்தின் பழங்காலக் கொள்கைகளை உதறி எறிந்து, கடவுள் இல்லை என்ற கொள்கையை மேற்கொண்ட தோடு, பிரசவத் தடை வேண்டும் என வாதித்து வந்தார். ஆங்கிலேயர், எகிப்து, இந்தியா போன்ற நாடுகளோடு கொண்ட தொடர்புகளின் தன்மைகளை அவர் தாக்கி எழுதி வந்தார்.[1] 1884ஆம் ஆண்டு திரு. பெர்னுட்ஷாவுடன் (Mr. Bernard Shaw) சேர்ந்து சோஷலிஸக் கொள்கைகளை மேற்கொண்டார். 1889ஆம் ஆண்டு பிரம்மஞான சபையில் அங்கத்தினராகச் சேர்ந்த மேடம் ஹெச். பி. பிளவாட்ஸ்கி (Madame H. P. Blavatsky) என்பவ ரைப் பின்பற்றி இந்தியா வந்து சேர்ந்தார். 1898-ஆம் ஆண்டு கலோனல் ஆல்காட் (Colonel Olcott) என்பவரின் உதவியோடு பனரசில் மத்திய இந்து கல்லூரியை (Benares Hindu College) நிலைநாட்டினர். இக்கல்லூரிதான் பிற்காலத்தில் இந்துப் பல்கலைக் கழகம் தோன்றுவதற்கு மூலமாக இருந்தது.[2]

இவர் 1908-ஆம் ஆண்டிலிருந்து 'இந்தியப் புதல்வர்கள் சங்கத்தை' ('Sons of India Society') நிறுவி, மக்களிடையே அனுவசியமான கலவரங்கள் ஏற்படாமல் தடுக்க முயற்சி செய்து வந்தார். இந்திய நாடு சுதந்திரம் அடையப் பல நூற்றுண்டு கள் ஆகுமெனவும், பரிபூரண சுதந்திரம் என்பது இந்தியாவிற் குத் தீமையாக இருக்குமெனவும், உலக நாடுகளெல்லாம் சேர்ந்து அமைக்கும் ஒரு கூட்டாட்சியே இந்தியாவிற்கு நன்மை பயக்கும் எனக் கூறி வந்தார்[3] 1910ஆம் ஆண்டு முதல் தீவிர செயல்களுக்கு விரோதமாகத் தன் இயக்கத்தை நடத்தினர். ஆனல். இந்திய சுதந்திரத்திற்காகப் போராடுபவர்களைத் தயவுடன் நடத்த வேண்டும் என ஆங்கில அரசைக் கேட்டுக் கொண்டார். இதனுல், தீவிரவாதிகள் ஆத்திரமடைந்து, ஆங்கில அரசிற்கும், தீவிரவாதிகளுக்கும் இடையே நல்லுறவு ஏற்படுத்தப் பெசண்ட் அம்மையார் முனைந்துள்ளார்கள் என அவரைக் குறை கூறினர்.[4] இத்தருணத்தில் ஆங்கிலேயர் 'போயர்களுக்குச் சுயாட்சி' ('Independence for Boers') கொடுத்த

[1] Ibid P. 57.
[2] bid P. 57.
[3] No. 23, India. 31st October, 1908, MNR, Cl. p. 895.
[4] No. 45, Sadhvi, 1st March 1910, MNR, Cl. p. 345.

னர். இதை அம்மையார் வரவேற்கவில்லை. இதனால், ஆத்திரம் கொண்ட சுயராச்சியவாதிகள் பிரம்மஞான சபையைப்[1] பெரிதும் தாக்கிப் பேசினர். 1914-ஆம் ஆண்டு இங்கிலாந்திற்கும். ஜெர்மனிக்குமிடையே முதல் உலக மகாப்போர் ஆரம்பித்தது. அப்போது, பெசண்ட் அம்மையார், ஆங்கிலேயர்களும், இந்தியர்களும் ஒன்றுபட்டுப் போரை நடத்த வேண்டும் என வேண்டினார். இதற்கு இந்தியாவில் அன்றைய நிலையில் சமாதானம் தேவை எனக் குறிப்பிட்டார். அதோடு, ஆங்கில அரசு நிலைத்த நிற்க, படித்தவர்கள் பாடுபட வேண்டும் எனவும் கேட்டுக் கொண்டார்.[2]

ஆனால், 1915-ஆம் ஆண்டு போரின் விசை கூடியதும், போரில் இந்திய ரத்தம், இங்கிலாந்தையும், பிரான்சு நாட்டையும் காப்பாற்ற உபயோகப்படுகிறது என அம்மையார் குறை கூறினர்.[3] இவ்வாண்டில், பெசண்ட் அம்மையார் காங்கிரசின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் எனப் பல காங்கிரஸ் வாதிகள் எண்ணிய போதிலும், இவரைப் பின் ஆதரிக்க மறுத்து விட்டனர்.[4] இவரைக் 'கடினமான பெண்மணி' ('Impossible Woman') எனப் பலரும் கருதினர். இவ்வம்மையாருக்கும், காந்திக்கும் பல அபிப்பிராய பேதங்கள் அக்காலத்தில் இருந்து வந்தன. இதனால், பெசண்ட் அம்மையார், திலகரோடு சேர்ந்து தீவிரவாதியாகப் பணியாற்றினர்.[5] இந்தியாவில் முஸ்லீம்கள் பிரச்சினையை ஆங்கிலேயர்கள் வேண்டுமென்றே ஆரம்பித்தனர் என ஆங்கிலேயர்களை அம்மையார் குற்றம் சாட்டினர். இந்திய மக்களைப் பிரித்தாளும் மனப்பான்மையுடன் ஆங்கிலேயர்கள் இந்நாட்டை ஆண்டனர் என வாதித்தார்.[6] கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சியைக் குறிப்பிட்டு, 'ஆங்கிலேயர்கள் பல ஒப்பந்தங்களை உடைத்தவர்கள் என்றும், ஊதியத்திற்கு வேண்டி வழக்குகளை உண்டாக்குபவர்கள்' என்றும் குறை கூறினர். 1830ஆம் ஆண்டுமுதல் 1853ஆம் ஆண்டுவரையிலும் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சி 'அளவுக்கு மீறி நடந்த எதேச்சாதிகார ஆட்சி' எனப் பத்திரிகைகளில் எழுதி வந்தார். மேலும் இந்தியாவிற்கும், இங்கிலாந்திற்குமுள்ள தொடர்பில் அரசியல் பொருளாதார முரண்பாடுகள் இருப்பதாக அம்மையார்

[1] No. 17, The West Coast Spectator, 1st Feb. 1911, MNR, Cl, P. 187.
[2] No. 1, The Indian Patriot, 3rd Aug. 1914, MNR, Cl. p. 1068.
[3] No. 14, New India, 7th Sept. 1915, MNR Cl. p. 1579.
[4] No. 4, New India, 23rd August, 1915, MNR, Cl. p. 1504.
[5] No. 4, Malabar Herald, 8th Jan. 1916, MNR, Cl. p. 1021.
[6] No. 31, West Coast Reformer, 13th Jully 1911, MNR, Cl. p. 1021.

கருதினர். இந்தியாவில் ஏற்பட்ட எல்லாப் பஞ்சங்களுக்கும், பற்ருக்குறைகளுக்கும் ஆங்கில ஆட்சியே காரணம் எனக் கடுமையாகத் தாக்கிப் பேசி வந்தார்.

1915ஆம் ஆண்டு பனரஸ் பல்கலைக் கழகத்தில் காந்திஜி பேசியபோது அம்மையார் குறுக்கிட்டுப் பேசினர்; குழப்பதாரிகளுக்குக், காந்திஜி துணை என எடுத்துக் கூறவே இவ்விதம் குறுக்கிட்டார். இதைத் தொடர்ந்து பெங்களூரில் காந்திஜி பேசியபோது பொன், பெண், பூமி இம்மூன்றுமே சமூகத்தின் கெடுதலுக்குக் காரணம் எனக் குறிப்பிட்டார். இப்பேச்சை அம்மையார் பெரிதும் கண்டித்தார்.[1] இதைத் தொடர்ந்து சத்தியமூர்த்திக்கும், அம்மையாருக்கும் கடுமையான கடிதப் போக்குவரத்து நடந்தது,[2]

என்றுலும், 1915ஆம் ஆண்டு உலகப்போரின் பின் ஆங்கிலப் பேரரசின் புனர் அமைப்புக் காலத்தில் இந்தியா சுதந்திரம் அடைய வாய்ப்பு உண்டு என அம்மையார் தம் புதியகருத்தைத் திடீரென அறிவித்தார். இதற்காக, இந்தியர்கள் துரிதமாகவும் தைரியமாகவும், ஒரு நிலையாகவும், இந்தியாவுக்குச் சுயாட்சி பெற உழைக்க வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார்.[3] போர் முடிவதற்கு முன்னர் ஆங்கிலேயர்களிடம் சுதந்திரத்தைப் பற்றி சத்தியப் பிரமாணம் வாங்க வேண்டும் என அவசரப்பட்டார். இந்தியாவின் சுய நிர்ணயம் மற்ற நாடுகளின் நல்லெண்ணத்தைக் கருதி நிற்கவில்லை என்றும், போர் நிமித்தம் இந்தியா செய்த உதவிக்கு அது ஒரு சன்மானம் என்ற கருத்தையும் அவர் எதிர்த்தார். ஆங்கில சாம்ராச்சியத்தின் அன்றைய நிலையில் இந்திய நாடு சுதந்திரம் பெருவிடில், என்றும் இந்தியாவிற்குச் சுதந்திரம் இல்லை என அவர் கருதினர்.[4]

1915ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் இவ்வம்மையார் திலகரோடு சேர்ந்து ஓர் ஒப்பந்தம் செய்து தன்னுட்சி சங்கம் (Home Rule League) என்ற ஸ்தாபனத்தை நிறுவினர்.[5] இச்சங்கத்தின் மூலமாகச் சட்டரீதியாகப் போர் தொடுக்க நிச்சயித்தார். ஆனல், அவருடைய இயக்கம் பலமற்றதாக இருந்தது. அந்த இயக்கத்திற்குக் காரியதரிசியோ கட்சி அமைப்போ இல்லை.[6] ஒரு

[1] No. 10, Wednesday Review, 16th Feb 1916, MNR, Cl. p. 287.
[2] No. 13 New India, 12th Feb. 1916, MNR, Cl. p. 331.
[3] No. 9, New India, 17th August, 1915, MNR, Cl. p. 1466.
[4] No. 9, The Wednesday Review. 22nd Sept. 1951, MNR Cl. p. 658-59.
[5] No. 6, The Indian Patriot, 31st Dec. 1915 in MNR. 1916, p. 20,
[6] No 12, New India, 5th Jully 1916, MNR, Cl. p. 1126.

ரூபாய் கொடுத்தவர்கள் எல்லோரும் அங்கம் வகிக்கவும், அவர் கட்கு ஒரு சின்னமும் (Badgae) வழங்கப்பட்டது. ஆனால், அவ்வருடம் நடத்தப்பட்ட தன்னாட்சி மகாநாட்டில் (Home Rule Conference) மதன்மோகன் மாளவியா போன்றவர்கள் பெசன்ட் அம்மையாருக்கு இடம் அளிக்கவில்லை. என்றாலும், அம்மையார் திலகருடன் சேர்ந்து தன்னாட்சிபெற உழைத்தார்.[1] இக்காலங் களில், இவர் கொள்கையில் சில மாற்றங்கள் ஏற்பட்டன. இவர் புதிய கருத்தாவது: இங்கிலாந்தும், இந்தியாவும் ஒத்துழைக்க வேண்டுமென்றும், இந் நாடுகளிடையேயுள்ள தொடர்பை அறுத்து எறியக்கூடாது என்றும், இந்தியா, ஆங்கிலப்பேரரசின் அங்கமாகத் தொடர்ந்து இருக்க வேண்டும் என்பதே. அப்படிப் பட்ட நல்ல தொடர்பு ஏற்பட வேண்டுமாயின், ஆங்கிலேயர் களின் வெறுப்பு ஒழிய வேண்டும் என நிபந்தனை கூறினார். இந்தியா ஒரு காலத்தில் சுதந்திரம் அடையும் என்றும், சுதந்தி ரத்திற்காக உயிர் இழந்தவர்களுக்கு அஞ்சலி செலுத்த வேண் டியது இந்தியர் கடமை எனவும் அறிவித்தார்.[2]

இதைத் தொடர்ந்து 1916ஆம் ஆண்டு அகமத் நகரில் வெளியிட்ட அறிக்கையில் சுயாட்சி என்பது பிறப்புரிமை என்று மீண்டும் கூறினார். சுயாட்சி பெற எல்லோரும் உழைக்க வேண் டியது தேசியக் கடமை எனவும் அறிவுறுத்தினார். ஆங்கிலேயர் களும், இந்தியர்களும் சமஉரிமை பெற்றவர்கள் என்றும், அதிகாரமற்ற அறிவு பயனற்றது எனவும் குறிப்பிட்டார். இருந்தாலும், தாம் கோரும் சுயராச்சியம் என்பது ஆங்கிலப் பேரரசிற்கு உட்பட்டது என விளக்கினார்.

அன்னிபெசண்ட் அம்மையாருடன் சேர்ந்து போராடிய திலகரும், இந் நாட்களில் சுயராச்சியம் வேண்டும் எனக் கோரிய போதிலும், இந்தியா ஆங்கில மன்னர் ஆட்சியிலிருந்து பிரிந்து தனி சுயராச்சியம் அடைய அவர் விரும்பவில்லை. சுயராச்சி யத்தை விரும்பியவர்கள் குழப்பதாரிகளல்ல; அவர்கள் ஆங்கில அரசாங்கத்தின் விசுவாசமான குடிமக்களே என்றும் விவாதித் தார். என்றாலும், இந்திய அரசாங்கம் சமாதானத்தைப் பாது காக்கப் புதிய பாதுகாவல் சட்டத்தை இயற்றியது. இச் சட்டத்தைப் பெசண்ட் 'அக்கிரமச் சட்டம்' என்று கூறினார். 1916ஆம் ஆண்டு ஜூலைமாதம் பெசண்ட் அம்மையார் பம்பாய் மாகாணத்துக்குள் செல்லக்கூடாது என்று பாதுகாப்புச் சட்டத்

[1] Ibid. p. 1126.
[2] No. 16 New India, 4th Jully 1916, MNR, Cl. p. 1128.

தின்கீழ்தடுக்கப்பட்டார்[1]. 1916ஆம் ஆண்டு நடந்த காங்கிரஸ் மகா நாட்டிற்குத் தன்னுட்சி இயக்கத்தைச் சார்ந்த ஒருவர் தலைமை வகிக்க வேண்டும் எனக்கூறினர். ஆனால், ஏ. ஸி. மஜும்தார் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர் ஒரு மிதவாதி. கோபம் கொண்ட பெசண்ட் அம்மையார் காங்கிரசை மிகவும் தாக்கிப்பேசி வந்தார். கைநிறைய வெள்ளிக் காசுக்காக வேண்டி தன்னை விட்டுப்பிரிந்து போயினர் எனக் கூறிய வோர்ட்ஸ் வொர்த்தின் (Wordsworth) கவிதையைப் பத்திரிகையில் பிரசுரித்தார்.[2]

அயர்லாந்து நாட்டின் நடந்த சுதந்திரப்போர் தன்னுட்சி இயக்கத்தைச் சார்ந்தவர்களுக்குத் தூண்டுகோலாக இருந்தது. கோவிந்தராகவ ஐயர், ஸ்ரீநிவாச சாஸ்திரி, சி. பி. இராமசுவாமி ஐயர், கேசவப்பிள்ளை, டி. என். சர்மா, அருண்டேல், வாடியா போன்றவர்கள் பெசண்ட் அம்மையாரின் சீடர்கள். இவர்கள் ஆங்கில அரசு அன்றுவரை செய்த நன்மைகளைப் பெரிதாகக் கருதவில்லை. ஆனால், போர் முடிந்ததும் தன்னுட்சி இந்திய மக்களுக்குக் கொடுத்தாக வேண்டும் என வற்புறுத்தினர்.[3]

முதலாவது உலகப் போரின் முக்கியமான சாதனையும், எதிரொலியும், அக்டோபர் மாதம் ருசியாவில் நடந்த புரட்சி எனக்கூறுவர். ஆகவே, முதல் உலகப் போராட்டம் வேறு எதையும் சாதிக்காவிடினம், ருசியப் புரட்சிக்குச் சாதகமாய் இருந்தது என ஜெனரல் ஸ்மட்ஸ் கூறினர். ஆனால், முதல் உலகப் போரின் முடிவில் இந்தியா தன்னுட்சி பெருவிடில் முதல் உலக யுத்தம் பளனற்றதாகி விடும் எனப் பெசண்ட் அம்மையார் கூறி வந்தார். தன்னுட்சி பெற்ற இந்தியர ஓர் உலக சமாதானத்திற்கு முக்கிய காரணமாய் இருக்கும் எனக் கூறினர். அரசியல் சுதந்திரமே சமுதாய சுதந்திரத்திற்கு முன்னேடியாக இருக்க வேண்டும் என்பது அவர் தம் கருத்தாகும்.[4] 1917-ஆம் ஆண்டு பி. என். சர்மாவின் தலைமையில் சென்னையில் தன்னுட்சியாளர்களின் கூட்டம் நடந்தது. ஆனால், சென்னை அரசாங்கம் அவர்கள்மேல் நடவடிக்கை எடுக்க அதிகாரம் பெற்றது. தன்னுட்சி இயக்கத்தைச்சார்ந்த பலரும் கைதுசெய்யப்பட்டனர்.[5]

[1] No. 69, Bharamata, 10th Jully 1916. MNR, Cl. p. 1383.
[2] No. 19, New Inbia, 7th August 1916 MNR, Cl. p. 1366.
[3] No. 17, New India, 5th June 1917, MNT, Cl, p. 189.
[4] No. 1, New India, 5th June 1917, MNR, Cl. p. 1605.
[5] New Delhi, 25th June 1917, MNR, Cl. p. 1917.

1917-ம் ஆண்டு சூலை மாதம் சாம்பர்லின் ஆங்கில பாராளுமன்ற இந்தியக் காரியதரிசியாக நியமனம் பெற்றவுடன் இவர்கள் விடுதலை அடைந்தனர். கல்கத்தாவில் நடந்த காங்கிரஸ் மகாநாட்டில் அக்கிராசனர் பதவி பெசண்ட் அம்மையாருக்கு அளிக்கப்பட்டது. காங்கிரசில் தீவிரவாதிகள் கை ஓங்கியது.[2] ஒரு பெண் அவர் வாழ்வில் செய்த அரிய பெரிய தொண்டை இந்திய மக்கள் எல்லோரும் பெரிதும் பாராட்டினர்.

பெசண்ட் அம்மையார், உணர்ச்சி வசப்பட்ட மக்களின் சர்வாதிகாரியாக அனறு ஆகி விட்டாரெனப் பல பத்திரிகைகள் கூறின.[3] குறுகிய காலத்தில் இவர் வாழ்க்கையில் பல சன்மங் கள் எடுத்தாரெனவும், 'வந்தே மாதரம்' எனக் கூறியவர்களை ஒரு காலத்தில் கண்டித்த இவர், இன்று காங்கிரஸ் அக்கிராசன ராகத் தேர்ந்தெடுக்கப்பட்டது வியப்பாக இருக்கின்றது எனவும் பல கூறினர்ர்[4]. 1918-ஆம் ஆண்டு காங்கிரசும், முஸ்லீம் லீக்கும் சேர்ந்து கொடுத்த திட்டத்தை அவர் ஒப்புக் கொள்ளவில்லை.[5]

## 2

## சுயாட்சி இயக்கத்தின் குறைபாடுகள்

பெசண்ட் அம்மையாரின் தன்னாட்சி இயக்கம் ஒரு சிறிய கூட்டத்தாரின் அரசியல் அறை போல இருந்தது. இவர் களுக்கு எதிர்காலத்தைக் குறித்துத் தகுந்த திட்டம் இல்லை. இந்தியர்கள் திறமை பெற்றுத் தங்களை ஆட்சி செய்ய ஆற்றல் பெற்றுள்ளனரா என்பதை அறிந்தே தேசிய போராட்டம் நடத்த வேண்டும் எனத் தககூர்[6] கூறினார். கிறித்தவர்கள், ருசிய நாட்டின் ஆட்சிக்குட்படந் தயாராயிருப் பினும், பிராமணர் ஆட்சிக்கு உட்படோம் எனக் கூறினார்.[7] உண்மையில் 100-க்கு 90 சதவிகிதம் மக்கள் அக் காலத்தில் பெசண்ட் அம்மையாரின் கூக்குரலுக்குச் செவி சாய்க் கவில்லை.

1 No. 3, West Coaat Spectator, 29th Dec. 1917, MNR, Cl. p. 35.
2 No. 1, The West Coast Spectator, 18th June 1018, MNR, Cl. p. 929.
3 Ibid.
4 See No. 2, Hindu, 15th February 1923, MNR, Cl. p. 197.
5 Ne. 48, Andhra Patrika, 11th Aug. 1917, MNR. Cl. p. 2190.
6 Public Department Ordinary Series, G.O.No.1415, dt. 3-12-1817.

1916–ஆம் ஆண்டு இந்தியா தன்னாட்சி பெறத் தயாராக இல்லை. ஆனால், இக்கருத்துக்கள் ஒரு நாளாவது நிறைவேறும் என எல்லோரும் நம்பினர்.[1] கோகலேயின் காலத்திற்குப் பின் இந்திய மக்களுக்கு ஒரு நல்ல திறமையுள்ள தலைவர் கிடைக்க வில்லை என்பது பெரோஸா மேதாவின் (Pherozeshah Mehta) கருத்து.[2] 1915ஆம் ஆண்டு திருமதி சரோஜினி நாயுடு அவர்கள் தன்னாட்சி என்பது ஒரு தனி சாராரின் நன்மைக்கு வேண்டியே கோரப்படுகிறது என்று கூறினார். திவான் பகதூர் சி. கருகணாகர மேனன், டாக்டர் டி. எம். நாயர், ராவ்பகதூர் நாராயணச் செட்டி போன்றவர்கள் பெசன்ட் அம்மையாரின் போராட்டத்தை எதிர்த்ததோடு தன்னாட்சி இயக்கம் முற்போக் கிற்கு விரோதமான இயக்கம் எனவும் கருதினர்.[3] இக் காலங் காலங்களில் அரசாங்க உத்தியோகங்களில் பெரும் பகுதி பிராமணர் வசம் இருந்தது. சென்னைப் பல்கலைக்கழகத்திலும், முக்கியமாகப் பதவி பெற்றவர்கள் பிராமணர்களே. இது போலவே சமுதாயத்தில் எல்லாச் சலுகைகளையும் பிராமணர் களே அனுபவித்து வந்தார்கள். இது போன்ற சந்தர்ப்பத்தில் தன்னாட்சி கிடைப்பின், அரசில் அடிப்படையில், பிரரமணர் களுக்கே அது நன்மை பயக்கும் எனவும், இதர தரப்பினருக்கு மேலும் தீமை ஏற்படும் எனவும் கருதினர். இக்காலங்களில் பிராமணர்கள் மதத்தைப் பலப்படுத்த வேண்டி எழுதப்பட்ட வேதங்கள், புராணங்கள், மத தர்ம சாத்திரங்கள், சுருதிகள் முதலியன, பிராமணர்கள் மேல் வகுப்பைச் சார்ந்தவர்கள் எனக் கூறியதால், பிராமணரல்லாதார் இவைகளைப் பெரிதும் எதிர்த் தனர். 1917ஆம் ஆண்டு வர்ணச்சர தர்ம சங்கம் எடுத்துக் கொண்ட முடிவு சாதியைப்பலப்படுத்த எடுத்துக் கொண்ட சூழ்ச்சி என எண்ணி, பிராமணரல்லாதார் அதையும் எதிர்த் தனர். சமுதாயத்தில் குறைந்த ஜனத்தொகையைக் கொண்ட உயர்ந்த வகுப்பினர் ஆட்சி செய்ய மக்கள் உடன்படவில்லை. ஆங்கிலேயருடைய ஆட்சியில் பின் தங்கிய வகுப்பினருக்குக் கிடைத்த சலுகைகளையும், உரிமைகளையும் இக்காலங்களில் பத்திரிகைகள் மூலம் பலர் நினைவூட்டினர். எல்லாத் தரப்பட்ட மக்களும் சமத்துவம் அடைந்த பின்னர், ஒருநாள் இந்தியா சுதந்திரம் அடையும் என எல்லோரும் ஒப்புக் கொண்டனர். வெளிநாட்டவர் ஆதிக்கத்திற்கும் உள்நாட்டு மன்னர்களின் கொடுமைக்கும் ஆளான மக்கள், மேலும் எந்த வகுப்பார் கொடுமைக்கும் ஆளாக எண்ணவில்லை.

1. No. 16, The West Coast Spectator, 30th Dec. 1916, MNR, CI. p.25
2. No. 3, The West Coast Spectator, 28th June 1917, MMR, CI. p.1876
3. No. 12, Justice, 3rd July, 1917, MNR, CI. p. 1881.

1917ஆம் ஆண்டு ஜெனரல் ஸ்மட்ஸ், ஆங்கிலப் பேரரசின் எந்தப் பாகத்தையும், வெறும் அதிகாரத்தால் மட்டும் ஆட்சி செய்யக்கூடாது என தம் கருத்தைத் தெரிவித்தார். ஆனுல், மக்கள் தங்களேயே தாங்கள் ஆள்வதற்கு, இந்தியாவைப் போன்ற ஒரு நாட்டில் சமுதாய அடிப்படையில் சமத்துவம் வேண்டும் என வலியுறுத்தினுர்.[1] அக்டோபர் மாதம் 1917-ல் தென்னிந்திய மிதவாதக் கூட்டணி ஒன்று கூடிச் சமுதாயத்தில் சமத்துவம் கேட்பதாஞல் உடனடி சுயராச்சியம் தேவை இல்லே என ஒரு தீர்மானத்தை நிறைவேறியது. அன்னிபெசண்ட் அம்மையாரின் தன்னுட்சி இயக்கத்திஞல், பிராமணரல்லாதவர்கள் ஒன்று கூடி அவர்கள் உரிமைகளேப் பெற தனி இயக்கத்தை உருவாக்க அவசியம் ஏற்பட்டது.[2]

இதுபோலவே பஞ்சமர்களும் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினர். பஞ்சமர்கள் அவர்வள் செய்த வினேப்பயனே அனுபவிக்கின்றனர் எனப் பெசண்ட் அம்மையார் கூறியது தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினரிடம் பெரும் பரபரப்பை உண்டாக்கியது,[3] உலக சகோதரத்துவத்தை விரும்பிய இவர்களா பஞ்சமர்களேப் பழிப்பது? என்று கேள்விக் குரல் எழும்பியது. 1917ஆம் ஆண்டு டாக்டர் நாயர்[4] பஞ்சமர்கள் விழித்து எழுந்து ஒருமைப்பட வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார்.

உண்மையில், தன்னுட்சி இயக்கத்தின் மொத்த அங்கத்தினர்கள் எண்ணிக்கை 52,000. இவர்களில், எல்லோரும் உயர்ந்த சாதியினர், 1917ஆம் ஆண்டு டாக்டர் வி. கே. ராய் அவர்களுக்கு இலண்டனில் மாநகர் முதல்வர் வழங்கிய விருந்தில் ஆங்கில அரசாங்கம் இந்தியர்களுக்குப் பல உரிமை வழங்கியுள்ளது எனவும், இந்திய மக்கள் ஆங்கிலேயர்களேப் போன்று எல்லா உரிமைகளேயும் அடைத்துள்ளனர் என்பது ஆங்கிலேயர் கருத்து எனவும், ஆங்கிலக் காலனிகளுக்கு அளிக்கப்பட்ட உரிமைகள் இந்தியாவுக்கும் நாளடைவில் அளிக்கப்படும் எனத் தாம் (மாநகர் முதல்வர்) கருதுவதாகக் கூறிஞர்.[1] 1917ஆம் ஆண்டு சென்னே கவர்னராக இருந்த பெண்ட்லண்டு துரை தன்னுட்சி என்பது அன்று நடக்கும்

1. No. 87, Krishna Patrika, 14th July 1917, Cl. p. 2010
2. No. 54, Swadesamitran, 24th September, 1917, MNR, Cl. p- 2445
3. No. 40, Sampad Abhydaya, 31st Jan. 1916, MNR, Cl. p. 216
4. Public Department Ordinary Series, G. O. No, 1415, dt, 3, 12, 1917
1. No.46, The Swadesamitaran, 16th July 1912, MNR, Cl. p.. 1039.

காரியம் அல்ல என்று வெளிப்படையாகக் கூறினர். உண்மையில் மக்கள் ஒன்று சேராவிடில் சுயராச்சியம் பெறுவது கடினம் என அரசியல்வாதிகள் உணர்ந்தனர்.[2]

# 3

## பிராமணரல்லாதார் கொள்கை விளக்கம்

### பிராமணரல்லாதார் கொள்கை விளக்கம்

தன்னுட்சி இயக்கம் பிராமணரல்லாதவர்களிடையே ஒரு பெரும் கிளர்ச்சியை உண்டாக்கியது. அவர்களும் பார்ப்பனரைப் போல் படித்துப் பதவிகள் பெற்று, எல்லாத் துறைகளிலும் முன்னேற வேண்டும் என்ற உணர்ச்சியைத் தூண்டியது. 1916ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் சென்னையில் சர். பி. தியாக ராசச் செட்டி, டாக்டர் டி. என். நாயர் இவர்கள் தலைமையில் பிராமணரல்லாத முக்கிய சமூகத்தினர் கூடி தென்னிந்திய நல உரிமைச் சங்கம்[3] என்ற கட்சியை ஆரம்பித்தனர். எல்லா வகுப்பினர்களும் ஆட்சிப் பொறுப்பை ஏற்று நடத்தத் தகுதி உடையவர்களாக ஆக வேண்டும் என்ற சீரிய நோக்கமே இக் கட்சியைத் தோற்றுவிப்பதற்கு அடிப்படைக்காரணம். தென்னிந்திய நல உரிமைச் சங்கமும், தென்னிந்திய மிதவாகக் கூட்டணியும், இணைக்கப்பட்டு நீதிக்கட்சி (Justice Party) என அழைக்கப்பட்டது.[4] இக் கட்சியின் சார்பாக 'நீதி' (Justice) என்ற பத்திரிகை வெளியிடப்பட்ட்து. டாக்டர் டி. எம். நாயர்[5] இப்பத்திரிகையினுடைய ஆசிரியராக இருந்தார். 1916ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் இக்கட்சியின் கொள்கைகள் வெளியிடப் பட்டன.[6]

அதன் முக்கிய குறிக்கோளாவன:[7] (1) ஆங்கிலப் பேரரசின் அமைப்பினுள் இந்தியநாடு சுதந்திரம் பெறுவதெனினும் வேண்டும். (2) பிராமணரல்லாத எல்லாவகுப்பினர்களிடையே ஒற்றுமையும், நல்லெண்ணமும் ஏற்படுத்துவதோடு அவர்களுடைய நலன்களைக் காப்பாற்ற, சமுதாய அடிப்படையில்

2. No. 60, The Swadesamitaran, 29th May 1917, MNR, Cl. p. 1630.
3. Justice Year Book, 1929, (Justice Printing Works, Madras) 1929 Section II, p. 1
4. Ibid
5. Ibid
6. No. 9, New India, 20th Dec. 1916 in MNR, 1917, Cl. p. 20
7. Justice Year Book· Party II, p·1,

அரசாங்கத்தின் எல்லாத் துறைகளிலும் பிரதிநிதித்துவம் பெறுவதும், சமுதாய வளர்ச்சி அடைய எல்லா வசதிகளையும் அவர்கட்குச் செய்து கொடுக்க வேண்டும் என்பதாம். இங்ஙனம் வசதிகள் அளிப்பதின் நோக்கம் எல்லாச்சமுதாயமும் தழைத்து ஓங்கி வளர்ந்து, அவ் வளர்ச்சியின் பலனை எல்லாச்சாதிகளும் ஒன்றுபட வேண்டும் என்பதே. (3) தென் இந்தியாவி லுள்ள பிராமணரல்லாத எல்லா வகுப்பினரிடையேயும் கல்வி வளர்ச்சி, சமுதாய முன்னேற்றம், பொருளாதாரச் சீரமைப்பு, தொழில் முன்னேற்றம், விவசாய அபிவிருதி இவைகள் ஏற்படப் பணியாற்றுவது. (4) பொதுமக்களின் அபிப்பிராயங்கள் எல்லா முக்கியப் பிரச்சினைகளிலும், தெளிவாக எடுத்துரைக்கப் பட்டு, மக்களின் கூக்குரலாக அமைய நல்ல விளம்பரத்திற்கு ஏற்பாடு செய்வது.[1]

இக் கொள்கை விளக்கத்தின்[2] ஆரம்பத்தில் சுயாட்சி இயக்கத்தை ஒட்டிச் சில அபிப்பிராயங்கள் தெரியப் படுத்தப் பட்டதாகவே கூறப்பட்டன. அன்று, சென்னை மாகாணத்தில் 415 இலட்சம் மக்களின் 400 இலட்சம் பேர் பிராமணரல்லா தவர்கள் என்றும், வரி கொடுக்கும் மக்களில் பெரும்பான்மை யருள் சமீன்தார்களும், நிலச்சுவான்தார்களும், விவசாயிகளும் பிராமணரல்லாதவர்கள் வகுப்பைச் சார்ந்தவர்கள் என்ற உண்மையை இக்கொள்கை விளக்கம் எடுத்துக் காட்டியது. ஆனால், சென்னை அரசியலில் இம்மக்களுக்கு உரியபங்கு கொடுக் கப்படவில்லை என்ற உண்மையும் விளக்கப்பட்டது. இம் மக்களுடைய செல்வாக்கு நாட்டின் முன்னேற்றத்திற்கு அன்றைய நிலையில், எந்த அளவிலும் பயன்படுத்தப் படவில்லை என இக் கொள்கை விளக்கம் கூறியது. நாகரிகமாக பிரதிநிதித் துவ சங்கங்கள் பணியாற்றிய அக்காலத்திலும் இம்மக்களின் பொது நலன்களைப் பாதுகாக்க எந்தவிதமான சங்கங்களும் இல்லையென்றும், அவர்களுடைய உரிமைகளை எடுத்துப்பேசவும், இம் மக்களின் நல்லெண்ணத்தைப் பெறவும் எப் பிரதிநிதிகளும் இல்லை என இக் கொள்கை விளக்கிக் கூறியது. ஆகவே, அம் மக்களின் அரசியல் வாழ்வு 15 இலட்சம் பிராமணர்களோடு ஒப்பிடும்போது மிகவும் தாழ்ந்த நிலையில் இருந்ததை இக் கொள்கை விளக்கம் எடுத்துக் காட்டியது.

1, Ibid P, 1

2, See 'The Non-Brahmin Manifesto' (December 1916) vide the Justic Party Go'den Jubilee Sounenir 1968, P: 1. Published by P.T. Rajam. Palayam house, Thallakulam: Madurai.

உதாரணமாகப் பொதுப்பணித்துறையில்[1] அதிகப்படியான பிராமணர்கள் வேலையில்அமர்ந்து இருப்பதை சுட்டிக்காட்டி இக் கொள்கை விளக்கம் மேலும் குறிப்பிட்டதாவது, 1913ஆம் ஆண்டு பொதுப்பணித்துறைக் குழு முன்பு தன் சாட்சியங்களை எடுத்துரைத்த அன்றைய சென்னை மாகாண நிர்வாகசபை அங்கத்தினர் சர். அலெக்ஸாண்டர் கார்டு, பிராமணல்லாதவர்கள், பொது அலுவலகங்களில் மிகக் குறைவாக இருந்ததைக் கூறும்போது, பிராமணர்கள், கெட்டியாக அமைந்த ஒரு சிறிய சாதியினர் அரசாங்கத்தின்மேல் படையெடுத்தாற் போன்று, எல்லாப்பதவிகளையும் தங்களுக்கே ஆக்கிக்கொள்கின்றனர் என விளக்கினர். 1892-ஆம் ஆண்டு முதல் 1904-ஆம் ஆண்டுவரை மாகாணப் பொதுத்துறை அலுவலுக்காக நடந்த தேர்தலில், தேர்ந்தெடுக்கப்பட்ட 16 நபர்களுள், 15 பேர்கள் பிராமணர்கள் என்றும், 100-க்கு 95 சதவிகிதம் இடங்களை அவர்கள் பெற்றுக்கொள்கின்றனர் என்றும், இக் கொள்கை விளக்கம் மூலம் பிராமணரல்லாதார் எடுத்துக் காட்டினர்.[2] அதுபோன்று மைசூர் மாகாணத்தில் 100-க்கு 85 இடங்களைப் பிராமணர்கள் பெற்றுக்கொண்டனர். சென்னையில் சுமார் 20 வருடங்களில் 17பிராமணர்கள் உதவிப்பொறியாளர்களாகத் தேர்ச்சிபெற்றனர் என்றும், 4 பிராமணரல்லாதவர்கள் மட்டுமே தேர்ந்தெடுக்கப்பட்டனர்" எனவும் தெளிவு காட்டினர்.[3]

கணக்குத் தணிக்கைத் துறையில்[4] நடைபெற்ற தேர்வுகளிலும் இது போன்ற முடிவே இருந்தது என இக் கொள்கை விளக்கம் கூறியது. சென்னை மாகாணத்தில் அன்று 140 உதவி கலெக்டர் இடங்களில் பிராமணர்கள் 77 இடங்களைக் கைப்பற்றினர். பிராமணரல்லாதவர்களுக்கு 30 இடங்கள், ஏனைய இடங்கள் முகமதியர், இந்தியக் கிறித்தவர், ஐரோப்பியர், ஆங்கிலோ இந்தியர் முதலானவர்களுக்குக் கிடைத்தன. இக்கொள்கை விளக்கம் மற்றோர் வியப்பான நிலையை எடுத்துக் காட்டியது. போட்டித்தேர்வு வைக்காத ஆண்டுகளிலும் கூட அரசாங்கத்தில் ஆட்களை நியமிக்கும்போது, பெரும் பகுதி பிராமணர்களே நியமனம் செய்யப்பட்டனர். மேற்கூறிய விவரங்கள் சர்.அலெக்ஸாண்டர் காட்டியூ என்பவர் எடுத்துக் காட்டிய உண்மைகளேயாகும். அவர் மேலும் குறிப்பிட்டதாவது:[1] ' 1913-ல் மாவட்ட நடுவர்களுக்குரிய 128 நிலையான இடங்களுக்குப் பிராமணர்கள்

[1] Ibid P. 2.
[2] Ibid
[3] Ibid
[4] Ibid

93 இடங்கட்கும், பிராமணரல்லாதார் 25 இடங்கட்கும்: இந்தியக் கிறித்தவர், ஐரோப்பியர், ஆங்கிலோ இந்தியர் எஞ்சிய இடங்கட்கும் நியமிக்கப்பட்டனர். இந்தப்புள்ளி விவரங்களிலிருந்தும், பிறவற்றிலிருந்தும் இந்தியாவில் பொதுப்பணித்துறைக்கென வைக்கப்பட்ட போட்டித்தேர்வு என்பது பெரும்பாலும் பிராமணர்களின் ஆதிக்கத்துக்குட்பட்டு இருந்ததுஎன்றும், பிராமணரல்லாதவர்கள் அதிலிருந்து நீக்கப்பட்டு இருக்கின்றனர் என்பதுவும் வெளிப்படையாகின்றது' என்றும் அவர் முடிவாகக் கூறினர். சென்னை அரசுக்கு உட்பட்ட சுதேச சமஸ்தானங்களில் என்ன நிலை இருந்து வருகின்றது என்பதைச் சர். அலெக்சாண்டர் குறிப்பிடவில்லை. அங்கும் பிராமணர்கள் எண்ணிக்கை அதிகமாகவே இருந்துவந்தது. இது தவிர அதிகாரிகள் தங்கள் மனம் போல் நியமிக்கும் கீழ்நிலை அலுவலர்களின் எண்ணிக்கையைக் கவனித்தால் அங்கும் பிராமணர்கள் எண்ணிக்கை மிக அதிகமாக இருப்பது தெரியவரும்.[2]

அதுபோலவே, அகில இந்திய அடிப்படையில் இந்தியர்களுக்குக் கொடுக்கப்படும் மிக உயர்ந்த பதவிகளைப் பிராமணர்களே கைப்பற்றிக்கொண்டனர் என இக்கொள்கை விளக்கம் கூறியது. கவர்னரின் நிர்வாக சபைக்கு இந்தியர்களும் நியமிக்கப்படலாம் என்று முடிவு செய்தபின், அச் சபையில் சென்னையில் 3 இந்தியர்களுக்கு வரிசையாக இடம் கொடுக்கப்பட்டது. அதில் கடைசி இருவர் பிராமண வழக்கறிஞர்கள். மேலும் இந்திய உயர் மன்ற நீதிபதிப் பதவிகள் நான்கிலும் (அதாவது இந்துக்களுக்கு ஒதுக்கப்பட்ட மொத்த இடங்கள் அனைத்திலும்) பிராமணர்களே நியமிக்கப்பட்டனர். 1914-ல் அரசாங்கத்திற்கு ஒரு புதிய செயலாளர் பதவியைத் தோற்றுவித்து, அதிலும் ஒரு பிராமணரை நியமித்தனர். வருவாய் வாரியத்தின் இந்தியச் செயலாளர் பிராமணராக இருந்தார். அரசாங்க அலுவலகங்களிலிருந்து மாவட்டக் கலெக்டராக இருவர் நியமிக்கப்பட்ட போது, அவ்விருவரும் பிராமணர் சமுதாயத்திலிருந்தே நியமனம் செய்யப்பட்டனர்.[3]

இது போன்று பொது நிறுவனங்களில் பிராமணர்கள் தங்கள் இனத்தைச் சார்ந்தவர்களை எவ்வாறு ஆதரித்தனர் என்பதைப் பிராமணரல்லாதார் கொள்கை விளக்கம் பின்வருமாறு கூறியது. 'அரசாங்க அலுவலகங்களில் காணப்பட்ட நிலை தான் நகரவை, மாவட்டக்கழகம் முதலிய நிறுவனங்களிலும்

[1] Ibid P.2
[2] 1 bid
[3] Ibid

காணப்பட்டன. பிராமண வாக்காளர்கள் அதிகமாக வாழ்ந்த தொகுதிகளில் பிராமணரல்லாதார் போட்டியிட்டு வெற்றி பெற முடியவில்லை. பிராமணரல்லாத வாக்காளர்கள் எல்லோரும் ஒற்றுமையாய்ப்பிராமணரல்லாதவர்களை ஆதரிக்கவில்லை. ஆனால், பிராமணர்கள் பொதுவாகப் பிராமணர்களை ஆதரித்தனர். மேற் குறிப்பிட்ட சூழ்நிலை சென்னைப் பல்கலைக்கழகத்திலும் உருவாகி யிருந்தது. சென்னைப் பல்கலைக்கழக இந்திய உறுப்பினர்களில் பெரும்பான்மையோர் பிராமணர்களாக இருந்த காரணத்தால், பல்கலைக்கழகத்திலிருந்து சட்ட மன்றத்திற்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதில் பிராமணரல்லாதார் எப்போதும் வெற்றி பெறுவதில்லை.[1] இதனால், எத்துணைத் தகுதியுடையோராய் இருப்பினும், பிராமணரல்லாதார் இத் தேர்தலில் கலந்து கொள்ள விரும்பவில்லை. போட்டியிட நேர்ந்தால், ஆங்கிலேய உறுப்பினர் களின் ஆதரவு கொண்டே வெற்றி பெற முடிந்தது.' 1914-க் குரிய சென்னை சட்டமன்ற மேலவைக்கூட்டத்தில் காலஞ்சென்ற திரு.குன்கிராமன் நாயர் கேட்டகேள்விக்குச் 'சென்னைப்பல்கலைக் கழகத்தில் பதிவு செய்யப்பட்ட பட்டதாரிகள் 650பேர்களில், பிராமணர்கள் 452பேர், பிராமணரல்லாத இந்துக்கள் 12பேர், பிற இனத்தினர் 74பேர்' என்று பதில் கூறப்பட்டது. 1907-லிருந்து,[2] பதிவுபெற்ற பட்டதாரிகள் சார்பில் 12பேர் தேர்ந் தெடுக்கப்பட்டார். அவர்களில் ஒருவரைத் தவிர அனைவரும் பிராமணர்களே 1907ஆம் ஆண்டுமுதல், 1914ஆம் ஆண்டுவரை சென்னைப் பல்கலைக்கழகத்தில் பிராமணர்களே பெரும்பான்மை யாக இருந்தபடியால், எத்துணைத் தகுதி பெற்றவராயினும், பிரா மணல்லாதார், தேர்தல்களில் வெற்றி பெற்றதே கிடையாது.[3] இந்தத் தேர்தல்களை நடத்துவதில் ஒரு தனிச் சாதியினர் எல்லாப் பொறுப்புகளையும் ஏற்றிருந்ததின் பலனாய் டில்லி சட்ட சபையிலும்சரி, சென்னை சட்டமன்றத்திலும்சரி நகரசபைகளிலும் சரி பிராமணரல்லாதார் நிலை அவ்வாறே இருந்துவந்தது. ஏதேனு மொரு சமயம் நேர்மையான ஓர் ஆட்சியாளர் பொது நிறுவனங் களில் பிராமணர்களின் ஆதிக்கம் மிகுதியாயிருப்பதைக் கருதிப் பிராமணரல்லாதாரின் (பிரதிநிதியாக) சார்பாளராக நியமிக்கப்பட் டால், பிராமணப்பத்திரிகைகள் அவரைக் கடுமையாகக் கண்டித்து வந்தன. உதாரணமாக, சட்டசபை மேல்மன்றத்திற்கு, மேன்மை தங்கிய பென்ட்லாண்டு பிரபு சிலரை நியமித்த பொழுது, பத்தி

[1] Ibid P3

[2] Ibid

[3] Ibid

ரிகைகள்எவ்வாறு அவரைக்கண்டித்தன என்பது புலனாகும்[1] அர சினர்க்கு உட்பட்ட பொது நிறுவனங்களைத் தவிர பிற அரசியல் கட்சிகளின் (சென்னையாயினும், மாவட்டங்களாயிருப்பினும்) அமைப்பும், செயலாற்றும்முறையும் அவர்கள் பங்குகொள்ளும் தேர்தல்வழியான சிலபுள்ளி விவரங்களினால் புலனாகும். உதாரண மாக, அனைத்திந்தியகாங்கிரஸ் குழுவுக்குச்சென்னை மாநில உறுப் பினர்களாக 15 பேர் தேர்ந்தெடுக்கப்பட்டு அனுப்பப்பட்டனர். அவர்களில் ஒருவரைத் தவிர மற்ற அனைவரும் பிராமணர்களே. அக்குழு செய்யும்முடிவு, உலகம் முழுவதும் அறிவிக்கப்படும்போது இம்மாநிலத்திலுள்ள நாற்பது கோடி பிராமணரல்லாதவர்களின் கருத்தும் அதுவேயாகும் என்று பொருள்படும். ஆனால், இது உண்மைக்குப் புறம்பானதாகும். பின் தங்கியவர்களுக்கு ஏதே னும் சலுகைகள் கொடுக்கப்படும்போது அதைக்கண்டு ஆதிக் கத்தில் இருக்கும் பிராமணர்கள் கட்டுப்பாடாகவும், கண்டிப்பாகவு மிருந்து தடுப்பதைப் பிராமணரல்லாதவர்கள் அனுபவத்தில் கண் டனர்"[2].

மேலும், கல்வியில் பிராமணர்கள் எவ்வாறு முன்னேற்றம் அடைத்தனர் என்றும், காலம் மாறும்போது பிராமணரல்லாத வர் பிராமணரை விட முன்னேறியுள்ளனர் என்பதையும் எடுத்துக்காட்டி' அக்கொள்கை பின்வருமாறு கூறியது:[3] 'பொது வாக இவ்வாறு காணப்படும் பிராமணர் ஆதிக்கத்திற்குக் கார ணம் கூறுபவர்களும், பிராமணரல்லாதவர்களை விடக் கல்லூரிப் படிப்பு பெற்ற பிராமணர்கள் அதிகமாக இருப்பதால்தான் அரசாங்க நிறுவனங்களிலும், பிற நிறுவனங்களிலும் அவர்கள் அதிகமாக இருக்கின்றனர் என விளக்கினர். பழங்காலம் தொட்டு அவர்களால் உருவாக்கப் பட்ட பாரம்பரியமும், இந்துக்களிலே உயர்ந்த, புனிதமான சாதியினர் என்று கருத்தும் அந்நிலையான நம்பிக்கையும், நூல்கள் வாயிலாகவும், வாய் மொழியாகவும், தாங்களே ஏனை யோரை விட உயர்ந்தவர்கள், கடவுளின் நேரடிப் பிரதிநிதிகள் என்ற எண்ணத்தை, உருவாக்கி விட்டனர்.[4] இவையெல்லாம் ஏனைய இனத்தோரை விட அவர்களுக்கு ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் செல்வாக்கைத் தேடித்தந்தது. ஆங்கிலக் கல்வி அறிவைத் தவிர, மற்றப்படி பாரம்பரியம் நாட்டின் உரிமை,

[1] Ibid P. 3
[2] Ibid p. 4
[3] Ibid
[4] Ibid P. 4

சாமுதாயத்திலுள்ள செல்வாக்கு, அமைதியான வாழ்க்கை, தொழில், மாநில முன்னேற்றம், எண்ணிக்கை இவையெல்லாம் பயனற்றவை எனக் கருத முடியாது, ஆதி முதல் இவற்றிற்காக வாழ்ந்துவரும் மக்களுக்கு அரசாங்கம் நிச்சியம் ஊக்கம் கொடுக்க வேண்டும். கல்வியைப் பொறுத்த மட்டிலும் கூட பிராமணர்கள் மட்டுமே படித்தவர்கள் எனக் கூற முடியாது. வெகு காலத்திற்குப் பின்பு படிக்கத் தொடங்கினாலும் பிராமணரல்லாதாரும் அத்துறையில் முன்னேறி வருகின்றனர். ஒவ்வொரு இனத்தினரும் ஒவ்வொரு நிலையில் இருக்கின்றனர். செட்டியார், கோமுட்டி, நாயர், முதலியார், நாயுடு முதலிய வகுப்பினர் மிக விரைவாக முன்னேறி வருகின்றனர். பின் தங்கியவர்கள் கூடப் மிக அக்கறையுடன் முன்னேறுவதற்காக உழைத்து வருகின்றனர். படிக்க வேண்டுமென்ற எண்ணம் எல்லோருக்கும் ஏற்பட்டு விட்டது. பிராமணர்களில் காணப்படுவதை விடப் பிராமணரல்லாதாரிடையே காணப்படும் கல்வி முன்னேற்றம் சமநிலையில் இருந்து வருதுறது.[1] எக்காரணம் பற்றியோ கல்வி இலாக்காவினர் பிராமணப் பெண்களுக்கும், விதவைகளுக்கும் கல்விச் சலுகைகள் காட்டி வருகின்றனர். இருந்தாலும், பிராமணரல்லாதாரைச் சேர்ந்த நாயர் பெண்களின் அளவுக்குப் பிராமணப் பெண்கள் கல்வி கற்றதாக இல்லை. பல வழிகளிலும், பலதுறைகளிலும், பிராமணரல்லாதார், மாநில முன்னேற்றத்திற்காக அடக்கமாகவும், பயனுள்ள முறையிலும் தொண்டு செய்து வருகின்றனர்.[2] அரசியலிலும் அரசாங்கத்திலும் பிராமணர்களின் ஆதிக்கம் அதிகமாயிருப்பதால் பிராமணரல்லாதார் செய்யும் தொண்டிற்கு முக்கியத்துவம் கொடுக்காது மறைக்க ஏதுவாயிருக்கிறது.''[3]

ஆகவே, பிராமணரல்லாதவர்களுடைய நலன்களைப் பாதுகாக்க ஒரு தனி இயக்கம் தேவை என அறிவித்து, பிராமணரல்லாதார் கொள்கை விளக்கம் மேலும்கூறியதாவது: 'அறிவுத் துறையில் போட்டி அதிகமாக இருக்கும் இக்காலத்தில், தேர்வுகளில் வெற்றி பெறுவதற்கு ஒரு தனித்திறமை வேண்டும் என்பதை அறிக்கை மறுக்கவில்லை' அவ்வறிக்கை மேலும் கூறியதாவது,[4] 'எங்களால் புரிந்து கொள்ள முடியாதது என்னவெனில், ஆங்கிலம் படித்த சிறுபான்மையான ஒரு வகுப்பினர்

[1] Ibid
[2] Ibid
[3] Ibid P. 4.
[4] Ibid P. 5

மட்டும் அரசாங்க அலுவல்களில் உயர்ந்தது, தாழ்ந்தது ஆகிய எல்லாவற்றையும் ஏகபோக உரிமையாக்கிக் கொண்டு பெரும்பான்மை வகுப்பினர்களில் படித்த ஒரு சிலருக்குக் கூட இடங் கொடுக்காமல் இருந்து வருவதேயாகும். அவர்கள் எல்லாத் தகுதியும், பண்பாடும் பெற்றிருந்தும், அவர்கட்கு வாய்ப்புக் கொடுக்கவில்லை.[1] எத்தனையோ இடையூறுகள் இருந்தும், நீதித்துறையிலும், கல்வித் துறையிலும், வழக்கறிஞர், மருத்துவம், பொறியியல் முதலானதுறைகளிலும் பெரிய சமீன்களை ஆட்சி நடத்துவதில் பிராமணரல்லாதவர்கள் பலர் மிகச் சிறப்புடன் விளங்கினர். அவர்களில் சிலருக்கு இணையானவர்கள், பிராமண வகுப்பில் ஒருவர் கூட இல்லாத அளவு அவர்கள் சிறந்து விளங்கினர். அவர்கள் உரிமையை உணர்ந்து, சுயமரியாதையுடன் ஒன்று சேர்ந்து முயற்சி செய்திருப்பார்களேயாயின், அரசாங்க அலுவல்களில், அவர்களின் பிறப்புரிமையாகிய முதலிடத்தைப் பெற்று இருப்பார்கள். தங்களுக்கென்று ஒரு சங்கம் இல்லாததாலும், தங்களுடைய கருத்துக்களை வெளியிடப் பத்திரிகை இல்லாததாலும் எல்லோரும் தங்கள் உரிமையைத் தெரிந்து கொள்ள முடியாமல் போயிற்று'.[2]

அவ்வுரிமைகளைப் பற்றிப் பிராமணரல்லாதவர் கொள்கை விளக்கம் கூறியதாவது; 'படிப்படியான அரசியல் உரிமைகளைப் பெறவேண்டுமே தவிர, அதிகாரஉரிமையற்ற அரசியல் அமைப்பை உருவாக்க வேண்டியதில்லை, தீவிர அரசியல்வாதிகள் இப்பொழுது பெற்றுள்ள அரசியல் உரிமைகளால் திருப்தியடையவில்லை. சூழ்நிலையைக் கவனிக்காது மேலும் மேலும் ஏதேனும் உரிமைகளைக் கோருவதில் அவர்களுக்கு ஒரு திருப்தி. அம்முறையில் இப்பொழுது அவர்கள் சுயாட்சி கேட்கின்றனர். முன் அநுபவங்களைக்கொண்டு பார்த்தால், நம்முடைய கருத்தைச் சரியான நேரத்தில் தெரிவிக்கவில்லையென்றால், அகில இந்தியாவும் அவர்கள் கோரிக்கையை ஆதரிப்பதாகக் கருதப்படும். அளவுக்கு மிஞ்சிய இத்திட்டத்தைப் பற்றியோ அல்லது பேரரசுக்குரிய (Imperial) சட்டமன்ற உறுப்பினர்கள் 19 பேர் அரசப்பிரதிநிதியிடம் (Viceroy) கொடுத்த திட்டத்தைப்பற்றியோ இங்கு விரிவாகக் கூற வேண்டியதில்லை. ஆங்கிலேயர் ஆட்சியின் செல்வாக்கைக் குறைக்கும் எந்தத் திட்டத்தையும் நாங்கள் விரும்பவில்லை.[3] இன்று நாடு இருக்கும் நிலையில் வெவ்வேறு

[1] Ibid
[2] Ibid
[3] Ibid P. 5

ஜாதியினர், வகுப்பினர்களுக்கு நீதிகிடைக்கவும், அவர்களிடையே ஒற்றுமையை ஏற்படுத்தவும், தேசிய ஒருமைப்பாட்டை உண் டாக்கவும் கூடியவர்கள் ஆங்கிலேயர்கள்தான். தவறினல் நாட் டில் தேசபக்தி இன்றி ஒற்றுமையின்றி ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொண்டு சீரழிய நேரிடும். யாதொரு தகுதியு மற்று அரசியல் அமைப்பைத் தயார் செய்வதைச் சில அரசியல் வாதிகள் பொழுது போக்காகக் கொண்டுள்ளனர்.[1] அத்தகைய அரசியல் அமைப்பை நாங்கள் விரும்பவில்லை. மக்களிடத்தில் படிப்படியாக ஆட்சியை எப்படி ஒப்படைக்க வேண்டுமென்பதை முடிவு செய்து, முன் யோசனையுடன், தாராளமாக உரிமைகளைக் கொடுத்து ஆட்சி நடத்த மக்களைத் தகுதியுடையவர்களாக ஆக்கவேண்டும். ஏ. ஓ. ஹ்யூம், பானர்ஜி, ரெங்கையா நாயுடு, ராவ்பகதூர் சபாபதி முதலியார், கர். சங்கரன் நாயர் முதலிய பேரறிஞர்கள் இந்திய தேசியக் காங்கிரசின் தொடக்க நிலையில் அதற்கு வழிகாட்டும் தலைவர்களாக இருந்து வந்தனர். அப் பொழுது நம் மாகாணத்திலுள்ள பெருமக்கள் பலர் அதனை ஆதரித்து வந்தனர். அக்காலத்தில் அதன் அமைப்பும், பெயரும் ஏதோ ஒரு வகையில் இருந்தாலும், அதன் போக்கு ஓர் உண் மையான தேசிய இயக்கமாக இருந்தது.[2] பழைய கொள்கை யில் சிலவற்றை இன்றும் அது பின்பற்றுகின்றது. ஆனல், அன்று அது என்ன நோக்கத்துடன் தோற்றுவிக்கப்பட்டது, என்ன முறையில் நடைபெற்றது, இன்று அது யாரால் எப்படி நடத்தப்படுகின்றது என்பதைப்பார்த்தால், இம்மாநிலத்தில் சுய மரியாதை உள்ள எந்தப் பிராமணரல்லாதாரும் அதை ஆதரிக்க மாட்டார். சமூகப் பிற்போக்குவாதிகளும், நிலைமையை உண ராத பொறுமையற்ற அரசியல்வாதிகளும், இன்று காங்கிரசைக் கைப்பற்றியுள்ளனர். ஜனநாயக அடிப்படையில் அதன் அமைப்பு இருந்தாலும், பொறுப்பற்ற சிலர் ஆதிக்கத்தில் அது இருந்து வருகின்றது. நாட்டையும் மக்களையும் அறிந்து, தங்கள் கடமை யினை உணர்ந்து, பொறுமையும், அனுபவமும் வாய்ந்த அரசியல் வாதிகள் விரைவில் காங்கிரசில் ஆதிக்கம் பெற்று, நாட்டு நிலைக் கேற்ற வழியைக்காட்ட வேண்டுமென்று நாங்கள் உண்மையாக விரும்புகின்றோம் ".[3]

சுயாட்சி உடனடி ஏற்படுவதாயின் அது பிராமணர் கள் ஆட்சியாக அமையும் என்றும், வகுப்புவாத ஆட்சி தேவை

[1] Ibid
[2] Ibid P. 5-6
[3] Ibid P. 6.

யில்லை என்றும், பிராமணரல்லாதார் கொள்கை விளக்கம் மேலும் கூறியதாவது: ‘ ஆட்சியில் இன்றுள்ள சூழ்நிலைக்குத்தேவை யற்ற மாற்றங்கள் ஏற்படுவதை நாங்கள் விரும்பவில்லை. வகுப்பு அல்லது வர்க்க ஆட்கியையும் நாங்கள் முழுதும் பெற வில்லை. இந்தியாவின் உண்மையான நன்மையைக்கருதி ஆங்கில ஆட்சி முறையைப் போன்று நீதியும் சம உரிமையும் விளங்கும் ஆட்சியே வேண்டுமென்று நாங்கள் விரும்புகிறோம். நாங்கள் ஆங்கில ஆட்சியில் பற்றுடையவர்கள்; அவர்களுக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளோம்.’ அவ்வாட்சியில் பல குறைபாடுகளும், குற்றங்களும் காணப்படினும் அது நேர்மையாகவும், அனுதாபத் துடனும் நடைபெறுகின்றன. எனினும், நாட்டைப்பற்றி மேலும் சரியாகத் தெரிந்து கொண்டு, ஆட்சியாளர்கள் மக்கள் விருப்பத் திற்கிணங்க ஆட்சி நடத்துவார்கள் என்று எதிர்பார்க்கின்றோம். ஆனால், மக்கள் விருப்பம் என்ன என்பதைத் திட்டவட்டமாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.[1] முதலில், ஒவ்வொரு வகுப்பும், இனமும் சுயாட்சியைப்பற்றி என்ன கருத்துடன் இருக்கின்றன, அவர்களின் தேவை என்ன என்பவற்றை நன்கு அறிந்து கொண்டே ஆட்சியில் சீர்திருத்தம் செய்ய வேண்டும். அவை களை அறிந்து கொள்வதற்கு வழக்கமாகப் பின்பற்றும் முறை களையே கையாளக்கூடாது.[2] சமுதாயத்தில் உயர்ந்த சாதி தாழ்ந்த சாதி என்ற வேற்றுமைகள் மறையத் தொடங்கினால் மட்டுமே சுயாட்சி பொறுவதற்கான தகுதியை நாம் பெற்று வருகின்றோம் எனக் கூறவேண்டும். ஆகவே, அரசியல்வாதி கள் தங்கள் முன்னுள்ள பிரச்சினைகளுக்கு முதலில் தீர்வு காண பதில் முனைந்து நிற்கவேண்டும்,”[3]

அதிகாரத்தை எல்லோருக்கும் பகிர்ந்து அளிக்கும் சுயாட்சியே தேவை என நீதிக்கட்சியின் கொள்கை விளக்கம் கூறியதாவது: “போரில் வெற்றி கண்டவுடன் ஆங்கில அரசியல் வாதிகளும், பாராளுமன்றமும் இந்திய அரசியல் அமைப்பைப் பற்றிக் கவனிப்பார்கள். அரசியல் உரிமைகள் வேண்டும் எனக் கோருவதற்கு இந்தியா உரிமைபெற்று விட்டது. அரசியல் அமைப்பு எப்படி இருக்கவேண்டுமென்றால், உண்மையான உரிமைகள் விரிவாக இருக்கவேண்டும். ஒவ்வொரு இனத் தினருக்கும், வகுப்பினருக்கும் அவரவர்களுக்கு நாட்டிலுள்ள செல்வாக்கை மனத்திற்கொண்டு அவரவர்களுக்குரிய பொறுப்

[1] Ibid
[2] Ibid
[3] Ibid P. 6

பைக் கொடுக்கவேண்டும். உள்நாட்டு விவரங்களைப் பொறுத்த வரை முழு அதிகாரமும் நிதியைப் பயன்படுத்தும் உரிமையையும் கொடுக்கவேண்டும். சுய மரியாதைக்கு இழிவு இல்லாது, ஆங்கிலப் பேரரசிற்குட்பட்ட பிற சுதந்திர நாடுகளுக்கு ஒப்பான சமுதாயப் படிநிலையைக் கொடுக்கவேண்டும்.'[1]

ஆகவே, பிராமணரல்லாதார் தங்கள் உரிமைகளுக்காகப் போராட வேண்டும் என நீதிக்கட்சி கேட்டுக்கொண்டது அவர்கள் கொள்கை விளக்கம் இதைக் குறித்து அறிவித்தாவது:[2] விழிப்படைந்த பிராமணரல்லாதார்கள் விரைந்து செயலாற்ற முன் வரவேண்டும். அவர்களுடைய பிற்காலம் அவர்கள் கையில்தான் இருக்கின்றது என்றும், அவர்கள் செய்யவேண்டிய காரியம் மிகப் பெரிது என்றும், அத்துடன் மிக அவசரமானது எனவும் கூறியது. மேலும் முதல் வேலையாகச் சிறுவர் சிறுமிகளை இன்னும், அதிகமான அளவில் நாம் படிக்க வைக்கவேண்டும். பல இடங்களில் சங்கங்களைத் தோற்றுவித்துப் பிராமணரல்லாதார்க்கு என்னென்ன சலுகைகள் உண்டு என்பதை எடுத்துக் கூறி, அதிக மாணவர்களைப் படிக்கச் செய்ய வேண்டும். பல இடங்களில் சங்கங்களை ஏற்படுத்தி, நிதி திரட்டி ஏழைகள் படிப்பதற்கு உதவி செய்ய வேண்டும்.[3] கல்வித்துறையில் நாம் முன்னேறக் கவனம் செலுத்தத் தவறி விட்டோம். அதனால், இப்பொழுது நாம் அதில் தீவிரமாக ஈடுபட வேண்டும் கல்வியில் கவனம் செலுத்துவதுடன், சமுதாய முன்னேற்றம், அரசியல் முன்னேற்றம் முதலியவற்றிலும் நாம் தீவிரமாக உழைக்க வேண்டும். அதற்காகப் பல பத்திரிகைகளைத் தொடங்கிச் சங்கங்களும் அமைக்க வேண்டும். உரிமைகளுக்காகப் போராட வேண்டும். இவைகளைச் செய்யாது நாம் இதுவரை வாளாவிருந்தோம். அதைச் சில சுயநலவாதிகள் தங்கள் நலத்திற்குப் பயன்படுத்திக் கொண்டனர்.''[4]

பிராமணர்கள் மட்டும் எல்லாத் துறைகளிலும் முன்னேறி இருப்பது பிராமணரல்லாதவர்களிடையே பெரும் அதிர்ச்சியை உண்டாக்கியுள்ளது என்பதைக் குறிப்பிட்டு, நீதிக்கட்சியின் கொள்கை விளக்கம் கூறியதாவது : 'அதன் பயனாகப் பிராமணரல்லாதவர்களிடையே மிக அதிருப்தி காணப்படுகின்றது.

[1] Ibid
[2] Ibid 7
[3] Ibid
[4] Ibid P. 7

தங்களை ஒத்த பிராமணர்கள் மட்டும் எல்லாத் துறைகளிலும் முன்னேறிச் செல்வாக்குடன் இருப்பதை அரசினர் சரியாக உணரவில்லை என்று கருதுகிறார்கள். நாள்தோறும் அதிருப்தி வளர்ந்து வருகின்றது. அரசாங்கத்தின் கவனத்திற்கு அதனைக் கொண்டு வரவேண்டும். அத்துடன் முதலில் பிராமணரல்லா தார் தங்களுக்குத் தாங்களே உதவி செய்து கொள்ள வேண்டும். கல்வி, சமுதாயம், அரசியல், பொருளாதாரம் முதலிய பல துறைகளிலும் முன்னேறுவதற்கான முயற்சிகளில் ஈடுபட வேண்டும். பின்புதான் ஆங்கிலக்குடிமகன் என்ற முறையில் அவர்கள் செல்வாக்குப் பெற முடியும். 'தேசிய வளர்ச்சி' என்று கூறப்படுவதெல்லாம் ஒவ்வொரு மனிதனும், இனமும், வகுப்பும் எவ்வளவு முன்னேறியுள்ளது என்பதைப் பொறுத்ததே யாகும்.'[1]

நீதிக்கட்சியின் கொள்கை விளக்கத்தின் முடிவுரையில் சமதர்ம நிலையை உணர்த்தும் மனிதாபிமான வார்த்தைகளை எவரும் எளிதில் மறக்க முடியாது. முடிவாக,[2] "எங்களுடைய உறுதியான நம்பிக்கை என்னவென்றால், இன்னும் சிறிது காலத்திற்காவது ஒவ்வொரு வகுப்பாரும் தங்களுடைய வளர்ச்சியை முதன்மையாகக் கருத வேண்டும். பிற வகுப்பினர் களுடன் சேர்ந்து பணியாற்றும்பொழுது, தான் தாழ்ந்தவன் என்று கருதாது, சுயமரியாதையுடன் சம உரிமை பெற்றவன் என்று எண்ண வேண்டும். சுயமரியாதையுடன் சம நிலையி லிருந்து மற்றவர்களுடன் பணியாற்றுவதையே ஒவ்வொருவரும் குறிக்கோளாகக் கொள்ள வேண்டும்" [3]

நீதிக்கட்சி மேலே அறிவித்துள்ள கொள்கை விளக்கம் ஜாதியற்ற ஒரு சமுதாயத்தை அமைப்பதற்காகவே உருவாக்கப் பட்டது. எல்லாச் சமுதாயங்களும் நியாயம் பெற்றுச் சம உரிமையுடன் முன்னேற நீதிக்கட்சி விரும்பிற்று. ஜாதி ஒழியும் என்பது நீதிக்கட்சியின் கருத்து. மேலும், பிராமண ரல்லாதவர்கள் எனக் குறிப்பிட்டு, முகமதியர்களையும், கிறித்தவர் களையும் தங்களோடு சேர்த்துக் கொண்டனர் என்பதும் புலனாகும்.[4]

[2] Ibid p. 7
[3] Ibid ,,
[1] Ibid P. 7
[4] உண்மையில் 1929 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் அங்கத்தினர் உரிமை நீதிக்கட்சியின் பிராமணர்களுக்கும் கொடுக்கவேண்டும் என்ற ஒரு பிரேரணை கொண்டு வரப்பட்டது. ஆனால், இதற்குச் சாதகமாக 13 ஓட்டும், எதிராக 14 ஓட்டும் பதிவு செய்யப்பட்டது. ஓர் ஓட்டு வித்தியாசத்தில் இப்பிரேரணை தோற்றது. என்றாலும், நீதிக்கட்சி பதவி ஏற்றபோது, சேது ரத்தின அய்யப் நீதிக்கட்சியின் மந்திரி சபையில் ஒருவராகப் பதவி ஏற்றார்.

சென்னை கவர்னர் பெண்ட்லண்ட் துரை பிராமணரல்லா தாருடைய வாழ்க்கை, சமுதாயம், பொருளாதாரம், அரசியல் ஆகிய துறைகளில் முன்னேறப் பெரிதும் உதவினர். நீதிக்கட்சி வளர்ச்சி அடைந்ததைக் கண்டு பிராமணர்கள், தாங்கள் வருங் காலத்தில், அரசியல், சமுதாயம், நிர்வாகம் முதலிய துறைகளில் அனுபவித்து வந்த சலுகைகளைப் பிராமணரல்லாதவர்களுக்கு விட்டுக் கொடுக்கத் தயாராக இருப்பதாக அறிவித்தனர். உழைப்பை மேற்கொள்ளும் எந்தத் தொழிலையும், மற்றவர்களைப் போன்று செய்யவும் முன் வந்தனர்.[1]

நீதிக்கட்சி தன் கொள்கை விளக்கத்தில் அரசாங்க வேலை களில் பிராமணர்கள் அதிகப்படியாக உள்ளனர் என்ற உண்மை, 1917ஆம் ஆண்டு அரசாங்க வேலைகளின் கணக்கெடுப்பு ஒன்று சென்னை சட்டமன்றத்தில் அறிவிக்கப்பட்டபோது தெளி வானது. மொத்த வேலை வாய்ப்பு பெற்றவர்களுள் பிராமணர் கள் 64 சதவிகிதமும், பிராமணரல்லாத இந்துக்கள் 1.9 சத விகிதம் என்றும், முகமதியர்கள் 1.7 சதவிகிதம் என்றும், கிறித்தவர்கள் 10.6 சதவிகிதம் என்றும், எஞ்சிய வேலையில் ஐரோப்பியர்கள் என்றும் அறிவிக்கப்பட்டது.[2] இதுபோன்று அக்காலங்களில், பிராமணர்களே அதிகப்படியான கௌரவப் பட்டங்களைப் பெற்றிருந்தனர். ஆனால், நீதிக்கட்சி தோன்றிய வுடன் சேலத்தைச் சார்ந்த விஜயராகவாச்சாரி போன்றவர்கள் தங்களுக்கு அளித்த திவான் பகதூர் பட்டங்களைப் பெற்றுக் கொள்ள மறுத்தனர். 1917ஆம் ஆண்டு கோயம்புத்தூரில்[3] நடந்த, பிராமணரல்லாதார் மகாநாட்டில் கட்டாய ஆரம்பக் கல்வி, சென்னையிலும் ஆரம்பிக்கப்பட வேண்டும் என முடிவு செய்யப்பட்டது. அரசாங்கத்தின் முக்கியமான துறைகளாக விளங்கி வரும், கல்வி, சுகாதாரம், விவசாயம், கூட்டுறவு, பதிவுத்துறை போன்ற இலாக்காக்கள், அரசாங்க அதிகாரிகளல் லாத சட்டமன்ற அங்கத்தினர்களினால் பொறுப்பேற்று நடத்தப் படவேண்டும் எனத் தீர்மானிக்கப்பட்டது. இது போன்று நகராண்மைக் கழகங்களுக்கும், ஸ்தல ஸ்தாபன போர்டுகளுக்கும் சுதந்திரம் அளிக்கப்பட வேண்டும் என மாநாடு தீர்மானித்தது. இவர்களில் சிலர், காங்கிரஸ் லீக் திட்டம் கொண்டு வந்த வகுப்பு வாத பிரதிநிதித்துவத்தை ஆதரித்தனர். உண்மையில் தாழ்ந்த வர், உயர்ந்தவர் என்ற பாகுபாடு அகல வேண்டும் என்பதைப்

[1] Ibid
[2] No. 40, Dravidian, 22nd No. 1917, MNR Cl. p. 2761
[3] No. 147, Sampad Adhyudaya, 30th Jan. 1918, MNR Cl. p. 194

பிராமணர்கள் உணர ஆரம்பித்தனர். 1919ஆம் ஆண்டு சென்னையில் சட்டமன்றத்தின் சரித்திரத்தில் மூக்கிய மாற்றம் ஒன்று ஏற்பட்டது. ஈழர்கள் சமுதாயத்தைச் சேர்ந்த திரு. சி. கிருட்டினன் என்பவரையும், ஆதி திராவிட இனத்தைச் சார்ந்த திரு. ராஜன் என்பவரையும் சென்னை சட்டமன்ற அங்கத்தினர்களாக வெலிங்டன் பிரபு நியமனம் செய்தார். இவ்விரு நியமனங்களும் சென்னை மாகாண சரித்திரத்தில் ஏற்பட்ட பெரும் புரட்சி எனக்கூறலாம். ஏனெனில், தீண்டப் படாத மக்களின் பிரதிநிதிகளாக இவர்கள் முதல் தடவையாக உயர் ஜாதியினரோடு சமத்துவமாகச் சட்டமன்றத்தில் இடம் பெற்றனர் இதைக் குறித்து டாக்டர் கி. நடேச முதலியார் ஜன நாயகக் கொள்கைகளே நீதிக்கட்சியின் அடிப்படைக் கொள்கைகள் என்றும், சென்னையில் அன்று ஆரபித்த ஜனநய கக் கொந்தளிப்புக்கு அக்கொள்கைகளே காரணம் என்றும் விளக்கினர்.[1]

## 4

### காங்கிரஸ் கட்சியின் கொள்கைகள்[2]

இந்தியச் சட்டமன்ற சீர்திருத்தங்களைப்பற்றி 1909 ஆம் ஆண்டிலிருந்து காங்கிரஸ் கட்சி பல நீர்மானங்களை நிறை வேற்றியது. இவற்றுள், முக்கியமான தீர்மானங்கள் பின் வருமாறு :

(1) முதல் தீர்மானம் வகுப்பு வாத அடிப்படையில் தனிப் பட்ட வாக்காளர் பட்டியல் அனுமதிக்கப்படக்கூடாது என்றும், எந்த மதத்தினருக்கும் அந்த மதத்தைப் பின்பற்றுவோருக்கு அதிகப்படியான பிரதிநிதித்துவம் அளிக்கப்படக்கூடாது என்றும் கூறியது. மத அடிப்படையில் முஸ்லீம்கள் என்றோ, முஸ்லீம்கள் அல்லாதவர்கள் என்றோ, வாக்காளர் பட்டியலி லாவது, தேர்தலில் போட்டியிடும் நபர்களிலாவது வேறுபாடுகள் இருக்கக் கூடாது என இத்தீர்மானம் கூறியது. தேர்தலில் போட்டியிட யோக்கியதாம்சமும், அவர்களுக்கு அளித்துள்ள தடைகளையும் அரசாங்கம் நீக்க வேண்டும். அதிகாரிகளல்லாத அங்கத்தினர்கள் எண்ணிக்கை குறைக்கப்பட வேண்டும் என்றும், அவர்கள் எண்ணிக்கை அதிகப்படியாக இருப்பின், மாகாண சபைகள் பலனற்று, உண்மையற்றுப் போகும் என இத்தீர்மானம் கூறியது.[3]

[1] No. 45, Swadesamitran, 17th May 1923, MNR, Cl. p. 643

[2] See 'The History of the Indian National Congress, 1885-1935, by P. Pattabi Sitaramayya, 1935, Vide Chapter II, A rapid review of the resolutions of the Congress, 1885-1915, page 41-42.

[3] Ibid P. 41

(2) இரண்டாவது தீர்மானத்தின்படி மத்தியப் பிரதேசம், பஞ்சாப், கிழக்கு வங்காளம், அஸ்ஸாம், பர்மா, முதலிய இடங்களில் நிர்வாகக் கௌன்சில்களும், மாகாணக் கௌன்சில்களும் அமைக்க வேண்டும் என வேண்டினர்.

(3) மூன்ருவது தீர்மானத்தின்படி பஞ்சாபில் மொத்த அங்கத்தினர் எண்ணிக்கை மிகக் குறைவு என்றும், பஞ்சாப் போன்ற மாகாணங்களில் முஸ்லீம்களுக்கு அளிக்கப்பட்டுள்ள பாதுகாப்பு, மற்ற மக்களுக்கு அளிக்கப்படவில்லையென்றும், மேற்படி மாகாணத்தில் முஸ்லீம் அல்லாதவர்களை மத்திய மேல் சபைக்கு அப்பொழுதுள்ள சட்டங்கள் அனுமதிக்கவில்லை என்றும் குறை கூறியது.[1]

(4) நான்காவது தீர்மானத்தின்படி மத்திய மாகாணத்திலும், பீகாரிலுமிருந்து இரண்டு அங்கத்தினர்கள் மத்திய மேல் சபைக்குத் தேர்வு பெற வேண்டும் என முடிவு செய்யப்பட்டது. 1910—11ஆம் ஆண்டில், காங்கிரஸ் மேற்கூறிய கருத்துக்களை வற்புறுத்தி வந்தது. 1912ஆம் ஆண்டு மத்திய மேல் சபையில் தேர்வு பெற்ற அங்கத்தினர் எண்ணிக்கை மிகையாக இருக்க வேண்டுமென்றும், தேர்வு பெற விரும்பும் வேட்பாளர்களுக்கு அளித்துள்ள நிபந்தனைகளை மாற்றியமைக்க வேண்டும் என்றும் தீர்மானித்தது.[2] 1915ஆம் ஆண்டில் பம்பாயில் நடந்த காங்கிரஸ் கூட்டத்தில் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி, அகில இந்திய முஸ்லீம் கட்சியோடு சேர்ந்து, ஒற்றுமைப்பட்ட ஓர் இந்தியாவை அமைக்கத் திட்டத்தைத் தயார் செய்ய அதிகாரம் அளித்தது. அவர்கள் கொடுத்த திட்டம் 1916ஆம் ஆண்டு லக்னோவில் நடந்த காங்கிரஸால் அங்கீகரிக்கப்பட்டது. மேலும், சுயாட்சிக்கு வேண்டிய எல்லா நடவடிக்கைகளையும், அரசாங்கம் எடுக்க வேண்டுமென்றும், இந்தியா ஒரு காலனியாக இல்லாமல் ஆங்கில ஆட்சியில் ஓர் அங்கத்தினராக இருக்க வேண்டுமெனவும் தீர்மானித்தது. இத்திட்டத்தின்படி எல்லா மாகாணச் சட்டமன்றங்களிலும் 4/5 பாகம் தேர்வு பெற்ற அங்கத்தினர்களும், 1/5 பாகம் நியமனம் பெற்ற அங்கத்தினர்களும் இருக்க வேண்டும். எனவே, வாக்காளர் பட்டியல் விவரிக்கப்பட வேண்டும். என்றும், முஸ்லீம்களுக்குத் தனி வாக்காளர் பட்டியல் இருக்க வேண்டும் என்றும், பின் வரும் மாகாணங்களில் முஸ்லீம்களுக்கு எத்தனை இடம் அளிக்கப்பட வேண்டும் என்றும் குறிப்பிட்டது.[3]

[1] Ibid P. 42
[2] Ibid
[3] See Pattabi Sitaramayyas's book 'The History of the Indian National Congress', 1885-1935, vide Chapter II, A rapid view of the resolutions of the Congress, 1885-1915, page 43

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பஞ்சாப் (தேர்வு பெறும் அங்கத்தினர் எண்ணிக்கையில்) | — | 50 | சதவிகிதம் |
| 2. | ஐக்கிய மாகாணம் | — | 30 | ,, |
| 3. | வங்காளம் | — | 40 | ,, |
| 4. | பீகார் | — | 25 | ,, |
| 5. | மத்திய மாகாணம் | — | 15 | ,, |
| 6. | சென்னை | — | 15 | ,, |
| 7. | பம்பாய் | — | 1/3 | ,, |

இவ்வங்கத்தினர்கள் மற்றைய எந்தத் தேர்தலிலும் போட்டியிடக் கூடாது என்றும் குறிப்பிடப்பட்டது.[1] மேலும், அதிகாரிகளல்லாத அங்கத்தினர்கள் மற்றச் சமுதாயங்களைக் குறித்துள்ள விவகாரங்களில், முக்கியமாக மத்திய மேல் சபையிலுள்ள வாக்குவாதங்களில் கலந்து கொள்ளக்கூடாது எனவும் குறிப்பிட்டது. மத்திய மேல் சபையில் 4/5 பாகம் தேர்வு பெற்ற அங்கத்தினராக இருக்க வேண்டும் என்றும், அங்ஙனம் தேர்வு பெற வாய்ப்புள்ள அங்கத்தினர்களில் 1/3 பாகம் மட்டுமே முஸ்லீம்களாக இருக்க வேண்டும் என்றும், அவர்களுக்குத் தனி வாக்காளர் பட்டியல் இருக்க வேண்டும் என்றும் குறிப்பிட்டது. இம்முடிவுகள் இந்து முஸ்லீம்களுக்கிடையே ஏற்பட்ட ஒப்பந்தத்தை அடிப்படையாகக் கொண்டது. உண்மையில் இவ்வேண்டுகோள்கள், மாண்ட் போர்டு சீர்திருத்தத்தில் இணைக்கப்பட்டன.[2]

## 5

## காங்சிரஸ் - முஸ்லீம் லீக் கோரிக்கை[3]

காங்கிரசும், முஸ்லீம் லீக்கும் சேர்ந்து அரசாங்கத்திற்குச் சமர்ப்பித்த வேண்டுகோளில் பின்வரும் சீர்திருத்தங்கள் வேண்டும் எனக் குறிப்பிட்டனர்.

மாகாணச் சட்டசபைகளில், மொத்த அங்கத்தினர்களில் ஐந்தில் நான்கு பாகம் மக்களால் தேர்ந்தெடுக்கப் படவேண்டுமென்றும், ஒரு பாகம் அரசாங்கத்தினால் நியமனம் பெற வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டனர். பெரிய மாகாணங்களைப் பொறுத்த வரையில் புதிதாக ஏற்படுத்தப்படும் சட்டசபைகள்

[1] Ibid
[2] Ibid p. 44
[3] காங்கிரஸ்–லீக் கோரிக்கை–மாண்டேகு செம்ஸ்போர்டு கோரிக்கை அன்னி பெசன்ட் அம்மையார் அபிப்பிராயம், பக்கம் 1-5

125 அங்கத்தினர்களைக் கொண்டதாக இருக்கவேண்டுமென்றும், சிறிய மாகாணங்களில் அமைக்கப்படும் சட்டசபைகள் 50 முதல் 75 வரை அங்கத்தினர்களைக் கொண்டதாக இருக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டனர். சட்டசபைகளுக்குத் தேர்வு பெறும் முஸ்லீம் அங்கத்தினர்கள் முஸ்லீம்களாலேயே தேர்ந் தெடுக்கப்பட வேண்டுமெனவும், ஜனத்தொகையில் சிறுபான்மை யுள்ள பிற மதத்தவரும் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்ப ஜாதிமத பிரதிநிதித்துவம் தேவை என வேண்டினர்.

மாகாண நிர்வாகத்தைப் பற்றிக் கூறும்போது, காங்கிரஸ் - முஸ்லீம் கோரிக்கை, மாகாண நிர்வாகத்தின் தலைவர், கவர்னராக இருக்க வேண்டுமென்றும், ஆனால், அவர் சட்ட சபையின் தலைவராக இருத்தலாகாது எனவும் கூறிற்று. சட்ட சபை அங்கத்தினர்கள் ஓர் அவைத் தலைவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை அளிக்க வேண்டிக்கோரியது. மாகாண நிதி குறித்து இக்கோரிக்கை குறிப்பிட்டதாவது,[1] ஏற்றுமதி, இறக்குமதி, தபால், தந்தி, நாணயம் வெளியிடுவது, உப்பு, அபின் இருப்புப் பாதை, கடற்படை, தரைப்படை சுதேச அரசர செலுத்தும் கப்பம் ஆகியவைகளின் வருவாய் தவிர மற்ற வருமானங்கள் யாவும், மாகாணத்திற்கே உரியதாக இருக்க வேண்டும்.[2] மாகாண அரசாங்கம் இந்திய அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டிய தொகை திட்டவட்டமாக நிர்ணயிக்கப்பட வேண்டும். நிதி சம்பந்தமாக அவ்வப்போது வேண்டிய சீர்திருத்தங்களைச் செய்ய அரசு முன் வர வேண்டும். கடன் வாங்கல், புதிய வரி சுமத்தல், வரி மாற்றல், வரவு செலவு கணக்கு, அங்கீகாரம் ஆகியவை போன்ற எல்லா நிர்வாகக் காரியங்களிலும், மாகாணச் சட்ட சபைக்குப் பரிபூரண அதிகாரம் இருக்க வேண்டும். இவைகளைப் பற்றிய மசோதாக்கள் சட்டசபையின் ஆலோசனையையும், அங்கீகாரத்தையும் பெறல் வேண்டும்.[3] மாகாணச் சட்டசபையில் தீர்மானங்களைப் பற்றியும், மசோதாக்களைப் பற்றியும் விவாதம் செய்ய வேண்டிய முறைகளைச் சட்டசபையாரே ஒழுங்குபடுத்திக் கொள்ள வேண்டும். சட்டசபைகள் அங்கீகரித்த ஒரு தீர்மானம் கவர்னரால் நிராகரிக்கப்படலாம். அவ்வாறு நிராகரிக்கப்படும் வரை, அச்சட்டம் நடைமுறையில் இருக்கலாம். அதே சட்டம் ஒரு வருட காலத்திற்குள் மீண்டும் சட்டசபையின் யோசனைக்குக் கொண்டு வரப்பட்டு, மேலும் ஒப்புக்கொள்ளப்படுமாயின், அம்மசோதாவை அமுலுக்குக் கொண்டு வர வேண்டும். மாகாண சட்டசபை அங்கீகரித்த ஏற்பாட்டு முறைகள் சட்டமாக உறுதிப்

[1] Ibid p. 1
[2] Ibid
[3] Ibid

படுவதற்கு முன், அவை கவர்னரின் சம்மதத்தைப் பெற வேண்டும். ஆனல், அம்மசோதாக்களைக் கவர்னர் ஜெனரல் நிராகரிக்கலாம். சட்டசபையின் காலம் ஐந்து வருடமாக நீடிக்கப் படவேண்டும்.[1]

மாகாண அரசாட்சியைப்பற்றி அக்கோரிக்கை மேலும் கூறியதாவது,[2] 'மாகாண ஆட்சித் தலைவர் கவர்னராக இருக்க வேண்டும். ஆனல், அவர் இந்திய சிவில் சர்வீஸ் ஊழியத்திலாவது அல்லது வேறு அரசாங்க உத்தியோகங்களிலாவது தொடர்பு உள்ளவராக இருத்தலாகாது. ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஒரு காரிய நிர்வாக சபை இருக்க வேண்டும். அச்சபை கவர்னரைத் தலைவராகக் கொண்டிருக்க வேண்டும். அச்சபை மாகாணத்தின் நிர்வாகப் பொறுப்பை ஏற்று நடத்த வேண்டும். இந்திய சிவில் சர்வீஸ் வேலையிலுள்ளவர்கள் நிர்வாக சபை அங்கத்தினராக இருக்கக் கூடாது. நிர்வாக சபை அங்கத்தினரில் குறைந்தபட்சம் பகுதிப் பேராகிலும் இந்தியராக இருத்தல் வேண்டும். அவ்விந்தியர் மாகாண சட்டசபையினல் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்'.

காங்கிரஸ் - முஸ்லீம் கோரிக்கை ஓர் அரசுப் பிரதிநிதி[3] சபை அமைக்க வேண்டும் என்றும், பின்வரும் அதிகாரங்கள் அச்சபைக்கு அளிக்கப்பட வேண்டுமெனவும் கோரியது. 'அச்சபை 150 அங்கத்தினர்களைக் கொண்டதாக இருக்க வேண்டும். இந்த 150 பேரில் ஐந்தில் நான்கு பாகம் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்றும், அவ்வங்கத்தினர்களில் மூன்றில் ஒரு பாகம் முஸ்லீம்களாக இருக்க வேண்டுமென்றும், இச்சபையின் தலைவர் இச்சபையினராலேயே தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமெனவும் கோரிக்கை வேண்டிக்கொண்டது. நிதிப் பிரச்சினையைப் பற்றிய மசோதாவைத் தவிர வேறு விதமான மசோதாக்கள் இச்சபையின் ஆலோசனைக்குக்கொண்டு வரப்படலாம் என்றும்,இதற்குநிர்வாக சபையினரின் சம்மதம் வேண்டும் என்ற நியதி இருத்தலாகாது என்றும், சட்டசபை அங்கீகரித்த எல்லா மசோதாக்களும் சட்டமாக உறுதிப்படுவதற்கு முன், அவை கவர்னர் ஜெனரலின் உத்தரவைப் பெறல் வேண்டும் என்றும் இக்கோரிக்கை குறிப்பிட்டது. வரவு செலவு கணக்குகளைப் பற்றிய எவ்வகைத் தீர்மானங்களும் மசோதாவாக சட்டசபையின் முன் கொண்டு வரப்பட வேண்டும். அவை சட்டசபையில் அங்கீகாரத்தைப் பெற வேண்டும். அச்

[1] Ibid P. 3
[2] Ibid
[3] Ibid

சபையின் அங்கத்தினர்கள் ஐந்து வருட காலம் தங்கள் அங்க உரிமையை வகிக்க வாய்ப்பு வேண்டும்.[1]

இச் சபையின் அதிகாரத்தை விளக்கும்போது இந்தியா முழுவதிலும் ஒரே விதமான சட்டம் அமுல் நடத்த வேண்டுமென்றும், ஒரு மாகாணத்திற்கும், மற்றொரு மாகாணத்திற்கும், வர்த்தகம், வரி முதலிய தொடர்புகளைப் பற்றி இயற்ற வேண்டிய சட்ட திட்டங்கள், வியாபாரம், ஏற்றுமதி, இறக்குமதி இவைகளைப் பற்றி வரிகளை அமைக்கும் முறை; தொழில் முறைகள், பண உதவி செய்தல், பொதுவாகத் தேச நிர்வாகத்தைக் குறிக்கும் எல்லாக் காரியங்களும் அரசப் பிரதிநிதியின் சபைக்கு உட்பட்டு இருத்தல் வேண்டும்[2] என அக்கோரிக்கை கேட்டுக் கொண்டது.

இந்திய அரசாங்கத்தைப் பற்றிக் காங்கிரஸ் முஸ்லீம் லீக் கோரிக்கை பின்வரும் திட்டத்தைச் சமர்ப்பித்தது.[3] ‘இந்திய அரசாங்கத்தின் தலைவர் இந்திய அரசப் பிரதிநிதியாக இருக்க வேண்டும். அவரைத் தலைமையாகக் கொண்ட ஒரு நிர்வாக சபை இருத்தல் வேண்டுமென்றும், அச்சபையில் பகுதி பேர் இந்தியராக இருக்கவேண்டும் என்றும்கேட்டுக்கொண்டது. நிர்வாக சபை அங்கத்தினராயுள்ள இந்தியர்களை, அரசப் பிரதிநிதி சட்டசபை தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். இந்தியக் குடிமுறைப் பணி வேலையில் அமர்ந்து இருப்பவர்கள் இந்நிர்வாக சபையில்அங்கத்தினர்களாக நியமிக்கப்படலாகாது. ஆனால், இம்பீரியல் சிவில் சர்வீஸ் என்னும் வேலையை வகிப்பவர்களையே இந்திய அரசு நியமிக்க வேண்டும். பொதுவாகக் கவர்னர் ஜெனரல் மாகாண செயல்களில் தலையிடலகாது. குறிப்பிட்ட விவகாரங்களைத்தவிர, மற்றத் தலைப்புகளை மேற்பார்வை மட்டும் செய்ய வேண்டும். சட்டங்கள் ஏற்படுத்துவதிலும்; நிர்வாக முறையிலும் பெரும் பாலும் இந்திய அரசு, ஆங்கிலேய இந்திய மந்திரியின் அதிகாரத்தை விட அதிக அதிகாரம் படைத்தவராக இருக்க வேண்டும்.

பாராளுமன்ற இந்திய மந்திரியின் நிர்வாகத்தைப்பற்றிக் கூறும்போது, காங்கிரஸ் - முஸ்லீம் கோரிக்கை, பாராளுமன்ற இந்திய மந்திரிக்கென ஒரு தனிச் சபை வேண்டியதில்லை எனக் கூறியது.[4] ஆங்கிலேயப் பாராளுமன்ற இந்திய மந்திரி ஆங்கில

[1] Ibid
[2] Ibid
[3] Ibid
[4] Ibid

அரசர்களிடமிருந்து மட்டுமே ஊதியம் பெற்றுக்கொள்ள வேண்டும். பெரும்பாலும் இந்திய அரசுக்கும், இந்தியப் பாராளு மன்ற மந்திரிக்கும் இருக்க வேண்டிய சம்பந்தம், குடியேற்ற நாடுகளுக்கும், குடியேற்ற நாட்டு மந்திரிகளுக்குமுள்ள சம்பந்தம் போன்றதாக இருக்க வேண்டுமெனவும் கேட்டுக்கொண்டது. இந்திய மந்திரிக்கு உதவியாக இரு உப மந்திரிகள் இருத்தல் வேண்டுமென்றும், அவரில் ஒருவர் இந்தியராக இருக்கவேண்டும்[1] எனவும் காங்கிரஸ் முஸ்லீம் லீக் கோரிக்கை வேண்டியது.

பொதுப்படையான விவகாரங்களைப் பற்றிக் கூறும்போது காங்கிரஸ் முஸ்லீம் லீக் கோரிக்கை, கடற்படையிலும், தரைப் படையிலும் இந்தியர்களுக்கு உயர்ந்த பதவிகள் கொடுக் கப்பட வேண்டும் என்றும், அவர்கட்குப் போர் முறை களைக் கற்பிக்கத் தகுந்த ஏற்பாடுகளைச் செய்ய வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டது. இந்திய இராணுவத்தின் இந்தியர்கள் தொண்டர்களாக நியமனம் பெற உரிமைகள் வழங்கப்பட வேண்டும் எனக் கோரியது. சக்கரவர்த்தியின் ஆட்சிக்கு உட்பட்ட குடிமக்களின் உரிமைகள் யாவும் இந்தியர்களுக்கும் வழங்கப்பட வேண்டும் எனக் கேட்டது. இந்தியாவின் நிர்வாக அதிகாரிகட்கு நீதி பரிபாலன அதிகாரம் இருத்தலாகாது என்றும், மாகாண நீதி பரிபாலனங்கள் யாவும் அந்தந்த மாகாண உயர்நீதி மன்றங்களுக்கு உட்பட்டிருத்தல் வேண்டும்[2] எனவும் சிபாரிசு செய்தது.

## 6

## மாண்டேகுவின் பெருந்தன்மை

மாண்டேகு இந்திய அரசியலில் முற்போக்குக் கருத்துக் களும், இந்திய மக்களிடையே அனுதாபமும் கொண்டவர். ஆங்கிலேயர்களிடையே ரிப்பனைப் போன்ற நல்லெண்ணம் கொண்டவர். இந்திய அரசியல் சீர்திருத்தங்களைத் துரிதமாக நடைமுறையில் கொண்டு வர வேண்டும் என்றும், பொறுப் பாட்சியை மக்களுக்கு ஆங்கிலப் பேரரசிடமிருந்து மாற்ற வேண் டும் என்றும் விரும்பினர். 1910 - ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம், பாராளுமன்றத்தில், ஆங்கிலப்பேரரசின் வரவு செலவு திட்டத்தைச் சமர்ப்பிக்கும்போது: கல்வியில் முன்னேறிய இந்திய மக்களுக்கு, அரசியல் சலுகைகள் கொடுக்க வேண்டும் என்பது

[1] Ibid
[2] Ibid p. 5

தம் அபிப்பிராயம் என்றும், அதனைக் கொடுக்காவிடில் மக்களின் அதிருப்திக்கு உள்ளாக ஏதுவாகும் எனவும் குறிப்பிட்டார்.[1] இதன்பின்: 1914ஆம் ஆண்டு ஆங்கிலப் பாராளுமன்றப் பிரபுக்கள் சபையில் பேசும்போது மார்லி பிரபுவின் சீர்திருத்தத்தின் அடிப்படையில் இந்தியாவின் பிற்காலத்திற்கு வழி வகுத்துள்ளோம் என்றும், அவ்வழியாகவே திடமாகப் பல வருடங்களுக்கு முன்னேற வேண்டும் எனவும் அறிவித்தார்.[2] மார்லியினுடைய சீர்திருத்தங்கள், ஆங்கிலப் பாராளுமன்றத்தால் இந்திய மக்களிடையே திணிக்கப்பட்டது என்ற குற்றச்சாட்டை அவர் ஒப்புக்கொள்ளவில்லை.[3] முன்னேறுகின்ற மக்களின் சீர்திருத்தக் கோரிக்கைகளை நிறைவேற்றுவதாகவே மார்லியினுடைய சீர்த்திருத்தங்கள் நடைமுறையாக்கப்பட்டன என வாதாடினார். என்றாலும், இந்திய மக்களுக்கு அதிகப்படி வாய்ப்பு அளிக்கும் முன்னர், அவர்கள் சமுதாய அடிப்படையில் பெரும் முன்னேற்றம் காண வேண்டுமெனத் தம் அபிப்பிராயத்தைத் தெரிவித்தார். மேலும், இந்திய அரசியல் தலைவரின் சமுதாய மாற்றத்தில் அதிகம் கவனம் செலுத்த வேண்டுமென்றும், அரசியல்வாதிகளும், படித்த இனத்தவர்களும், இந்தியப் பொருளாதார முன்னேற்றத்திற்கும், தொழில் அபிவிருத்திக்கும், இந்துக்களின் சமுதாய மாற்றத்திற்கும் முன் வரவேண்டும் எனக் கேட்டுக்கொண்டார். இந்திய மக்களிடையேயுள்ள சமுதாயத் தொடர்புகளில் பல சீர்திருத்தங்கள் ஏற்பட்டாக வேண்டுமெனவும் கூறினார். இக்காலங்களில், 'மேற்கத்திய நாடுகள் முன்னேற்றமடைந்த நாடுகள், கிழக்கிந்திய நாடுகள், பின் தங்கிய நாடுகளே' என ஏளனம் செய்த கிப்ளின் துரையின்[4] வசனங்களை மாண்டேகு தாக்கிப் பேசினார். உண்மையில் ஆங்கிலேயர்கள் பல வருட காலம், சமுதாய அடிப்படையிலும், தொழில் அடிப்படையிலும் கண்ட புரட்சிகளையும், அதனால், ஏற்பட்ட நன்மைகளையும், இந்திய மக்களுக்கு உபகாரமாகச் சிறிய அளவில் பலகாலமாக அளித்துள்ளனர் எனச் சுட்டிக் காட்டினார். என்றாலும், இந்திய மக்கள் ஆங்கிலேயர் போன்று, அரசியல் நிறுவனங்களை நிறுவுவதற்குப் பல வருடம் ஆகும் என ஒப்புக்கொண்டார். இதனால், இந்தியா, சமாதான முறையில் படிப்படியாகச் சுதந்திரம் அடைய வேண்டும் என்றும், சுதந்திரம்

[1] No. 26, The Shams-ul-Akhbar, 15th August 1910, MNR, Cl. p. 1079
[2] The West Coast Reformer, 3rd August, 1911, MNR, Cl. p. 1186
[3] See No. 8, The Hindu, 14th August, 1911, MNR, Cl. p. 1221
[4] Ibid p. 1221

அடைவது நிச்சயமாகப் புரட்சியின் அடிப்படையில் அன்று எனவும் அறிவித்தார்.[1]

1911 ஆம் ஆண்டு ஆங்கிலத் பேரரசின் சக்கரவர்த்தி இந்தியா வந்ததைப் புகழ்ந்து கூறும்போது இந்திய மக்களிடையே, சமாதானமும், நம்பிக்கையும் புதிதாக ஏற்பட்டுள்ளன எனக் கூறினர். இக்காலத்தில், வங்கப் பிரிவினையை ரத்து செய்ததையும். டில்லிக்கு இந்தியத் தலைநகரை மாற்றியதையும், கல்விக்கு 50 இலட்சம் ரூபாய் அனுமதிக்கப்பட்டதையும், இந்தியப் பத்திரிகைகள் பாராட்டின. நூற்றுக்கணக்கான அரசியல் கைதிகளை விடுதலை செய்ததன் காரணமாக டில்லியில் நடந்த தர்பார் வெற்றியுடன் முடிந்தது.[2] ஆங்கிலப் பேரரசு சக்கரவர்த்தியின் இந்திய விஜயம், இந்தியப் பிரச்சினைகளை முதன்மையான இடத்திற்குக் கொண்டு வர வாய்ப்பளித்தது. இந்திய மக்களிடையே அரசியல் விழிப்பு ஏற்பட்டது. ஆங்கில மக்கள் இந்திய மக்களுக்குச் செய்ய வேண்டிய உதவியை எதிர் பார்த்துச் சுதந்திரக் கருத்துக்கள் மேலோங்கின[3]. 1912ஆம் ஆண்டு அரசியலின் நிலையை நேரில் பார்த்து இந்திய அரசியலை நிர்ணயிக்க, நவம்பர் மாதம் மாண்டேகு இந்தியா வந்து சேர்ந்தார். இந்தியா வரக்காரணம் கூறும்போது, இந்திய மக்களின் தேவையை நேரில் கண்டறியவே தாம் வந்ததாகக் கூறினர். படித்த இந்தியர்கள் சட்டமன்றங்கள் விரிவடைய வேண்டும் எனக் கோரியபோது, குடிசைகளில் வாழும் மக்கள் பேச்சற்ற ஊமைகளாக இருக்கின்றனரே! என வியந்தார்.[4]

பிப்ரவரி 1913ஆம் ஆண்டு மாண்டேகு சென்னையில் பல பொது நிறுவனங்களைப் பார்வையிட்டார். அவ்வருடம் ஆகஸ்ட் மாதம் இங்கிலாந்துக்குத் திருப்பிப் பாராளுமன்றத்தில் உரை நிகழ்த்தியபோது பின்வரும் கருத்துக்கள் விளக்கும் சொற்பொழிவு ஆற்றினர்:-[5] 1. இந்துக்களுக்கும், முஸ்லீம்களுக்கும் இடையே நெருங்கிய நல்லுறவு ஏற்பட வேண்டுமெனவும், இதுவே இந்திய அரசியல் முன்னேற்றத்தின் முதற்படி என்றும் கூறினர். ஆனல், முகம்மதியர் தங்களுள் ஐக்கியமாக இருந்ததையும் குறிப்பிட்டார். இதைக்குறித்து இந்தியப் பத்தி

[1] See No. 8, The Hindu, 14th August 1911, MNR, Cl. p. 1221
[2] No. 4, Desabhimani, 10th December 1911, MNR, Cl. p. 18.
[3] No. 9, Hindu Nesan, 14th December 1911, MNR, Cl. p. 1810
[4] No. 8, The west Coast Spectator, 9th November 1912, Cl. p. 1669
[5] No. 40, Vokkligara, 20th August 1913, MNR, Cl. p. 1332

ரிகைகள், அவர் குறிப்பிட்ட இலாக்காக்களை இந்தியர்களின் பொறுப்பில் விட்டு விட வேண்டும் என அவர் கூறியதாகவும், பொறுப்பாட்சிக்கு இது முன்னோடியாக இருக்கும் எனவும் கருதின. 2. ஆட்சிசெய்யும் இந்திய மன்னர்களின் சபை வேண்டுமென்றும், அது வருடம் ஒரு முறை கூடி, அவரவர் நாட்டில் என்ன முன்னேற்றங்கள் வேண்டுமெனச் சர்ச்சை செய்ய வேண்டுமென்றும் கருதினர். 3. இந்திய மக்களின் நல்லெண்ணத்தைப் பெற்று, ஆங்கிலேயர்கள் ஆங்கிலப் பேரரசின் ஆட்சிக்குட்பட்ட இந்திய நிர்வாகத்தின் பெரும் பொறுப்புக்களைச் சீரிய முறையில் செய்துமுடிக்க வேண்டுமெனவும் கூறினர்.[1]

1915 ஆம் ஆண்டு முதல் உலகப் போரில் நிமித்தம் இந்தியா அளித்த பொன், பொருள், படை எல்லாவற்றையும் பாராட்டிப் பேசினர். இவ்வுதவிகள் அன்று வரை இந்தியாவின் எதிர்கால உதவிகளைப் பற்றியுள்ள பிரச்சினைகளில் பெரும் மாறுதலை ஏற்படுத்தக் காரணமாக இருக்கும் என ஆணித்திறமாகப் பேசினர்.[2] படைகளை அனுப்புவதோடு, இந்திய அரசாங்கம் அன்று எல்லாச் செலவுகளையும ஏற்றுக்கொண்டது. இந்திய மக்களின் பொருளாதாரம் மிகவும் பின்தங்கிய நிலையிலிருந்த போதிலும், இந்தியா பெரும் உதவியைச் செய்தது இதனால், இங்கிலாந்து இந்தியாவுக்குப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது என்றும், மேலும் இங்கிலாந்து இந்தியாவோடுள்ள தொடர்பைச் சிறப்படையச் செய்ய வேண்டுமெனவும் கூறினர். இங்கிலாந்து இந்தியாவை ஓர் ஆலோசகராகவும், பங்காளியாகவும், தங்களோடு சேர்த்துக் கொள்ளத் தயார் எனவும் கூறினர்.[3] 1917 ஆம் ஆண்டு மெசப்பட்டோமின் குழு கொடுத்துள்ள அறிக்கையின் அடிப்படையில் அன்று இந்தியக் காரியதரிசியாக இருந்த சாம்பர்லியன் தன் பதவியை இராஜிநாமா செய்தார். இப்பதவி மாண்டேகுவிற்கு அளிக்கப்பட்டது. அவருடைய விசாலமான அறிவும், இந்தியர்களிடையேயுள்ள தாராள மனப்பான்மையும், இந்தியப் பிரச்சினைகளுக்கிடையே அவருக்கேற்பட்ட அனுபவமும் இந்தியர்களால் பெரிதும் பாராட்டப்பெற்று, அவர் நியமனம் வரவேற்கப்பட்டது.[4] அவருடைய தாராள மனப்பான்மையை ஒருசில ஆங்கிலப் பத்திரிகைகள் குறைகூறின. பாராளு

[1] Ibid

[2] No. 120, Qaumi Report, 23th December 1914, MNR, 1915. Cl. p. 60

[3] See Montagu No. 41, The Shams-ul-Akbhar, 8th Jan. 1915, MNR, Cl. p. 219.

No. 65, Swadesamitran, 19th July 1917, MNR, Cl. p. 2051

மன்றத்தில் இந்தியாவைப் பற்றி அவர் கூறிய கருத்துக்களை, அவர் சொந்த கருத்தாகக் கொள்ள வேண்டும் என்று வாதாடினர்.

## 7

## மாண்டேகுவின் இரண்டாவது இந்திய வருகை

1917ஆம் ஆண்டு ஜூலை மாதம் இந்தியாவில் சீர்திருத்தம் கொண்டுவர ஆங்கிலப் பாராளுமன்றத்தின் இரு சபை அங்கத்தினர்களால் அமைக்கப்பட்ட ஒரு குழுவை, நியமனம் செய்ய வேண்டும் என மாண்டேகு கருதினர், அவ்வருடமே இந்தியாவில் பலதரப்பட்ட தலைவர்களையும், மக்கள் பிரதிநிதிகளையும் அவர்களால் அமைக்கப்பட்ட சபைகளையும் காண மீண்டும் இந்தியா வந்தார்.

தென்னிந்தியாவிலுள்ள பிராமணரல்லாதார் வகுப்பைச் சார்ந்தவர்கள், காங்கிரசும், முஸ்லீம் லீக்கும்தான் இந்திய மக்களின், அபிப்பிராயங்களைத் தெரியப்படுத்துபவர்கள் எனக் கருதக்கூடாது என அறிவித்தனர். முகமதியர்களுக்கும் பிராமணரல்லாதவர்களுக்கும் தனிப் பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டும் என இஸ்லிங்டன் பிரபு (Lord Ishlington) கூறிய கருத்து, பிராமணரல்லாதவர் கருத்தை விளக்குவனவாகும் என அறிவித்தனர்.[1]

மாண்டேகு இந்தியாவிற்குப் பெரும் உதவி செய்ய முன் வந்தாலும், இந்தியாவின் எதிர்காலம் இந்தியர்கள் கையிலே தான் இருக்கின்றது எனவும், அவர்கள் ஆசைப்படும் இலட்சியம் நிறைவேற அவர்கள் பெரும் தியாகங்கள் செய்ய முன்வருவதனுல், தாங்கள் சுயாட்சிக்குத் தகுதியுள்ளவர்கள் என்பது நிரூபணம் ஆகும் என்றும் கூறினர்.[2] இக் காலங்களில் ஆங்கிலேயர்கள் பத்திரிகைகள் மூலம், இந்தியர்களுக்குச் சுயநிர்ணய உரிமை கொடுக்க மாண்டேகு முன் வருவாராயின், அவரைப் பதவியிலிருந்து நீக்க வேண்டும் என்று பயமுறுத்தின. உண்மையில் மாண்டேகுவின் கருத்து அன்றுள்ள ஆங்கிலேயர் கருத்துக்களை விட முற்போக்கு உடையதாக இருந்தது.[3]

[1] No. 35, Andhra Patrika, 28th August, 1917, MNR, Cl. p. 2266

[2] No. 62, The Hindu, 25th August, 1917, MNR, Cl. p. 2278

[3] No. 27, Andhra Patrika, 30th August 1917, MNR, Cl. p. 2298

1917 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் நடந்த, காங்கிரஸ் மகாசபை கூட்டத்திற்கு மாண்டேகு விரும்பி அழைக்கப்பட்டார். ஆனால், மாண்டேகு அதற்கு இணங்கவில்லை. இது போன்று சுயாட்சி இயக்கத்தோடு தொடர்புள்ள திவான் பகதூர் - கேசவப் பிள்ளையை மாண்டேகு காண முடியவில்லை.[1] ஆனால், சென்னை வந்த மாண்டேகுவிற்குச் சுயாட்சி எதிர்ப்பு முன்னணியிலிருந்து பல வரவேற்புகள் வாசித்து அளிக்கப்பட்டன. சென்னை சுயாட்சியினருடைய தலைநகராய் இருந்தபோதிலும், அங்குத் தான் அவர்களுக்குப் பெரும் எதிர்ப்பு இருந்தது. ஆதி திராவிடர்கள் அக் காலத்தில், சுயநிர்ணய உரிமை கொடுப்பதைப் பெரிதும் எதிர்த்தனர். • இதுபோலவே, முமகதிய சமுதாயத் தினரும் பல எதிர்ப்பு அறிக்கையை வெளியிட்டனர்.[2] என்றாலும், இந்தியாவிலுள்ள ஆங்கில அதிகாரிகள் இந்திய முற்போக்குக்கு முட்டுக்கட்டையாக இருப்பதாக மாண்டேகு கருதிப் பின்வருமாறு கூறினர். ‘இந்தியாவின் பிற்காலத்தை நிர்ணயிப்பது இந்திய அதிகாரிகளல்ல, பாராளுமன்றமே’ என விளக்கினர். இந்தியாவில் படித்த மக்கள், ஆங்கில ஆட்சியை எதிர்க்கவில்லை யென்றும், ஆனல், ஆங்கில அதிகாரிகளை வெறுக்கின்றனர் என்றும் அறிவித்தார்.[3] என்றாலும், இந்திய மக்களிடையேயுள்ள ஜாதிமத வேறுபாடுகள் பரிபூரண பொறுப்பாட்சி இந்திய மக்கள் பெறுவதற்குக் காலதாமதம் உண்டாக்குகின்றன என்று டவ்வரின் துரையின் கருத்தை அவர் ஒத்துக்கொண்டார். பெரு வாரியான மக்கள் பொறுப்பாட்சி கேட்கவில்லையென்றும், அவர்கள் பொறுப்பாட்சிக்கே இன்னும் தகுதியடையவில்லை எனவும் கருதினர். பொறுப்பாட்சி கேட்பவர்கள் எண்ணிக்கை 100-க்கு 5 சதவிகிதமே இருக்கும் எனவும், அவர்களுடைய கிளர்ச்சிகள் 100-க்கு 95 சதவிகிதம் மக்களைப் பாதிக்கவில்லை எனவும் கூறினர். வறுமையால் பீடிக்கப்பட்ட மக்களிடையே நாட்டின் தேசிய உணர்வை உண்டாக்குவதென்பது கடினமான காரியம். என்றாலும், இம்மக்களுடைய நிர்மலமான வாழ்வை மாற்றியமைப்பது அவர்களுடைய பிற்கால நல்வாழ்வுக்கு நல்லது எனவும் அறிவித்தார்.[4]

[1] No. 19, The Swadesamitran, 21st December 1917, MNR, Cl. p. 2918

[2] No. 44, Desabhaktan, 24th December 1917, MNR, Cl. p. 19

[3] No. 40, Swadesamitran, 24th March 1919, MNR, Cl. p. 507

[4] See Montague Chelmsford Report on Indian Constitutional Reform 1918, para 144-70-71

# 8

## இந்திய அரசியல் சீர்திருத்தத்தைத் பற்றி ஆங்கிலேயர்களின் கண்காணிப்பு

இந்திய அரசாங்கத்தின் அரசியல் சீர்திருத்தக் கருத்துக்கள் அடங்கிய அவர்களின் அறிக்கை 1916 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் பாராளுமன்ற இந்திய காரியதரிசிக்குச் சமர்ப்பிக்கப்பட்டது. ஆனால், 1912 ஆம் ஆகஸ்ட் மாதம் 25 ஆம் தேதி இந்திய அரசாங்கம் தாங்கள் அனுப்பிய ஒரு கடிதத்தின் மூன்றாவது பாராவில் மாகாணங்களுக்குச் சுயாட்சி ஏற்படுத்த சில வசதிகள் செய்து கொடுக்க வேண்டும் எனக் கூறினார். இதுபோன்ற வாய்ப்புகள்தான் பிற்காலங்களில் இந்திய அரசியல் நிர்வாக முன்னேற்றத்திற்கு வழிவகுக்கும் எனவும் கூறினர். இப்படிப் பட்ட சலுகைகள் நாளடைவில் இந்தியர்களின் கோரிக்கைகளை நிறைவேற்றுவதோடு அவர்களுக்கு அரசாங்கத்தில் அங்கம் வகிக்க ஏதுவாக இருக்கும் எனவும் கூறினர். இச் சலுகைகள் எக்காலத்திலும் மத்திய அரசாங்கத்தின் அதிகாரங்களுக்கு இடையூறு வராத வண்ணம் அளிக்கப்படும் எனவும் கூறினர்.[1] மேற்படி கடிதத்தைக் குறித்து லார்ட் க்ரூ (Lord Crew) தமக்கு இந்திய நண்பர்கள் அளித்த விருந்தின்போது, இந்தியாவின் பிற்காலத்தைப்பற்றி அப்போதுதான் தமக்கு ஒரு தெளிவான கருத்து ஏற்பட்டுள்ளதென்றும், இத் தெளிவு இதற்கு முன்பு இல்லை எனவும் கூறினர். 1915 ஆம் ஆண்டு லார்ட் ஹார்டிங்ஸ்[2] (Lord Hardings) தம்முடைய ஒரு பிரசங்கத்தில் இங்கிலாந்து, இந்தியர்களுக்கு ஐரோப்பியர்களைப் போன்ற நாகரிகத்தையும், கலாச்சாரத்தையும் அளித்ததோடு சுதந்திரத்தையும், சுயமரியாதையும் கற்பித்துள்ளது. மேலும், இந்திய மக்களின் பொருளாதார முன்னேற்றத்தை மட்டும் ஆங்கிலேயர்கள் பேணினால் போதாது என்றும், ஜனநாயக அடிப்படையில் அவர்கள் விதைத்த விதையின் பயனை இந்தியர்கள் நன்றாக அனுபவிக்க வேண்டும் எனவும் அவர் கூறினர், அது போன்றே இந்திய அரசாங்கத்தின் அதிகாரிகள், நாளடைவில் இந்திய அரசாங்கத்திற்குள்ள மேன்மையான இலட்சியத்தைப் புரிந்துகொள்ள வேண்டும் எனவும், இந்திய மக்களைத் திடமான பாதையில் கொண்டு சேர்ப்பதுதான் அவர்களுடைய முக்கிய

[1] See Montagu Chelmsford Report on Indian Constitutional Reform, 1918, Para 144-70-71

[2] No. 54, The Loka Prakasan, 11th October, 1915, MNR, Cl. p. 1789

இலட்சியம் எனவும் கூறினர். அவர்கள் இந்திய மக்களின் வழிகாட்டியாகவும், இந்திய மக்களின் தத்துவ ஞானியாகவும், நண்பர்களாகவும் இருக்க வேண்டும் என வேண்டிக் கொண்டார். இதுதான், அதிகாரிகளின் உன்னதமான இலட்சியங்களில் முதன்மை பெற்று விளங்க வேண்டும் எனக் கூறினர்.[1] மக்களுக்கு விழிப்புணர்ச்சியைக் கொடுக்கும் பணியில், கற்பனைத் திறனும், அனுதாபமும், தியாகமும் மிக அவசியம் என்பதைச் சுட்டிக் காட்டினர். நாளடைவில் நிச்சயமாக அவர்கள் தங்கள் அதிகாரிகளை இந்திய மக்களுக்கு விட்டுக் கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்படும் என்ற உண்மையை விளக்கிக் கூறினர். மேலும், அவர் கூறியபோது, இங்கிலாந்தினுடைய கழிந்த கால பொறுப்புகளைப்பற்றி அவர் எடுத்துரைத்ததோடு மக்களுக்கு அரசியல் அடிப்படையிலுள்ள அரசியல் முன்னேற்றத்தை அறிவுக்கத் தைரியம் ஊட்டினர். ஆனல், இந்தியா, தான் அடைய வேண்டிய இலட்சியத்தை அடைய அதிக நாள் பிடிக்கலாமென்றும், அதற்குப் பல பாதைகள் அமையலாமென்றும் அவர் அதிகாரிகளுக்கு ஞாபகப்படுத்தினர். என்றாலும், இந்தியா ஒரு நாளாவது ஆங்கிலப் பேரரசின் அதிகாரத்தில் இல்லாமல், உண்மையான நண்பனாக இருக்கும் காலம் அருகில் இருக்கிறதென்று அறித்தார். இதற்கு வேண்டிய அதிகாரிகள் தங்கள் கவனத்தைச் செலுத்த வேண்டுமென்றும், இந்த நற்காரியத்தில் தான் ஆங்கிலேயர்களின் வெற்றியும், பெருமையும், திறனும் உள்ளன எனவும் கூறினர்.[2] ஹார்டிங்ஸ் பிரபுவின் ஹேஷ்யங்கள் விலை உயர்ந்தவையாகும்.

இந்திய அரசாங்கம் சீர்திருத்தத்தைப்பற்றி 1916 ஆம் ஆண்டு அனுப்பிய சிபாரிசுகளை மத்திய சட்டசபையைச் சார்ந்த 19அங்கத்தினர்கள் ஒத்துக்கொள்ளவில்லை. அவர்கள் எல்லோரும் கையெழுத்திட்டு, ஒரு சீர்திருத்த அமைப்பை வரைந்து, தாங்களே அரசாங்கத்திற்கு அனுப்பி வைத்தனர்.[3] அதில் அவர்கள் மத்திய சட்டசபையை விரிவாக்குவதோடு மாகாணங்களுக்குச் சுயாட்சி கொடுக்கவேண்டும் எனக் கோரினர். மத்திய சட்டசபைக்குப் பாதுகாப்பு, வெளிநாட்டு விவகாரங்கள், சமாதானம் இம்மூன்று துறைகளைத் தவிர எல்லா அதிகாரங்களையும் வழங்க வேண்டும். எனக் கோரினர்.[4] இக்காலத்தில்

1 Ibid
2 No. 54. The Loka Prakasan, 11th October 1915, MNR, Cl. p. 1789
3 No. 5, 29th July 1918, Justice, MNR, Cl. p. 1151
4 Ibid

காங்கிரசும், முஸ்லீம் லீக்கும் சேர்ந்து ஒரு தனி அரசியல் முன்னேற்றத் திட்டத்தை அரசாங்கத்திற்குச் சமர்ப்பித்தது. இவ்விரு திட்டங்களையும் இந்திய அரசு ஏற்கவில்லை.

## 9

## சீர்திருத்தத்தைப்பற்றி இந்திய அரசாங்கத்தின் தணிக்கை

### (அ) இந்திய அரசின் இலட்சியம்

இந்திய அரசாங்கம் தாங்கள் அனுப்பிய அரசியல் சீர்திருத்த முகவுரையில் கழிந்த கால அரசியல் அமைப்பின் அடிப்படையில் இந்திய அரசியல் அமைப்பு முன்னேற வாய்ப்புகள் இல்லை என உறுதியாகக் கூறினர். மேலும், முன்னேற்றம் வேண்டுமாயின், இந்திய மக்களுக்கு அவர்களுடைய அரசாங்கத்தில் முக்கியமான பொறுப்புகள் கொடுக்கப்பட வேண்டும் எனத் திடமாக அவர்கள் தணிக்கை கூறியது. அன்று, அவர்கள் ஆராய்ந்த இந்திய அரசாங்கத்தின் அமைப்பு காலத்திற்கேற்றவாறு மாற்றியமைக்க முடியாத நிலையிலிருக்கிறது என்றும், மக்களிடையே அன்றுள்ள நிலை பெரும் வெறுப்பை உண்டாக்கியுள்ளது என்றும், படித்த இந்தியர்கள் நிர்வாகத்தை மாற்றியமைக்க வேண்டியுள்ளனர் என்றும், இந்திய அரசாங்கத்தின் அதிகாரிகளும இம்மாற்றத்தை ஒத்துக் கொள்கின்றனா என்றும் கூறியது. அன்றிலிருந்து நூறு வருடங்களுக்கு முன்பாக சர். தாமஸ்மென்ரோ[1] கூறிய கருத்துக்களை மேற்கோளாக இத்தணிக்கை எடுத்துக் காட்டியது. 'நாம் செய்கின்ற ஏற்பாடுகளின் பலனாவது, அவைகள், மக்களின் குணதிசயங்களை மாற்றியமைக்க வேண்டும். அம் மக்களின் குணங்களை மேலோங்கச் செய்யும். மேலும், அந்நாட்டு மக்கள் அவர்கள் அரசாங்கத்தில் நல்ல பதவிகளை வகிக்க வேண்டும். இங்கிலாநது, இந்தியாவை ஒரு தற்காலிக உடமையாகக் கொள்ளக் கூடாது. ஆனால், அது நம்முடைய நிரந்தர உடமையாக இருக்க வேண்டும். இந்தியர்கள் தங்களுடைய அரசாங்கத்தைத் தாங்கள் நிர்ணயம் செய்ய முன் வருவது வரை நாம் அவர்களை முன்னேற்றப் பாதையில் கொண்டு செலல வேண்டும்.'[2]

### (ஆ) பொறுப்பாட்சி

இந்திய அரசாங்கத் தணிச்கை மேலும் கூறியதாவது: இந்திய மக்களை, முன்னேற்ற வேண்டும் என அவர்களுக்குக்

[1] See the 'Report on Indian Constiutional Reforms', Part II, Pro-pages 90-93

[2] Ibid p. 90.

கொடுத்த சிறந்த கல்வி சுமார் 100 ஆண்டுகளாக மக்களுக்கு நற்பலனை அளித்துள்ளது. இக்கல்வியின் அடிப்படையில் மேலும் அவர்பிளுக்குப் பயிற்சி அளிக்க வேண்டியது மிக அவசியமாகும். கல்வி கற்ற நன் பலனுக இம்மக்களுக்கு ஸ்தல ஸ்தாபனங்களில் முடிந்த வரையில் பூரணமாகப் பொறுப்பாட்சி ஏற்படுத்த வேண்டுமென்றும், மக்கள் உரிமைக்குச் சகல அதிகாரங்களையும் விட்டுக் கொடுக்க வேண்டும் எனவும் கூறியது. அதுபோன்றே மாகாணங்கள் பொறுப்பாட்சிக்கு ஏற்ற இடமாக அமையும் என்றும் பொறுப்பாட்சிக்கு வேண்டிய சகல நடவடிக்கைகளையும் அரசாங்கம் மேற்கொள்ள வேண்டும் எனவும் கூறியது. தற்சமயம் ஓரளவு பொறுப்பாட்சி அவர்களுக்கு உடனடியாக வழங்க வேண்டும் எனவும், ஆங்கிலேயர்களுடைய குறிக்கோள், காலம் வரும்போது பரிபூரண பொறுப்பாட்சி அவர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டும் என்பதாகும் என்றும் கூறியது. இந்த அடிப்படையில் உடனடியாக மாகாணங்களுக்கு வேண்டுமளவு நிர்வாகத்திலும், சட்டமியற்றுவதிலும் பொறுப்பளிப்பதோடு நிதி அடிப்படையில் சுதந்திரமும் உடனடியாகக் கொடுக்க வேண்டியது. இந்த அதிகாரங்கள் இந்திய அரசாங்கம் தன் பொறுப்புகளைச் செய்வதற்குத் தகுந்த அடிப்படையில் இருக்க வேண்டும் எனவும் கூறியது [1]

(இ) புதிய பரீட்சை

இவ்வாறு சீர்திருத்தத்தைப் பற்றிச் சிபாரிசு செய்த இந்திய அரசாங்கம், அதிகாரிகளையும், மக்கள் பிரதிநிதிகளையும் சோத்துச் சம நிலைமையோடு ஏற்படுத்தப்படும் ஓர் அரசாங்கம், பல சிக்கல்களை நிர்வாகத்தில் உண்டாக்கும் என்பதை ஒத்துக்கொண்டது. மேலும், இப்படிப்பட்ட ஓர் அரசாங்கம் இதற்கு முன்பு எங்கும் நடத்தப்படவில்லை என்றும் கூறியது. ஆகவே, புதிதாக நிறுவப்படும் இந்த அரசாங்கம் செயல்படும் முறையைப் பரீட்சித்துப் பார்க்கும் நிலையில்தான் உள்ளது என்றும் கூறியது. இவ்வாறு, பரீட்சிக்கப்படாத ஒரு நிர்வாகத்தை இந்திய அரசாங்கத்தில் தாங்கள் சிபாரிசு செய்ய முன் வரவில்லை எனவும் கூறியது.[2] ஆனால், மத்திய அரசாங்கத்தின் சட்ட மன்றத்தில் இந்தியர்களுக்கு அதிகப்பிரதிநிதித்துவம் கொடுத்து, அவர்களுடைய அபிப்பிராயங்கள் அரசாங்கத்தைக் கட்டுப்படுத்த அதிகாரம் அளிக்க வேண்டியது தேவை என்று முடிவாகக் கூறியது.

1. Ibid P. 90
2. Ibid

இந்த அடிப்படையில் மத்திய அரசாங்கம் பூரணமாகப் பாராளு மன்றத்திற்குப் பொறுப்பாக இருக்க வேண்டுமென்றும், அப் பொறுப்பைச் சரிவர நடத்தும் ஓர் அமைப்பின் அடிப்படையில் மாகாணங்களுக்குச்சில உரிமைகள் விட்டுக் கொடுக்கப்பட வேண் டும் எனவும் அறிவித்தது. புதிதாகப் பரீட்சிக்கப்படும் அரசாங் கத்தின் பலனை அறிந்தே மத்திய அரசாங்கத்தில் எந்தவிதமான மாற்றமும் ஏற்படுத்தப்பட வேண்டும் எனவும் கூறியது. ஆனால், மத்திய அரசாங்கத்தில் மக்களின் பிரதிநிதித்துவம் விரிவாக்கப் பட்டு அரசாங்கத்தில், அவர்களுக்கு அதிக செல்வாக்கு கொடுக் கப்பட வேண்டும் எனச் சிபாரிசு செய்தது. இவ்வளவிற்கு இந்திய அரசாங்கத்தின் மீது பாராளுமன்றத்திற்குள்ள அதி காரங்கள் மாற்றியமைக்கப்பட வேண்டும் எனவும் கூறியது.[1]

(ஈ) ஸ்தல ஸ்தாபனங்கள்

ஸ்தலஸ்தாபன அமைப்பைப்பற்றித் தங்கள் அறிக்கையில், ஸ்தல ஸ்தாபனங்களை நிர்வகிப்பதில் மக்களுக்குப் பூரண பொறுப் பும், அதிகாரமும் கொடுக்கப்பட வேண்டுமென்றும், அரசாங்கத் தின் கட்டுப்பாட்டிலிருந்து இந்த ஸ்தாபனங்கள் விடுபட்டுப் பூரண சுதந்திரம் அடைய வேண்டும் எனவும், இந்திய அரசு சிபாரிசு செய்தது. பஞ்சாயத்துக்களுக்கு வேண்டிய அதிகாரம் வழங்கிச் சுகாதாரம், கல்வி போன்ற துறைகளை நடத்த வரி விதிக்கும் அதிகாரத்தையும் ஸ்தல ஸ்தாபனங்களுக்குக் கொடுத்து விட இந்திய அரசாங்கம் சிபாரிசு செய்தது.[2]

(உ) மத்திய அரசிற்கும், மாகாண அரசிற்குமிடையே நிதிப் பங்கீடு

மாகாண சுயாட்சி ஓர் உண்மையாக ஆக வேண்டுமாயின் மத்திய அரசாங்கத்திற்கும், மாகாண அரசாங்கத்திற்குமிடையே அன்று வரையுள்ள நிதி அடிப்படையான தொடர்புகள் மாற்றி யமைக்கப்பட வேண்டும்[3] என்றும், ஜனநாயகக் கொள்கைகளை ஒப்புக் கொள்வதானால் மாகாணங்களுக்கு நல்ல முறையில் நிதி சுதந்திரம் கொடுக்கப்பட வேண்டுமெனவும், இந்திய அரசாங் கம் தங்கள் தணிக்கையில் கூறினர்.[4] அன்று வரை சில குறிப் பிட்டுள்ள தலைப்புக்களின் கீழுள்ள நிதி வருவாயை மத்திய அரசும், மாகாண அரசும் பகிர்ந்து கொள்ளும் முறையில், மாகாண

1. Ibid 90
2. Ibid P. 94
3. Ibid P. 99
4. Ibid P. 99

அரசிற்குத் தேவையான பணத்தைக் கொடுத்துவிட்டு எஞ்சிய பணத்தை மத்திய அரசு தன் முடிவு போல் செலவு செய்தது. இதனால், மத்திய அரசிற்கு மாகாண நிர்வாகத்தில் கட்டுப்பாடும் தலையீடும் இருந்து வந்தது. ஆனால், மாகாணங்களுக்குப் பொறுப்பாட்சி வழங்கிய பின் அதிகாரிகளால் நிர்வகிக்கப்பட்ட இரு தரப்பட்ட அரசாங்கங்களிடையே செய்யப்பட்ட நிதிப்பாகு பாடு, மத்திய அரசாங்கத்தில் அதிகாரிகள் நிர்வகிக்கும் ஆட்சிக் கும், மாகாணங்களில் ஏற்படுத்தப்படும், பொறுப்பாட்சிக்கும் பொருந்தாது எனவும், மத்திய அரசிற்கும், மாகாண அரசிற் கும் வருவாய்த் துறைகளைப் பிரித்தாக வேண்டும் எனவும் கூறினர். மத்திய நிர்வாகத்தை நடத்துவதற்கு வேண்டிய தேவையான வருவாய்த் துறைகளை ஒதுக்கியபின், எஞ்சிய எல்லா வருவாய்த் துறைகளையும் மாகாண அரசாங்கத்திற்கு ஒதுக்க வேண்டும் எனச் சிபாரிசு செய்தனர்.[1] இதனால், மத் திய அரசு, மாகாண அரசு கேட்கும்போது செலவுக்கு வேண் டிய பணத்தைக் கொடுக்கும் பிற்போக்குச் சம்பிரதாயம் ஒழிந்து விடும் எனக் குறிப்பிட்டனர்.

ஆனால், வருவாய்த்துறைகளை மத்திய அரசிற்கும், மாகாண அரசிற்குமிடையே திட்டவட்டமாகப் பிரிப்பது முடியாத காரியம் எனவும், என்றாலும், மாகாணங்களுக்கு வேண்டுமளவு அதிகாரம் வழங்கி, மத்தியமாக்கப்பட்ட நிதி நிலையை அமுல் செய்ய வேண்டி னர். நில வருவாயும், பாசன வசதிகளின் மூலமாகவும் வரும் வருவாயும், மாகாணத்தலைப்பில் ஒதுக்கப்பட்டன. வருமானவரி மத்திய தலைப்பில் சேர்க்கப்பட்டது. இதற்கு, அவர்கள் கூறிய காரணம், இவ்வருமானம் நிரந்தரமாக இருப்பதினால் மத்திய அரசாங்கத்தை நடத்துவதற்கு இது போன்ற நிதி வருவாய் தேவை எனக்குறிப்பிட்டனர்.[2] ஸ்டாம்புகள் விற்பனை மூலமாக வரும் வருவாயைப் பொதுத்துறை ஸ்டாம்புகள் எனவும், நீதித் துறை ஸ்டாம்புகள் எனவும் பிரித்து, பொதுத்துறை ஸ்டாம்புகள் மூலமாக வரும் வருமானத்தை மத்திய அரசுக்கும், நீதித்துறை மூலமாக வரும் வருமானத்தை மாகாண அரசுக்கும் பிரித்துக் கொடுக்கச் சிபாரிசு செய்தது. தீர்வை வழியாக வரும் வருமானம் மத்திய அரசு தலைப்பிலும், மாகாண அரசு தலைப்பிலும், தீர்வை யின் தன்மையைப் பொறுத்து, ஒதுக்கப்பட்டது.[3]

1. Ibid page, 100
2. Ibid
3. Ibid P. 100

பஞ்சநிவாரணங்களைப்பற்றிக் கூறும்போது எப்போதாகிலும் இது போன்ற நிவாரண நிதி தேவைப்படும்போது, மாகாண அரசாங்கம் அதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள வேண்டும் என்றும் ஆனால், அது மத்திய அரசாங்கத்தினுடைய பொறுப்பாகாது எனவும் கூறி விட்டனர். என்றாலும், மத்திய அரசாங்கம் தகுந்த பொறுப்பை மேற்கொண்டு சில காலங்களில் நிவாரண நிதி அளிக்கவேண்டும் எனவும் கூறினர்.

(ஊ) மாகாணச் செயற்குழு[1] (Provincial) Executive

அரசாங்க அமைப்பில் இருதரப்பட்ட செயற்குழு தங்களுக்குத் தனித்தனியே சட்டசபைகளை அமைத்து நடத்துவது என்பது தவறுதலான காரியம் என ஒத்துக் கொண்டனர். ஆகவே, மாகாணங்களில் இரட்டைச் செயற்குழு என்பது தகராறுகள் வளர்வதற்குக் காராணமாக இருக்கும் என அவர்கள் தங்கள் முடிவான கருத்தைத் தெரிவித்தனர். இந்திய அரசின் தணிக்கைப்படி, ஒவ்வொரு மாகாணத்திலும் செயற்குழு இரண்டு பாகமாக இருக்கும் அதில் ஒரு பாகம் மாகாண அரசாங்கத்தின் நிர்வாக சபையைச் சார்ந்த இரண்டு அங்கத்தினர்களால் செயலாற்றப்படும். அவர்களில், ஒருவர் ஐரோப்பியராகவும், மற்றொருவர் இந்தியராகவும் இருப்பர். கவர்னர் தமது விருப்பம்போல் இவர்களைத் தேர்ந்தெடுத்து நியமனம் செய்து கொள்ளலாம். இந்த இரு அங்கத்தினர்களும் அரசாங்கத்திற்கு என 'ஒதுக்கப்பட்ட' அதிகாரங்களை நிர்வகிப்பர். அரசாங்கத்தின் 'மாற்றப்பட்ட பகுதி' தேர்வு பெற்ற அங்கத்தினர்களிடையேயிருந்து கவர்னர் நியமிக்கும் மந்திரிகள் பொறுப்பில் நிர்வகிக்கப்படும்.[2] இவர்கள் சட்டம் அமுல் செய்யும் குழுவின் அங்கத்தினர்களாகப் பணியாற்றுவர் எனவும், மறு தேர்தலில் வெற்றி பெறுவார்களேயாயின் மேலும் நியமனம் பெற யோக்கியதை உள்ளவர்களாக இருப்பர் எனவும் கூறியது. ஆனால், இந்த மந்திரிகள் சட்டமன்றத்தின் எண்ணத்திற்கு உட்பட்டு அவர்கள் விருப்பம் போல் பணியாற்ற வேண்டுமென இந்திய அரசு கூறவில்லை. சட்டசபைகளின் அதிகாரத்திற்கு மாற்றப்பட்ட இலாக்காக்களை மந்திரிகள் கவர்னரோடு சேர்ந்து நிர்வாகம் செய்வர். இந்த இலாக்காக்களில் மந்திரிகள் செய்யும் முடிவுகள் தீர்மானமாக இருக்கும். என்றாலும், கவர்னருடைய யோசனைக்கும், அதிகாரத்திற்கும் உட்பட்டுத்தான் இத்தீர்மானங்கள் நடவடிக்கை

[1] Ibid, page 105
[2] Ibid p. 10

யில் கொண்டு வரப்படும். ஆகவே, ஒரு ஜனநாயக அமைப்பில் பரிபூரணமாக உட்பட்ட ஒரு கவர்னரை நியமனம் செய்ய மத்திய அரசாங்கம் ஒப்புக்கொள்ளவில்லை.[1] மந்திரிகள் கவர்னரின் பயிற்சி பெற்ற ஆலோசனையை ஒப்புக் கொள்வார்கள் என அவர்கள் நம்பினர். அதுபோன்றே, கவர்னர் முக்கியமாக மந்திரிகளின் தீர்மானங்களுக்கு இடம் கொடுக்க வேண்டும் எனவும், விபரீதமான முடிவுகளுக்கு மட்டுமே கவர்னர்கள் மறுப்புக் கூற வேண்டும் எனவும், மத்திய அரசு தன் ஆலோசனையில் கூறியது. மந்திரிகளுக்கும், கவர்னருக்குமிடையேயுள்ள தொடர்பை நிர்ணயிக்க இந்தியப் பாராளுமன்றக் காரியதரிசி 'அறிவுறுத்தும் துணைப் பொருள' ('Instrument of Instruction') மூலம் சேர்த்து அனுப்ப வேண்டும் எனக் கூறினர். கவர்னருடைய நிர்வாக சபையில் ஒன்றோ, இரண்டோ இந்தியர்களை நியமனம் செய்து கொள்ளலாம் எனவும் ஒத்துக்கொண்டனர். இவர்கள் கவர்னருடைய ஆலோசகர்களாக இருப்பர்.[2]

இவ்வாறு, இணைக்கப்பட்டுத் தொகுக்கப்பட்ட இரட்டை அரசாங்கம் சேர்ந்து ஆலோசித்து ஒரே முடிவு செய்து, வெளி உலகத்திற்கு ஒருமித்த அரசாங்கம் போல் நடக்க வேண்டும். இதனால், இரு பிரிக்கப்பட்ட அரசாங்க அங்கங்களும் சேர்ந்தே வாதப் பிரதிவாதங்களை நடத்த வேண்டும். ஆனால், தனித்தனியே இப்பாகங்களை ஆலோசனைக்குக் கவர்னர் அழைக்கலாம்.[3] ஒதுக்கப்பட்ட இலாக்காக்களில் கவர்னரும், நிர்வாக சபை அங்கத்தினர்களும் தனியே ஆலோசனை நடத்தலாம். இது போன்றே, மக்கள் அதிகாரத்திற்கு மாற்றப்பட்ட இலாக்காக்கள் கவர்னர் மந்திரிகளோடு ஆலோசனை செய்து நிர்வகிக்க வேண்டும். அதிகப்படியாக நியமிக்கப்பட்ட நிர்வாக சபை அங்கத்தினர்கள் கவர்னரின் விருப்பப்படி பங்கு எடுத்துக் கொள்வார். இரண்டு அங்கங்களும் சேர்ந்து ஆலோசிக்கும்போது ஓட்டு எடுப்பு இருக்க முடியாது எனக் கருதினர்.[4] அபிப்பிராய பேதங்கள் வரும்போது கவர்னர் தாமே மாகாண அரசாங்க நிர்வாகத்தில் தலையிட்டு ஆக வேண்டியே இருக்கிறது என்று கூறியது. எவ்விதப் பிரிவினை ஏற்படுத்திய போதும் மாகாணத்திலுள்ள இரு பிரிவான நிர்வாகங்களுள் வெற்றிகரமான ஒரு பிரிவினை ஏற்படுத்துவது சாத்தியமில்லை எனக் கூறியது.

[1] Ibid P. 105
[2] Ibid, Page 106
[3] Ibid
[4] Ibid p. 106

(எ) மாகாணச் சட்டமன்றம்[1] (Provincial Legislature)

மாகாணச் சட்ட சபைகள் விரிவு பெற்று, மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களின் எண்ணிக்கை பெருக்கப்பட வேண்டும் எனக்கருதினர். ஜாதி அடிப்படையிலும், விசேட அடிப்படையிலும் பிரதிநிதித்துவம் தேவை எனக் கருதினர். எதிர்மறைத் தேர்தல்களை அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. ஜாதி அடிப்படையில் பிரதிநிதித்துவமும், வாக்காளர் பட்டியலும் பெரும் தேவை என அவர்கள் விவாதித்தனர். ஜாதி மத அடிப்படையில் ஆங்கிலேயர்கள் பிரித்தாளுகின்றனர் என்ற குற்றச்சாட்டை அவர்கள் சுட்டிக் காண்பித்துத் தேசிய உணர்வற்ற ஒருமக்களிடையே தேசிய அடிப்படையில் எவ்வாறு ஒரு பிரதிநிதித்துவம் அமையும் என வினவினர். ஆனால், பொதுவாக ஜாதி மத அடிப்படையில் வாக்காளர் பட்டியலும், பிரதிநிதித்துவமும் அளிப்பது பழைமையான முறை என ஒப்புக் கொண்டனர். ஆனால், சென்னை மாகாணத்தைப் பொறுத்த வரையில் அதிகப்படியான மக்களுக்கு இப்பிரதிநிதித்துவம் உதவி அளித்துள்ளது எனக் கூறினர். இந்துக்களும், முகமதியர்களும் இதை ஒப்புக் கொள்கின்றனர் எனவும் எடுத்துக் காட்டினர். மாகாணங்களில் இரு சபைகள் (bicamera system) வேண்டும் எனவும் சிபாரிசு செய்தனர்.[2]

[1] Ibid p. 109
[2] Ibid p. 110

# 1

# இரட்டை ஆட்சியின் காரணங்கள்

1917ஆம ஆணடு ஆகஸட மாதம 20 ஆம தேதி மாண டேகுவின அறிககையில்[1], இநதிய அரசு எவவாறு அமைககப பட வேணடும எனற ஆஙகிலேயா கொளகை தெளிவாக எடுத துரைககபபடடது இககொளகையின சாரம, நாளடைவில வளாசசியுறும பொறுபபாடசியையும, பாராளுமனற ஆடசிககு வேணடிய ஸதாபனஙகளையும இநதிய மககள பெற வேணடும 1919ஆம ஆணடின சீாதிருததஙகள இவ விலடசியஙகளுககு முதறபடியாக அமைநதது இநதிய அரசு மககள கடடுபபடுதத முடியாத அதிகாரிகளால நடததபபடும ஒரு சாவாதிகார அரசாக, இருகக ஆஙகிலேயரும விருமபவிலலை அதுபோலவே, இநதிய அரசியலமைபபு, உடனடியாகப பூதது மலாநத மககளாடசியாக ஒரே நாளில மாறறியமைககும ஓா அதிசய நடவடிககையையும பாராளுமனறம ஒபபுக கொளளவிலலை இவவிரணடு முரணபடட கருததுககளுககும இடையே அனறு அமைககபபடடதுதான இரடடை ஆடசி ஆகவே, அதிகாரிகளுடைய ஆடசிககும, 'பூரண ஜனநாயகக கொளகைககுமிடையே ஏறபடட ஒததித தீாபபுததான, இநதிய சுதநதிரததின முதறபடியாக, 1919 ஆம ஆணடு இயறறபபடட சீாதிருததச சடடததின வழி அமைந தது [2]

இச சீாதிருததம உடனடியாகப பொறுபபறற அதிகாரிகளு டைய (Irresponsible Executive) ஆடசியை இநதியாவில ஒழிதது விடாது அதுபோலவே, சடடததை அமுல நடததும அதிகாரததை வகிதது வநத அரசின அஙகஙகளை மககளால

[1] Sel K R Bombwell's See 'The Foundations of Indian Faderalism' Chapter 4, Dyarchy-Federalism in Embryo, Page 94

[2] Ibid 94

மாற்றும் அதிகாரம் எல்லா இலாக்காக்களுக்கும் உடனடியாக வழங்காது. ஆனால், அதற்கு மாறாக, இந்திய நிர்வாகத்தின் பெரும் பொறுப்பும் இந்திய அரசின் அதிகாரிகள் கைவசமாகவே இருந்து வரும். இவர்கள், நேரடியாக ஆங்கிலப் பேரரசருக்கும், பாராளுமன்றத்திற்கும் மட்டுமே கட்டுப்பட்டு இருப்பர். இந்திய மக்களின் கைக்கு வரும் அதிகாரம், அரசாங்கத்தின் ஒரு பகுதியில் மட்டுமேயாகும். ஆனால், இப்பொறுப்புகூட இந்திய கவர்னர் ஜெனரலின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டுத்தான் இருக்கும். இக்கட்டுப்பாடுகளைத் தெரிந்து கொண்டால்தான் 1919 ஆம் ஆண்டு இயற்றப்பட்ட சீர்திருத்தங்களின் நுட்பங்களை அறிய முடியும்.[1] அச்சீர்திருத்தங்கள் பின்வரும் முக்கிய மாற்றங்களைத் தன்னுள் கொண்டதாகும்.

(1) இந்திய அரசாங்கம் ஒருதலைப்பட்ட அரசாங்கமாகக் கருதப்பட்ட போதிலும், மத்திய, மாநில அரசாங்கத்தினுடைய அதிகாரங்கள் ஓரளவு தெளிவாக ஒன்றிலிருந்து ஒன்று பிரிக்கப்பட்டது. இவ்விரு அரசுகளுககும,தனித்தனி அரசுகள் அமைக்கப்பட்டதோடு, இவ்வரசுகளுக்குத் தனியாகப் பொறுப்புகள் வரையறுக்கப் பட்டன.

(2) மாகாண அரசாங்கங்களின் மேல் மத்திய அரசாங்கத்திற்குள்ள கட்டுபபாடுகள் எத்துணையோ குறைக்கப்பட்ட போதிலும், இக்கட்டுப்பாடுகள் பரிபூரணமாக ஒழிக்கப்படவில்லை. மாகாண அரசாங்கங்கள், தங்கள் பொறுப்புக்களை நடத்துவதற்கு வேண்டிய அளவு அதிகாரம் வழங்கப்பட்டது.

(3) சுயாட்சியின் அடிப்படையில் மாகாணங்கள் ஓரளவு சுதந்திரத்தையும்,பொறுப்பாட்சியையும் முதல் தடவையாகப் பெற்றன. இம்மாகாணங்கள், புதிதாக நடத்தப்படும் அரசியல் பரிசோதனைக்கேற்ற தளங்களாகக் காட்சியளித்தன.[2]

பாராளுமன்றம் குறிப்பிட்டுள்ள சுயாட்சி உரிமைகள், முதல் தடவையாக மாகாணங்களில் செயல்படுத்தப் பட்டன. இத் தருணத்தில், பொறுப்பாட்சி எனக் கூறுவதின் இரண்டு முக்கியமான அம்சங்களை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

1 Ibid P. 95
2 Ibid P. 95

முதலில் பொறுப்பாட்சியின் அடிப்படையில் அரசாங்கத்தின் சட்டம் அமுல் நடத்தும் அங்கம், சட்டம் இயற்றும் அங்கத்திற்கு கட்டுப்பட்டு இருக்க வேண்டும். சட்டம் அமுல் நடத்தும் அங்கம், அதிகாரத்திற்குக் கொண்டு வரப்படுவதும், அதிகாரத்தில் நிலையாக வீற்றிருக்கச் செய்வதும், சட்டம் இயற்றும் அங்கம் செய்யும் முக்கிய பணியாகும்.[3] சட்டம் இயற்றும் அங்கத்தின் நம்பிக்கையுள்ள வரையில் சட்டம் அமுல் செய்யும் அங்கம் அதிகாரத்தில் இருந்து வரும். அவர்களுடைய நம்பிக்கையை எப்பொழுது இழந்து விட்டார்களோ அப்பொழுது அரசாங்கத்தின் சட்டத்தைச் செயல்படுத்தும் அதிகாரம் பெற்ற மந்திரிகள் இராஜிநாமா செய்ய வேண்டும். இரண்டாவதாகச் சட்டத்தை அமுல் செய்கின்றவர்களைக் கட்டுப்பாட்டிற்குள் வைக்கின்ற சட்டம் இயற்றும் அங்கம், அதிகப்படியான மக்களின் ஓட்டுக்களைப் பெற்று, அவர்களால், தேர்ந்தெடுக்கப் பட்டவர்களாக இருக்க வேண்டும். பொது மக்களின் அபிப்பிராயங்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பதாகச் சபை அமைவதோடு, சமுதாய வாழ்வில் ஏற்படும் எண்ண அலைகளைப் பிரதிபலிப்பதாகவும் அமைய வேண்டும். மக்களின் எண்ணங்கள் சட்டம் இயற்றும் சபையில் பிரதிபலிப்பதோடு, அர்சாங்க நிர்வாகம், மக்கள் அளித்துள்ள பிரமாணத்தின் அடிப்படையில் நடத்தப்பட வேண்டும்.[1]

ஆனால், 1919ஆம் ஆண்டு சீர்திருத்தச் சட்டத்தின்படி எதிர்பார்த்த அரசாங்கம், நாளடைவில் ஓரளவு பொறுப்பாட்சியை வழங்குவதாக அமைந்ததே யொழிய, உடனடியாகப் பூரணப் பொறுப்பாட்சியை மாகாணங்களுக்கு அளிக்கவில்லை. ஆக, ஒரு நவீன முறையைக் கையாண்டு, ஓரளவு மாற்றத்தை எவ்வாறு ஏற்படுத்தலாம் என்ற குறிக்கோளோடுதான் இரட்டையாட்சியை மாகாணங்களில் செயல் படுத்த முன் வந்தனர். உண்மையில் 'இரட்டையாட்சி' நிர்வாகத்திலும் ஒரு புதிய முறையாகத்தான் இருந்தது. 1919ஆம் ஆண்டு சீர்திருத்தச் சட்டத்தின்படி ஆலோசித்த கருத்துக்கள் 17-12-1920ஆம் ஆண்டிலிருந்து[2] நடைமுறையில் கொண்டு வரப்பட்டு 1937ஆம் ஆண்டு வரையிலும் நடைமுறையில் இருந்தது. இதன் பின்னால் 1935ஆம் ஆண்டு சீர்திருத்தச் சட்டம் அமுலாக்கப் பட்டது.

மேற்கூறிய கருத்தின் அடிப்படையில், மாண்ட்போர்டு சீர்திருத்தத்தின் கருவாக இருந்த மாண்டேகுவும், செம்ஸ்போர்டும்

1. Ibid P. 95
2. Ibid

'மனம் இல்லாத புரட்சிவாதிகளாகத்' தோன்றினர்.[1] ஆனால், செம்ஸ்போர்டு துரை புதிய சீர்திருத்தத்தைப் பற்றித் தம் அபிப்பிராயத்தைத் தெரியப்படுத்தும்போது, இந்திய அரசாங்கத்தில் தாங்கள் புகுத்தியுள்ள அரசாங்கச் சீர்திருதக் கொள்கைகள், அரசியல் அடிப்படையில் பெரும் மாற்றத்தை நாளடைவில் ஏற்படுத்துவதோடு, இந்திய சமுதாய அமைப்பில் பெரும் புரட்சியை ஏற்படுத்தும் எனவும் கூறினர்.

சுயாட்சிக்கும், பொறுப்பாட்சிக்குமுள்ள தொடர்புகளை முதன் முதலில் விரிவாக எடுத்துக்கூறியவர், ஆங்கில வட்டமேஜை கூட்டத்தைச் சேர்ந்த லயோனல் கர்ட்டிஸ் என்பவர் ஆவர். 1910ஆம் ஆண்டு தென் ஆப்பிரிக்காவில் ஏற்படுத்தப்பட்ட கூட்டாட்சியைத் தொடர்ந்து, அதே போன்ற கூட்டாட்சிகள் ஆங்கில அரசாட்சிக்குட்பட்ட ஏனைய நாடுகளிலும் ஏற்படுத்த வேண்டும் என அவர் விரும்பினர்.[2] இக் கருத்துக்கள், அவர் எழுதிய 'காமன்வெல்த்தின் பிரச்சினைகள்', 'காமன் வெல்த் நாடுகள் ('Thc problem of the Commonwealth' and The Commonwealth of Nations ") என்ற இரு புத்தகங்களில் எடுத்துக் கூறப்பட்டன. வங்காளத்தில் கவர்னராக இருந்த சர். வில்லியம் டியூக் என்பவர் இரட்டையாட்சியைப் பற்றி விரிவாக விளக்கி வெளியிட்டார். இதைத்தான் 'டியூக் மெமோரண்டம்' (',Dukc Memorandum ") எனக் குறிப்பிடுவர்.[3] இதில் இரட்டையாட்சியின் விளக்கமும், மாண்டேகு செம்ஸ்போடு சீர்திருத்தத்தில் கூறப்படும் இரட்டையாட்சியின் தன்மைகளும் விளக்கப்பட்டன. பொதுவாக இரட்டையாட்சியின் கொள்கைகள் கர்ட்டில் என்பவருடைய பெயரோடுதான் இணைக்கப்படுகிறது. டியூக் மெமோரண்டம், 1916ஆம் ஆண்டு, ஆங்கிலப் பாராளுமன்ற இந்தியக் காரியதரிசியாக இருந்த ஆஸ்டன் சேம்பர்லின் என்பவருக்குச் சமர்ப்பிக்கப்பட்டது. அவர் இந்திய மக்களின் மன நிலையை உணர்ந்து, தாமாகவே ஓர் அறிக்கை வெளியிட முன் வந்தார். ஆனால், மெசபட்டோமின் கமிஷன் காரணமாக, அவர் தம் பதவியை இராஜிநாமா செய்தார். ஆனால், பாராளுமன்றத்தில் மாண்டேகு இந்தியாவைப்பற்றி அறிவித்த கொள்கை விளக்கத்திற்கு அவர் பெரிதும் ஆதரவு காட்டினர்[4] லயோனல் கர்ட்டிஸ், மத்தியிலும், மாகாணங்களிலும் மக்களால் தேர்ந்தெடுக்

1. G.O. 788, Public Reforms, dt. 15-12-1920.
2. K. R. Bamb well op. cit-103-op. cit. p. 94-103.
3. See 'Nationalism and Reform in India' by william Roy Smith'. Chapter III, The Montagu-Chelmsford Reforms (1917-1921) Page 86-88,
4. Ibid P.88

கப்பட்ட பிரதிநிதிகள்' சட்டசபைகளில் அங்கம் வகிப்பதைப் போன்று, மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் தலைவர்கள் சட்டம் அமுல் செய்யும் அதிகாரம் பெற வேண்டும் எனவும், இவ்விரு தரப்பினரும் ஒன்று கூடிச் சட்டம் இயற்ற வேண்டும் எனவும் கூறினர். மக்கள் பிரதிநிதிகளில் அதிகப் படியானவர் விரும்பும் வரை அதிகாரம் வகித்து, அவர்களில் பெரும்பான்மையோரின் நல்லெண்ணம் இல்லாதபோது பதவியை இராஜிநாமா செய்யும் ஒரு முறை இந்தியாவில் வர வேண்டும் என அவர் கூறினர். இக் கருத்துக்கள் தான் மாண்ட்போர்ட் ரிப்போர்ட்டில் கூறப்பட்டு, 1919ஆம் ஆண்டு இயற்றப்பட்ட இந்திய அரசாங்கச் சட்டத்தில் இடம் பெற்றது.[1]

இந்திய மாகாணங்களுக்குப் பொறுப்பாட்சி வழங்கவேண்டும் என்ற முடிவு இந்தியக் கூட்டாட்சி அமைப்பில் பொருந்தியுள்ளது. இந்திய அரசாங்கம் பாராளுமன்றத்திற்குக் கடமைப் பட்டு இருந்ததன் காரணமாக மாகாணங்கள் பொறுப்பாட்சி ஏற்க, தனி வாய்ப்பு ஏற்பட்டது. இந்திய அரசாங்கம் கூறியது போல, மக்களின் பிரதிநிதிகளால் கட்டுப்படுத்தப்படாது, அதிகாரிகளால் நடத்தப்படும் ஓர் அரசாங்கம், உயர்தரப்பட்ட அதிகாரிகளால் கட்டுப்படுத்தாமல் நடத்த முடியாது. ஆக, கூட்டாட்சி அரசாங்கம், என்பது இந்திய அரசியல் நிர்வாகத் துறையில் புறவாசல் வழியாகவே அமைந்தது.[2]

இரட்டையாட்சியின் ஆசிரியர்கள் கூட்டாட்சியை அமைத்து, மத்திய அரசிற்கும், மாகாண அரசிற்குமிடையேயுள்ள தொடர்புகளை வரையறுக்கும் வகையில் ஓர் அரசியல் திட்டத்தைக் கொண்டுவர வேண்டுமென நினைக்கவில்லை. ஆனால், ஒரு நாளாவது இந்தியா ஆங்கிலப் பேரரசின் கீழ், பொறுப்பாட்சி பெற்று, ஆங்கில அரசோடு கூட்டாக இருக்கும் என்பதை அவர்கள் கண்ணெதிரே காண்பதாகக் கூறினர். ஆனால், அந்நாள் அவர்களைப் பொறுத்தவரை வெகு தூரத்தில் இருந்ததாகத் தெரிவித்தனர். அன்றைய நிலையில் அதிகாரங்களை எவ்வாறு மேலிருந்து கீழாகக் கொண்டு வரமுடியும் என்பதை ஆலோசித்தார்களே யொழிய, ஒரு கூட்டாட்சி அரசாங்கத்தைப் பற்றி அவர்கள் எண்ணவில்லை.[3] இதனால், பாராளுமன்ற இருசபைக் குழுவின் தணிக்கையில், மாண்ட்

1. Ibid P.88
2. William Roy Smith op. cit. P. 88
3. Ibid K. R. Bombwell op. cit. P. 102

போர்ட் ரிப்போர்ட்டில் குறிப்பிட்டதைப் போலக் கூட்டாட்சி என்ற சொல், இந்தியாவில், மத்திய, மாகாண அரசாங்கங்களுக் கிடையே எவ்வாறு உபயோகிக்க முடியும் எனச் சந்தேகித்தது. இக் கமிட்டி இந்தியா ஒரு கூட்டாட்சிக்கு இன்னும் தயாராக வில்லை என அறிவித்தது. ஆனுல், மாகாணங்களில் ஏற்பட்ட இரட்டையாட்சியின் காரணமாகவும், மாகாணங்களில் பகுதி பொறுப்பாட்சி ஏற்பட்டதின் காரணமாகவும், மத்திய அரசாங்கத் திற்கும், மாகாண அரசாங்கத்திற்குமிடையே உள்ள அதிகாரங் களைப் பற்றி ஆலோசனை செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட் டது. இதன் காரணமாகவே, கூட்டாட்சி என்ற வார்த்தை இந்திய சட்ட அமைப்பில் புகுத்தப்பட்டதொழிய ஒரு கூட்டாட்சி அரசாங்கம் அன்று ஆலோசிக்கப்படவில்லை.[1]

இப் புதிய சீர்திருத்தங்களின் நோக்கங்களைப் பற்றி விவாதித்த மாண்ட்போர்ட் தணிக்கையின் கூட்டாசிரியர்கள், ஓரளவு மாகாணச் சுயாட்சி ஒரு சில மாகாணங்களில் தேவை என்றும், இம் மாகாணங்கள் நாளடைவில் வளர்ச்சியடைந்து, பூரணமடைய வேண்டிய பொறுப்பாட்சி பரிசோதனை செய்யப்பட வேண்டிய இடங்கள் எனவும் ஒப்புக் கொண்டனர். இதன் காரணமாகச் மாகாணங்களுக்குக் கூடிய வரையில் நிர்வாகத் திலும், பொருளாதாரத்திலும் பெரும் சுதந்திரம் கொடுக்க வேண்டுமென்றும், ஆனுல், மத்திய அரசாங்கம் தன் பொறுப்பு களைத் திறம்பட நடத்துவதற்கு உட்பட்ட அதிகாரம் மட்டுமே வழங்கப்படும் எனவும் சிபாரிசு செய்தன.[2]

## 2

## பாராளுமன்றக் கூட்டுக்கமிட்டியின் சிபாரிசுகள்

### (அ)

### 1. சீர்திருத்தக் கொள்கை விளக்கம்

இந்திய அரசியல் சீர்திருத்தங்கள் அடங்கிய தம் அறிக் கையை மாண்டேகு காமன்ஸ் சபையிடம் ஆங்கில அரசாங்கத் தின் குறிக்கோளாகத் தெரிவித்தார். அவர் மேலும், பேசுகை யில், 'ஆங்கில அரசு, இந்தியர்களை, நாளடைவில், அரசின் எல்லாத் துறைகளிலும் அதிகப்படியாக நியமிப்பதோடு சுயாட்சி ஸ்தாபனங்களை அமைத்து, அம் மக்கள் படிப்படியாகப் பொறுப் பாட்சி பெற்று ஆங்கில அரசாங்கத்தின் ஓர் இணை பிரியாத

[1]. Ibid P. 103
[2]. Ibid P. 116

அங்கமாவதற்கு இந்திய அரசோடு பரிபூரணமாக ஒத்துக் கொள் கிறது' என அறிவித்தார்.[1]. இந்த அறிக்கையின் அடிப்படை யில்தான் 1918ஆம் ஆண்டு இந்திய அரசாங்கத்தின் பெயர் பெற்ற மாண்ட்போர்ட் ரிப்போர்ட் என்ற தணிக்கை எழுதப் பட்டது என்பதைப் பாராளுமன்ற இருசபைக் குழு ஒப்புக் கொண்டது.

கூட்டாசிரியர்களான மாண்டேகு, செம்ஸ்போர்டு இருவ ருடைய தணிக்கையும் 1919ஆம் ஆண்டு வெளியிடப்பட்டு மக்களுடைய அபிப்பிராயங்கள் கோரப்பட்டன. மாண்டேகு இந்தியாவை விட்டு வெளியேறியவுடன், மாகாணங்களில் ஏற்பாடு செய்ய வேண்டுமென விரும்பிய பொறுப்பாட்சியைப் பற்றிச் செம்ஸ்போர்டு துரையே எதிர்ப்பு கூறினர். மேலும், ஆங்கிலப் பாராளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்ட இந்திய அரசாங்கத்தின் சீர்திருத்த மசோதா, மாண்டேகு செம்ஸ்போர்டு இருவரும் கூறிய கருத்துக்களிலிருந்து வேறுபாடு அடைந்தது. இந்தியச் சீர்திருத்தத்தைப் பற்றிச் சர். சங்கரநாயர் அவர்கள் எழுதிய மாறுபட்ட கருத்துக்கள் இந்தியப் பாராளுமன்ற காரிய தரிசிக்குப் அனுப்பப்மட்டு அவைகள் இந்தியச் சீர்திருத்த மசோதாவோடு இணைக்கப்பட்டன. பாராளுமன்றத்தைச் சார்ந்த ஒரு கூட்டுக்கமிட்டி 1919ஆம் ஆண்டு இந்தியச் சீர் திருத்த மசோதாவைப் பற்றியுள்ள கருத்துக்களைக் கேட்டு நிர்ணயித்தது;[2]

(2)

இப் பாராளுமன்ற கமிட்டி 1917ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம 20ஆம் தேதி[3] ஆங்கில அரசு வெளியிட்ட அறிக்கையை நடைமுறையில் கொண்டு வருவதற்கே இந்தியப் பாராளு மன்றச் சீர்திருத்த மசோதா கொண்டு வரப்பட்டது என அறிவித் தது. இவ் வடிப்படையில் பொறுப்பாட்சி பெறுவதற்கு முதற்படி யாகவே அச் சீர்திருத்தம் அமைக்கப்பட்டிருக்கிறது என எடுத்துக் காட்டியது. அவ்வாறு கொண்டு வரப்படும் சீர்திருத் தம், மக்கள் உண்மையாகவே முன்னேற வேண்டுமாயின், அதனுடைய முதற்படி ஒரு வாக்காளர் பட்டியலைத் தயாரிப் பதைப் பொறுத்தே இருக்கும் எனவும், அவ்வாறு உரிமை பெற்ற வாக்காளர்களால் தெரிந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள் அரசாங் கத்தை நடத்துவதற்கு ஓரளவு பொறுப்பாட்சி கொடுப்பது

1. Ibid 11
2. R. R. Sethi and V. D. Mahajan, Constitutional History of India, 1956, page 95
3. See 'Dyarchy' by L. Curtis P. No. 553

முக்கியம் எனவும் கூறியது.[1] அன்றைய நிலையில் இந்தியாவினுடைய வாக்காளர் பட்டியல் குறைவாகவே இருக்க வேண்டும் என்றும், பயிற்சி பெறுகின்ற மக்கள் பிரதிநிதிகளுடைய அதிகாரம் அளவாகவே இருக்க வேண்டும் எனவும் கூறியது. ஆகவே, ஆங்கில அரசாங்கத்தின் கொள்கைகள் வெற்றி பெறப் பொதுநல வாழ்க்கையில் மக்களுடைய அனுபவங்கள் அதிகரித்துத் திறம்பட வேண்டும் எனக் கூறியது. இக்காலங்களில், இந்தியாவினுடைய சமாதானத்தைப் பாதுகாக்கும் முக்கியப் பணியிலிருந்து, பாராளுமன்றம், தன் அதிகாரங்களைப் பின் வாங்க முடியாது எனவும், மக்களுக்கு அறிவித்துள்ள பொறுப்புகளைத் தவிர எஞ்சிய பொறுப்புக்களைப் பாராளுமன்றம் இந்திய நிர்வாக சபையில் கவர்னர் ஜெனரலின் பொறுப்பில் கொடுத்துப் பாராளுமன்றத்தின் பொறுப்பைப் பாதுகாக்க வேண்டும் எனவும் கூறியது.[2] ஆனால், ஆரம்பத்திலிருந்தே அரசின் பொறுப்புக்களை நிர்வகிக்கும் நல்ல வாய்ப்பை மக்களுக்கு அளிக்க வேண்டும் என்றும், அரசியல் அறிவின் அடிப்படையில் ஆரம்பத்தில் கொடுக்கின்ற ஒரு வாய்ப்பு பெருந்தன்மையான வாய்ப்பாக இருக்க வேண்டும் என்றும், அதனால், மக்கள் அரசின் அலுவல்களைப் பார்த்துப் படிக்கவும், மக்களை அரசை நடத்துவதினால், பாராளுமன்றம் மக்களின் திறனை ஆராய்ந்து, மேலும் அதிகாரங்களை வழங்க வாய்ப்புகள் ஏற்படும் எனவும் கமிட்டி கூறியது.[3]

## (ஆ)

## மாகாணங்களில் இரட்டையாட்சி

பாராளுமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்ட சீர்திருத்த மசோதாவைக் குறித்துமேலும், அக் கமிட்டி கூறியதாவது,[4] அச் சீர்திருத்தத்தின் அடிப்படையில் மாகாண அரசாங்கம் இரு கூறுகளாகப் பிரிக்கப்பட்டது எனவும், அதில், ஒரு பாகம் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு நியமனம் செய்யப்பட்ட மந்திரிகளினால் நிர்வாகம் நடத்தப்படும் எனவும், ஏனைய பாகம் நிர்வாக சபையில் கவர்னரின் பொறுப்பில் நடத்தப்படும் எனவும் கூறி, புதிதாக வகுக்கப்பட்ட அரசுப்பிரிவினையைச் சுட்டிக் காண்பித்தது. இம்முறைதான் 1917ஆம் ஆண்டு ஆகஸ்ட் 20ஆம் தேதி ஆங்கில அரசாங்கம் அறிவித்துள்ள கருத்துக்களை

1. Ibid
2. Ibid
3. Ibid 553
4. Ibid 554

நடைமுறை ஆக்குவதற்குத் தெளிவான பாதையாக அமைந்துள்ளது எனக் கமிட்டி கூறியது.[1]

மேற்படி இயற்கைக்கு விரோதமாகவும், புதிதாகவும் அமைந்துள்ள புதிய சீர்திருத்தத் திட்டம், பொதுவாகப் பல அரசியல் வட்டாரங்களில் அச்சத்தைக் கிளப்பியுள்ளது என்ற உண்மையைக் ஒப்புக் கொண்டது. ஆனால், கமிட்டி அதுபோன்ற பல சீர்திருத்தக் கருத்துக்களை ஆராய்ந்ததின் பின், ஆங்கில அரசாங்கத்தின் கொள்கைகளை அப்படியே நடைமுறையில் ஆக்குவதற்கு இந்திய அரசாங்கச் சீர்திருத்த மசோதா குறிப்பிட்டுள்ள வழியே சிறந்தது எனஅறிவுத்துள்ளது. கமிட்டி மேலும் சீர்திருத்த மசோதாவைக் குறை கூறுபவர்களைச் சுட்டிக் காண்பித்து. அரசாங்கத்தின் அறிவிப்பில், மக்கள், தாங்களே தங்களை ஆளும் சுயாட்சிப் பொறுப்பிலுள்ள அரசாங்கத்தை நிலை நாட்ட வாய்ப்புகள் அளிக்க வேண்டுமென்று கூறியதேயொழிய, பகுதிப் பொறுப்பாட்சியை வழங்க வேண்டும் என்று குறிப்பிடவில்லை. ஆனால், இச்சீர்திருத்த மசோதாவின் வழியாகப் பொறுப்பு, மந்திரிகளுக்கும், மாகாணச் சட்டசபைகளுக்கும், நிர்வாக சபை அங்கத்தினர்களுக்கும், தேர்வு பெறும் மக்கள் பிரதிநிதிகளுக்கும், மாற்றப்பட்ட தலைப்பிலுள்ள அரசாங்க அதிகாரங்களைப் பரிபாலிக்கக் கொடுத்துள்ளது.[2] இப் பொறுப்பு மக்களுக்குப் பொறுப்புணர்ச்சியை ஊட்டி வளர்ப்பதற்கு வாய்ப்பு அளிக்கும் எனக் கமிட்டி கூறியது,

மாகாணச் சட்டசபைகளில் மாற்றப்பட்ட அதிகாரங்களை வகிக்கும் மந்திரிகளைக் குறிப்பிட்டுக் கமிட்டி கூறியதாவது[3] இவர்கள் மாகாணச் சட்டசபையிலுள்ள அதிகப்படி அங்கத்தினர்களுடைய நம்பிக்கையைப் பெற வேண்டும், ஆனால், அவர்களுடைய பொறுப்பை வகிப்பதில் கவர்னர் நல்ல வழிகாட்டியாக அமைவார், அதே சமயம் மந்திரிகள் கூறும் நல்ல கருத்துக்களைக் கவர்னர் ஒப்புக் கொண்டு அரசாங்கத்தை நடத்தத் துணை புரிவார். மந்திரிகள் கூறும் கருத்தில் ஒன்றைத் தாம் ஒப்புக் கொள்ளாமல் இருப்பது, கவர்னர் தமக்கு அதிகரிக்கப்பட்ட நிர்வாக சபை அங்கத்தினர்களிடம் எந்த முறையில் சில கருத்துக்களைச் சில நேரம் ஒத்துக்கொள்ளாது இருப்பாரோ, அது போன்றதேயாகும். இப்படிக் கவர்னர் நடந்து கொள்ளும் முறைகளை 'அறிவித்தும் துணைப் பொருள்களைப்' (Instrument of Instruction)

1. Ibid
2. Ibid P.554
3. Ibid

மூலம் அரசாங்கம் குறிப்பிடும். மாகாண நிர்வாக சபையில் கவர்னர் தங்களுக்கு அளித்துள்ள அதிகாரங்களைப் பிரித்துச் செயலாற்றும் வகையில் இந்தக் குறிப்புக்கள் அமையும். அரசாங் கத்தில் இருதரப்பட்ட அங்கங்களுக்கிடையே சுமுகமான உறவு ஏற்படுமெனப் பாராளுமன்றக் குழு நம்பிக்கை தெரிவித்தது.[1] கவர்னர் இவ்விரு தரப்பட்ட அரசாங்கங்களிடையே நல்லுறவு உண்டாக்கவும், இரு சாரார்களுமே ஆலோசித்துக் காரியங்களை முடிவு செய்யும் பழக்கங்களை ஏற்படுத்தவும் முயற்சிகள் எடுத்துக் கொள்வார் என எதிர் பார்ப்பதாகவும் கூறியது. இதில் மக்க ளுடைய எண்ணங்களை மந்திரிகள் மூலமாகவும், நிர்வாக சபை வழியாக அரசாங்கத்தில் அவ்வங்கத்தினர்கள் பெற்ற அனுப வத்தையும், பெற வாய்ப்புண்டு. இவ்விரு அங்கங்களுக்கு மிடையே சுமுகமாக உறவையும், சேர்க்கையையும், விவாதங்களை யும் எதிர் பார்ப்பினும் இருசாராருடைய பொறுப்புக்களை அவரவர் திறம்பட நடத்துவர் என நம்பிக்கை தெரிவித்தது.[2] மந்திரிகள் தங்கள் பொறுப்புகளைப் பெற்று மாகாணச் சட்டசபைகளில் அதிகப்படி அங்கத்தினர்களின் நம்பிக்கையைத் தாங்க அவர்கள் திறம்பட நிர்வாகத்தை நடத்த வேண்டிய எல்லா அதிகாரங்க ளும் அவர்களுக்கு வழங்கப்படும் எனக் கூறியது. இதுபோ லவே பாராளுமன்றம் விரும்பிய பொறுப்புக்களையெல்லாம் நடத்த இருக்கின்ற நிர்வாக சபையில் கவர்னர் தங்கள் அலுவல்களைச் சிறப்பாகக் கவனிக்க அவர்களுக்கு வேண்டிய அதிகாரங்களும் வழங்கப்படும் எனக் கமிட்டி தெரிவித்தது. மாகாண அதிகாரிக ளுடைய பின்பலமாக இந்திய அரசாங்கம் எப்போதும் தயாராக இருக்கும் எனவும் கமிட்டி அறிவித்தது.[3]

அரசியல் அடிப்படையில் இந்தியாவில் இம் மசோதா காண்டுவர இருக்கும் பெரும் மாற்றம சரித்திர முக்கியத்துவம் பெற்றது எனக் கமிட்டி அறிவித்தது. இப்பெரும் நடவடிக்கை சுயாட்சிப் பாதையில் பெரும் மாறுதலை உண்டாக்கும் எனவும், அதற்கு அத்தாட்சியாக இந்தியக் குடிமக்கள் தெரிவித்துள்ள விசுவாசம், அறிவு, அவர்களுடைய திறன் இவைகள் பேரில் ஆங்கில அரசு கொண்டுள்ள நம்பிக்கையைத் தெளிவுபடுத்துவ தாகவும இருக்கும் எனக் கமிட்டி கூறியது.[4] இக்கமிட்டி இந்தி யாவில் நடக்கும் சகல நடவடிக்கைகளும், நிரந்தரமாகப் பாராளு மன்றத்துக்குப் தெரியப்படுத்துவதாக இருக்க வேண்டும் என

1. Ibid
2. Ibid P. 555
3. Ibid
4. Ibid

வேண்டிக் கொண்டது. இதற்காகப் பாராளுமன்றத்தில் 'நிரந் தர கமிட்டி' ('Standing Committee') ஒன்று அமைக்க வேண்டும் எனக் கருதியது. நிரந்தரப் பாராளுமன்றக் குழுவிற்கு உபதே சிக்கும் அதிகாரமும், விவரங்களைக் கேட்டறியும் அதிகாரமும் கொடுக்க வேண்டும் எனச் சிபாரிசு செய்தது.

மாகாணங்களில் ஒதுக்கப்பட்ட, மாற்றப்பட்ட இரு பகுதி களுக்கும், தனித்தனி வருமானம் என்றல்லாமல், மொத்த வருமா னததில் மூன்றில் இரண்டு பகுதிஒதுக்கப்பட்ட தலைப்புக்களுக் கும், மூன்டில் ஒரு பகுதி மாற்றப்பட்ட தலைப்புக்களுக்கும் கொடுக்க வேண்டும என்ற கருத்தைப் பாராளுமன்றக் குழு சிபாரிசு செய்தது மேலும் இக்கமிட்டி தனது சிபாரிசில், மாகாண அரசாங்கததில் காணப்படும் இரு பகுதிகளும், ஒருவருக்கொரு வர் அதிகாரமும், கட்டுப்பாடும் காண்பிக்காமல் இருக்க வேண் டும் என ஆலோசனை கூறியது.[1] ஒவ்வொரு மாகாணத்திலும், நிதி அறிக்கை, மந்திரிகளையோ அல்லது சட்டசபையில் மெஜா ரிட்டி அங்கத்தினர்களையோ கட்டுப்படுத்தாத முறையில் அமைக் கப்பட வேண்டும் என்றும், ஆனால் நிர்வாக சபை, மந்திரிகளுக்கு உதவி அளிப்பதாக அமைய வேண்டும் எனவும் கூறியது. மேலும், இருதரப்பட்ட அரசாங்கப் பிரிவுகளினிடையேயுள்ள ஏற்றத்தாழ்வுகளைச் சரி செய்து கொண்டு போவது கவர்னர் பொறுப்பாகும் எனப் பாராளுமன்றக் குழு கூறியது.

மாகாணங்கள் வாங்கும் கடன், அம்மாகாண வருமானத்தை உத்திரவாதமாகக் கொண்டதாக இருக்கும்.[2] இவ்வளவிற்கு, மாகாண அரசாங்கங்கள் தங்கள் அதிகாரத்தைச் செலுத்த, இந் தியப் பாராளுமன்றக் காரியதரிசி தமது அதிகாரத்தைத் தளர்த் திக் கொள்ள வேண்டும். இது போன்றே, இந்திய அரசாங்க மும் தங்கள் கடமைகளையும், கட்டுப்பாடுகளையும் நிலை நாட்டும் போது மாகாண அரசாங்கங்களுக்கும், சட்ட மன்றங்களுக்கும் தாளடைவில் அதிகாரத்தை வழங்குமளவில் நடந்து கொள்ளும் எனக் கூறியது.

மாகாணங்களில், மந்திரிகள் சட்டமன்றத்தின், அதிகப்படி அங்கத்தினர்கள் நம்பிக்கை உடையவர்களாக இருக்கும் வரை யில், அவர்கள் கவர்னர்களுக்கு ஆலோசனை கூறுவர். கவர்னர் அவர்களது ஆலோசனையை ஏற்றுக் கொள்ளாதபோது, மந்திரி

[1]. Ibid P. 556
[2]. Ibid

கள் தங்கள் வேலையை இராஜிநாமா செய்ய உரிமை வழங்கப்படும்.[1] ஆனால், அவர்களுக்கு அரசியல் சட்டத்தின் அடிப்படையில் தனிப்பட்ட ஒரு மந்திரியை வேலையிலிருந்து நீக்க அதிகாரம் வழங்கப்பட்டது. ஒரு மந்திரி, தனது பொறுப்புகளைச் சரிவரப் பரிபாலிக்காமல் இருக்கும்போது, கவர்னருக்கு அவரைப் பதவியிலிருந்து நீக்கும் அதிகாரம் கொடுக்கப் பாராளுமன்றக் குழு ஒத்துக் கொண்டது. மேலும், கவர்னர் தாம் நினைக்கும்போது மாகாணச் சட்டசபையைக் கலைந்து புதிய தேர்தல் ஏற்பாடு செய்து, புதிய மந்திரிகளை நியமனம் செய்யும் அதிகாரம் வழங்கச் சிபாரிசு செய்தது. புதிதாக அமைக்கின்ற மந்திரிசபையில் ஆலோசனைகளை ஏற்றுக் கொள்ளக் கவர்னருக்கு அதிகாரம் வழங்கக் கேட்டுக் கொண்டது. சில மாகாணங்களில் இரண்டு மந்திரிகளும் மற்ற மாகாணங்களில் இரண்டுக்கு அதிகப்பட்ட மந்திரிகளும் தேவைப்படலாம் எனக் குழு கூறியது.[2] மந்திரிகளுடைய அந்தஸ்தைப் போன்று உயர்ந்ததாக இருக்கும். ஆனால், அவர்களுடைய சம்பளம் மாகாணச் சட்டசபைகளால் வரையறுப்பதாக இருக்கும்.

கவர்னர் தம் விருப்பம் போல அதிகாரிகளல்லாத அங்கத்தினர்களில் ஒருவரை உதவி பார்லிமெண்டரி காரியதரிசியாக நியமனம் செய்ய, அதிகாரம் அளிக்கக் கமிட்டி சிபாரிசு செய்தது.[3]

மாகாண நிர்வாகசபை அங்கத்தினர்களில், சாதாரணமாக இரண்டிற்கு மேற்பட்டவர்கள் அதிகாரி களில்லாதவர்களாக இருக்க வேண்டிய தேவையில்லை என மேற்படி குழு குறிப்பிட்டது. ஆனால், நிர்வாகசபை மொத்தம் அங்கத்தினர்கள் நான்காக இருக்குமானால், அதில் இருவர் அதிகாரிகளில்லாத அங்கத்தினர்களாக இருக்க வேண்டும் எனவும் குறிப்பிட்டது.[4]

மேலும், மாகாணத்திலுள்ள நிர்வாக சபைகளுக்கும், மந்திரிகளுக்குமிடையே அரசாங்கம் ஒப்புக்கொள்ளும் கொள்கைகளைக் கலந்து ஆலோசனை செய்ய வேண்டும் எனக் கூறியது. அவர்களுள், அபிப்பிராயபேதங்கள் ஏற்படும்போது இருதரப்பட்ட அங்கங்களும், அவரவர் அபிப்பிராயங்களைத் தனியாகத் தெரியப்படுத்த வேண்டும் எனக் கமிட்டி ஆலோசனை கூறியது. அபிப்பிராயபேதங்கள் இருக்கும்போது கவர்னர் நடுநிலைமையில்

1. Ibid
2. Ibid P. 559
3. Ibid
4. Ibid

இருந்து மத்தியஸ்தம் செய்பவராக இருப்பார். இப்படியாகக் கவர்னர் இக்கட்டான காலங்களில் பெரும்பொறுப்புள்ளவராகவும் அதிகாரம் பெற்றவராகவும் இருப்பார். பலதரப்பட்ட கொள்கைகளும், மாறுபட்ட கருத்துக்களும் ஏற்பட்டு இருதரப்பட்ட அரசாங்க அங்கங்களுக்கிடையே தகராறும், சிக்கலும் ஏற்படும் போது அதைத் தீர்த்து வைப்பது கவர்னருடைய பொறுப்பாகும்.[1] அதுபோலவே, அனுதாபத்தோடும், இனத் தைரியத்தோடும் மாற்றப்பட்ட அரசாங்கத் தலைப்பிலுள்ள அதிகாரங்களை மந்திரிகள் செவ்வனே நடத்தக் கவர்னர் வேண்டிய தைரியத்தையும், தம் அனுபவத்தையும் தெரிவிக்க வேண்டும். மந்திரிகள் தவருன பாதையில் செல்லும்போது, சரியான பாதையை எது எனக் கூறுவதையும், சரியான பாதையை அவர்கள் கடைப்பிடிக்காவிடில் என்ன நேரும் என்பதையும், அவர்களுக்கு எச்சரிக்கை செய்யக் கவர்னர் அஞ்சக்கூடாது. ஆனால், சில சமயங்களில் மந்திரிகள் தாங்கள் கருதியது போலச் செயலாற்ற எண்ணின், கவர்னர் அதற்கு அனுமதிக்க வெண்டுமென்றும், ஆனால், அப்படிப்பட்ட போக்கின் பிரதிபலிப்பை மந்திரிகளே ஏற்றுக்கொள்ள வேண்டும் எனவும், கவர்னர் முன் எச்சரிக்கை செய்யவேண்டும். கவர்னருக்கு அவர் ஆலோசனைக்கு விரோதமாக இயற்றிய சட்டத்தை நிராகரிக்கவும் (veto) அதிகாரம் வழங்க, பாராளுமன்றக் குழு சிபாரிசு செய்தது.[2] மந்திரிகள் மாகாணச் சட்டசபைகளின் அபிப்பிராயங்களைக் கேட்டே சில தவறுகள் செய்யலாம். ஆனால், தம் கடமைகளை உணர்ந்து அனுபவ ரீதியாகவே தவறுகளை, அவர்கள் உணர முடியும் எனக் கூறியது. சட்டசபையில் நடக்கும் விவாதங்களின்போது நிர்வாகசபை அங்கத்தினர்களும், மந்திரிகளும் ஒருமித்தே செயல்படவேண்டும் என்றும், இவ்விரு தரப்பினரும் ஒருவரையொருவர் வாதத்திலோ அல்லது ஓட்டளிப்பதிலோ எதிர்ப்பது கூடாது என்றும் வரையறுக்கப்பட்டது.[3] ஆனால், நிர்வாகசபை அங்கத்தினர்கள் விவாதத்தை வரவேற்று, பேச்சிலோ அல்லது ஓட்டு மூலமோ தெரிவிக்கலாம். மந்திரிகள் மேற்கொண்ட கொள்கைகளைத் தாங்கள் ஒப்புக்கொள்ளவில்லையெனில், அதை ஆதரிக்க வேண்டிய அவசியம் இல்லையென்றும், அதுபோலவே, நிர்வாக சபை அங்கத்தினர்கள் கொண்டு வருகின்ற மசோதாக்களை மந்திரிகள் ஓட்டினலோ, பேச்சினலோ ஆதரிக்க வேண்டிய

[1]. Ibid

[2]. Ibid P. 56

[3]. Ibid

அவசியம் இல்லையென்றும் பாராளுமன்றக் குழு கருத்துத் தெரிவித்தது. ஆனால், ஒருவடைய கருத்தை மற்றொருவர் ஆதரிக்கும் போது பேச்சிலும், போட்டியிலும் கலந்து கொள்ளலாம் என்றும் தெரிவித்தது சட்டசபையைச் சேர்ந்த ஏனைய அங்கத்தினர்கள், அவர்கள் தங்கள் விருப்பம்போல் பேசவும், ஓட்டளிக்கவும் வாய்ப்பு அளிக்க, கமிட்டி சிபாரிசு செய்தது.[1]

மாகாண பட்ஜெட்டுகளை வாதத்திற்குப்பின் ஒப்புக்கொள்வதற்குள், வாக்குகள் பதிவுபெற வேண்டும் எனக் கூறியது. மாற்றப்பட்ட தலைப்புக்களிலுள்ள இலாக்காக்களின் வரவுசெலவுக்களின் வரவு செலவுக் கணக்குகளைக் கூட சட்டசபை மறுக்குமாயின், அதைக் கவர்னர் நிர்வாகசபை மூலமாகச் சட்டசபையில் கொண்டு வந்து தீர்மானம் பெறமுடியும். அதுபோலவே ஒதுக்கப்பட்ட தலைப்பிலுள்ள வரவு செலவு விவகாரங்களில் சட்டசபை மறுப்பு கூறுமாயின், சட்டசபை குறைந்த தொகையை மேலும் கூட்டுவதற்கு அதிகாரம் வழங்க வேண்டும் எனக் கமிட்டி சிபாரிசு செய்தது. இவ்வதிகாரம் நியாயமாக அரசாங்கத்தை நடத்துவதற்குள்ள அதிகாரம் என்றும், அது அனுவசியமாகவோ அல்லது அதிகாரத்தின் அடிப்படையிலோ கொடுக்கப்பட்ட அதிகாரம் இல்லை எனவும் கூறியது. ஏனெனில், கவர்னருக்கு இலாக்காக்களின் செலவுகளுக்கு வேண்டிய பணத்தைக் கொடுக்க வேண்டிய அவசியம் இருப்பதாலும் இந் நடவடிக்கை தேவை எனத் தெளிவாக்கியது.[2]

புதிதாக ஏதாவது வரி விதிக்க வேண்டிய அவசியம் இருக்குமாயின் அதைப்பற்றியுள்ள வாதப் பிரதிவாதங்கள், ஒதுக்கப்பட்ட, மாற்றப்பட்ட பிரிவிலுள்ள இருசாராரும் சேர்ந்து ஆலோசனை செய்து முடிவு செய்ய வேண்டுமென்றும், இக் காரியங்களில் இருசாராரும் ஓர் ஒப்பந்தத்திற்கு வரவேண்டுமெனவும் கமிட்டி சிபாரிசு செய்தது.[3]

## (இ)

## பிரதிநிதித்துவம்

சட்டமன்றங்களில் 75 சதவிகிதம் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாக வேண்டுமென்றும், 25 சதவிகிதத்திற்கு மேல் அதிகாரிகள் இம் மன்றங்களில் அங்கத்தினர்களாக இருக்கக்கூடாது எனவும் கமிட்டி ஆலோசனை கூடாது.[4]

1. Ibid
2. Ibid S. 60
3. Ibid
4. Ibid

ஓட்டுரிமை பற்றிக் கொடுக்கப்பட்ட தணிக்கையின் அடிப்படையில் கிராம வட்டாரங்களுக்குக் (rural, கொடுத்துள்ள சட்டமன்றத் தொகுதிகளை அதிகரிக்க வேண்டுமென்றும், அதே அளவுக்கு நகர அமைப்பு ஏற்பட்டுள்ள (urban) வட்டாரங்களில் தொகுதிகளின் எண்ணிக்கையைக் குறைக்க வேண்டுமென்றும் கூறியது. இக் காரியங்களில் இந்திய அரசுக்கு அதிகாரம் வழங்க வேண்டும் எனவும் கூறியது.[1]

தாழ்த்தப்பட்ட சமுதாயங்களுக்கு மேலும் பிரதிநிதித்துவம் அளிக்கவேண்டும் எனக் கமிட்டி ஆலோசனை கூறியது. இதற்கு வேண்டி இந்திய அரசாங்கத்திற்கு அதிக அதிகாரம் வழங்க வேண்டுமென்றும், தாழ்த்தப்பட்ட சமுதாயத்திற்கு என்னென்ன பிரதிநிதித்துவம் கூடுதலாகக் கொடுக்க வேண்டும் என்பதை மாகாண அரசாங்கங்களோடு அவர்கள் ஆலோசித்து முடிவுக்கு வரவேண்டும் எனவும் சிபாரிசு செய்தது. மேலும் தாழ்த்தப்பட்ட சமுதாயத்துக்கு அரசாங்க நிர்வாகத்தில் அதிக பிரதிநிதித்துவம் வழங்க வேண்டும் எனக் கூறியது.[2]

சென்னை மாகாணத்தில் பிராமணரல்லாதவர்களுக்கு ஒதுக்கப்பட்ட தொகுதிகள் மூலமாகத் தனிப் பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டும் எனச் சிபாரிசு செய்தது. இதற்குப் பிராமணர்களையும் பிராமணரல்லாதவர்களையும் வரவழைத்துப் பேச்சுவார்த்தை மூலமாக, ஒவ்வொருவருக்கும் எத்தனை இடம் அளிக்க வேண்டும் என்பதை ஒத்தித் தீர்ப்பு மூலம் முடிவு செய்ய வேண்டுமென்று கமிட்டி ஆலோசனை கூறியது. அவர்கள் ஓர் ஒத்தித் தீர்ப்புக்கும் வரவில்லையெனில் அக்காரியங்களை ஒரு நடுவர் மூலம் நிர்ணயிக்க வேண்டும் எனவும் ....றியது.[3]

பெண்களுக்கு ஆண்களைப் போன்று சமத்துவம் அளிக்கவும், பெண்களுக்கு ஓட்டுரிமை அளிப்பதைப் பற்றியுள்ள நடவடிக்கைகளையும், தேர்வு பெறும் மாகாணச் சட்டசபைகளுக்கு விட்டுவிட வேண்டும் எனப் பாராளுமன்றக் குழு ஆலோசனை கூறியது. இந்திய மக்களின் சமுதாய அடிப்படையைத் துருவி ஆராய்ந்ததின் பின்பே அதை முடிவு செய்ய வேண்டுமென்றும், இம் முடிவை இந்தியர்களுக்கே விட்டுவிட வேண்டும் எனவும் கமிட்டி கூறியது. இக் கமிட்டியின் ஆலோசனைகள் சாதாரணமாக 10 ஆண்டுகளுக்கு மாற்ற முடியாது எனவும், ஆனால், பெண்கள்

1. Ibid P. 561
2. Ibid ,,
3. Ibid ,,

ஓட்டுரிமை விவகாரம் மட்டும் இதிலிருந்து தனிமை பெற்றது எனவும் அவர்கள் கூறினர்.[1]

அதுபோலவே நிலச்சுவான்தார்களுக்குப் பிரதிநிதித்துவம் கொடுக்கும் விவகாரத்தை இந்திய அரசாங்கம், மாகாண அரசாங்கங்களோடு மறுமுறை ஆலோசனை செய்யக் கமிட்டியை வேண்டியது.

பல்கலைக்கழகங்களில் பட்டம் பெற்று ஏழு ஆண்டுகள் முடிந்த எல்லோரும் பல்கலைக்கழகத்திற்கு ஒதுக்கப்பட்ட அங்கத்தினரைத் தேர்ந்தெடுப்பதற்கு ஓட்டுரிமை அளிக்க, கமிட்டி சிபாரிசு செய்தது. ஐரோப்பியர்களுக்கு வங்காள அரசாங்கத்தில் பிரதிநிதித்துவம் அளிக்க இந்திய அரசு, வங்காள அரசோடு ஆலோசனை செய்யக் கமிட்டி வேண்டியது. இதுபோலவே, மற்ற மாகாணங்களிலும் ஐரோப்பியர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்க, ஆலோசிக்க வேண்டியது.[2]

இதுபோலவே, இந்தியாவில், மன்னர் ஆட்சி நடக்கும் பிரதேசங்களிலிருந்து தேர்வு பெறுபவர்கள், தேர்ந்தெடுப்பவர்கள், இவர்களின், பட்டியல்களைப்பற்றி இந்திய அரசு, மாகாண அரசோடு ஆலோசனை செய்ய இக்குழு சிபாரிசு செய்தது. லக்னோவில் நடந்த ஒப்பந்தத்தின்படி, முகமதியர்களுக்கு, எண்ணிக்கையின் அடிப்படையில் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வேண்டும் எனக் றியது.[3]

மாகாணங்களில் கவர்னா சட்டசபைக் ...ட்டங்களுக்குத் தலைமை வகிப்பதைக் கமிட்டி ஒத்துக்கொள்ளவில்லை. ஆகவே, மாகாணச் சட்டசபைகள் ஒரு தலைவரையும், உபதலைவரையும் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று கூறியது. மேலும், ஆங்கிலப் பாராளுமன்ற முறைகளை இந்தச் சட்டசபைகள் கையாள வேண்டும் என வற்புறுத்தியது.[4]

## 3

## சீர்திருத்த ஆலோசனைகளைப் பற்றி சென்னையில் மக்கள் அபிப்பிராயம்

அரசியல் நிர்வாகச் சீர்திருத்தத்தைப் பற்றியுள்ள தணிக்கையை மக்கள் ஆராயும்போது, சென்னையில், வாக்காளர்

1. Ibid P. 551
2. Ibid P. 562
3. Ibid
4. Ibid

பட்டியலைப் பற்றிப் பிராமணர்களும், பிராமணரல்லாதவர்களும் மாறுபட்ட கருத்துக்களைத் தெரிவித்தனர். பிராமணர்கள் வகுப்புவாத அடிப்படையில் வாக்காளர் பட்டியலோ அல்லது பிரதிநிதித்துவமோ கொடுக்கக் கூடாது என வாதித்தனர். ஆனால் பிராமணரல்லாதவர் வெவ்வேறு ஜாதியினருக்கும், மதத்தினருக்கும், ஜாதிமத அடிப்படையில் வாக்காளர் பட்டிய லும், பிரதிநிதித்துவமும் இருக்க வேண்டும் என வாதித்தனர் ஜாதிமத அடிப்படையிலுள்ள பிரதிநிதித்துவம் பிராமணர்களை அரசியலிலிருந்து ஒதுக்கி விடும் எனப் பிராமணர்கள் தங்கள் அச்சத்தைத் தெரிவித்தனர்.[1] இக் காலங்களில், பிராமணர்கள் பரம்பரையான எந்த ஒரு வகுப்பினையும் சார்ந்தவரல்லர் எனப் பிராமணரல்லாதவர்கள் கூறினர். பிராமணர் என்ற இலக்கணத்திற்குட்பட்டவர்கள் ஜனத்தொகையின் மிகச் சிறிய பகுதியினரே எனக் கூறினர். மேலும், அவர்கள் மட்டுமே படித்தவர்கள், சட்டம் தெரிந்தவர்கள் என்ற காலம் 20ஆவது நூற்றுண்டின் ஆரம்பத்தில் மறைந்துவிட்டது என்ற உண்மையை எடுத்துரைத்தனர்.[2] மிண்டோ-மார்லி சீர்திருத்தத் தின் பின், சமுதாயத்திலும், அரசியலிலும், பெறும் மாறுதல் சென்னை மாகாணத்தில் ஏற்பட்டுள்ளது எனவும், பிராமணரல் லாதவர்கள் வகுப்பினைச் சார்ந்த எல்லா ஜாதியினரும் தங்களுக் குள்ள பொறுப்புக்களையும், உரிமைகளையும் உணர்ந்து கொண்ட னர் எனவும் கூறினர். இக்காலங்களில் தாலூக்கா போர்டு களில் பிராமணரல்லாதவர்கள் வகுப்பினைச் சேர்ந்தவர்களே பெருவாரியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்[3] என்ற உண்மையை எடுத்துக் காட்டினர்.

கத்தோலிக்கர்கள், மாகாணங்களில் ஏற்படுத்தியிருக்கும் இரட்டையாட்சியையும், மக்களுக்குக் கொடுக்கப்பட்ட பொறுப் பாட்சியையும் வரவேற்றனர். ஆனால், மதத்திலும், ஜாதியிலும் மக்களிடையே வேற்றுமைகள் இருப்பதன் காரணமாக ஆங்கில அரசாங்கம் பிரதிநிதித்துவமும், தனி வாக்காளர் பட்டியலும், ஜாதிமத அடிப்படையில் அளித்துள்ளதை வரவேற்றனர். தன்னுட்சி இயக்கத்தைக் குறித்து, அவர்கள், அதிகப்படியாகச் சுயாட்சி உரிமைகள் வழங்கப்படுமாயின், அன்றைய நிலையில்,

1. Ibid
2. See Mr. Sivaswami Iyer, Reforms Committee-Statement punit by individuals and Associations not included in the prog,amme on franchise, page 1.
3. Iqip page 4

படித்தவர்கள் கையில் அதிகாரங்கள் சிக்கிவிடும் என்றும், இதனால், சாதாரண மக்களுடைய உரிமைகள் நிராகரிக்கப்பட்டு விடும் என்றும் கூறினர்.

இங்ஙனம், பிராமணரல்லாதவர்கள் எல்லோரும், தேர்தல்கள் உண்மையுள்ளதாகவே இருக்க வேண்டுமாயின், ஜாதிமத வாக்காளர் பட்டியல் வேண்டும் எனக் கூறினர். கிராமங்களில், கிராம அதிகாரியும், பத்திரங்களை எழுதுபவரும், மதகுருவும், பிராமணர்களாக இருப்பதின் காரணமாக, அவர்கள் அதிகாரத்தினாலும், செல்வாக்கினாலும், மதக் கோட்பாடுகளில் சிக்கிக் கிடந்த கல்வியற்ற கிராம மக்களைத் தங்கள் வசம் ஆக்கிக் கொள்வர் என்று அஞ்சித் தனி வாக்காளர் பட்டியல் கேட்டனர். ஆகவே, அன்றுள்ள சமுதாய நிலையில் விவசாயிகள் அரசியல் அடிப்படையில் தங்களுக்குப் பாதுகாப்பு வேண்டும் என்றும், ஜாதி வழி பிரதிநிதித்துவம் மட்டுமே தங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் எனவும் தெரிவித்தனர். மேலும், பொதுவாக உள்ள தொகுதிகளின் வழியாகவோ அல்லது நியமனத்தின் வழியாகவோ அவர்களுக்கு எந்த நன்மையும் வரப்போவது இல்லை என்றும், எல்லா ஜாதியினருக்கும் பொதுவாக உள்ள ஒரு வாக்காளர் பட்டியல், முற்போக்கு அடைந்துள்ள சமூகத்தினருக்கு மட்டுமே நன்மையை அளிக்கும் எனவும் வாதாடினர்.[1] ஆனால், நாளடைவில், பிராமணரல்லாதவர்கள் முன்னேற்றமடைந்தபின் தனிப்பட்ட வாக்காளர் பட்டியல்களை ஒழித்துவிட வேண்டும் எனவும் கூறினர். மாண்டேகு கூறியது போலுள்ள மூன்று வழி அரசியல்களில் முன்னேற்றம் ஏற்படுமாயின், தனிப்பட்ட பிரதிநிதித்துவம் நாளடைவில் மறைந்து விடும் எனக் கூறினர்.

தனிப்பட்ட ஜாதிமதங்களுககுப் பிரதிநிதித்துவம் வேண்டும் என்பதை அன்றுள்ள சமுதாய அடிப்படையில், இந்திய மக்கள்[2] எல்லோருமே பெரிதும் வேண்டினர். தனிப்பட்ட வாக்காளர் பட்டியல் வேண்டாமென மறுத்தவர்கள், ஜாதிமத அடிப்படையில் அரசியலை நடத்துவது சமுதாயத்தினிடையே பெரும் பிளவை உண்டாக்கும் எனக் கூறினர். ஆனால், அவ்வாறு மதிப்புக்கூறிய உயர்ந்த ஜாதியினரே இப்பெரும் பிளவுக்குக் காரணம் எனப் பலரும் கருதினர். மேலும் பிராமணரல்லாதவர்களிடையேயுள்ள சிறுபான்மை வகுப்பினர்கள், தங்களுக்குத்

1. Ibid
2. Ibid, page 52.

தனிப் பிரதிநிதித்துவம் இல்லாவிடில் மேல் ஜாதியினருடைய அதிகாரம் ஓங்கிக் கொடுங்கோன்மையான ஆட்சி ஏற்பட ஏதுவாகும் என்ற அச்சத்தைத் தெரிவித்தனர். உண்மையில் ஜாதிமத வாக்காளர் பட்டியலும், பிரதிநிதித்துவமும், இக்காலங் களில் பிராமணர், பிராமணரல்லாதார் என்ற வெறுப்பினால் கோரப்படவில்லை. இச் சமுதாயப் பிரிவினைகளை, வெவ்வேறு தொகுதிகளாக மக்கள் பயன்படுத்த எண்ணினர். இந்த அடிப் படையில் தனிப்பட்ட ஜாதியினரும், மதத்தினரும் தங்கள் நலன்களைக் காத்துக் கொள்ள எண்ணினர்.

சமுதாயத்திலும். அரசியலிலும் எழுப்பப்பட்ட கூக்குரல்கள் மக்களிடையே ஒரு விழிப்புணர்ச்சியை இக்காலங்களில் உண்டாக்கியது. சமுதாயத்தைச் சீர்திருத்த வேண்டும் என நினைத்த சீர்திருத்தவாதிகள் சமுதாயத்திலுள்ள பிளவுகளைச் சுட்டிக்காட்டி ஜாதியை ஒழித்து விட வேண்டும் எனக் குரல் எழுப்பினர்[1]. சமுதாயத்தில் உயர்வு, தாழ்வுகள் காணப்பட்ட தன் காரணமாக, எல்லோரும் ‘ஒரு நாட்டு மக்கள்’ எனக் கூற இயலாமற் போயிற்று. சமுதாயம் சின்னாபின்னமாகக் காட்சி யளித்தது. இதை உண்மையில் மாண்டேகு பலமுறை எடுத்துக் காட்டியுள்ளார். ஜாதியும், மதமும் சமுதாயத்தில் செய்த கேடுகள்தான், இந்திய சமுதாயத்தில் பிளவுபட்ட கருத்துக்கள் தோன்றக் காரணம். இப் பிரிவுகள் இந்திய சமுதாயத்தை ஆங்கிலச் சாம்ராச்சியத்தில் எஞ்சிய பாகங்களில் வாழும் மக்களிடையேயிருந்து தனியாகப் பிரித்துக் காண்பித் தன. யோகி கீதானந்தா என்பவர், இக்கருத்தை விளக்கிக் கூறும்போது, இந்திய மக்கள், என்று பாராளுமன்றத்தின் முன் கல்வியால் சமுதாயத்திலுள்ள கோட்பாடுகள் அகற்றப் பட்டன என்று நிரூபிப்பார்களோ, என்று மக்கள் சமுதாய வேறுபாடுகளைப் புறக்கணித்து ஒரு கூட்டு வாக்காளர் பட்டியல் வேண்டும் எனக் கருதுவார்களோ, அன்று பாராளுமன்றம் இந்தியர்களுக்கு அதிக அதிகாரம் கொடுத்தே தீரும் எனக் கூறினர்.[2] இக் காலங்களில் சமுதாய மறுமலர்ச்சி எங்ஙனம் அமைய வேண்டும் என்பதைப் பற்றிய கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டன. கல்வியற்று, அடிமைப்பட்டுக் கிடக்கும் பெண்கள், கல்விகற்று, ஏமாந்திருக்கும் தங்கள் கணவர்களுக்கு ஊக்கம் அளித்துச் சமுதாய மாற்றத்திற்கு என்று பாடுபடுவார்

[1]. Ibid, page 72.

[2]. See the proposal of Yoki Gitananda, Thirukural Upadesa Sabha, Egmore), page 23.

களோ அன்றுதான் நாடு முன்னேறும் எனப் பலரும் கருதினர். கல்வியற்ற இந்தியப் பெண்கள், தங்கத்தின் மீது தணியாத ஆசை கொண்டது சமுதாயத்திலுள்ள மற்றொரு கோட்பாடாகும். அப் பெண்களுடைய இன்னல்கள்தான் சமுதாயத்தின் பிற்போக்கிற்குக் காரணம் எனப் பலரும் கருதினர். இச் சூழ்நிலையில்தான் டாக்டர் எஸ். முத்துலட்சுமி ரெட்டி என்பவர் பெண்களுக்கு ஓட்டுரிமை அளிக்க வேண்டும் என விவாதித்தார்

## ஜாதிமதப் பிரதிநிதித்துவம் தற்காலிகச் சலுகையே

எட்வின் மாண்டேகும், செம்ஸ்போர்டு பிரபுவும் ஜாதிமதங்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பது என்பது ஒரு தற்காலிக நடவடிக்கை எனவும், அதை நிரந்தரமாக ஒப்புக்கொள்ள முடியாது எனவும் மறுத்தனர். என்றாலும், தற்காலிகமாக எல்லா மக்களுக்கும் பயிற்சி அளித்து அவர்கள் தேர்தலில் முன்னேற்றம் காண்பது வரை இந்தச் சலுகைகள் இருக்கும் எனவும் அறிவித்தனர்.[1] தேர்வு பெற்ற பிரதிநிதிகளால் அமைக்கப்படும் ஒரு சபையில், நியமனம் பெறும் அங்கத்தினர்கள் இருப்பது ஜனநாயகத்துக்கு முரண்பட்டது எனவும் அறிவித்தனர். மேலும், இங்ஙனம் நியமனம் பெறும் அங்கத்தினர்கள் மந்திரிகளாகப் பதவிப் பொறுப்பேற்க வாய்ப்பு இல்லாமல் ஆகிவிடும். இவ் வகைப்பட்ட அங்கத்தினர்களின் செல்வாக்கும், அந்தஸ்தும் தேர்வு பெற்ற அங்கத்தினர்கள் போல் இருக்க முடியாது. இவர்கள் தங்கள் சமுதாயத்தையே பொறுப்பற்ற முறையில் சில நேரம் எதிர்க்க வேண்டியது நேரிடலாம். இக் கோணத்தில் இருந்து பார்க்கும்போது இவர்கள் தேர்வு பெற்ற அங்கத்தினர்களைப் போன்று பொறுப்பாக நடந்து கொள்ள முடியாது. இங்ஙனம், நியமிக்கப்பட்டதின் மூலம் வாக்காளர்களுக்குத் தேர்தலில் அளிக்கும் ஒரு பயிற்சி இல்லாமல் போய் விடுகின்றது.[2] நியமனம் என்பது ஒருசில சிறுபான்மைப்பட்ட சமுதாயத்தினருக்கு மட்டுமே பொருந்துமெனவும், தேர்தலில் வெற்றி பெற முடியாத ஜாதிமதத்தினருக்கு மட்டுமே நியமனம் தேவை எனவும் கூறினர். 1919ஆம் ஆண்டு சீர்திருத்த சட்டங்களின் அடிப்படையில், சென்னையில் முகமதியர்களுக்கும், இந்தியக் கிறித்தவர்களுக்கும், ஐரோப்பியர்களுககும், ஆங்கிலோ இந்தியர்களுக்கும் தனி வாக்காளர்[2] பட்டியல் அமைக்க அதிகாரம் வழங்கப்பட்டது. மற்ற எல்லா வகுப்பினர்களும், பொது

1. Ibid page 27.
2. Repoton Indian Constitutional Reform op. cit. page74, 1918 152.para

வாக முகமதியர் அல்லாதார் என்ற பெயருடன் அழைக்கப் பட்டார். இத்தொகுதிகளில், எல்லா இந்துக்களுக்கும் போட்டி யிட வாய்ப்புள்ளதாக இருந்தது. என்றாலும், முகமதியரல்லாதார் போட்டியிடும் தொகுதிகளில் 28 தொகுதிகள் பிராமணரல்லாத வர்கள் போட்டியிடுவதற்கென ஒதுக்கப்பட்டது. 1919ஆம் ஆண்டு சீர்திருத்தத்தின்படி சென்னை சட்டசபை, மொத்தம் 128 அங்கத்தினர்களைக் கொண்டதாகவும், இதில் 96 அங்கத் தினர்கள் தேர்தல் மூலம் அங்கம் வகிப்பவர்களாகவும் இருந்தனர்.

மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தத்தைப்பற்றி அரசியல் அடிப்படையில் மூன்று விதமான கருத்துக்கள் வெளியிடப் பட்டன.[1]

(1) மிதவாதிகளின் தலைவர்களாக இருந்த திருவாளர்கள் காட்டன், மேக்டனெல்ட், வாச்சா, பானர்ஜி, ஸ்ரீனிவாச சாஸ்திரி முதலியவர்கள் சீர்திருத்தத்தை வரவேற்று மிகவும் புகழ்ந்து பேசினர். நாளடைவில் மதன் மோகன் மாளவியாவும் இக்கூட்டத்தோடு சேர்ந்தார். உண்மையில் அரசாங்கமும் இந்த மிதவாதிகளைத் தங்கள் பக்கத்தோடு சேர்த்துக் கொண்டது.

(2) அரசியல்சீர்திருத்தக் கருத்துக்களைத் திருமதி பெசன்ட் அம்மையார் வரவேற்றார். என்றாலும், அவர் மிதவாதி களோடு சேர்ந்து பணியாற்றவில்லை. பட்டாபி சீதா ராமய்யா அவர்கள் பெசன்ட் அம்மையார் கூட்டத் தோடு சேர்ந்து பணியாற்றினர்.[2]

(3) தீவிரவாதிகள் சீர்திருத்தக் கருத்துக்களை ஒப்புக் கொள்ளவில்லை. மேலே குறிப்பிட்ட, இரண்டாவது கூட்டத்தினர்களை, 'நடுநிலையாளர்கள்' ("Neutrals") எனக் கூறலாம். ஆனால், மூன்றாவது கூட்டத்தினர் முதல் இரண்டு கூட்டத்தோடு சேர்ந்து பணியாற்ற மறுத்து விட்டனர்.

1. Ibid

2. No. 14, Andhra Patrika, 15th August, 1918, MNR, Cl. P. 1285

மிதவாதிகள் கல்கத்தாவில் ஒரு மகாநாடு நடத்தினர். அவர்கள் தீவிரவாதிகளையும், பெசன்ட் அம்மையாரினுடைய கூட்டத்தையும் கண்டித்துப் பேசினர். பெசண்ட் அம்மையாரினுடையே அரசியல் வாழ்வே முடிந்து விடும் எனவும் எச்சரித்தனர்.[1] அரசியல் சீர்திருத்தக் கருத்துக்கள் நிறைந்த மசோதா 1919ஆம் ஆண்டு ஜூன் மாதம் 25ஆம் தேதி ஆங்கிலப் பாராளுமன்றத்தின் மக்கள் சபையில் தாக்கல் செய்யப்பட்டது. அப்போது மாண்டேகு சரித்திரப் பிரசித்தி பெற்ற ஓர் உரையை நிகழ்த்தினர். இந்திய மக்களுக்கு நிரந்தரமான ஓர் அரசியல் திட்டத்தைத் தாம் கொடுத்து விடவில்லை என ஒப்புக்கொண்டார். தாம் பாராளுமன்றத்தினிடம் சமர்ப்பித்த மசோதாவில் கோரப்பட்டுள்ள இந்திய அரசியல் சீர்திருத்தங்கள் தற்காலிகமானது என்றும், பாராளுமன்றத்தால் அனுப்பப்பட்ட பிரதிநிதியினுடைய ஆட்சிக்கும், இந்திய மக்களுடைய பிரதிநிதிகளுடைய ஆட்சிக்குமிடையே தம் சீர்திருத்தக் கருத்துக்கள் ஒரு பாலம் போல் அமையும் எனவும் கூறினர்.[2] 1917ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 20ஆம் தேதி தாம் வெளியிட்ட அறிக்கை குறித்து மேலும் கூறும்போது, அவ்வகையில் குறிப்பிட்ட ஒரு சிறந்த இலட்சியம்தான், "சாம்ராச்சியமும், ஜனநாயகமும்" ("Empire and Democracy") என்று அழைப்பதின இலக்கணமும், பொருளும் ஆகும் எனவும், இவ்வழிதான் எல்லா நாடுகளும் தங்கள் சுதந்திரக்கொள்கைகளைச் சாம்ராச்சியக் கொள்கைகளுடன் ஒன்றுக ஏற்று, சாம்ராச்சியத்தில் வாழும் மக்கள் அவரவர்களுடைய பிற்காலத்தை அவரவர்களே கட்டுப்படுதத முடியும் எனவும் கூறினர்.[3]

இந்தியா ஒரே தேசிய ஒருமைப்பாடுள்ள ஒரு நாடு எனக் கூற முடியுமா எனப் பாராளுமன்றத்திலுள்ள பல அங்கத்தினர்களும் மாண்டேகுவை வினவினர். இந்தியாவைத் தேசிய ஒருமைப்பாடு உள்ள ஒரு கட்டத்திற்கு அழைத்துச் செல்வது என்பது ஆங்கிலேயர் கடமை என அவர் குறிப்பிட்டார்.[4] ஜாதிமத உணர்ச்சிகள் மேலோங்காமலிருக்க இந்தியாவிலுள்ள மக்களுக்கு மேலும் கல்வி தேவையென்றும், ஆனல், உடனடியாகப் பெரும் பொறுப்புக்களை அவர்களுக்குக் கொடுக்க முடியாது

1. Ibid
2. No. 1, Wist Coast Spectator, 27th August 1918, MNR, Cl. P.1311
3. Edwin S. Montagu, House of Commons, 5th Jpne 1919, A.B. Keith, op. cit. Vol. II, PP. 214.
4. Ibid P.214

எனவும் தெரிவித்தார். தாம் அம்மசோதாவின் வழியாகக் குறிப்பிட்டுள்ள சீர்திருத்தங்களின் படி மாகாணங்களில் இரட்டையாட்சி வகுத்துள்ளதாக அறிவித்தார்.[1]

## 4

### 1919ஆம் ஆண்டு இந்திய சீர்திருத்தச் சட்டம்

இந்திய அரசின் நிர்வாகத்தில் பெரும் மாறுதல் விளைவித்து, இந்திய மக்களுக்கு ஓரளவு பொறுப்பாட்சி ஏற்படுத்தக் காரணமாயிருந்த, இந்திய அரசாங்கச் சீர்திருத்தச் சட்டம் 1919ஆம் ஆண்டு டிசம்பர் 23ஆம் தேதி பாராளுமன்றத்தில் தேர்வுபெற்றுச் சட்டமாக அமுல் செய்யப்பட்டது.[2] சட்டத்தின் முகவுரையில்,[3] பின்வருமாறு கூறப்பட்டது. இந்திய நிர்வாகத்தின் ஒவ்வொரு துறையிலும் இந்தியர்களை அதிகப்படியாக நாளடைவில் சேர்த்துக் கொள்வதோடு, மக்கள் சுயாட்சிக்கு வேண்டிய ஸ்தாபனங்களை நிறுவி, மக்கள் தங்களைத் தாங்களே ஆளும் பொறுப்பு பெற்று, ஆங்கிலப் பேரரசின் இணைபிரியாத அங்கமாக இந்தியா இருக்க வேண்டும் என்ற நோக்கத்தை வலியுறுத்தியது. இக்கருத்துக்கள் தான் பாராளுமன்றத்தின் வெளிப்படையான கொள்கைகள் என்றும், ஆனால், அதை நடைமுறையில் படிப்படியாகத்தான் கொண்டு வர முடியும் என்றும், இச்சட்டத்தின் அடிப்படையிலுள்ள நடவடிக்கைகள் முதற்படி எனவும் விளக்கியது. மேலும், இப்படிப்பட்ட நடவடிக்கைகளை, ஒவ்வொரு முறையும் பாராளுமன்றம் நிச்சயிக்கிறது என்றும் அதன் காரணம், பாராளுமன்றம்தான் இம்மக்களின் நல்வாழ்விலும், அவர்கள் முன்னேற்றத்திலும் எப்போதும் பொறுப்புக்கொண்டு இருக்கிறது என்றும் கூறியது. ஆனால், பாராளுமன்றம், இந் நடவடிக்கைகளை மேற்கொள்ளும் போதெல்லாம், அவர்களுடைய சீர்திருத்தங்களினால் அம்மக்கள் பொறுப்பேற்றுக் கொள்ள எத்துணைப் பக்குவமடைந்துள்ளனர் என்பதை ஆராய்ந்த பின்னரே, இந்த நடவடிக்கைகளை எடுத்துள்ளது- நாளடைவில் விரிவடையும் சுயாட்சி நிறுவனங்கள் மாகாணங்களில் நிறுவப்படும் என்ற கொள்கையின் அடிப்படையில், மாகாணங்களுக்கு மத்திய அரசாங்கத்திலிருந்து மிகவும்விரிவான சுதந்திரம் அளிக்கப்படுகிறது. இச் சுதந்திரம் மக்கள் தாங்களே பொறுப்புடன் நடத்தும் பொறுப்பாட்சியின் அடிப்படையில் நிறைவேற்றப்பட்டுள்ளது. இச்

1. Ibid P 215
2. Ibid
3. See, L. Curtis Op. Cit. 51

சட்டம் இங்கிலாந்து மன்னரின் முன்பும், பாராளுமன்ற இரு சபைகளின் உபதேசத்தோடும். பின்வரும் முக்கிய அம்சங்களுடன் நிறைவேற்றப்பட்டது.[1]

இச்சட்டத்தின் அடிப்படையில், மத்திய அரசின் அதிகாரங்களும், மாகாண அரசின் அதிகாரங்களும் பிரிக்கப்பட்டன. மாகாண அரசிற்குட்பட்ட அதிகாரங்கள் மாகாணச்சட்டசபைகளைச் சார்ந்த அதிகாரங்கள் எனவும், நிர்வாக சபையில் கவர்னரின் அதிகாரம் எனவும் பிரிக்கப்பட்டன. மத்திய அரசிற்கும். மாகாண அரசிற்கும் வருவாய்த் துறைகளும் பிரிக்கப்பட்டன. மாகாணங்களில் எந்தெந்த இலாக்காக்கள் ஒதுக்கப்பட்டதென வும், மக்களின் அதிகாரத்திற்கு மாற்றப்பட்டதெனவும் வரையறுக்கப்பட்டது.[2]

அதுபோன்ற மாகாண அரசுகள் மத்திய அரசிற்குத் தங்கள் வருவாயில் எத்தனைப் பொருள் உதவி முதற்படியாக ஒதுக்க வேண்டும் என்பதைக் குறிப்பிடும் சட்டங்களை இயற்று வதற்கு மத்திய அரசிற்கு அதிகாரம் அளித்தது. ஒவ்வொரு மாகாணங்களிலும் நிதி இலாக்கா ஒன்று அமைக்கப்பட்டு அவ்விலாக்கா செயல்படும் முறைகளுக்கு வேண்டிய சட்டதிட்டங்களை உருவாக்கவும் அதிகாரம் வழங்கப்பட்டது. அதுபோலவே மாகாணங்களை மேற்பார்வை செய்யும் அதிகாரங்களும், மத்திய அரசிற்கு வழங்கப்பட்டது. மத்திய அரசிற்கும், மாகாண அரசிற்கும் அளிக்கப்பட்ட தலைப்பிலுள்ள பொறுப்புக்களை நிர்வகிப்பதிலுள்ள சந்தேகங்களைத் தீர்ப்பதற்கும், இச் சட்டம் வேண்டிய அதிகாரங்களை மத்திய அரசிற்கு வழங்கியது. மேற்குறிப்பிட்டுள்ள சட்டங்களை எல்லாம் அமுல் செய்வதற்கு மேலும் ஏதேனும் சட்டதிட்டங்கள் தேவைப்படுமாயின் அவைகளை இயற்றுவதற்கும் அதிகாரம் வழங்கப்பட்டது.[3]

1909ஆம் ஆண்டு இந்திய சீர்திருத்தச் சட்டத்தில் மாற்றங்கள் மேலும் தேவைப்படும்போது, இந்தியப் பாராளுமன்றக் காரியதரிசி. இந்திய சபையோடு ஆலோசித்து முடிவு செய்ய அங்கீகாரம் வழங்கப்பட்டது.

மாகாணங்களில் மக்கள் சட்டமன்றங்களின் பொறுப்பில் மந்திரிகளின் அதிகாரங்களுக்குட்பட்டுப் பொறுப்புக்களை மேற்

[1] Ibid
[2] ibid P. 573
[3] Ibid P. 574

பார்வை செய்யவும், கண்காணிக்கவும், வழி காட்டவும் கவர்னர் ஜெனரலுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. மாகாணங்களில் மாற்றப்பட்ட தலைப்புக்களிலுள்ள அதிகாரங்கள் போக எஞ்சிய அதிகாரங்களெல்லாம் ஒதுக்கப்பட்ட தலைப்புக்கள் என அழைக்கப்பட்டன.[1] மாகாணங்கள் தங்கள் அதிகாரத்திற்குட்பட்ட இலாக்காக்களை நிர்ணயம் செய்வதற்கும், நிதி தேடுவதற்கும் அவ் வருவாயின் அடிப்படையில் அவர்கள் பணம் கொடுக்கல், வாங்கல் செய்வதற்கும், கடன் வாங்குவதற்கும் அதிகாரம் வழங்கப்பட்டது.[2] மேலும் புதிதாகக் கடன் வாங்குவதற்கு ஏதேனும் சட்டதிட்டங்கள் வேண்டுமாயின் அதை இயற்றுவதற்கும் அதிகாரம் வழங்கியது.

வங்காளம், சென்னை, பம்பாய் ஐக்கிய மாகாணங்கள், பஞ்சாப், பீகார், ஒரிசா, மத்திய மாகாணங்கள், அஸ்ஸாம் போன்ற மாகாணங்களில், ஒதுக்கப்பட்ட தலைப்புக்களிலுள்ள அதிகாரங்களை நடத்துவதற்கு ஒரு கவர்னரும், அவரோடு மந்திரிகளும் நியமனம் பெறச் சட்டம் அதிகாரம் அளித்தது. இம் மாகாணங்களில் கவர்னரை, கவர்னர் ஜெனரலோடு ஆலோசித்து ஆங்கிலப் பேரரசு நியமனம் செய்யும்.[3]

கவர்னரின் ஆட்சிக்குட்பட்ட ஒரு மாகாணத்தில் கவர்னர் அதிகாரபூர்வமான அறிவிப்பின் (notification) பேரில் தனது நிர்வாக சபை அங்கத்தினரையோ, அல்லது மாற்றப்பட்ட தலைப்பிலுள்ள அதிகாரங்களை நிர்வாகம் செய்ய மந்திரியையோ அல்லது மந்திரிகளையோ கவர்னர் நியமனம் செய்ய அதிகாரம் வழங்கியது. இவர்கள் கவர்னரின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கும்வரை பதவி வகிப்பர். இம்மந்திரிகள் சட்டசபை, மறுப்புக் கூறும்வரையில், நிர்வாக சபை அங்கத்தினர்களுக்குக் கொடுக்கப்படும் அளவுக்குச் சம்பளம் கொடுக்க இச்சட்டம் கவர்னருக்கு அதிகாரம் வழங்கியது. மாகாண சட்டசபைகளில் அங்கம் வகிக்காத எவரும், ஆறு மாத காலத்திற்கு மேல் மந்திரியாக இருக்க முடியாது. மாற்றப்பட்ட தலைப்பிலுள்ள இலாக்காக்களின் அதிகாரங்களை நிர்வகிப்பதில் கவர்னர் தமது மந்திரிகளின் ஆலோசனையைக் கேட்டு நடத்துவர்.[4] ஆனால், மந்திரிகளுடைய அபிப்பிராயங்கள் ஏதேனும் தகுந்த காரணங்களினால் கவர்னரைத் திருப்தி படுத்த முடியாமல் இருக்குமாயின், கவர்னர் மந்திரிகளின் ஆலோசனையிலிருந்து மாறுபட்ட கருத்துக் கொள்ள

[1] Ibid P. 574
[2] Ibid P. 574
[3] Ibid
[4] Ibid

முடியும். ஒதுக்கப்பட்ட இலாகாக்களிலுள்ள அதிகாரங்களை நிர்வகிப்பதற்கு மாகாணங்களில் கவர்னர் தம் விருப்பம் போல் அதிகாரிகள் அல்லாத மாகாண சட்டசபை அங்கத்தினர்களைச், சட்ட மன்றக் காரியதரிசியாக நியமனம் செய்ய அதிகாரம் வழங்கப்பட்டது. இக்காரியதரிசிகள், நிர்வாக சபை அங்கத்தினர்களுக்கும், மந்திரிகளுக்கும் தேவைப்பட்ட உதவிகளைச் செய்வர். இக் காரியதரிசிகளின் ஊதியம் சட்டசபையின் ஓட்டின் மூலம் நிர்ணயிக்கப்படும். சட்டசபை அங்கத்தினர் பதவியிலிருந்து ஆறு மாத காலம் தொடர்ந்து அங்கம் வகிக்காமல் இருப்பாராயின், அக்காரியதரிசி பதவியிலிருந்து நீக்கப்படுவார்.

கவர்னருடைய ஆலோசனை சபையிலிருந்து முக்கிய படைத்தளபதி, தாம் வகித்து வந்த, அங்கத்தினர் பதவியிலிருந்து நிறுத்தப்படுவார். கவர்னருடைய நிர்வாக சபையில் ஒன்றுக்குப் பதிலாக இரண்டு இந்திய அங்கத்தினர்கள் நியமனம் பெறுவர்.[1]

எல்லா மாகாணங்களிலும் இயற்றப்படும் அரசாங்க ஆணைகள் கவர்னருடைய கையெழுத்துப் பெற்றுச் சட்டமாகும்.[2] மாகாணங்களில் இருதரப்பட்ட அரசுப்பிரிவுகளின் சட்டங்களையும் அமுல் செய்யத் தேவைப்படும் ஆணைகளைப் பிறப்பிப்பார் இரு தரப்பட்ட பிரிவுகளும், தங்களுக்கு அளிக்கப்பட்ட பொறுப்புக்களை நிறைவேற்ற வேண்டிய அரசாங்க ஆணைகளைக் கவர்னர் அவ்வப்போது பிறப்பிப்பார்.

ஒவ்வொரு மாகாணத்திலும் சட்டமன்றம் ஒன்று பணியாற்றும். அம் மன்றத்தின் அங்கத்தினர்கள், நியமனம் செய்யப்பட்டவர்களாகவோ, தேர்ந்தெடுக்கப்பட்டவர்களாகவோ இருப்பார்கள். கவர்னர் இச்சட்ட மன்றத்தின் அங்கத்தினராகப் பணியாற்ற மாட்டார். ஆனால், அம் மன்றத்தில் தாம் பேசுவதற்கும், அங்கத்தினர்களை எந்நேரமும் கூட்டுவிப்பதற்கும் அதிகாரம் வழங்கப்பட்டது. இச் சட்டமன்ற அங்கத்தினர்களில் 20 சதவிகிதத்திற்கு உட்பட்டவர்கள் மட்டுமே அதிகாரிகளாக இருப்பர். 70 சதவிகிதத்திற்கு அதிகமான அங்கத்தினர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களாக இருப்பர். மாகாணங்களில் கவர்னர் தமது அதிகாரத்தின்

[1] Ibid P. 574
[2] Ibid P. 575

அடிப்படையில் இரண்டோ அல்லது அதற்கு அதிகப்படி அங்கத்தினர்களையோ, அவர்களுடைய விசேட நிபுணத்திற்காகச் சில காலங்களில் சட்டசபையின் அங்கத்தினர்களாக நியமனம் செய்யலாம்.[1] மாகாண சட்டமன்றங்கள் மூன்று வருட காலத்திற்குப் பணியாற்றும். ஆனால், கவர்னர் தமது அதிகாரங்களினால் இச்சபைகளை மூன்று வருட காலத்திற்கு முன்பே கலைத்து விடலாம். அதுபோலவே மூன்று வருட காலத்திற்குப் பின்னால் கூட அவைகள் பணியாற்ற சபையின் காலவரையறையை நீட்டலாம்: மாகாண சட்டசபைகள் எங்கு கூட வேண்டும் என்பதைப் பற்றியுள்ள அதிகாரத்தையும், அச்சபைகளைத் தாற்காலிகமாகக் கலைப்பதற்கும், சட்டம் அதிகாரம் வழங்கியது.

கவர்னருடைய சட்டசபைகளில் அலுவல்களை ஒத்திப்போட அச்சபையைத் தலைமை தாங்கும் அதிகாரிக்கு அதிகாரம் வழங்கப்பட்டது சட்டசபையினுடைய முடிவுகள் அதிகப்படி ஓட்டின் அடிப்படையில் நிர்ணயிக்கப்படும். சட்டசபையில் சம ஓட்டு வரும்போது தலைமை வகிக்கும் அதிகாரிக்கு ஒரு ஓட்டு அளிப்பதற்கு அதிகாரம் வழங்கப்பட்டது.[2] ஒவ்வொரு மாகாணத்திலுமுள்ள சட்டசபையில், தலைமை வகிக்கும் அதிகாரி, நான்கு வருடங்களுக்குப் பணியாற்றுவார். சபைக்குத் தலைமை வகிக்க ஓர் உதவித் தலைவரும் தேர்ந்தெடுக்கப்படுவார். தலைவருக்கும் உபதலைவருக்கும், கொடுக்க வேண்டிய ஊதியத்தைப் பற்றிக் கவர்னரே முடிவு செய்வார்.

மாகாண சட்டசபைகளுக்குச்[3] சமாதானத்திற்கு வேண்டிய சட்டங்கள் இயற்றவும், மாகாண அரசாங்கத்திற்குட்பட்ட நிறுவனங்களைச் செவ்வனே நடத்த வேண்டிய சட்டங்களை இயற்றவும் அதிகாரம் வழங்கப்பட்டது. 1919ஆம் ஆண்டு சீர்திருத்தச் சட்டத்திற்கு முன்பு அமுல் செய்யப்பட்ட ஏதேனும் சட்டதிட்டங்களை மாற்ற வேண்டும் எனச் சட்டசபை நினைக்குமேயாயின், அவ்வாறு மாற்றவும் அதிகாரம் வழங்கப்பட்டது. வரிகளை விதிப்பதற்கும், இருக்கின்ற வரிகளை மாற்றியமைப்பதற்கும் கவர்னர் ஜெனரலினுடைய அதிகாரம் தேவை. அது போன்று, மத்திய அரசாங்கத்துக்குள்ள அதிகாரங்களில் சட்டம் இயற்றச் சட்டசபைகளுக்கு அதிகாரம் இல்லை. மாகாணத்தில் வருடாந்திர வரவு செலவு கணக்குகள் சட்டசபையின் முன்பு

[1] Ibid
[2] Ibip P. 575
[3] Ibid

வைக்கப்படும். அரசாங்கச் செலவுக்கு வேண்டிய பணங்களைச் சட்டசபை அனுமதிக்க 'கேட்புத்தொகைமானியம்' '(Demand for Ggrants)' என்ற தலைப்பில், சட்டசபையின் வாக்கின் அடிப்படையில் இத்தொகை நிர்ணயிக்கப்படும். சட்டசபைக்கு அவர்கள் அரசாங்கம் கோரும் தொகையை அளிக்கவோ, மறுக்கவோ அல்லது குறைககவோ அதிகாரம் உண்டு.[1] ஒதுக்கப்பட்ட தலைப்பிலுள்ள இலாக்காக்களைப் பற்றியுள்ள வரவு செலவு கணக்குகளைப் பொறுத்த வரையில், சட்டசபை அரசாங்கம் கோரிய தொகையை ஒத்துக்கொள்ளவோ அல்லது குறைக்கவோ செய்தால், அத் தொகை தேவை எனக்கூற கவர்னருக்கு அதிகாரம் இருந்தது. அதுபோலவே அவசர காலங்களில் இது போன்ற தொகைகளை அரசாங்கம் செலவு செய்ய அதிகாரம் வழங்க முடியும். ஆனால், எல்லா வரவு செலவு தொகைகளும் கவர்னருடைய சிபாரிசின் பேரில்தான் சட்டமன்றத்திற்குத் தெரியப்படுத்த முடியும். ஆனால், மத்திய அரசாங்கத்திற்குக் கொடுக்க வேண்டிய பணத்தைப் பற்றியோ, மத்திய அரசாங்கக் கடன் தொகையில், மாகாண அரசாங்கங்களுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைப் பற்றியோ, இந்தியச் சட்டத்தின் அடிப்படையில் இந்திய அரசின் அதிகாரிகளுக்குக் கொடுக்க வேண்டிய உதவிப் பணத்தைப் பற்றியோ அல்லது மாகாணங்களில் (மாநிலத்) தலைமை வழக்கறிஞருடைய ஊதியத்தைப் பற்றியோ நிர்ணயம் செய்ய மாகாணச் சட்டசபைகளுக்கு அதிகாரம் இல்லை. சில தலைப்புக்களில் கூறப்படாத பணங்களின் வரவு செலவுகளில் கவர்னருக்கே கடைசி அதிகாரம் உண்டு.[2] இதுபோன்று மாகாணங்களில் கொண்டு வரப்படும் சில மசோதாக்கள், மாகாணங்களின் சமாதான வாழ்விற்கு ஏதேனும் தீங்கு விளைவிக்கும் எனக் கவர்னர் கருதுவாரேயாயின், அம்மசோதாவை மேலும் சபையில் நீடித்து வாக்குவாதம் நடத்த அனுமதிக்காமல் இருக்கக் கவர்னருக்கு அதிகாரம் உண்டு.

சட்டசபையின் நடவடிக்கைகள், கூட்டப்பட்ட அங்கத்தினர்கள் வந்ததின் பின் ஆரம்பமாகும் அதன் அன்றாடச் செயல்படும் முறைக்கு வேண்டியச் சட்டதிட்டங்களை இயற்றக் கவர்னருக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. சட்டதிட்டங்களுக்கு உட்பட்ட பேச்சுரிமை அங்கத்தினர்களுககு வழங்கப்பட்டது.[3]

[1] Ibid

[2] Ibid P. 576

[3] Ibid

சட்டசபையில் இயற்றப்படும் மசோதாக்களில் கையெழுத்திடவோ அல்லது அதைக் கவர்னர் ஜெனரலினுடைய கையெழுத்திற்கு ஒதுக்கி வைக்கவோ, கவர்னருக்கு அதிகாரம் உண்டு அதுபோலவே சில மசோதாக்களைச் சபையிலிருந்து வராமல் இருப்பதற்குத் தடை கூறவும் கவர்னருக்கு அதிகாரம் உண்டு.

மத்திய அரசாங்கத்தில் கவர்னர் ஜெனரலுக்கு உதவியாக இருசபைகளைக் கொண்ட சட்டம் இயற்றும் அங்கம் பணியாற்றும். அவையாவன: சட்டமன்றப் பேரவை, நாடாளுமன்ற மேலவை [1]

## சட்டமன்றப்பேரவை (Legislative Assembly)

மத்திய அரசாங்கத்தினுடைய சட்டமன்றப் பேரவை நியமனம் செய்யப்பட்ட அல்லது தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களால் உருவாக்கப்பட்டதாகும். சட்டமன்றப்பேரவையில் 140 அங்கத்தினர்கள் இருப்பார்கள். தேர்ந்தெடுக்கப்படாத அங்கத்தினர்கள் 40 பேராக இருப்பார்கள். அதில 20 பேர் அதிகாரிகளாக இருப்பார்கள். தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் 100 பேராக இருப்பார்கள்.

## நாடாளுமன்ற மேலவை: (Council of State)

இது சுமார் 60-க்கு மேற்படாத அங்கத்தினர்களைக் கொண்டதாக இருககும். அவ்வங்கத்தினர்கள் நியமனம் செய்யப்பட்டவர்களாகவோ அல்லது தேர்ந்தெடுககப் பட்டவர்களாகவோ இருப்பார்கள். அவர்களில், இருபதுக்கு அதிகமான பேர்கள் அதிகாரிகளாக இருக்க மாட்டார்கள். அச்சபை பணியாற்றக் கவர்னர் ஜெனரல் ஒரு தலைவரை நியமனம் செய்வார். கவர்னர் ஜெனரலுக்கு அச்சபையில் பேசுவதற்கு எப்போதும் அதிகாரம் உண்டு.[2]

[1] Ibid P. 585

[2] Ibid

# செயல் முறையில் இரட்டையாட்சி

## 1

## (அ)

### இரட்டையாட்சியின் விளக்கம் [1]

மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தத்தின் அடிப்படையில் இந்திய மாகாணங்களில் அமுல் நடத்தப்பட்ட ஒப்பற்ற ஆட்சி முறையை 'இரட்டையாட்சி' (Dyarchy) எனக் கூறுவர். 'டயார்க்கி' என்ற சொல்லில் 'டைய்' (Di) என்பதற்கு 'இருமுறை' என்றும், 'ஆர்க்கியா' (Archia) என்பதிற்கு 'ஆட்சி' என்றும் பொருள். ஆகவே, 'டயார்ககி' என்பதற்கு இருதரப்பட்ட 'ஆட்சியாளர்களின் அரசு' அல்லது 'இரட்டையாட்சி' என்பது பொருள். 1918ஆம் ஆண்டுச் சமர்ப்பிக்கப்பட்ட கூட்டாசிரியர்களின் கூட்டுத் தனிக்கையின் அடிப்படையில், இந்திய மக்களுக்கு உடனடிப் பொறுப்பாட்சி கொடுக்க முடியாவிடினும் மக்களுக்கு ஓரளவு பொறுப்பாட்சி கொடுக்க வேண்டியது தேவையென்றும், அரசின் அதிகாரங்களை இருகூருகப் பிரித்து, இவ்விரு கூறுக்கும் சட்டம் இயற்றும் ஒரு சபைக்குத் தங்களை ஓரளவு பொறுப்புள்ளவர்களாக்கிப் பிரிக்கப்பட்ட இரு கூறுகளும், ஒன்ருக வேலை செய்வதற்கு ஒரு வழி காண வேண்டும் எனறும் கூறினர்.

1919ஆம் ஆண்டு சீர்திருத்தத்தின் அடிப்படையில், மாகாணங்களில், அரசு இரு கூருகப் பிரிக்கப் புதிய சட்டம் இயற்றப்பட்டது [2] இதில் முதற்கூறு அதிகாரிகளின் பொறுப்பிலும், இரண்டாவது கூறு, பெருவாரியான மக்கள் பிரதி

[1] Ibid

[2]. See R. Coondo, The Division of powers in the Constitution, Pooland Private Limited, page 61.

நிதிகளின் பொறுப்பிலும் இருந்தன. முதற் கூறு சட்டமன்றத்திற்குப் பொறுப்பு இல்லாமலும், சட்டமன்றத்தால் மாற்ற முடியாத பாகமாகவும் இருந்தது. மறு கூறு பொறுப்புள்ள மந்திரிகள் பொறுப்பில் இருந்தது. மந்திரிகள் மாகாண சட்ட சபை அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். அவர்கள் தாங்கள் கையாளும் கொள்கைகளை, நடைமுறையில் ஆக்கும் செய்கைகளுக்குப் பொறுப்புள்ளவர்களாகவும் இருந்தார்கள். அடிப்படையில் வேற்றுமை கொண்டு, இவ்விரு கூறுகளையும் ஆட்சி செய்பவர்கள், கவர்னரின் கீழ் நிர்வாகத்தை நடத்தும் பொறுப்பில் இருந்தனர். இரு கூறுறுமே பொதுவான ஒரு மன்றத்தையே தாங்கள் பணியாற்றுவதில் நம்பி இருந்தனர். இவ்விரு தரப்பினருக்கும் ஒரு பொது வரவு செலவுக் கணக்குத் திட்டமே இருந்தது.

மந்திரிகள்[1] நிர்வாக அங்கத்தினர், இவ்விருவருடைய அந்தஸ்தும் வேறுபட்டு இருந்தன. இவ்விரு தரப்பினரும் ஒவ்வொரு பகுதியில் முழுப் பொறுப்புள்ளவர்களாகவும், அவர்களுடைய பகுதிகளில் உத்தரவுகளைப் பிறப்பிக்கத் தகுதியுடையவர்களாகவும் இருந்தனர். இதனால் மந்திரிகள் ஒதுக்கப்பட்ட பிரிவின் தலைப்பிலுள்ள இலாக்காக்களில் தலையிடவோ, அல்லது அங்கத்தினர்கள் மாற்றப்பட்ட பிரிவின் விஷயங்களில் தலையிடவோ முடியாது. ஆனால், இரு பிரிவினரும் நட்பு முறையில் கலந்தாலோசிக்கவும், அவ்வித யோசனைகளினால், கருத்தின் அடிப்படையில் ஒரு பகுதியை, மற்றப்பகுதி வசீகரிக்கவும் வாய்ப்பிருந்தது. சட்டத்தின்படி, நேர்மையான வழியில். இரு பிரிவுகளுக்கும் முழுமையான சுதந்திரம் வழங்க உறுதி அளிக்கப்பட்டது. இவர்களுக்கிடையே, ஏற்படும் சச்சரவுகள் அல்லது குற்றச்சாட்டுகள் கவர்னரின் மத்திஸ்தம் பெற்று முடிவு பெறும். அவருடைய தீர்ப்பு முடிவாக இருக்கும்.

ஆனால், மத்திய அரசாங்கத்துக்கும், மாகாண அரசாங்கத்துக்கும் இடையேயுள்ள அதிகாரங்கள், ஒரு கூட்டாட்சியில் அதிகாரங்கள் வரையறுக்கப்படுவதைப்போல் வரையறுக்கப்படவில்லை.[2] எப்பொழுதாகிலும், ஒரு குறிப்பிட்ட அதிகாரம் மத்திய அரசைச் சார்ந்ததா அல்லது மாகாண அரசாங்கத்தைச் சார்ந்ததா என்ற சந்தேகம் எழும்போது, அதை முடிவு செய்ய வேண்டியது மத்திய அரசாங்கத்தைத் தலைமை வகிக்கும்

1. See M.R. Palande 'Indian Administration' Chapter XIX, Dyarchical Government and its working, 1919–37, Two of the Provincial Government, page 277.

2 Ibid P. 277

நிர்வாக சபையின் கவர்னர் ஜெனரலே ஆகும். அவருடைய முடிவு தீர்மானமாக இருக்கும். மேலும், மாகாணங்களுக்கு ஒதுக்கப்பட்ட அதிகாரங்களில் கூடச் சிலவற்றுள், சட்டம் இயற்றக் கவர்னர் ஜெனரலினுடைய முன் அனுமதி தேவையாக இருந்தது. இதுபோலவே மாகாண கவர்னர்களுக்கும், சட்ட சபை இயற்றிய சில மசோதாக்களைக் கவர்னர் ஜெனரலினுடைய ஆலோசனைக்கென ஒதுக்கி வைத்து விடலாம்[1]. அல்லாமலும், மாகாண அதிகாரங்களைப் பொறுத்த அளவில், இந்திய அரசாங்கம் தங்கள் பொறுப்புக்களைச் சீரிய முறையில் செய்து காட்டி, இந்தியாவிலுள்ள எல்லா மாகாணங்களில் நடக்கும் காரியங்களையும், உடனுக்குடன் அவர்கள் அறியும்படியாகத் தெரிவிக்க வேண்டியது ஒரு பொறுப்பாக இருந்தது. வெளிநாட்டு விவகாரங்களைப் போன்ற அகில இந்தியப் பிரச்சினைகள் மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்திற்குட்பட்டிருந்தது.[2] இது போன்ற அகில இந்தியப் பிரச்சினைகளை இந்திய அரசாங்கம் நிர்வகிக்க, எல்லா மாகாணங்களையும் கலந்தாலோசிக்க வேண்டியிருந்தது. ஆனால், அவர்கள் கூறிய அபிப்பிராயங்களை ஒதுக்கி வைக்கவும், அவர்களுடைய ஆலோசனையைத் தள்ளுபடி செய்யவும், மத்திய அரசாங்கத்திற்கு அதிகாரம் இருந்தது. மத்திய அரசாங்கத்திற்கு, மாகாண அரசாங்கங்களின் நிர்வாகங்களைக் கட்டுப்படுத்தவும், மத்திய அரசாங்கத்தின் அதிகாரங்களைக் கட்டுப்படுத்தவும் 1919 ஆம் ஆண்டு இந்தியச் சட்டம் அனுமதித்தது. மத்திய அரசாங்கம் மாகாண அரசாங்கங்களுக்கு அனுப்பும் செய்திகளில், மத்திய அரசாங்கத்தின் அபிப்பிராயங்களைப் பரிபூரணமாகக் கூறுவார்கள் என்றும், மத்திய அரசாங்கத்தின் ஆசைகளுக்கு மாகாண அரசாங்கங்கள் அடி பணிய வேண்டிய அவசியம் வரும் என்பதும் தெரிய வந்தது. அடிபணியும் இந்தக் கொள்கை மாகாணங்களில் மந்திரிகளின் அதிகாரங்களுக்கு, விடுபட்ட தலைப்புகளுக்குக் கூடப்பொருந்தும்.[3]

என்றாலும், சட்டங்களையும், சமுதாயத்தையும் மாகாணங்களில் பாதுகாக்க ஆங்கில அரசிற்கும், மத்திய அரசிற்கும் விரிவான அதிகாரங்களை இச்சட்டம் வழங்கி இருந்தது.[4] பாராளுமன்ற இந்தியக் காரியதரிசிக்கு, இந்திய விவகாரங்களை மேற்பார்வை செய்யவும், வழிகாட்டவும், கட்டுப்படுத்தவும் பெரும் அதிகாரங்கள் வழங்கப்பட்டது. இவ்வதிகாரங்கள் கவர்னர்

[1] R. Coondoo op. Cit. 61.
[2] Ibid P. 61
[3] Ibid
[4] Ibid P. 62

ஜெனரலுக்கு அளித்துள்ள அதிகாரங்களைப் போன்றதே. பாராளுமன்றக் காரியதரிக்கு இந்திய ஆட்சியைப் பாதுகாக்க எல்லா நடவடிக்கைகளையும் மேற்கொள்ளும் அதிகாரம் வழங்கப் பட்டது. 1919 ஆம் ஆண்டு இந்தியச் சீர்திருத்தச் சட்டத்தின் கீழ் மத்திய அரசிற்கும், மாகாண அரசிற்கும் கொடுக்கப்பட்ட அதிகாரங்கள், இதிலும் சிறப்பாக மாகாணங்களுக்கு அளிக்கப் பட்ட அதிகாரங்களெல்லாம், மேற்கூறப்பட்ட அதிகாரங்களினால் இல்லாமல் ஆகிறது. அதிகாரம் வழங்கும் விதிகள் (Devolution Kules), மத்திய அரசாங்கத்தின் நிதி இலாக்காவின் வழியாக, மாகாணங்களின் வரவு செலவைக் கட்டுப்படுத்தும் அதிகாரங்கள், மாகாணங்களுக்கும் வழங்கப்பட்ட அதிகாரங்களை இல்லாமல் ஆக்கிவிடும் என்பது மற்றொன்றாகும்.[1]

(ஆ)

## மாகாண அரசாங்கத்தில் இரட்டையாட்சி

1921 ஆம் ஆண்டு ஏப்ரல் 1 ஆம் தேதி பஞ்சாப், ஐக்கிய மாகாணங்கள், பீகார், வங்காளம், அஸ்ஸாம், மத்திய மாகாணம், சென்னை ஆகிய இடங்களில் இரட்டையாட்சி புகுத்தப்பட்டது.[2] 1932 ஆம் ஆண்டு வடமேற்கு மாகாணம் கவர்னருடைய பழைய மாகாணங்களின் அந்தஸ்தைப் பெற்று, மற்ற மாகாணங்களைப் போல் ஆட்சி செய்யப்படடது. 1919 ஆம் ஆண்டு இந்திய அரசாங்கச் சட்டத்தின்படி, இந்தியாவிலுள்ள ஒன்பது மாகாணங் களில், இரட்டையாட்சி 1937 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் வரை நடைபெற்றது. மத்திய மாகாணங்களில் 1924 ஆம் ஆண்டு முதல் 1926 ஆம் ஆண்டு வரையிலும், வங்காளத்தில் 1924 முதல் 1927 வரையிலும், அதுபோன்று 1929 ஆம் ஆண்டில் சில மாதங்களும் இரட்டையாட்சி செயல்படாமல் நின்று விட்டது. இரட்டையாட்சிக்கும், மாகாண சுயாட்சிக்கும் இடைப்பட்ட 16 ஆண்டுகளில், இரட்டையாட்சியின் பொறுப்பு பெருமளவில் அதை நடைமுறையிலாக்கும் மனிதர்களிடமும், சிறிதளவே நிறுவனங்களிடமும் இருந்ததால், பல முறைகள் இரட்டை யாட்சியின் அமைப்பு மாறியது. இந்திய அரசாங்கச் சட்டத்தின் விவர அமைப்புகள், நாளடைவில் இயற்றப்படும் சம்பிரதாயங் களோடு இணைந்து செயலாற்ற வேண்டியிருந்தன. பாராளு மன்ற இருசபைக் குழுவின் அறிக்கை, கவர்னருக்கு அளிக்கப் பட்ட 'அறிவுறுத்தும் துணை பொருள்'[3] (Instrument of Instruc-

[1] See Coondoo R. opcit p.62.
[2] See Sri Ram Sharma, Sce 'A Constitutional History of India Chapter XVII, Dyarchy in Operation, page 175.
[3] Ibid

tion*) எடுத்துக் கூறிய பல சம்பிரதாயங்களைப் பின்பற்றியிருந்த தால், இரட்டையாட்சியின் நடைமுறையில் ஏற்பட்ட அநேக இன்னல்கள் தவிர்க்கப்பட்டிருக்கும் ஆனால், ஒரு சில கவர்னர்கள் மட்டுமே, இரட்டையாட்சி நடைமுறையில் ஆக்கத்தக்கதொரு அரசியல் திட்டம் என்றும் ஒரு சில திறமை வாய்ந்த இந்தியர் களே மாகாணங்களில் மக்களாட்சிக்கு மாற்றப்பட்ட இலாக்காக் களை நடத்துவதற்குத் தகுதியுள்ளவர்கள் என்றும் நம்பினர். மேலும் குறுகிய அதன் சட்டதிட்டத்தின் அடிப்படையில், ஏமாற்றம் பல ஏற்படும் என்ற கற்பனை இரட்டையாட்சிக்கு விரோதமாக இருக்கும் என கவர்னர்கள் எதிர்பார்த்துப் பணியாற் றினர்.[1]

## (இ)

## இரட்டையாட்சியின் அடிப்படையில் மாகாணங்களில் ஒதுக்கப்பட்ட இலாக்கல் (Reserved Subjects)[2]

நிதி, நிலவருமானம், பஞ்ச நிவாரணம், நீதி, காவற்படை, உபசாரச் சம்பளம், குற்றவாளிகள், அச்சடிக்கும் அச்சகங்கள், செய்தித்தாள்கள், புத்தகங்கள், நீர்ப்பாசனம், நீர்நிலைகள், சுரங்கங்கள், தொழிற்சாலைகள், மின்சாரம், வாயு, கொதிகலங்கள், தொழிலாளர் நலன்கள், தொழிலாளர் சச்சரவுகள், இயக்கும் சக்தி வண்டிகள், சிறிய துறைமுகங்கள், பொதுப் பணிகள், ஆகியவை நிர்வாகசபையில் கவர்னர் பொறுப்பில் இருந்தன. கவர்னர், ஒவ்வொரு வாரமும் நிர்வாக சபையின் முன்பு சமர்ப்பிக்க வேண்டிய அலுவல்களைத் தீர்மானித்து, அதன் முடிவுகளைப் பதிவுச்செய்து, அவைகள் நடைமுறையில் கொண்டு வரப்படுகின்றனவா என்பதைக் கவனிப்பார். கவர்னரின் நிர்வாக சபை சுமார் இரண்டு முதல் நான்கு அங்கத்தினர்களைக்கொண்ட தாக இருக்கும்.[3] ஒவ்வொரு நிர்வாகசபை அங்கத்தினரும், ஒவ்வொரு இலாக்காவின் பொறுப்பை ஏற்று, குறிப்பிட்ட இலாக்கா செயலாளர் மூலம் அனுப்பப்படும் தீர்மானங்களுக்கு அவர் ஒப்புதல் அளிப்பாராகில், அத்தீர்மானத்தினால் எழும் பிரச்சினைகளைத் தானே முடிவு செய்வார். முக்கியத்துவம் வாய்ந்த பெரும் பிரச்சினைகள், அங்கத்தினருக்கும், செயலாளருக்கும் இடையே சில குறிப்பிட்ட பிரச்சினைகள் பற்றி ஏற்படும் அபிப் பிராய பேதங்கள், சட்ட நிரூபண திட்டங்கள், பொதுப்பணித்

[1] Ibid P. 175
[2] Ibid, p. 175
[3] Ibid 176

துறை பற்றிய பிரச்சினைகள் ஆகியவைகளைப்பற்றி, வெவ்வேறு துறையினரிடையே ஏற்படும் அபிப்பிராய பேதங்கள், இந்திய அரசாங்கத்திற்கு அல்லது பாராளுமன்றப் செயலாளருக்கு விரைவில் அனுப்ப வேண்டிய செய்திகள் போன்ற முக்கிய பிரச்சினைகளெல்லாம் அரசாங்க நிர்வாகசபை முன்னால் வைக்கபடும். கடுமையான அபிப்பிராயபேதம் ஏற்பட்டு, நிர்வாக சபையில் ஓட்டு எடுக்கப்படுமாயின், அப்போது ஓட்டு அளிக்கும் உரிமை கவர்னருக்கு வழங்கப்பட்டது. மேலும், மாகாணத்தின் நன்மை கருதி கவர்னர் தனது சுதந்திரமான கருத்தின் அடிப்படையில், அந்நிர்வாகசபையின் பெரும் பான்மையோரின் முடிவைக்கூட மாற்றியமைக்க அதிகாரம் இருந்தது.[1] இதை அறிந்திருந்த நிர்வாகசபை அங்கத்தினர்கள், கவர்னர் இவ்வதிகாரத்தை நடைமுறையில் கொண்டுவர வாய்ப்பு அளிக்கபடவில்லை.

(ஈ)

## மாற்றபட்ட இலாக்காக்கள் (Transferred Subjects)[2]

மாற்றப்பட்ட துறையில் கல்வி, நூலகம், பொருட்காட்சி நிலையம், உள்ளாட்சி அரசாங்கம், வைத்திய நிவாரணம் பொது மக்கள் ஆரோக்கியம், சுகாதாரம், விவசாயம், கூட்டுறவுக் சழகங்கள், கால்நடைத்துறை, மின்துறைகள், காடுகள் (பம்பாய் பட்டிலும்) பொதுப்பணிகள், தீர்வை, வரி, பிரமாணங்கள் பதிவு செய்தல், சணக்கெடுப்பு, தொழிற்சாலைகள், எடை அளவுகள், போலிப் பொருள் கலவை நீக்குதல், மிருகங்களைக் கொடுமைப் படுத்துதலை நீக்குதல், பொதுப்படையான பொழுது போக்கு நிகழ்ச்சிகளைக் கட்டுப்படுத்துதல், மதசம்பந்தமான காரியங்கள், தர்மசாலைகளைக் கட்டுப்படுத்துதல் ஆகியவற்றில் மந்திரிகள் கவர்னருக்கு அறிவுரை கூறுவர். இப்பகுதியில் மந்திரிகளுக்கு ஒருமித்த நிலை (corporate existence) இல்லை. மாற்றப்பட்ட பொருள் பற்றி முடிவு எடுக்க எல்லா மந்திரிகளும் ஒன்று கூட வேண்டும் என்று சட்டத்தில் கூறப்படவில்லை. ஆகையால், கவர்னர் ஒவ்வொரு மந்திரியையும் தனிப்பட்ட முறையில் பரிபாலித்தார்.

மந்திரிகள்,[3] தங்கள் செயலாளர்களுடன், கருத்தொருமித்து முடிவு செய்யும் பொருள் பற்றி ஆணை பிறப்பிக்க முடியும். சிறிய பிரச்சினைகளில் பட்டுமே இவ்வாணை பிறப்பிக்கலாம். ஆனால்,

[1] Ibid P. 176.
[2] Ibid
[3] Ibid

இவ்விருவருக்கிடையே அபிப்பிராய பேதம் ஏற்படுமாயின் கவர்னரே தீர்மானம் எடுப்பார்,[1]

மாற்றப்பட்ட தலைப்பிலுள்ள இலாக்காக்களின் ஆணைகள் தனிப்பட்ட மந்திரிகள் பெயரில் வெளிவந்தன.[2] ஆனல், நிர்வாக சபையில் கவர்னர் வழியாக வெளியாக எல்லா அரசாணைகளும், நிர்வாக சபையில் கவர்னர் என்ற பெயரில், அது சம்பந்தப்பட்ட இலாக்காக் காரியதரிசியின் கையெழுத்தோடு, வெளிவந்தன.[3]

(உ)

## மேற்கவிந்த தலைப்புகள் (Overlapping Subjects)[4]

ஒரே அரசாங்கம் நிர்வாகத்தில் சட்டம் அமுல் செய்யும் இரு பகுதிகளை, எல்லைக்கசிவு இல்லாத இரு பகுதிகளாகப் பிரிக்க இரட்டை ஆட்சி ஒரு நுட்பமற்ற சட்ட அமைப்பல்ல பிரிக்கப்பட்ட இருதரப்பு இலாக்காக்களிடையே வேண்டுமளவு சிக்கல்கள் இருந்தன. உதாரணமாக கே. வி. ரெட்டி நீர்ப்பாசனம், விவசாயக்கடன், சட்டநிர்வாகம் இவ்விரண்டையும் தவிர்த்த ஒரு விவசாய மந்திரியாக இருந்ததாகக் கூறினர். மூடிமன் குழுவின் பெரும்பான்மை, சிறுபான்மை அறிக்கைகள் இந்தக் கேள்வியை ஆராய்ந்து, மாற்றப்பட்ட, ஒதுக்கப்பட்ட பகுதிகளின் பரஸ்பர ஒற்றுமையையும், இலாக்காக்களிடையேயுள்ள தொடர்பையும் திட்டவட்டமாகப் பிரிப்பதென்பது முடியாத காரியம் என அறிவித்தன. இந்த முடிவை பம்பாய் அரசாங்கம் ஒத்துக் கொண்டு கையொப்பமிட்டது. மேலும், இரட்டையாட்சித் திட்டத்திலுள்ள சீர்திருத்த முறைகளை வழிவகுத்த முன்னாள் மந்திரிகளும், இம்முடிவிற்கு ஒப்புதல் தெரிவித்தனர்.

அங்கத்தினரோ, மந்திரிகளும்கொண்டு வரும் எந்த முக்கியப் பிரச்சினையும், அது சம்பந்தப்பட்டப்பிரேரணை அரசாங்கத்தின் எப்பகுதியைச் சாரவில்லையோ, அப்பகுதியையும் பாதிப்பதாக இருந்தது. அம்மசோதாவின் மேல் நடக்கும் வாதங்களும், அதனல், எடுக்கப்படும் நடவடிக்கைகளும், அரசாங்கத்தின் எப்பகுதியை அப்பிரேரணை முதலில் பாதிக்கவில்லையோ அப்பகுதியைப் பின்னல் மேற்கொள்ளும் நடவடிக்கைப் பாதிப்பதாக இருந்தது.[5]

[1] Ibid P. 177.
[2] Ibid, Page 177.
[3] See. M.R.Palanda, op.cit P. 278.
[4] Ibid
[5] Ibid p. 278

ஒதுக்கப்பட்ட, மாற்றப்பட்ட பிரிவுகளில் எதற்கு வேண்டு மானாலும் சந்தேகம் எழலாம். அந்தச் சந்தேகத்தைப் போக்கி இறுதியான தீர்ப்பளிக்கும் முழுப் பொறுப்பும் மாகாண கவர்னரிடம் இருந்தது. எல்லாவிதமான வழக்குகளும் அவரிடத் திலேயே ஆலோசிக்கப்பட வேண்டியிருந்தது.[1]

(ஊ)

## ஒதுக்கப்பட்ட இலாக்காக்களுக்கெதிராக மாற்றப்பட்ட இலாக்காக்கள்[2]

பொதுப்படையான பிரச்சினைகளில் குறிப்பாக மாகாணங் களில் வருமானப் பகிர்வு விவகாரம் பற்றி, அரசாங்கத்தின் இரு பகுதிகளான, மாற்றப்பட்ட பகுதியும், ஒதுக்கப்பட்ட பகுதியும், கலந்தாலோசித்த முடிவு எடுத்தன. கவர்னர் இக்கூட்டங் களுக்குத் தலைமை வகித்து, இரு பகுதியினரும் ஒத்த முடிவுக்கு வராவிடில், ஒவ்வொரு பகுதியினரும் வருமானத்தில் செலவிடப் பட வேண்டிய தொகையை, அவராகவே தீர்மானித்தார். நிதி விவகாரம் அரசின் ஒதுக்கப்பட்ட பகுதியில் இருந்ததால், மந்திரிகள், செலவுகளைப் பற்றிய பிரேரணை ஒன்றை, இறுதியாக வருமானப் பகிர்வு முடிவு எடுப்பதற்கு முன்பாக, நிதி இலாக் காவில், ஆலோசனைக்கு வேண்டிக் கவர்னர் முன்பு சமர்ப்பிக்க வேண்டும். இவ்வாருக மந்திரிகளின் தேவைகளை முன்னதாக அறிந்து, நிர்வாக சபையில் கவர்னர் தம் ஆலோசனையைக் கூறுவார். இதனுல், இணைப்புக் கூட்டத்திற்கு வந்த மந்திரிகள், ஒதுக்கப்பட்ட இலாக்காக்களின் செலவு திட்டங்களைப்பற்றி எந்தவித முன் அறிவிப்புமின்றி கூட்டத்தில் கலந்து கொள்ளும் நிலை ஏற்பட்டது.[3] மந்திரிகள், நிதி இலாக்கா தங்களை நேர்மை யாக நடத்தவில்லை எனக் கருதினுர்கள். மாற்றப்பட்ட தலைப்பில், வரி இலாக்காவைத் தவிர. மற்ற எல்லா இலாக்காக்களும் செலவு செய்யும் இலாக்காக்களாகவும், நாட்டுப் புனரமைப்பு இலாக்காக் களாகவும் இருந்தன. இதனுல், இலாக்காக்களை விரிவுபடுத்த அதிகமான நிதி தேவை என்று மந்திரிகள் கோரினர். இத்தரு ணங்களிலெல்லாம் ஒதுக்கப்பட்ட அரசாங்க அதிகாரத்தில் உட்பட்ட நிதி இலாக்கா, பொதுவாக எப்பொழுதும் அதிகமாக வரிகளை விதிக்க வேண்டும் என்ற ஒரே வழியைச் சுட்டிக்காட்டும். ஆனுல், இவ்வாறு அதிக வரியில் வரும் பணம், மந்திரிகள்

[1] Ibid
[2] Sri Ram Sharma – op. cit., p. 177
[3] Ibid

பொறுப்பிலுள்ள இலாக்காக்களை நடத்த மட்டும் செலவு செய்யப் படும் என்றல்லாமல், அப்பணம் அரசாங்கத்தில் பொதுவாக எல்லா இலாக்காக்களுக்கும் விநியோகிக்கப்படும் என நிதி இலாக்கா வாதாடும்.[1] இதனுல், மந்திரிகள், புதிய வரி விதிக்க பொறுப்பு கொண்டு, மக்களிடையே செல்வாக்கை இழந்த போதிலும், அக்கொள்கையினுல் வரும் பலன்கள், அம்மந்திரிகளை அதிகமாகச் சார்வதில்லை எனக் கவலை கொண்டனர். இணைப்புக் கூட்டமானது நிதி பற்றியதாக மட்டுமில்லையென்றும் சில அதிகார பூர்வமான சாட்சியங்கள் மூடிமன் குழு முன்பாகக் கூறின. சில மாகாணங்களில், உதாரணமாகச் சென்னையில், அரசாங்கத்தின் இணைப்புக் கூட்டங்கள், விதிவிலக்கு இல்லாமல் சட்டத்தின்படி நடத்தப்பட வேண்டும் என்று மந்திரிகளும் நிர்வாகசபை அங்கத்தினர்களும் வேண்டினர். இந்நடவடிக் கைக்குக் கவர்னரின் ஆதரவு மிகுதியாக இருந்தது. ஆனுல், மற்ற மாகாணங்களில் இணைப்புக் கூட்டமும், ஆலோசனைகளும், ஒதுக்கப்பட்ட இலாக்காக்கள், தங்கள் நடவடிக்கைகளை மந்திரி களோடு கலந்தாலோசிக்க வேண்டுமென்று கருதினுல் மட்டுமே நடத்தப்பட்டன. இம்மாதிரியான நிகழ்ச்சிகளிலும், சில மந்திரிகள், நிர்வாகசபை அங்கத்தினர்களுக்கு முன்னறிவிப்பாக அனுப்பப்பட்ட 'அரசாங்கத் தகவல்கள் தங்களுக்குக் கிடைக்க வில்லை என அங்கலாய்த்து கொண்டனர்.

மாற்றப்பட்ட இலாக்காவில் பணிபுரியும் அதிகாரிகளும், நிர்வாக சபையில் கவர்னர் அதிகாரத்திற்குட்பட்டிருந்தனர்.[2] மந்திரிகளின் செயலாளர்கள், மந்திரிகளுக்குப் பொறுப்புள்ள மாற்றப்பட்ட இலாக்காவை மட்டுமல்லாமல், ஒதுக்கப்பட்ட இலாக்காக்களையும் மேற்பார்வை செய்ததினுல், மேலும் சீர்கெடும் நிலை ஏற்பட்டது. மாகாணத் தலைமைச் செயலகத்திலுள்ள வெவ்வேறு இலாக்காக்களைச் சார்ந்த சிற்சில பகுதிகள் மட்டுமே மந்திரிகளின் பொறுப்புக்கு மாற்றப்பட்டன. செயலாளர்கள், அரசாங்கத்தின் இரு கூறிலும் உட்பட்ட பல இலாக்காக்களுக்குப் பொறுப்புடையவர்களாக இருந்ததினுல், மந்திரியின் பொறுப்பு களை முழுமையாக ஏற்று நடத்தும் ஒரு காரியதரிசி, அவர்கட்கு எப்போதுமே கிடைத்ததில்லை. மிகுதியான மாகாணங்களில், மந்திரிகள் பல செயலாளர்களுடன் பங்கு கொண்டதால், மந்திரி யினுடைய கடமையையும், பொறுப்பையும் ஒரு குறிப்பிட்ட காரிய தரிசி எப்போதும் உணர்ந்ததில்லை.[3] கவர்னரை நேரடியாகச்

[1] Ibid P. 178
[2] Ibid page, 178
[3] Ibid p. 178

சந்தித்துப் பேசும் வாய்ப்பு செயலாளர்களுக்கே அதிகமாக அளிக்கப்பட்டிருந்ததால், மந்திரிகளின் அந்தஸ்து மேலும் குறைந்தது. மந்திரிகள், தங்கள் அதிகாரத்தினுல் செயலாளர்களை நீக்குவதற்கு முன், கவர்னரின் முழு ஆதரவையும் பெற்றிருக்க வேண்டும். அதுபோலவே, மாற்றப்பட்ட இலாக்காவிற்குத் தேவையான பிரதிநிதிகளை நியமிப்பதற்கும், ஒதுக்கப்பட்ட இலாக்காவின் அதிகாரிகளையே எதிர்பார்த்திருக்க வேண்டியிருந்தது. வரிகள், பதிவு செய்தல், கணக்கெடுப்பு, எடை அளவுகள், கலப்படம் செய்வதைத் தவிர்த்தல், மிருகங்களைக் கொடுமைப்படுத்துதலைத் தவிர்த்தல், சூதாட்டத்தைக் கட்டுப் படுத்துதல், மத சம்பந்தமான தர்ம நீதிகள், உள்நாட்டு சுயாட்சி இலாக்காக்கள் போன்றவை, மாவட்ட நிர்வாகத்தினுல் பரிபாலனம் செய்யப்பட்டன.[1] கல்வி, பொதுப்பணி, விவசாயம், வைத்திய நிவாரணம், கூட்டுறவு, கடன் சங்கங்கள் போன்றவைகள், மேற்பார்வையிடும் உரிமை ஜில்லா அதிகாரிகளிடம் இருந்தது. மந்திரிகள், ஜில்லாக்களில் தங்கள் இலாக்காக்களை மேற்பார்வை செய்ய பொதுப் பணியாளர்களை நியமித்திருந்த போதிலும், அவர்கள் மந்திரிகளுக்குக் கீழ்ப்படிவதைவிட, ஜில்லா அதிகாரியிடம் நல்லுறவு கொள்வதே லாபகரமானது எனக் கருதினர். பொதுப்பணியாளர்கள்,மந்திரிகளின் அதிகாரத்திற்குப் பயந்தோ அல்லது அவர்களுடைய அனுகூலத்தைப் பெறவோ முயற்சிக்காமல் இருக்க வாய்ப்பு ஏற்பட்டதினுல் ஒழுங்கு முறைகள் நன்ருக அமுல் செய்யப்பட முடியவில்லை. பொதுப் பணியாளர்களின் பதவிகள் பற்றியும், மாற்றல், பதவி உயர்வு, தாழ்வு, நன்னடத்தை பற்றிய உத்திரவுகளெல்லாம் கவர்ன ராலும், ஒதுக்கப்பட்ட இலாக்காக்களினுலும் செயல்படுத்தப்பட்டு வந்தன.[2]

## 2

## மாகாண நிர்வாகம்

### கவர்னர்[3]

1661 ஆம் ஆண்டு சாஸனத்தில்தான் (charter of 1661) கவர்னரை நியமிப்பதற்கான அதிகாரங்கள் முதன் முதலாகக் குறிப்பிடப்பட்டது.[4] அன்றிலிருந்து கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சிக்குட்பட்ட இடங்களை நிர்வகிக்கக் கவர்னர்கள் தொடர்ந்து

[1] Ibid p. 179
[2] Ibid
[3] M. R. Palande op. cit. Page 278
[4] Ibid

நியமிக்கப்பட்டனர். அவர்களை நியமிக்கும் அதிகாரம் கம்பெனியின் இயக்குநர்களிடம் இருந்து வந்தது. கம்பெனியின் ஆட்சி காலத்தின் பின், பாராளுமன்ற இந்திய செயலாளரின் சிபாரிசின் பேரில் கவர்னர்கள் நியமிக்கப்பட்டனர். மாகாண கவர்னர்களும், பிரதானக் கமிஷனர்களும், கவர்னர் ஜெனரலின் சிபாரிசின் பேரில் நியமிக்கப்பட்டார்கள். மாண்ட்போர்ட் சீர்திருத்தத்திற்குப் பின்பு எல்லா மாகாணங்களும், கவர்னருடைய மாகாணங்களாக உயர்த்தப்பட்ட போதிலும், உத்தியோக நியமனத்திலுள்ள பழைய வேறுபாடுகள் நிலைத்திருந்தன. இங்கு இரட்டையாட்சி திட்டத்தில் கவர்னருடைய நிலையைப் பற்றிச் சுருக்கமாக விவரிப்பது அவசியமானதாகும்.

### கவர்னருடைய நிர்வாக அதிகாரங்கள்[1]

மாகாண நிர்வாகத்தின் தலைமைப் பொறுப்பைக் கவர்னரே வகித்தார். மாகாண அரசாங்கத்தில் மிக்க அதிகாரம் நிறைந்தவராகவும் விளங்கினர். சாதாரண அதிகாரங்களும், விசேட அதிகாரங்களும் அவருக்கு அளிக்கப்பட்டிருந்தன. அவர் நிர்வாக சபைக் கூட்டங்களுக்குத் தலைமை தாங்கினர். மந்திரி சபையைக் கூட்டி அதோடு தனி ஆலோசனையும் நடத்தினர். நிர்வாகசபை அங்கத்தினர்களுக்கும், மந்திரிகளுக்கும் இலாக்காக்களைப் பிரித்துக் கொடுத்தார். அவர்கள் செயலாற்றும் முறை பற்றிய சட்டங்களையும் இயற்றினர். சில அபூர்வமான சமயங்களில் நிர்வாக சபையின் அதிகாரங்களை மீறவும் அதிகாரம் பெற்றிருந்தார். பொறுப்புள்ள மந்திரிகள் அதிகாரத்திற்கு மாற்றப்பட்டிருந்த பொறுப்புக்களை நிர்வகிப்பதில் கூடத் தீவிர பங்கு எடுத்துக்கொண்டார். அவர் தேவையானபொழுது மந்திரிகளுடைய முடிவுகளில் குறுக்கிடவும் அனுமதிக்கப்பட்டிருந்தார். பல முறைகள் இம்மாதிரியான குறுக்கீடுகள் நடைமுறையில் இருந்தன. பாராளுமன்ற இரு சபைக்குழு, ஒரு குறைந்த அளவுக்கு, இத்தலையீடுகளைக் கட்டுப்படுத்த வேண்டுமெனப் பரிந்துரை செய்த பின்னரும், கவர்னர்கள் தொடர்ந்துமாற்றப்பட்ட இலாக்காக்களின் நிர்வாகத்தில் தலையிட்டனர் என மூடிமன் குழுவிடம் புகார் செய்யப்பட்டது.

### கவர்னரும், மாகாண நிர்வாகமும்[2]

வெவ்வேறு துறையின் செயலாளர்களும், ஒவ்வொரு வாரமும் கவர்னரைச் சந்தித்து, அவரவர் பிரச்சினைகளைப்பற்றி விவா

[1] Ibid, page 279
[2] See Sri Ram Sharma op cit 177

திப்பார்கள். ஒவ்வொரு துறையினரும் வேலையில் முன்னேற்றம் பற்றிய வாரஅறிக்கை ஒன்றைக் கவர்னருக்குக் கொடுப்பார்கள். இந்த அறிக்கைகள் செயலாளர்களால் தயாரிக்கப்படும். கவர்னரிடம் மூலப் பிரதி கொடுக்கப்பட்ட பின்பு, மற்ற அங்கத்தினர்களுக்கும், மந்திரிகளுக்கும் பிரதிகள் அளிக்கப்பட்டன.

## கவர்னரின் சட்டசபை அதிகாரங்கள்[1]

மாகாணச் சட்டசபைகளால் அனுப்டட்டஎல்லாச் சட்டங்களும் கவர்னரின் அங்கீகாரத்தைப் பெற வேண்டும். சில சமயங்களில், மசோதாக்களைத் தாக்கல் செய்யவும், அவருடைய முழுச் சம்மதம் தேவையாக இருந்தது. கவர்னரால் முக்கியமானதாகக் கருதப்பட்ட ஒரு மசோதாவை, சட்டசபை ஆமோதிக்காவிடினும் எதிர்ப்பைப் பொருட்படுத்தாது, ஒரு சட்டமாக அமுலாக்க முடியும்.

## கவர்னரின் அவசர அதிகாரங்கள்[2]

சில சமயங்களில் வரவு செலவு திட்டக் கூட்டங்களில் ஏதேனும் முட்டுக்கட்டை ஏற்பட்டால், இரு பகுதிகளினிடையேயுள்ள இலாக்காக்களில், விவேகத்துடன் நிதிப் பங்கீடுகளைப் பற்றி முடிவு செய்யும் பொறுப்பு கவர்னரிடம் இருந்தது. இது போலவே, பெரும்பான்மையான சட்டசபை அங்கத்தினர்கள் மந்திரிசபை பொறுப்பை ஏற்க மறுத்தாலும், மற்றவர்களைப் பொறுப்பேற்கத் தடுத்தாலும், மற்றவர்களுடைய ஊதியத்திற்கு ஓட்டளிக்க மறுத்தாலும், மாற்றப்பட்ட பகுதியின் நிர்வாகத்தைத் தாமே ஏற்றெடுத்து நடத்துவதற்கு முழு அதிகாரங்கள் கவர்னருக்கு அளிக்கப்பட்டிருந்தது. வங்காளத்திலும், மத்திய மாகாணத்திலும் கவர்னர்கள் இந்த அவசர கால அதிகாரங்களை நிரந்தரமாகப் பயன்படுத்தினர்.

## நடுமைநிலை யாளராக ஆற்றும் பணி[3]

இரட்டையாட்சியின் திட்டத்தின் சிறப்பு அம்சங்களால் கவர்னருடைய நிலைமை மேலும் வலுப் பெற்றது. அது போலவே ஒதுக்கப்பட்ட, மாற்றப்பட்ட பகுதிகளின் அரசியல் அந்தஸ்து பொருத்தமற்றதாக இருந்தது. இப்பகுதிகளுடைய அமைப்பு, வேலை செய்யும் விதம், வெளித் தோற்றம் எல்லாமே

[1] See M. R. Palande op cit 279
[2] Ibid
[3] Ibid, page, 280

வேறுபட்டதாக இருந்தன. அரசின் இருதரப்பினரும், ஒருவரோடொருவர் சுமுகமாகவும், ஒற்றுமையாகவும் பணியாற்ற முடியாமல், ஒருவரோடொருவர் சண்டையிட்டு நிர்வாக இயந்திரத்தை இயக்குவதில் இடையூறுகள் ஏற்பட வாய்ப்புள்ளதாக இருந்தது. முக்கியமான வேலைகளில் கருத்து வேறுபாடுகள் எழாமலே இருக்குமாறு திறமையாக நிர்வகிக்கும் பொறுப்பு கவர்னரிடம் ஒப்படைக்கப் பட்டிருந்தது. என்ருலும், ஏதேனும் தகராறு ஏற்படுமேயாயின், அவைகள் சிநேக முறையிலும், ஒத்துழைப்பினுலும் தீர்த்து வைக்க வேண்டிய பொறுப்பும் கவர்னரையே சார்ந்திருந்தது. கவர்னர் சண்டையிடும் இரு பிரிவுகளிடையே நடுநிலைமை நாட்டி, சச்சரவுகளினுலும், வேறுபட்ட கருத்துக்களினுலும், இரட்டையாட்சியாகிய புதிய படகு இக்கட்டான பாறைகளில் மோதி அழிவு பெருமல் காப்பாற்றக், கடமைப்பட்டிருந்தார்.

## நிர்வாகத்தில் கவர்னர் பங்கு[1]

சுருங்கக்கூறின், கவர்னர், மாகாண நிர்வாகத்தின் சுழலச்சாக இருந்தார். மாகாண நலனை உத்தேசித்து ஒதுக்கப்பட்ட இலாக்காவில், கவர்னர் எந்தவிதமான நடவடிக்கையும் மேற்கொள்ளலாம். மாற்றபபட்ட இலாக்கா பகுதிகளில், 'போதுமான காரணம்' காட்டி நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று தோன்றினுல், அவர் உத்திரவு பிறப்பிக்கலாம். அல்லது மந்திரிகளின் அறிவுரைக்கு உடன்பட்டும் நடக்கலாம். இரண்டு பகுதிகளுக்கும் மாகாண வருமானங்களைப் பகிர்ந்து கொடுப்பார். இரண்டு பகுதிகளுக்குமிடையே அபிப்பிராய பேதம் ஏற்பட்டால், எப்பகுதி அப்பிரச்சினையைக் கையாள வேண்டும் என்பது பற்றிக் கவர்னரே உடனடியாக முடிவு எடுப்பார்.[2]

கவர்னர், மாகாண நிர்வாகத்திற்குட்பட்ட பதவியாளர்களையும், இந்திய அரசாங்க அதிகாரிகளையும் பதவியில் அமர்த்தவும், மாற்றவும், உத்திரவு பிறப்பித்தார். இவ்விரு தரப்பட்ட பணியாளர்களிடத்தே நடைமுறையில் எழும் பிரச்சினைகளைப் பாராளுமன்ற இந்திய செயலாளரிடம் முறையிடவும் வழி வகுக்கப்பட்டது. மேலும், மாற்றப்பட்ட பகுதிகளின் நிர்வாகம், மந்திரிகளின் மூலம் முடியாமற்போனுல்,கவர்னர் தாற்காலிகமாகத் தாமாகவே பாராளுமன்ற இந்திய செயலாளரின் ஒப்புதலுடன்

[1] See Sri Ram Sharma op. cit. page 180

[2] Ibid 180

நிர்வகிக்க அதிகாரம் பெற்றிருந்தார். சிறப்புப் பட்டங்கள் அளிப்பதற்கு அவர் சிபாரிசு தேவை. கவர்னர், மாகாணங்களில் ஒதுக்கப்பட்ட இடங்களின் நிர்வாகத்திற்கும், முக்கியமாகப் பின்தங்கிய பகுதிகளுக்கும் பொறுப்புடையவராக இருந்தார்.

கவர்னர் தம் விருப்பம்போல், மந்திரிகளைப் பதவிப் பொறுப்பேற்க நியமித்தார். உயர் நீதிமன்ற நீதிபதிகளாகவும், நிர்வாகசபை அங்கத்தினர்களாகவும் பதவி பெறச் சிபாரிசு செய்தார்... அவருடைய சிபாரிசுகள் வழக்கமரக, நிர்வாக சபையில், அதிகாரிகளல்லாத அங்கத்தினர்களையும், உயர் நீதிமன்ற நீதிபதிகளையும் நியமிப்பதற்கு ஏற்றுக் கொள்ளப்பட்டன.[1]

மாகாண சட்டசபையில், நியமனம் செய்யப்பட்ட அங்கத்தினர்கள் கவர்னரால் நியமனம் செய்யப்பட்டுச் சட்டத்தின் மூலம் தேர்தல் பெற்றுப் பதவி பெறுகிறுர்கள். மொத்த அங்கத்தினர் தொகையில் கவர்னரால் நியமனம் செய்யப் பட்டவர்கள் 20 சதவிகிதத்திற்கு மேற்படக் கூடாது. மொத்த எண்ணிக்கையில் 16 சதவிகிதத்திற்கு மேற்பட்டு அதிகாரிகள் இருக்கக் கூடாது. ஆனுல், உண்மையில், சைமன் குழு அறிக்கையின்படி தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் குறைவாகவே இருந்தனர் என்பதைப் பின்வரும் எண் தொகையிலிருந்து அறியலாம்.[2]

| வங்காளம் | பம்பாய் | சென்னை | மத்திய மாநிலம் | உத்தரப் பிரதேசம் | பீகார் | பஞ்சாப் | அஸ்ஸாம் |
|---|---|---|---|---|---|---|---|
| அங்கத்தினர் மொத்த எண்ணிக்கை | | | | | | | |
| 140 | 114 | 132 | 73 | 123 | 123 | 94 | 53 |
| நியமிக்கப்பட்ட அங்கத்தினர்கள் | | | | | | | |
| 26 | 28 | 34 | 18 | 23 | 27 | 23 | 14 |
| நியமிக்கப்பட்ட அதிகாரி–அங்கத்தினர்கள் | | | | | | | |
| 16 | 19 | 11 | 19 | 17 | 15 | 15 | 7 |

[1] Ibid

[2] Ibid, page 181

நிர்வாகசபை[1] அங்கத்தினர்களைத் தவிர மற்ற எல்லா அங்கத்தினர்களும் தங்கள் விருப்பம்போல் ஓட்டளிப்பதற்குப் பாராளுமன்ற இருசபைக் குழு சிபாரிசு செய்திருந்தது. ஆனால், இந்த முறை ஏற்றுக் கொள்ளப்படவில்லை. கவர்னரின் உத்திர வின் பேரில் அதிகாரிகள் ஓட்டளித்தனர். அதிகாரிகளல்லாத அங்கத்தினர்களை நியமனம் செய்யும்போது அவர்கள் அரசாங்கக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு நடப்பார்களா என ஆராய்ந்த பின்னரே, அவ்வங்கத்தினர்கள் நியமனம் செய்யப்பட்டனர். இவ்வாருகக் கவர்னர் அதிகப்படியான ஓட்டுக்களைத் தம்வசம் வைத்திருந்தார்.

மாகாண சட்டசபைகளில் தேர்தல்[2] நடத்துவது, நிர்வாக சபையில் கவர்னரின் பொறுப்பில் இருந்தது. வாக்காளர் பட்டியல் தயாரித்தல், தேர்தலில் போட்டியிடுபவர்களுக்கு அழைப்பு அனுப்புதல், பதிவுத் தாள்களைப் பார்வையிடுதல், ஓட்டுச் சாவடிகளை நிர்ணயித்தல், ஓட்டுப்பதிவு அலுவலகர்களை நியமித்தல் போன்ற பிரச்சினைகள் ஒதுக்கப்பட்ட பகுதியினரால் நிர்வகிக்கப்பட்டது. சட்டசபையைக் கூட்டுவதும், ஒத்திப் போடுவதும், மூன்று வருடங்கள் முடிவதற்குள் கலைப்பதும், அல்லது மேலும் ஒரு வருட காலம் நீடிக்கச் செய்வதும், கவர்னரின் அதிகாரத்திற்குட்பட்டவைகளே. தேர்தல் விண்ணப்பங்களைக் கவனிக்கவும், தேர்தல் சச்சரவுகளை ஆராயக் குழுக்களை அமைத்து விசாரணை நடத்தவும், அக்குழுக்களின் தணிக்கையின் அடிப்படையில் ஆணைகளைப் பிறப்பித்தார்.[3]

கவர்னரின், சட்டசபையின் முதல் தலைவரை மட்டும் நியமிக்க அதிகாரம் பெற்றிருந்தார்.[4] நான்கு வருடங்களில் அடுத்தடுத்து வரும் காலியிடங்களையும் அவரே நிரப்புவார். அதன் பிறகு, சட்டசபை, கவர்னரின் ஒப்புதலைப் பெற்று, தாமாகவே தலைமை அதிகாரியைத் தேர்ந்தெடுக்கும்.

சட்டசபையில் கவர்னர் ஓர் அங்கத்தினராக இல்லை. ஆனால், முதல்படியாக ஸ்திரமான உத்திரவுகள் நிர்வாக சபையில் கவர்னரால் பிறப்பிக்கப்பட்டது. அடுத்தடுத்து வரும் மாறுதல்களுக்குக் கவர்னர் ஒப்புதல் மட்டும் தேவை.[5]

[1] Ibid 181
[2] Ibid, Page 182
[3] Ibid
[4] Ibid P. 182
[5] Ibid

சட்டசபையால் நிறைவேற்றப்பட்ட மசோதாக்களும் கவர்னரின் ஆலோசனைக்கு வைக்கப்பட்டது.[1] அம்மசோதாக் களுக்குக் கவர்னர் தம் மறுப்பைத் தெரிவிப்பதோடு, அங்கீ காரம் அளிக்கவும் மறுக்கலாம். மறுபடியும் ஆலோசனைக்கு வேண்டி அம்மசோதாவைச் சட்டசபைக்குத் திருப்பி அனுப்ப லாம் அல்லது கவர்னர் ஜெனரல் பார்வையிடுவதற்காக ஒதுக்கி வைக்கலாம். அல்லது தம் சம்மதத்தைத் தெரிவிக்க லாம். எங்ஙனமாயினும், அம்மசோதா சட்டமாவதற்குக் கவர்ன ருடைய சம்மதம் இன்றியமையாதது. மாகாணங்களில் பொது மக்கள் நலத்திற்கும், அமைதிக்கும், பாதுகாப்புக்கும் தேவையான ஒரு சட்டம் அத்தியாவசியமானது என அவர் கருதினால், சட்ட மன்றம் மறுத்தாலும், அல்லது அவர் சம்மதப்படாத திருத்தங் களை ஏற்படுத்தினாலும், அச்சட்டத்தை நடைமுறையில் கொண்டு வர முடிந்தது. இதே போல மாகாணங்களில், பொதுமக்கள் நலனுக்கு விரோதமானது, தீமை அளிக்கக் கூடியது என எந்த நடவடிக்கையையும் அவர் கருதினால், உடனே அதை நிறுத்தவும் அதிகாரம் பெற்றிருந்தார்.

சட்டசபையில், ஓட்டு முறைகளுக்கு அப்பாற்பட்ட தலைப் பில் செலவிடக் கூடிய செலவினத்தைக் கவர்னர் தீர்மானித்தார்.[2] ஒதுக்கப்பட்ட இலாக்காவுக்கு அளிக்கப்பட்ட நிதியின் ஒரு பகுதி யைக் குறைக்கச் சட்டசபை முயன்றாலும், கவர்னர் அதை மீட்டி, அந்தச் செலவுகளைக் கேள்வி மூலம் அனுமதித்து, அளிக்கப்பட்ட நிதியை அதிகார பூர்வமாக ஆக்கினார். ஆனால், மாற்றப்பட்ட இலாக்காக்களைப் பொறுத்த வரையில், கவர்னர் சட்டச்சபையின் ஓட்டை நிராகரித்து, புதிய ஓட்டு எடுக்கும் வரை, முந்திய வருடத்தில் அந்த இலாக்காவுக்கு எத்துணை நிதி ஒதுக்கப்பட்டிருந்ததோ, அத்துணை நிதி அவ்வருடமும் அவ்விலாக்கா செலவு செய்ய அனுமதி வழங்கக் கவர்னருக்கு அதிகாரம் வழங்கப்பட்டது.

இவ்வாறாக மாகாணத்தில் கவர்னருக்கு எதிராக எதுவும் நடக்க இயலாது.[3] ஆனால், கவர்னர், எப்பொழுதும், சட்ட ரீதியான அதிகாரங்களை நடைமுறையில் கொண்டு வர முழுமை யான அதிகாரம் பெற்றிருந்ததால், மற்றவர்களுடைய குறுக்கு நடவடிக்கைகளை அது தடுக்கும்படியாக அமைந்தது. வங்காளத்

[1] Ibid
[2] Ibid
[3] Ibid, page 182-183

திலும், மத்திய மாகாணத்திலும் பெரும்பான்மை சட்டசபை அங்கத்தினர்கள் சட்ட ரீதியாக இரட்டையாட்சியை அழிவு படுத்த நினைத்தபோதும், கவர்னர்கள் தடை செய்து, இரட்டை யாட்சியை நிறுத்து, மாகாணங்களில் ஆட்சிக்குரிய ஏகாதி பத்தியத்தை நிலை நிறுத்தினர்.

## 3

## கவர்னரின் நிர்வாக சபை

1784ஆம் ஆண்டு பிட்ஸ் இந்தியா சட்டத்தின்படி மாகாண அரசாங்கங்களுக்கு நிர்வாக சபையின் உதவிகள் அளிக்கப்பட்டன.[1] ஒவ்வொரு மாகாணத்திலும், நிர்வாகசபை அம்மாகாண படைத்தளபதியோடு மூன்று அங்கத்தினர்களைக் கொண்டதாக இருக்க வேண்டுமென்று இச்சட்டத்தின் ஒரு பகுதி தெளிவாகக் கூறியது. அன்றிலிருந்து சென்னை, பம்பாய் ஆகிய மாகாணங்கள் நிர்வாக சபையில் கவர்னரால் ஆளப்பட்டு வந்தன. இச்சட்டம் நடைமுறைக்கு வருவதற்கு முன் கவர்னரால் மட்டும் ஆளப்பட்டு வந்தன. ஆனால், அக்காலங்களிலும், கம்பெனியார் ஆட்சியில் தேர்ச்சி பெற்ற அதிகாரிகள் ஓர் ஆலோசனைக் குழுவை ஏற்படுத்தி, கவர்னருடைய பொறுப்பைச் செயல்படுத்த ஒத்துழைத்தனர் 1833ஆம் ஆண்டு சென்னையிலும், பம்பா யிலும் இந்நிர்வாக சபை அங்கத்தினர்கள் எண்ணிக்கை இரண்டாகக் குறைக்கப்பட்டது. மீண்டும், அங்கத்தினர்கள் எண்ணிக்கை மூன்றாக அதிகரித்து, 1919ஆம் ஆண்டு மாண்ட் போர்டு சீர்திருத்தம் அறிமுகப்படுத்தும் வரையிலும், அதே நிலையில்தான் இருந்தது.[2] மாகாணங்களில் தனிப்பட்ட தளபதி களின் தலைமை அலுவலகங்கள் எல்லாம் நீக்கப்பட்டபின், அச் சபையிலுள்ள அங்கத்தினர் பதவி, சாதாரண அங்கத்தினர் களால் பொறுப்பேற்கப் பட்டது.

### நிர்வாகசபையே இல்லாத சில மாகாணங்கள்[3]

புதிதாக உருவாக்கப்பட்ட மாகாணங்கள் கவர்னரால் ஆட்சி செய்யப்படும் மாகாணங்களின் அந்தஸ்தைப் பெறுததனால் பிட்ஸ் இந்திய சட்டத்தின் பிரிவுப்படி இயங்கவில்லை. அவைகள் லெப்டினன்ட் கவர்னர்கள் அல்லது தலைமைக் கமிஷனர்களுக்குக்

[1] See M. R. Palande, op. cit. P. 280

[2] Ibid, page 281

[3] Ibid p. 281

கீழ்ப்பட்டதாக இருந்தன. இவ்வாறாக, வடமேற்கு மாகாணங்களும் அஸ்ஸாமும், பஞ்சாப்பும், மத்திய மாகாணங்களும், மாண்ட்போர்டு சீர்திருத்தங்கள் அறிமுகமாகும் வரையில் நிர்வாகசபையே இல்லாமல் இருந்தன, ஆளும் பொறுப்பானது, அரசியல் கொள்கைப்படி, கவர்னர் ஜெனரலினால் அதிகாரங்கள் வழங்கப்பட்ட தலைவர்களிடமிருந்தது, வங்கப் பிரிவினை ரத்து செய்யப்பட்ட பின்பு மாற்றியமைக்கப்பட்ட மாகாணப் பிரிவுகளுள் கவர்னரின் மாகாணங்களாக அல்லாமல் நிர்வாக சபை அந்தஸ்து பெற்ற மாகாணங்கள் அஸ்ஸாமும், பீகாரும் ஆகும்.

### நிர்வாக சபை அமைப்பு[1]

வெவ்வேறு மாகாணங்களில், நிர்வாகசபை அங்கத்தினர்களின் எண்ணிக்கை வேறுபட்டது, வங்காளம், சென்னை, பம்பாய் போன்ற பழைய பெரிய மாகாண நிர்வாகசபைகள் நான்கு அங்கத்தினர்களைக் கொண்டதாக இருந்தன. 1932ஆம் ஆண்டு பம்பாய் மாகாணத்தில் பணமுடையின் காரணமாகவும், ஆட்குறைப்புக் காரணமாகவும், நிர்வாக சபையின் அங்கத்தினர்கள் நான்கிலிருந்து இரண்டாகக் குறைக்கப்பட்டார்கள். மற்ற மாகாணங்களின் சபைகள் இரண்டு அங்கத்தினர்களைக் கொண்டதாகவே இருந்தன.

சட்டத்தில் விதிக்கப்பட்டப்படி[2] நிர்வாகசபை அங்கத்தினராக நியமனம் பெற, இந்தியாவில், முடியாட்சியின் கீழ், 12 வருடப் பதவி அனுபவம் பெற்றவராக இருக்க வேண்டும். சட்டத்தின் இப்பகுதியை நிறைவேற்றுவதற்காக, சிறிய மாகாணங்களில் ஒருவரும், பெரிய மாகாணங்களில் இருவரும், சட்டரீதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மற்ற அங்கத்தினர்கள், இந்திய அரசாங்கத்தில் அதிகமான இந்தியர்களின் ஒத்துழைப்பு தேவை என்ற கொள்கைப்படி, உத்தியோகஸ்தர்களல்லாத இந்தியர்களுக்கிடையேயிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### பொறுப்பின்மை[3]

அரசாங்கத்தின் இப்பகுயானது, பாராளுமன்ற இந்தியச் செயலாளர் மூலமாகவும், இந்திய அரசு மூலமாகவும், ஆங்கில அரசாங்கத்திற்கு முழுப்பொறுப்புடையதாக இருந்தது. நிர்வாக

[1] Ibid p. 282
[2] Ibid p. 282
[3] Ibid p. 282

சபை அதிகாரிகளைச் சட்டசபையின் எதிர்ப்பினால் நீக்க முடியாது. மேலே கூறப்பட்ட இரண்டு உயர் அதிகாரிகளும், நிர்வாகத்தில் செயல்படுத்தும் விஷயங்களுக்குப் பொறுப்புள்ளவர்களாகவும், ஆங்கில உரிமைகளைக் காப்பாற்றுபவர்களாகவும், நிர்வாகத்தை நடத்துபவர்களாகவும் பணியாற்றக் கடமைப்பட்டிருந்தனர். அவர்களுடைய ஊதியங்கள் சட்டசபையின் ஓட்டுக்களை நம்பி யிருக்கவில்லை. சட்டசபைகளும் அவர்களை அதிகாரத்திலிருந்து நீக்கும் உரிமை பெறவில்லை.

ஆனால், வரவு செலவுத் திட்டத்தில் ஓட்டளிப்பைப் பொறுத்தவரையில், நிர்வாகசபையினால் நடத்தப்பட்டு வந்த இலாக்காக்களுக்குத் தேவையான நிதி[1] மாகாண சட்டசபை யினாலேயே கொடுக்கப்பட்டது. அதுபோலவே ஒதுக்கப்பட்ட பிரிவுகளுக்கான எல்லாச் சட்டங்களும், சட்டசபைகளினாலேயே இயற்றப்பட்டன. இவ்வாறாக, உண்மையிலேயே நடை முறையில், மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் விருப்பங்களை, மாகாண நிர்வாகசபை ஒத்துக்கொள்ளும்படியான ஒரு வாய்ப்பு சட்டத்தில் இருந்தது.

## 4

## மந்திரிகளும், மாற்றப்பட்ட பகுதியும்[2]

மாகாண நிர்வாக சபையின் மற்றொரு பகுதியான 'மாற்றப் பட்ட பகுதி', மந்திரிகளால் நிர்வகிக்கப்பட்டது. பொறுப்புள்ள அரசாங்கம் நிறுவப்படுவதற்கான உறுதிமொழி, அதிகார பூர்வமாக, ஆங்கில அரசின் சார்பில், இந்திய பாராளுமன்றச் செயலாளர் மூலமாக, பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட பின்பு, முதல்படியாக மந்திரிகள் மாகாணங்களில் நியமனம் செய்யப்பட்டனர். மாகாண அரசாங்கத்தில் நிர்வாக சபையினா ரால் நிர்வகிக்கப்பட்டு வந்த பகுதியே ஒதுக்கப்பட்ட பகுதி என அறிவிக்கப்பட்டது. மந்திரிகளுடைய அதிகாரத்துக்குட்படுத்தப் பட்ட பகுதி மாற்றப்பட்ட பகுதியாகக் கருதப்பட்டது.

பின் தங்கிய இந்திய வாக்காளர்களின் நிலைமையில், மாகாண நிர்வாகத்தின் முழுப் பொறுப்பையும், மக்கள் பிரதிநிதி களிடம் ஒப்படைப்பது என்பது மிகவும் அபாயகரமானதாகக் கருதப்பட்டது[3] வெற்றிகரமாக அரசியல் பொறுப்புக்களை ஏற்றுத்

[1] Ibid p. 283
[2] Ibid
[3] Ibid P. 284

திறம்பட நடத்தினல், நிலையான அரசியல் பழக்க வழக்கங் களும், அனுபவங்களும், வந்து சேரும் எனவும், முழுப் பொறுப்புக்களை உடனடியாக ஒப்படைப்பது அன்றுள்ள இந்தியர் களின் நிலைமையில் சாத்தியமில்லை எனவும் கருதப்பட்டது. ஆகவேதான் சமரசமாக இந்தியர்கள் தங்கள் பொறுப்புக்களை உணரும் காலம் வரை இரட்டையாட்சி ஏற்படுத்தப்பட்டது. மந்திரிகள், தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபை அங்கத்தினர் களிடையேயிருந்து கவர்னரால் தேர்ந்தெடுக்கப் பட்டதோடு, சட்டசபைக்குப் பொறுப்புள்ளவர்களாகவும் இருந்தனர். அவர்களுடைய ஊதியமும், இலாக்காக்களுக்குத் தேவையான நிதியும், சட்டசபையின் ஓட்டின் மூலம் நிச்சயிக்கப்பட்டன. சட்டசபையில் எதிர்ப்புகள் இருந்ததால், மந்திரிகள் பதவி யிலிருந்து விலக வேண்டியிருந்தது. இவ்வாருக மாற்றப்பட்ட பகுதியில், சட்டசபையின் தனி அதிகாரம், ஒதுக்கப்பட்ட இலாக்காவைப் பரிபாலித்து, நிர்வாகசபை மேலுள்ள அதி காரத்தைவிட, மேம்பட்டிருந்ததைத் தெளிவாக எடுத்துக் காட்டியது.

ஒவ்வொரு மாகாணத்திலும், மந்திரிகளின் எண்ணிக்கை வேறுபட்டது.[1] பொதுவாகப் பெரிய மாகாணங்களில் மூன்ருகவும், சிறிய மாகாணங்களில் இரண்டாகவும் நிச்சயிக்கப் பட்டது. பம்பாய், வங்காளம், சென்னை இம்மாகாணங்களில் மூன்று மந்திரிகள் நியமிக்கப்பட்டனர். 1932-ஆம் ஆண்டிற்குப் பின்னர் பம்பாய் மாகாணத்தில், பண நெருக்கடி காரணமாகவும், மாகாண அரசாங்கத்தின் செலவினத்தைக் குறைப்பதற்காகவும் மந்திரிகளின் எண்ணிக்கை மூன்றிலிருந்து இரண்டாகக் குறைக்கப் பட்டது,[2]

**மந்திரிகள் நியமனம்**[3]

மந்திரிகளை நியமனம் செய்யும் அதிகாரம் கவர்னரிடம் இருந்தது. ஆனல், நியமனம் பெறும் மந்திரிகளுக்குச் சட்ட சபையில் வேண்டுமளவு செல்வாக்கு இருந்தாக வேண்டும், ஆகவே, கவர்னருடைய நியமனம் தன்னிச்சையானதன்று என்பது புலனுகும். சட்டசபையில் பெரும்பான்மையான அங்கத்தினர்களைக் கொண்ட அரசியல் கட்சியின் தலைவர்கள்,

1 Ibid
2 Ibid
3 Ibid P. 284

கவர்னரால், மந்திரிசபைக்கு நியமிக்கப்பட்டனர். மேலும், அவர்கள் பெருமளவு வாக்காளர்களிடையே செல்வாக்குப் பெற்றவர்களாக இருக்க வேண்டும்.

### மந்திரிகள் பதவிக்காலமும், ஊதியமும்[1]

நிர்வாகசபை அங்கத்தினர்களுக்கு அளிக்கப்பட்ட கால வரையறை, பொறுப்பேற்கும் மந்திரிகளுக்கு அளிக்கப்படவில்லை. சட்டசபையின் காலம் முடிவுறும்போது, மந்திரிகளின் பதவியும் முடிவுற்றது எனக் கொள்ளலாம். ஆனால், சட்டசபை கலையும் முன்பே அவர்கள் சட்டசபையின் அவநம்பிக்கைக்கு உட்படுவார் களேயானால், உடனடியாகப் பதவியிலிருந்து விலக வேண்டும். அதே சமயத்தில் சட்டசபை விரும்பினால், அவர்கள் பதவிக் காலத்தை இரண்டு அல்லது மூன்று முறை கூட நீடிக்கச் செய்ய முடியும்.

1919ஆம் ஆண்டு சட்டத்தின்படி, மந்திரிகளுக்கு, நிர்வாகசபை அங்கத்தினர்களுக்கு அளிக்கப்பட்டு வந்த ஊதியம் தான் அளிக்கப்பட்டது[2] ஆனால், சட்டசபைகள் அதனைக் குறைப்பதற்கு அதிகாரம் பெற்றிருந்தது. மந்திரிகளின் ஊதியத்தைப் பல மாகாணங்களிலும் குறைக்கும் வழியில், சட்ட சபைகள் முயற்சிகளை மேற்கொண்டன. உதாரணமாகப் பம்பாயில், முதல் சீர்திருத்தச் சபை, ஒரு மந்திரியினுடைய வருடாந்திர வருமானத்தை 64,000-த்திலிருந்து 48,000-மாகக் குறைத்தது.

### நியமனத்தின் விளைவுகள்[3]

மந்திரிகள், பெரும்பான்மையாகத், தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களின் ஆதரவை விட, அரசாங்க ஆதரவாளர்களின் பின்பலத்தைப் பெறவே விரும்பினர்கள்.[4] இதற்குக காரணம் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களிடையே பல பிளவுகள் காணப்பட்டன. அவர்கள் பலதரப்பட்ட கருத்துக்களை மேற் கொண்டதினல், அந்தக் கலப்படமான கருத்துக்களை ஒரே கொள்கையின் அடிப்படையில் கொண்டு வருவது கடினமாக இருந்தது. ஆனல், அதே சமயத்தில் நம்பிக்கைக்குரிய ஒரு சிறு கூட்டத்தின்[5] பின் துணையால் மந்திரியானுன் கூட

1 Ibid
2 Ibid, Page. 284-285
3 Ibid
4 Ibid P. 285
5 Ibid

நியமனம் மெற்று அரசாங்கத்துடன் ஒத்துழைக்கும் அங்கத்தினர்கள் உதவி பெற்றிருந்தால், சபையில் பெரும்பான்மையாகத் தேர்ந்து எடுக்கப்பட்ட அங்கத்தினர்களின் எதிர்ப்பு இருந்த போதிலும், பதவி வகிக்க முடிந்தது.

இதனுல், சட்டசபையின் பொறுப்பானது, அசைக்க முடியாத நிர்வாக சபைக்குக் கீழ்ப்பணியும் அளவுக்கு ஒடுக்கப் பட்டது.[1] பனகல் ராஜா, ஒரு சமயம், சென்னை சட்டசபையில், 'தாம் கவர்னருக்கு மட்டுமே பொறுப்புடையவர் என்றும், சபையினிடத்தில் பொறுப்புடையவர் அல்ல என்றும்' கூறிய தாகச் செய்திகள் உலாவியது. தொடர்ந்து அவர் சென்னையில் முதல் மந்திரியாக இரு தடவைகள் பணியாற்றினுர்.

### மந்திரிகளினுடைய கூட்டுப் பொறுப்பின்மை[2]

அன்று மந்திரிகள், ஒன்றுபட்ட பொறுப்பின் (Joint responsibility) மூலம் பணியாற்ற வேண்டிய அவசியமில்லை. அவர்கள், அலுவலகத்திற்குத் தனித்தனியாக வந்து சென்றனர். ஆங்கில மந்திரிசபையைப் போன்று, முழுமையான, பிரிக்க முடியாத ஒரு மந்திரிசபை அமைக்கப்படவில்லை. பொதுப் படையான கொள்கைகள் பரஸ்பரம் பேச்சு வார்த்தையின் அடிப்படையிலோ அல்லது எல்லோருடைய சம்மதத்தின் பேரிலோ கடைப்பிடிக்கப்படவில்லை. இதனுல், அவர்கள், மிகவும் நெருக்கமாக இயங்குகின்ற ஒரு சபையின் பலத்தைப் பெற வில்லை. கவர்னர், ஒரு தனிப்பட்ட இலாக்காவின் தலைவரைப் போல மந்திரிகளின் அலுவல்களில் பங்கு கொண்டார். மாற்றப் பட்ட இலாக்காக்களின் முழுமையான பொறுப்பு, மந்திரி சபை யினிடத்து ஒப்படைக்கப்பட்டது என்பதைக் கவர்னர் நன்கு உணரவில்லை. ஆகவே, மந்திரிகள், தனிப்பட்ட நபர்களாகப் பணியாற்ற நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அதிகப்படியான சட்டமன்ற அங்கத்தினர்களின் ஆதரவு பெற்றிருந்த போதிலும், அவர் களால், மந்திரி சபைகளை அமைக்க முடியவில்லை. சில மந்திரிகள் கூட்டுப் பொறுப்புக் கொள்கையின் மூலம் உறுதியாக நிற்க எண்ணினர். ஆனுல், அநேகமாக, மந்திரிகள் தனக்குத்தானே

[1] Ibid

[2]. சபையில் நியமிக்கப்பட்ட அங்கத்தினர்களில், அதிகாரிகள், அதிகாரிகளல் லாதார் விகிதங்களில் 30 சதவிகிதம் அங்கத்தினர்கள் நிர்வாக சபையின் அதி காரத்தில் இருந்தனர். அரசாங்கத்தைச் சார்ந்து நிற்கும் அங்கந்தினர்களும், தனி யாக நிலச்சுவான்தார்களுக்கும், பணம் படைத்தவர்களுக்கும், வகுப்புவாதத் தொகு தியில் போட்டியிட்டுத் தேர்வு பெற்ற ஐரோப்பியர்களும், இவ்வடிப்படையில் ஒன்ருக இணைந்து விட்டனர். இதனுல் 30 சதவிகிதம் என இருந்த எண்ணிக்கை மேலும் அதிகரித்தது.

விதித்துக் கொண்ட கடமைப்படி நடந்தார்கள் என்ற உண்மை ருசிகரமானதாகும்.

## கவர்னரிடத்தில் செலுத்தப்பட்ட அதிகாரங்கள்[1]

உண்மையாகவே, மந்திரிகள், தனிப்பட்ட முறையில் கவர்னரைக் கலந்தாலோசித்தனர். மந்திரிகளின் மாறுபட்ட கருத்துக்களைக் கவர்னர் மீறியபோது, எல்லா அதிகாரங்களும் கவர்னரிடம் இருந்தது என்பதை எடுத்துக்காட்டியது. கவர் னரின் ஆலோசகராக மந்திரிகள் இருப்பதையும், அவர்களுடைய ஆலோசனைகளைக் கேட்கவோ அல்லது மறுக்கவோ செய்யும் கவர்னர் செய்கையைப் பல விமரிசகர்கள் சுட்டிக்காட்டி, இவ் வதிகாரம் இரட்டையாட்சியை இயக்குவதற்கு அபாயம் விளை விக்குமென எச்சரித்தனர். கவர்னர்கள், மந்திரிகளின் பொறுப் பிற்கு மாற்றப்பட்ட தலைப்பிலுள்ள இலாக்காக்களைப் பொறுத்த மட்டில், தாங்கள் நிர்வாகத்தில் தலைவர் மட்டுமே, என்ற நிய மனத்தை ஒப்புக்கொள்ளாததின் காரணமாக, இங்கிலாந்திலுள்ள இந்தியக் காரியதரிசி, எந்தெந்த அதிகாரத்தைத் தணிக்க வேண் டும் என எண்ணினரோ, அல்லது எந்தெந்த அதிகாரங்களைச் சட்ட சபையின் பொறுப்பிற்கு விட்டுக் கொடுக்க வேண்டும் என எண்ணினரோ, அவ்வதிகாரங்களைக் கவர்னர் தம் எதேச்சாதி கார அதிகாரத்தோடு இணைத்துக் கொண்டார்.

## மந்திரிகளுடைய அதிகார வரையறை[2]

இவ்வாருக மந்திரிகளுடைய நிலைமை மகிழ்ச்சிகரமானதாக இல்லை. கவர்னரின் மனம் போல் நியமிக்கப்பட்ட மந்திரிகள், கட்சியின் ஆதரவில்லாமல், கவர்னருடைய ஆதரவு இருக்கும் வரை பதவியில் இருந்தனர். மந்திரிகள் கூடிக் கலந்தாலோ சிக்கும் மந்திரிசபை ஏற்படுவது அபூர்வமாயிற்று. பெரும் பான்மையான கவர்னர்கள், மந்திரிகளை ஒருவரிடமிருந்து, ஒருவர் தனிப்பட்டு இருக்குமாறு தைரியம் ஊட்டினர். இச் செயல், மந்திரிகளிடையே வெளிப்படையான அபிப்பிராய பேதங் களையும், சதி ஆலோசனைகளையும் வளரச்செய்தது.[3] சட்டசபை யினுள்ளோ அல்லது மக்கள் மத்தியிலோ எக்கேள்வியினையும் மந்திரிகளின் பெரும் ஆதரவை நம்பி உச்ச நிலைக்குக் கொண்டு செல்ல முடியவில்லை. இதற்குமாருகக் கவர்னர் தலைமையில்,

[1] Ibid P. 286
[2] Sree Ram Sharma Op. Cit. 183
[3] Ibid P. 183

அதிகாரிகளைக் கொண்ட அரசாங்க அங்கத்தால், எத்துணைச் செல்வாக்கு பெற்ற மந்திரியாக இருப்பினும், அல்லது ஆதரவு பெற்ற ஒரு திட்டமாக இருப்பினும், அவர்களால் எதிர்க்க முடிந்தது. பழைய மந்திரிகளை இராஜிநாமா செய்ய வைத்து, அவர்களை அதிகாரத்திலிருந்து நீக்கி, புதியமந்திரிகளை அமர்த்து வதற்குக் கவர்னருக்கு அக்காலத்தில் எவவிதத்தடையும் இருந்த தில்லை. இதற்கு எதிராக, வங்காளத்தில் மந்திரி ஒருவருக்கு மாதச்சம்பளம் கொடுக்கமுடியாது எனச் சட்டசபை தீர்மானித்த போதும், அவ்வாறு அனுமதிக்கப்படாத மந்திரியைப் பதவியில் நீடித்து வைப்பதில் கவர்னர் வெற்றி பெற்றார்.[1] தேசிய அடிப்படையில் அரசியல் கட்சிகள் இல்லாததின் காரணமாகவும், ஜாதி அடிப்படையில் பல பிளவுகள் இருந்தமையினாலும் முக் கியமான மாகாணங்களில் கவர்னரே அரசாங்கத்தையமைக்கும் முழுப் பொறுப்பைப் பெற்றார். மாகாணங்களில், அரசாங்க ஒத்துழைப்போடு தங்கள் கொள்கைகளை நடைமுறையிலாக்க, மந்திரிகளுக்குச் சில நேரம் கவர்னருடைய நல்லெண்ணத்தை எதிர் நோக்கியிருக்க வேண்டிய அவசியமிருந்தது. கவர்னர், சில கால கட்டங்களில், மந்திரிகளை நிர்வாகசபை அங்கத்தின ராக மாற்றுவதற்கு ஏற்பாடு செய்து, வெற்றியும் பெற்றார். இம்மந்திரிகள், தாங்கள் அங்கம் வகிக்கும் சபைக்குப் பொறுப் பில்லாமல் கவர்னருக்கே பொறுப்புள்ளவர்களாக இருந்ததால் தான், கவர்னர் மந்திரிகளை நிர்வாகசபை அங்கத்தினராக ஆக் கும் முயற்சியில் வெற்றி பெற்றார்.[2] மேலும், அரசாங்க அதிகாரி களிடையே ஒழுங்கு முறைகளை நடத்துவதிலும், தங்கள் இலட்சி யங்களை ஈடேறவைக்க வேண்டிய அவசியத்தாலும், அதிகாரிகளை நடத்தும் வகையிலும், மந்திரிகளுக்குக் கவர்னரையே நம்பி யிருக்க வேண்டிய அவசியமிருந்தது. இதற்கெல்லாம் மேலாகத் தங்கள் கடமைகளை நேர்மையாகச் செய்து முடிக்க மாகாண வரு மானத்திலுள்ள நிதி மிகையாக மந்திரிகளுக்குத் தேவைப்படும் போது, கவர்னரையே எதிர் நோக்கியிருந்தனர்.

### எதிர்பாராத சில விளைவுகள்[3]

இப்படிப்பட்ட அநேக காரியங்கள் தவிர்க்கப் பட்டிருக்க லாம். ஆனால், அன்று அவ்வாறு நடந்ததன் காரணம், முதல் தடவையாக அதிகாரம் இந்தியர்களுடைய கைக்கு மாறியதே

[1] Ibid
[2] Ibid
[3] Ibid P. 184

யாகும். அரசாங்கத்தின் எல்லா இலாக்காக்களுக்கும் இந்தியர்களே பொறுப்பு என்று இல்லாத காரணத்தினுல், கல்வி, வரி, வைத்திய நிவாரணம் அல்லது ஸ்தல சுயாட்சி போன்ற பிரச்னைகள், அரசியல் அடிப்படையில் இருதரப்பட்ட அரசாங்கப் பிரிவுகளுள், எதைச் சார்ந்தது எனப் பிரிப்பது கடினமாக இருந்தது. அரசாங்கத்தின் அதிகாரங்களை அதிகப்படியாகப் பெற்று, ஆட்சி நடத்த வேண்டும் என்ற ஆசையின் காரணமாக, ஜாதி அடிப்படையில் புதிய கட்சியை ஏற்படுத்தவும், அதே அடிப்படையில் பழைய கட்சிகளை மறைமுகமாக ஜாதி அடிப்படையில் பலப்படுத்தவும், அரசியல் வாதிகள் முன் வந்தனர்.[1] இவ்வெண்ணம் ஈடேற ஆட்சியிலிருப்பவர்களுக்குப் பணிந்தவர்களாக இருப்பதின் மூலம், பலன் அடைந்ததை அரசியல் அதிகாரங்கள் கைமாற்றப்பட்ட காலங்களிலிருந்தே, இந்தியர்கள் அறிந்திருந்தார்கள். ஆகவே, புதிதாக ஜாதிமத அடிப்படையில் ஏற்பட்ட கட்சிகள், அரசாங்கத்தையே நம்பியிருந்தன. இதனுல், மக்கள் பிரதிநிதிகள், இந்தியாவை ஆண்ட ஆங்கில ஆட்சியாளர்களிடம் உண்மையுள்ளவர்களாக நடந்து கொண்டார்கள். மேலும், ஆங்கில ஆட்சியாளர்களிடமிருந்து பரிபூரண ஆட்சி இந்தியர்கள் கையில் வருவதற்கு இன்னும் காலம் பிடிக்கும் எனஅறிந்து பல கட்சிகளோடும், ஆங்கிலேயர்களுடனும் கூட்டு சேர்ந்து, நல்லுறவு கொண்டனர். மக்கள் பொறுப்பிற்கு மாற்றப்பட்ட இலாக்காக்களைப் பொறுப்புடன் நடத்துவதில் எத்தரப்பட்ட அரசியல்வாதிகளுக்கும் அதிகப்படியான கருத்து வேற்றுமைகள் இல்லாமல் இருந்தது. அரசியல் அடிப்படையில் ஏதேனும் வேற்றுமை ஏற்படுமானுல், அது ஜாதி வேற்றுமையை உணர்த்துவதாக இருந்தது.[2] அகில இந்திய அடிப்படையிலிருந்த காங்கிரஸ் விரைவாக ஆங்கிலேயர் கையிலிருந்து, இந்தியர் கைக்கு அதிகாரத்தை மாற்றும் பெரும் தேசப்பணியில் அன்று ஈடுபட்டிருந்தது, மேலும், இங்கிலாந்தில் 'மாறுதலை விரும்பாத கட்சி' (Conservative party) அதிக நாளாகவே அதிகாரத்தில் இருந்து வந்த காரணத்தினுல், இந்தியாவின் கொள்கையின் முடிவான இலட்சியம் என்னவென்று தெளிவாகாமலே இருந்தது. இவ்வாருக அரசியல் போக்கை நன்கறிந்த வகுப்பினர்கள் இந்தியாவிற்கு 'இராச்சிய அந்தஸ்து' ('Dominian Status') வேண்டுமென்ற போராட்டத்தில தீவிரமாக ஈடுபட்டிருக்கும்போது, மாகாண அரசியல்வாதிகள், தங்களுக்கு ஜாதிமத

[1] Ibid

[2] Ibid

அடிப்படையில் கிடைக்கும் நன்மைகளைத் தேடுவதில் ஈடுபட்டிருந்தார்.[1]

## 5

### கூட்டுநிதி[2]

இரட்டையாட்சியில், இலாக்கா பிரிவினையில் ஏற்பட்ட விசேட அம்சமாவது, மாகாண அரசாங்கங்கள் இரு கூறுகளாக ஆக்கப்பட்ட போதிலும், மாகாண நிதி[3] மட்டும் பிரிவுபடாமல் இருந்தது. அரசின் எல்லாப் பாகங்களுக்கும், பொறுப்புள்ள ஒரு நிதி அங்கத்தினர், நிதிப் பிரச்சினைகளைக் கவனித்து வந்தார். இரண்டு பிரிவுகளின் வரவு, செலவுகள் பொதுவானதாகவும், கூட்டு நிதியாகவும் விளங்கியது. ஒவ்வொன்றுக்கும் தனிபட்ட மாகாண வருமான வரிகள் ஒதுக்கப்படவில்லை. எல்லா வரிகளும், மாகாண வரிகளாக்கப்பட்டு, அதன் வருமானங்கள் மாகாண அரசாங்கப் பொக்கிஷதாரிடம் ஒப்படைக்கப் பட்டன. அப்படிப் பட்ட பொதுக் களஞ்சியத்திலிருந்து மாற்றப்பட்ட, ஒதுக்கப் பட்ட இலாக்காக்களின் வெவ்வேறு நடவடிக்கைகளுக்குத் தேவையான செலவுத் தொகைகள் ஒதுக்கப்பட்டன.

#### இணைப்புக் கூட்டங்கள்[4]

அதனால், நிர்வாகசபை அங்கத்தினர்களும், மந்திரிகளும் தேவைப்பட்டபோது, மாகாண வரவு, செலவுத் திட்டத்தைத் தயாரிக்க ஒன்று[5] கூடினர். இக்கூட்டத்தின் மூலம் ஒவ்வொரு இலாக்காவுக்குரிய செலவுகள், நியாயமாகவும், சமமாகவும் அளிக்கப்பட வேண்டும். மொத்தமான தேவைகளின் மூலம் எல்லாவிதமான வரவு முறைகளும் கவனத்துடன் கண்டு பிடிக்கப்பட வேண்டும். குறிப்பாக, இவ்வேலை, சாதாரண மானதோ அல்லது சுலுபமானதோ அன்று. பொறுப்பற்ற அதிகாரிகளின் ஆட்சி செல்வாக்குள்ள மந்திரிகளின் தேவைக்கும், விருப்பங்களுக்கும், ஏற்றதாக இல்லை என்பதை நேரில் கண்டனர். நுட்பமான ஓர் அரசியல் இயந்திரத்தைச் சுமுகமாக இயக்குவதற்கு வேண்டிய சகிப்புத்தன்மை, இணக்கம் ஒத்துழைப்பு ஆகியவை பெரிதும் தேவைப்பட்டன. இவ்வேறு பாடுகள், தீவிரமாக முன் வருமாயின், அது அரசை

1. Ibid P. 184
2. M.R. Palande Op. cit., Page 286
3. Ibid
4. Ibid Page 287
5. Ibid 287

நடத்துவதற்கு ஒரு முட்டுக்கட்டையாகவே இருக்கும். அந்நேரங்களில், கவர்னர், இரு பிரிவுகளிடையே தம்முடைய அபிப்பிராயத்தின்படி, வரவு செலவுகளைப் பகிர்ந்து கொடுத்து, முட்டுக்கட்டையை நீக்கினர். நிதிப் பிரச்சினையில் கூட இவ்வாறு கவர்னர் அதிகாரம் வலுத்தது.

### நிதி இலாக்காவின் அதிகாரம்[1]

இரட்டையாட்சியில் தனியாகக் கவனிக்க வேண்டிய அம்சம், மாற்றப்பட்ட இலாக்காக்களின் மீது நிதி இலாக்கா ஏற்படுத்திய அதிகாரத்தைப் பற்றியதேயாகும். நிதி இலாக்கா ஒதுக்கப்பட்ட இலாக்காக்களைச் சேர்ந்திருந்தது. நிதி அங்கத்தினர், நிர்வாக சபை அங்கத்தினராக இருந்தார்.[2] இவ்விலாக்காவின் முக்கிய வேலை, நிர்வாகத் திட்டங்களின் நிதிப் பிரச்சினை பற்றிய ஆலோசனை அளிப்பதேயாகும். மந்திரிகள் அதை ஒத்துக் கொள்ளவோ, மறுக்கவோ சுதந்திரம் பெற்றிருந்தனர். இதில் மாற்றப்பட்ட இலாக்காக்களின் கொள்கைகள், பேச்சளவில் நின்று விட்டதாகவும், அவற்றை நடைமுறையில் கொண்டு வரமுடியவில்லையெனவும், மந்திரிகளும், முன்னாள் மந்திரிகளும் சாட்சியம் கூறினர். நிதி இலாகா புதிய திட்டங்களுக்கு வேண்டிய நிதியைப் பற்றி ஆராய்வதோடு மட்டுமல்லாமல், நிதி இலாக்காவின் பொறுப்புக்களைப் பற்றியும் ஆராய்ந்தது.[3] இதன் விளைவாக, பொறுப்புள்ள மந்திரிகள் கொண்டு வருகின்ற நல்ல திட்டங்களையும் சட்டசபைக்குப் பொறுப்பில்லாத நிர்வாகசபை ஆராய்ந்தது என்ற உண்மை, ஜனநாயகக் கருத்துக்களுக்கு முரண்பட்டதாகும். மந்திரிகளோ, தங்களுக்கு நிதி இலாக்காவின் வழியாக அளிக்கப்பட்ட ஆலோசனையை மறுக்க முடியாது. ஏனெனில், மந்திரிகளுக்குத் தேவைப்படும் பணத்தைக் கொடுக்காமல் இருக்கவும் நிதி இலாக்காவிற்கு அதிகாரம் இருந்தது. மந்திரிகள், நிதி இலாக்காவின் உபதேசத்தை நிராகரிக்கவும் முடியாது. ஏனெனில், கவர்னருடைய ஒப்புதல் இன்றி நிதி இலாக்கா மந்திரிகள் தேவைப்படும் பணத்தை நிறுத்தி வைக்க முடியும்.

மேலும், நிதி அங்கத்தினர், நிதி இலாக்காவுக்கு மட்டும் பொறுப்புடையவராகத்[4] திகழவில்லை. செலவு செய்யும் எல்லா இலாக்காக்களின் பொறுப்பையும் இவர் மேற்கொள்ளும் நிலை

1. Ibid P. 290
2. Ibid P. 290
3. Ibid
4. Ibid 290

ஏற்பட்டது. இந்நிலை, குறிப்பாக, மந்திரிகள் நிர்வாகத்தில் விடப்பட்ட நாட்டுச் சீரமைப்புத் திட்டங்களுக்குக் கெடுதி விளைவிக்கும் என்று அச்சமுற்றனர், இக்கட்டான இந்நிலை, ஒரு பரிபூரணமான மாற்றத்தின் அவசியத்தைச் சுட்டிக் காண்பித்தது.

பாராளுமன்றத்தின் இந்தியச் செயலாளர், கவர்னர் ஜெனரல் ஆகிய இவர்கள் மூலமாகப் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புடையவராகத் திகழ்ந்த கவர்னர்,[1] ஒதுக்கப்பட்ட, மாற்றப்பட்ட இலாக்காக்களிடையே ஏற்பட்ட மாறுபாடுகளுக்கு முடிவான நிதி அளிக்கும் அதிகாரியாக இருப்பதற்குத் தகுதியற்றவராக விளங்கினர். ஏனெனில், இவருடைய தீர்ப்பு ஆங்கிலேயர் ஆட்சிக்கும், விசேடமாக ஒதுக்கப்பட்ட இலாக்கா கட்கும் அனுகூலமாக இருக்கும் என்றும், இவர் இருதரப்பு இலாக்காக்களுக்கும் பொதுப்படை நியாயம் வழங்குபவராக இருக்கமாட்டார் என்று அரசியல்வாதிகள் கருதினர்.

## நிதிக் குறைவு[2]

நிதி சம்பந்தப்பட்ட பிரச்சினைகளில் குறிப்பிட வேண்டிய மற்றோர் அம்சம், திருப்திகரமில்லாத மெஸ்டன் தீர்ப்பு பற்றிய தாகும். எல்லா மாகாண அரசாங்கங்களும், மத்திய நிதியிலிருந்து மாகாண நிதியை வெவ்வேறு தலைப்புக்களில் பிரிப்பது பற்றி ஒன்றாகக் குறை கூறின. ஆனால், அதே சமயத்தில் இந்திய அரசாங்க நிதி இலாக்கா முன்னெச்சரிக்கையுடன் இருந்தது. மூன்று வருடக் குறுகிய காலத்திற்குள் (அதாவது 1920ஆம் ஆண்டிலிருந்து 1923ஆம் ஆண்டுக்குள் ரூபாய் $62\frac{1}{2}$ கோடி மதிப்புள்ள பற்றுக்குறை ஏற்பட்டது என்று கூறினர். அந்நிகழ்ச்சி மாண்ட்போர்டு சீர்திருத்தங்கள் ஆரம்பமான பின் ஏற்பட்டது. மந்திரிகளுக்கு ஆரம்ப காலத்திலிருந்தே பண முடை ஒரு தொடர்ந்த தொல்லையாக இருந்து வந்தது. இதனாலேயே, அவர்கள் தங்களிடம் ஒப்புவிக்கப்பட்ட இலாக்காக்களில் எந்தவிதமான முன்னேற்றத் திட்டங்களையும் செயல்படுத்த முடியாமல் போயிற்று. மெஸ்டன் தீர்ப்பில், பெரும்பான்மையான அறிக்கையில் மாண்ட்போர்டு சீர்திருத்தம் போலியானது என்பன போன்ற இரக்கமற்ற பல குற்றச் சாட்டுக்கள் கூறப்படுவதற்குப் பண நெருக்கடியே அடிப்படை

[1]. Ibid P. 591

[2]. Ibid Page 291

யாகும். முன்னேற்றத்திற்கும், விரிவுபடுத்துவதற்கும்போதுமான பணம் இல்லாததினுல் அவர்களின் குற்றச்சாட்டுகளை மறுத்துக் கூற இயலாதவாறு இருந்தது. மெஸ்டன் தீர்ப்பை உடனடியாக மாற்றியமைக்க வேண்டும் என்ற கருத்து எல்லோ ராலும் ஒப்புக் கொள்ளப்பட்டது. 1928ஆம் ஆண்டு மெஸ்டன் தீர்ப்பு கைவிடப்பட்டது. ஆனுல், இரட்டையாட்சியினுடைய அமைப்பின் எல்லா அம்சங்களும், இந்தியர்களிடையே பெரும் அதிருப்தியைஉண்டாக்கியது. இரட்டையாட்சியில் குறிப்பிட்ட பாராளுமன்ற முறைகள் ஆசைகாட்டி மோசம் செய்வதாகவே தோன்றியது. என்ருலும், கலப்பின் அடிப்படையில் அமைக்கப் பட்ட இவ்வாட்சியில் எத்தனையோ குறைகள் இருந்தபோதிலும், அரசியல் ஈடுபாடுள்ள மக்களிடையே பெரும் வாதப் பிரதி வாதத்தை ஏற்படுத்தியது[1] இரட்டையாட்சியின், உள் அமைப் பின் இரகசியங்களை நேரில் தெரிந்த பலரும், அதனுடைய முரண்பாடுகளையும், குறைகளையும் எடுத்துக் கூறினர். இரட்டை யாட்சியின் வெளிப்படையான முக்கியமான அமைப்பானது, ஜனநாயகப் பொறுப்பற்ற அதிகாரிகள் தங்கள் போக்கைப் பூரணமாக மாற்றிக் கொள்ள வேண்டும் என்பதே. ஆனுல், இப்படிப்பட்ட தன்னிச்சையான தியாகம் செய்யப் பரந்த மனப் பான்மை தேவைப்பட்டது;

### பரஸ்பர ஆலோசனைகள்[2]

இரட்டையாட்சி நிலையாக இருக்க வேண்டும் என்று ஒரு பொழுதும் கருதப்படவில்லை. அது இந்திய அரசாங்கத்தின் இறுதியான நிர்வாக வடிவமாக அளிக்கப்படவில்லை. மாண்டேகு, தம்மால் கொண்டுவரப்பட்ட சீர்திருத்தங்கள், ‘ இந்தியாவில் சுயாட்சி ஏற்பட ஒரு முன்னேற்றக் கல் எனக் கருதப்படும், என்பதைத்தெளிவாக உணர்த்தினர். அதனுல், இரட்டையாட்சித் திட்டத்தைப் பற்றி விவாதிப்பவர்கள் பரந்த நோக்கம் கொண்டு ஆராய வேண்டும் என்றும், சிபாரிசு செய்தார்.[3] நிர்வாகசபை அங்கத்தினர்களும், மந்திரிகளும்ஒருவரையொருவர் நம்பி, இணக் கத்துடனும், ஒத்துழைப்புடனும் செயல்படவேண்டும்; அவர் களுக்குச் சட்டப்படியாகக்;கலந்தாலோசனை செய்வதில் எந்த விதமான இடையூறும் இல்லை; கூட்டு முறையில் வேலை செய்வ தற்கான முயற்சியைக் கவர்னரே ஏற்கலாம்; சட்டப்படி இல்லா

[1] Ibid 291
[2] Ibid, page 287
[3] Ibid P. 287

விட்டாலும். நடைமுறையில் ஒதுக்கப்பட்ட, மாற்றப்பட்ட பிரிவுகளிடையேயுள்ள் வேற்றுமைகள் ஒழிக்கப்பட்டு விடலாம் என்றும் அறிவுறுத்தியிருந்தார்.

எத்துணை நன்மை பயப்பதாக இருந்த போதிலும், இக் கொள்கையை நடைமுறையில் கொண்டு வருவது கடினமாக இருந்தது. சென்னை, வங்காளக் கவர்னர்கள் இதனைப் பெரிதும் ஏற்றுக் கொண்டார்கள். ஆனால், முழுமையாக மாண்டேகுவின் இரட்டையாட்சிக் கருத்துக்களைக் கவர்னர்கள் ஒத்துக் கொள்ளத் தயாராக இல்லை. அவர்கள் மாண்டேகுவின் எல்லா யோசனை களுக்கும் செவி சாய்க்கவில்லை.[1] உண்மையில், அனுபவ பூர்வமான மாகாண நிர்வாகத்தில் கவர்னா ஒரு சுழலச்சாகவே விளங்கினர். கவர்னர் இரண்டு பிரிவுகளின் இணைப்பாகவும், இரண்டு பிரிவுகளிடையே முடிவான நீதியை நிர்ணயிக்கவும் பொறுப்புடையவராய் விளங்கினர். மந்திரிகள், தங்கள் இலாக் காக்களில் கவர்னர் குறுக்கிடுவதைப் பற்றிக் குற்றம் சாட்டினர். மந்திரிகள், கவர்னரிடையே வேறுபாடு கொண்டாரேயானல், அவர்களுடைய முடிவுகளை எதிர்த்து முடிவு எடுத்தார். அலுவல கத்தின் நலன்களைப் பாதுகாக்கும் பொறுப்பு அவரிடத்தில்தான் இருந்தது. சுருங்கக்கூறின், எல்லா அரசியல் அதிகாரங்களும் அவருடைய கையிலிருந்தது எனலாம்.

## 6

## மந்திரிகளும், பொதுப்பணியாளர்களும்[2]

பதவி ஓய்வு பெற்ற சிவில் பணியாளர்களின் அதிகார பூர்வமான பத்திரங்களின் வெளிப்படையான அறிக்கைகள் மூலம், மந்திரிகளுக்கும், சிவில் பணியாளர்களுக்குமிடையே நல்லுறவு இருந்தது என்று நம்மை நம்பவைக்கின்றனர். சில சிவில் பணியாளர்கள் 1927ஆம் ஆண்டிற்குப் பின்பு, இந்தியா வின் முன்னேற்றத்தில் ஏற்பட்ட எல்லாச் சந்தேகங்களையும் சுயாட்சிக்கு வழி வகுக்கும் வகையில் தீர்த்து வந்தனர். மந்திரி களிடத்தில் தங்களுக்கு ஏற்பட்ட கஷ்டங்களை வெளிப்படையாக எடுத்துரைத்திருந்தால் அது ஒரு தவருகவே இருந்திருக்கும். மேலும், மந்திரிகள் தங்களுடைய சிப்பந்திகள் தங்களுக்குக் கட்டுப்பட்டிருந்தார்களா, இல்லையா என ஏதேனும் குழு

[1] Ibid P. 288

[2] Sri Ram Sharma op, cit., page 179

முன்போ அல்லது கமிஷன் முன்போ, தாங்கள் அதிகாரத்தில் இருக்கும்போது எடுத்துக் கூறுவார்களென, எதிர்பார்க்க முடியாது.

சமகாலத்துச் செய்தித் தாள்களைத்[1] துருவி ஆராயும்போது, அக்காலத்திய அகில இந்திய பதவிகளைச் சார்ந்த அதிகாரிகள், தாங்கள் மந்திரிகளுடைய கொள்கைகளைச் செவ்வனே நடை முறையில் ஆக்கச் சிறிதும் மனமில்லாமல் இருந்தனர் என்பதும், மந்திரிகளின் கொள்கைகள் வெற்றிபெறச் சிறிதேனும் ஊக்கம் அளிக்கவில்லை என்பதும், 'உள்ளங்கை நெல்லிக்கனி போல்' புலனாகின்றது. இவர்கள், மந்திரிகளின் தோல்விக்கு ஒரு முக்கிய காரணமாக இருந்திருக்கலாமென ஊகிக்கப் படுகிறது.

## பதவியின் நிலைகள்

சீர்திருத்தப்பட்ட அரசியலமைப்பில், பதவிகளின் நிலை[2] ஒரு ருசிகரமான பிரச்சினையாக இருந்தது. முன்போலவே, மாகாணச் செயலாளர்களின் கட்டுப்பாட்டில் நியமனம், ஊதியங்கள், பதவி நீக்கம், உபகாரச் சம்பளம் ஆகியவைகள் இருந்தன. இந்திய அரசாங்கச் சட்டம், முக்கியமான பதவிகளில் உள்ள அங்கத்தினர்களுக்குப் பாதுகாப்பளிக்கவும், அவர்களை நேர்மையான வழியில் செயல்படுத்தவும், எல்லாவிதமான உரிமைகளை அனுபவிக்கவும், தேவையான வசதிகளை அளிக்கும் பொறுப்பையும் கவர்னருக்கு அளித்திருந்தது. சட்டத்தின் இப்பகுதியானது, பொதுவாக, அரசாங்கத்தில் ஒதுக்கப்பட்ட பகுதியிலுள்ள பதவிகளில் ஏற்படும் நியமனம், பதவியிலமர்த்துதல், மாற்றுதல், பதவி உயர்வு அளித்தல்போன்ற பிரச்சினைகளுக்கு வழி வகுத்தது. ஆனால், மாற்றப்பட்ட இலாக்காவாக இருப்பினும், அங்குள்ள நியமனம், பதவி மாற்றம், உயர்வு போன்ற அதிகாரங்களைக் கவர்னரே நிர்வகித்து வந்தார்.[3] இதனால், மந்திரிகள் தங்கள் பொறுப்பிலுள்ள இலாக்காக்களில் வேலையிலமர்ந்த அதிகாரிகள், சட்டவிரோதமான செயல்களைப் புரிந்த போதிலும், தண்டனை அளிக்க முழு அதிகாரம் பெறாதவர்களாக விளங்கினார்கள். இது முற்றிலும் விரும்பத்தகாத நிலையாக இருந்தது. இதனால், மந்திரிகளுடைய கொள்கைகளை நேர்மையாகச் செயல்படுத்த முடியாத அபாய நிலை ஏற்பட்டது.

1. Ibid P. 180
2. M. R. Palande, op. cit. page 288
3. Ibid

## பொறுப்பாட்சியைப் புகுத்தியதின் விளைவுகள்[1]

அரசியல் புவிஈர்ப்புத் தானம் (the centre of political gravity) மாறியமைந்தது. ஆங்கில ஆட்சியில், அரசாங்கக் கொள்கைகளை உருவாக்கும் அதிகாரமும், நாட்டின் முன்னேற்ற முயற்சிகளும் உயர்ந்த அதிகாரிகளிடம் இருந்து வந்தது. ஆனால், இப்பொழுது அவைகள் வழக்கமான கட்டுப்பாட்டுக்கு வழி வகுத்துள்ளது. பதவிகளின் நிலை[2] குறைவுபடுவதற்கு இன்றியமையாத காரணம் அரசாட்சி மக்களிடம் மாற்றப்பட்டதாகும். ஆகவே, அரசியலமைப்பு, முறைப்படி விளங்கிய நியமனம், அதிகாரிகளின் கட்டுப்பாடு முதலியவைகள் கவர்னரால் கட்டுப்படுத்துதல் போன்ற முறைகள், புதிய குடியாட்சிக்கும், அதன் முன்னேற்றத்திற்கும் ஒவ்வாததாகும்.

இங்கிலாந்திலுள்ள மந்திரிசபை நியமனப்படி, பொறுப்புள்ள அரசாங்கம்[3] சட்டசபைக்கு முழுமையாகக் கீழ்ப்பட்டு இருக்க வேண்டும் என்பது, எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்டதொன்றாகும். மாறுதல்கள் ஏற்பட்ட இந்தியாவில், அதிகாரங்கள் சட்டசபைக்கு மாற்றப்பட்டதனால், அதிகாரிகள், அதிகாரம் இழந்து அதிருப்தி அடைந்தனர் என்பதில் வியப்பில்லை. சீர்திருத்த ஆராய்வுக் குழுவிடம் (Reforms Inquiry Committee) இந்திய மந்திரிகள் இட்ட பணிகளைச் செயல்படுத்துவதில் நிரந்தரமான பதவியிலிருக்கும் பணியாளர்கள் நேர்மையுடன் ஒத்துழைக்கவில்லை என்று புகார்கள் செய்யப்பட்டன. பொதுவாக அம்மாதிரியான விஷயங்கள் மிகவும் குறைவாகவே நடைபெற்றன. ஆனால், மந்திரிகளுக்கும், ஆங்கில அரசாங்க அதிகாரிகளுக்குமிடையேயுள்ள உறவு சுமுகமாகவும், திருப்திகரமாகவும் இருந்தது எனக் கூறலாம்.

## அரசியலிலும், நிர்வாகத்திலுமுள்ள வேறுபாடுகள்[4]

சீர்திருத்த ஆய்வுக் குழுவின் சிறுபான்மை அறிக்கை' இங்கிலாந்திலும், அதன் இராச்சியங்களிலும்; நிர்வாக அதிகாரிகளுக்கும், அவர்களுடைய மேலதிகாரிகளுக்குமுள்ள சுமுகமான தொடர்பு இந்தியாவைப் பொறுத்த அளவில், மாற்றமடைந்த சூழ்நிலை ஏற்படாததற்குக் காரணம், இங்கு, மேற்குறிப்பிட்ட நாடுகளைப் போன்று அதிகாரிகள் சட்டசபைக்குப் பொறுப்புள்ளவர்களாகவும், கட்டுப்பட்டவர்களாகவும் ஆகாதுதான் எனக்

1. Ibid, page No. 289
2. Ibid
3. Ibid
4. Ibid P. 289

கூறியது. கழிந்த காலத்தில் நிர்வாகப் பொறுப்பும், அரசியல் பொறுப்பும் அதிகாரிகள் கையில் இருந்தன. ஆனால், அவ்விதக் கூட்டு அதிகாரம், மாண்ட்போர்டு சீர்திருத்தத்தின் கருத்துக் களுக்கு முரண்பட்டதாக இருந்தது. ஏனெனில், அரசியல் பொறுப்புக்களெல்லாம் பொறுப்பாட்சிக்கு உட்பட்டிருந்தது. ஆனால், பொறுப்பாட்சி ஓங்கும்போது, அதிகாரிகளுக்கும் வேண்டுமளவு அதிகாரம் கொடுக்க வேண்டுமென்று சிறு பான்மை அறிக்கை ஒப்புக் கொண்டது. ஆகவே, சட்டத்தின் அடிப்படையில், அதிகாரிகள், ஜனநாயக அடிப்படையில் அரசாங்கத்தில் மோதுகின்ற அரசியல் கருத்துக்களால் பாதிக்கப் படாமல், காப்பாற்றப் பட வேண்டும் எனக் கருதினர். ஆனால், நிர்வாகத்துக்கும், சட்டசபைக்குமுள்ள தொடர்புகள் காலத்திற் கேற்றாற்போல் மாற்றப்படாமல் இருப்பின், அன்றுள்ள நிலையில் ஏற்பட்ட தொடர்பு, பல சிக்கல்களையும், முரண்பட்ட தொடர்பு களையும், ஏற்படுத்திச் சுமுகமான உறவும், நட்பும், நிர்வாக அதிகாரிகளிடம் இல்லாமல் ஆக்கிவிடும் என எச்சரித்தது.[1]

## 7

### மாகாண சட்டசபைகள்

மாகாண சட்டசபைகள்[2] நிர்வாகத்தின் நரம்புகளாக விளங்கின. அரசாங்கத்தின் இரு பிரிவுகளும், தங்கள் கொள் கைகள் சட்டசபையின் ஆதரவையும், ஒப்புதலையும் பெறக் கவலை யோடு எதிர் நோக்கி இருந்தன. சட்டசபையில் 80 சதவிகிதம் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களாக விளங்கினர். ஆனால், அவர்கள் எல்லோரும் மாவட்டத் தொகுதிகளில் தேர்வு பெற்ற வர்கள் அல்லர். கீழ்க்கண்ட அட்டவணை பல்வேறு மாகாணங் களின் சட்டசபையின் அமைப்பு பற்றி விவரிக்கும்.[3]

| சென்னை | பம்பாய் | வங்காளம் | உத்திரப் பிரதேசம் | பஞ்சாப் | பீஹார் | மத்திய மாகாணங்கள் | அஸ்ஸாம் |
|---|---|---|---|---|---|---|---|
| தேர்ந்தெடுக்கப்பட்ட மொத்த அங்கத்தினர் எண்ணிக்கை | | | | | | | |
| 98 | 86 | 114 | 90 | 71 | 76 | 55 | 39 |
| பொதுவாக்ப் பிரதிநிதிகள் அனுப்பும் பகுதியின் எண்ணிக்கை | | | | | | | |
| 65 | 46 | 46 | 60 | 20 | 48 | 41 | 21 |

[2]. Ibid
[3]. See Sri Ram Sharma, op. cit. P. 184
[3]. Ibid, P. 185

| சென்னை | பம்பாய் | வங்காளம் | உத்தரப் பிரதேசம் | பஞ்சாப் | பீஹார் | மத்திய மாகாணங்கள் | அஸ்ஸாம் |
|---|---|---|---|---|---|---|---|
| (அ) ஒதுக்கப்படாத இடங்கள் | | | | | | | |
| 37 | 39 | 46 | 60 | 20 | 48 | 41 | 21 |
| (ஆ) ஒதுக்கப்பட்ட இடங்கள் | | | | | | | |
| 28 | 7 | — | — | — | — | — | — |
| முகமதியர்களின் எண்ணிக்கை | | | | | | | |
| 13 | 27 | 39 | 29 | 32 | 11 | 7 | 12 |
| ஆங்கிலோ-இந்தியர்களின் எண்ணிக்கை | | | | | | | |
| 1 | — | 2 | — | — | — | — | — |
| ஐரோப்பியர்களின் எண்ணிகை | | | | | | | |
| 1 | 2 | 5 | 1 | — | 1 | — | — |
| இந்திய கிறிஸ்தவர்கள் எண்ணிக்கை | | | | | | | |
| 5 | — | — | — | — | — | — | — |
| சீக்கியர்கள் எண்ணிக்கை | | | | | | | |
| — | — | — | — | — | 12 | — | — |
| பிரத்தியேக அலுமல்களுக்கு அளிக்கப்பட்ட ஆசனங்களின் எண்ணிக்கை | | | | | | | |
| 13 | 11 | 22 | 10 | 7 | 9 | 7 | 6 |
| நியமிக்கப்பட்டவர்க்ளின் எண்ணிக்கை | | | | | | | |
| 34 | 28 | 26 | 23 | 23 | 27 | 18 | 14 |
| மொத்த அங்கத்தினர்கள் | | | | | | | |
| 32 | 114 | 140 | 113 | 94 | 103 | 73 | 53 |

தொகுதிகளைப் பகிர்ந்து கொடுத்ததின் விளைவாக[1] அரசியல் அழுத்தம் உள்ள பிரிவுகளை உண்டாக்குவதற்கு, நியமிக்கப்பட்ட அங்கத்தினர்களும் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களும், பல மாகாணங்களில் ஒன்று சேர்ந்து மெஜாரிட்டி ஏற்படுத்த முயற்சி செய்தனர். சென்னையில், ஒதுக்கப்படாத மாவட்டத் தொகுதிகளின் மொத்த எண்ணிக்கை, 132இல் 37 ஆகவும், பம்பாயில்

[1]. Ibid

114இல் 39 ஆகவும், வங்காளத்தில், 140இல் 46 ஆகவும், பஞ்சாபில் 94இல் 20 ஆகவும், பீகாரில் 103இல் 48 ஆகவும், ஐக்கிய மாகாணங்களில் 113இல் 60 ஆகவும், மத்திய மாகாணங்களில் 73இல் 41 ஆகவும், அஸ்ஸாமில் 53இல் 21 ஆகவும் இருந்தன.[1] இவ்வாருக, ஒதுக்கப்படாத பிரிவில் இருக்கும் அங்கத்தினர்கள், மத்திய மாகாணத்திலும், ஐக்கிய மாகாணத்தில ஒதுக்கப்பட்ட தொகுதிகளிலும் பெரும்பான்மையாக இருந்தனர். மேலும் 1916ஆம் ஆண்டு காங்கிரஸ் ஸ்தாபனத்திற்கும், முஸ்லீம்-லீக்கிற்கும் ஏற்பட்ட லக்னௌ உடன்படிக்கைதான் நாட்டில் ஏற்பட்ட எல்லா விளைவுகளுக்கும் காரணம் எனக் கூறுவது நியாயமற்றது. ஏனெனில், அவ்வுடன்படிக்கையில் சீக்கியர்களுக்கோ, ஐரோப்பியர்களுக்கோ, இந்தியக் கிறிஸ்தவர்களுக்கோ தனிச் சலுகை அளிக்கப்படவில்லை. அன்றியும், அவ்வுடன்படிக்கை தனித் தொகுதிகளை எச்சாதிக்கும் ஒதுக்கவில்லை. ஆனல், சீர்திருத்தச் சட்டத்தில் கூறப்பட்ட, கூறு போடும் கொள்கைகள், அரசியல் அழுத்தங்கொடுக்கும் கூட்டங்கள் ஏற்படவும், தேசிய அடிப்படையில் அரசியல் கட்சிகள் ஏற்படாமல் இருக்கவும் ஏதுவாக இருந்தது.[2]

## 8

## தேர்தல்கள்[3]

அங்கத்தினர்கள் ஒற்றைத் தொகுதிகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டனர். விளம்பரம் செய்யப்பட்டதுபோல், குறிப்பிட்ட தினத்திற்குள் வேட்பாளர்கள் தங்களுடைய பெயர்களைப் பதிவு செய்ய வேண்டும். பதிவு செய்யப்பட்ட பெயர்கள், மாகாண அரசாங்கத்தால் நியமனம் செய்யப்பட்ட அதிகாரிகள் மூலமாகப் பரிசீலனை செய்யப்படும். அவர்களுடைய முடிவுகளிலிருந்து, மேலதிகாரிகளுக்கு மேல் முறையீடு உள்ளதாயினும், தேர்தலுக்குப் பின் தேர்தல் மனு மூலமாக மறு முறையீடு செய்யவும் வாய்ப்பிருந்தது. வேட்பாளர்கள் தெளிவான மனமுடையவராகவும், கடன் தொல்லை அற்றவராகவும், குற்றவாளிப் பட்டியலில் இல்லாதவராகவும் இருக்க வேண்டும். கடைசியில் குறிப்பிட்ட தகுதியின்மையைப் போக்கக் கவர்னரிடம் மனு மூலம் அனுமதி பெற அதிகாரம் வழங்கப்பட்டது. தேர்தலில் போட்டியிடுவோர் பெயரை, ஓட்டுரிமை பெற்ற ஒருவர் முன் மொழியவும்

[1] Ibid p. 185
[2] Ibid p. 186
[3] Ibid p. 186

மற்றொருவர் வழிமொழியவும் தேவை இருந்தது. தேர்தலில் நம்பிக்கையுடன் போட்டியிடுவதன் எடுத்துக் காட்டாக ஒரு குறிப்பிட்ட ஜாமீன் தொகை கட்ட வேண்டும். போட்டியிடும் தொகுதிலுள்ள வேட்பாளர்கள் அத் தொகுதியைச் சார்ந்தவர் களாய் இருக்க வேண்டும். தேர்தலின் தினங்கள் முன்ன தாகவே அறிவிக்கப்படும்.[1] ஒவ்வொரு தொகுதியும் ஓட்டுக் களின் அடிப்படையில் சிறு பகுதிகளாகப் பிரிக்கப்படும். ஓட் டுரிமை பெற்றவர், தமக்குரிய ஓட்டுச் சாவடியில், ஒரு நேரம் ஓட்டுப் பதிவு செய்ய உரிமை வழங்கப்பட்டது. ஓட்டுப் பதிவு செய்யும் வாக்காளர்களின் உண்மையை விசாரிக்க வேட்பாளரின் ஏஜெண்டுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. வாக்காளர், வாக்கெடுத்தல் அதிகாரியிடமிருந்து தம் கையில் ஓட்டுச் சீட்டைப் பெற்றதும், ஏஜெண்ட் சந்தேகப்படும்போது சவால் விடுவார். ஓட்டுச் சீட்டைப் பெற்ற வாக்காளர், தலைமை வகிக்கும் அதிகாரி ஒருவர் ஓட்டுப் பெட்டியோடு அமர்ந்திருக்கும் அறைக்குச் சென்று தம் ஓட்டைப் பதிவு செய்வார். இங்கு வாக்காளர் தம் ஓட்டுச் சீட்டில் அடையாளமிட்டு அதை ஓட்டுப் பெட்டியில் போட்டுவிடுவார். படிக்காத ஓட்டுப்பதிவு செய்யும் வாக்காளர்களுக்கு, அவர் தாம் எண்ணியுள்ள வேட்பாளரைப் புரிந்துகொள்ளும் வண்ணம், எல்லா முறைகளும் கையாளப் படும்.[2] சில வாக்காளர்கள், தலைமை தாங்கும் அதிகாரி, தன் ஓட்டுச் சீட்டில் வேண்டிய அடையாளம் இடக் கேட்கலாம். ஆனால், இதற்கு ஒப்புக்கொள்வதாயின், ஓட்டுப் பதிவு செய்யும் இரகசிய முறை அழிந்துவிடும் எனத் தேர்தல் விதிகள் கூறின.

தேர்தல் சமயம் முடிந்தவுடன், ஓட்டுப் பெட்டிகள் முத்திரை[3] இடப்பட்டு, பாதுகாவலான இடத்தில் வைக்கப்படும். ஓட்டுகள் எண்ணும் நாள் குறிப்பிடப்படும். ஓட்டு எண்ணும் போது வேட்பாளர்களின் ஏஜெண்டுகள் அங்கு அனுமதிக்கப் பட்டனர். ஓட்டு எண்ணிக்கையின் வித்தியாசம் குறைவாக இருப்பின், ஓட்டுக்கள் மறுமுறை எண்ணப்படும். ஓட்டெடுப்பின் முடிவு உடனடியாகத் தெரியப்படுத்தப்படும். ஆனால், அவ்வங் கத்தினர், அதிகாரபூர்வமான அம் மாகாண கெஜட்டில் அவர் பெயர் வெளியிடும்வரை, அங்கத்தினராக மாட்டார். அங்கத் தினர்கள், தேர்தல் செலவு பற்றிய கணக்கை அரசாங்கத்திற்குச் சமர்ப்பிக்க வேண்டும். குறிப்பிட்ட காலத்திற்குள் அவர்கள்

[1] Ibid P. 186.
[2] Ibid
[3] Ibid

அங்ஙனம் செய்யாவிடில், அவர்கள் அடுத்த ஐந்து வருடங்களுக்கு எந்தத் தேர்தலிலும் போட்டியிட முடியாமல் ஆகிவிடும். தேர்தல் செலவின் மொத்தத் தொகையின் கணக்கை நியாய பூர்வமாக ஒவ்வொரு தலைப்பிலும் ஒதுக்கி, அவர்கள் செலவு செய்துள்ள வகையையும் தெளிவுபடுத்த வேண்டும்.

தேர்தலில் போட்டியிட முன் வந்துள்ளவர்களின் பெயரைச் செவ்வனே பரிசீலனை செய்யாத அதிகாரிகளும், தேர்தலில் நேர்மையற்ற முறைகளைக் கையாண்ட அங்கத்தினர்களும், தேர்தல் மனுக்கள் தாக்கல் செய்யப்பட்டு, கவர்னரால் தண்டிக்க முடியும். ஓர் அங்கத்தினர், தம் பெயரில் எந்த ஒரு கடவுளின் நாமத்தையும் மக்களிடையே பரப்பக்கூடாது எனவும், தேர்தலில் போட்டியிடும் மற்றோர் அங்கத்தினரை மத அடிப்படையில் தண்டிப்பதாகக் கூறுவதும், தேர்தலுக்குப் புறம்பான நடவடிக்கைகளாகும். வாக்காளர்களுக்கு விருந்தளிப்பது, வாக்காளர்களுக்கு லஞ்சம் அளிப்பதாகும். ஓட்டுச் சாவடிகளுக்கு வாக்காளர்களை வாடகைக் காரிலோ அல்லது உந்து வண்டியிலோ அழைத்துச் செல்வது தேர்தல் விதிகளுக்கு முரண்பட்ட செயலாகும். ஆனால், அவர்களைத் தனியார் காரிலோ, உந்து வண்டியிலோ கொண்டு வருவது அனுமதிக்கப் பட்டது.[1]

## வாக்காளர்களும் அவர்கள் பிரதிநிதிகளும்

முதல் தேர்தலில் வாக்குரிமை பெற்றவர்களின் பட்டியல் மிகவும் குறைவாகவே இருந்தது. தொகுதிகள்,[2] தனித்தொகுகள் எனவும், பொதுத் தொகுதிகள் எனவும் பிரிக்கப் பட்டன. பொதுத் தொகுதிகளில் சிலவற்றுள், வகுப்புவாத தொகுதிகள் இணைக்கப்பட்டன. வரக்காளர்களுக்கு அரசியல் கல்வி ஊட்டுவதைவிட, அரசியல் பிற்போக்குக் கருத்துக்களைப் பரப்ப நேர்ந்தது எனக் குறை கூறியவர்களும் உண்டு. வாக்காளர்களை உணர்ச்சி வசப்படுத்த, மாகாண நிர்வாகத்திற்குச் சம்பந்தம் அல்லாத பிரச்சினைகளையும் வேட்பாளர்கள் கிளப்பினர். தொகுதிகள் சாதாரணமாகப் பெரிதாகப் பிரிக்கப்பட்ட போதிலும், அவர்கள் தேர்தலைப் பொறுத்த மட்டில் பல ஜாதிமதப் பிரிவுகளைக் கொண்டதனுல், அத்தொகுதிகளைத் திட்டவட்டமாகப் பரிபாலிக்க முடியாமல் இருந்தது. வாக்காளர்களுக்கும், தேர்

[1] Ibid, Page No. 187
[2] Ibid

தலில் போட்டியிடுபவர்களுக்கும் சாதாரணமாக நெருங்கிய தொடர்பு இல்லை. அங்ஙனம், தொடர்பிலுருந்த இடத்தும் அது அரசியல் தொடர்பாக இல்லை.

## சட்டசபைகளின் கூட்டம்

அறிக்கையில், குறிப்பிடப்பட்டுள்ள இடத்தில், குறிப்பிட்ட காலத்தில் புதிய சட்டசபை[1] கூட வேண்டுமென்று கவர்னர் கட்டளையிட்டார். முதல் கூட்டத்திற்கு ஆஜராகியிருந்த அங்கத்தினர்கள், பதவிக்குரிய சத்தியப் பிரமாணத்தைச் செய்து கொண்டரர்கள். முதல் நிர்வாக சபையிலும், இரண்டாவது நிர்வாக சபை முதல் கூட்டத்திலும், சத்தியப்பிரமாணச் சடங்கிற்குப் பின்பு, மேலும் கூடுவதாக உறுதி கொண்டு கலைந்தனர். பின்பு அவர்கள் தலைவரையும், (1925ஆம் ஆண்டிற்குப் பிறகு) உபதலைவரையும் தேர்ந்தெடுப்பதற்காகக் கூடினர். தலைவர், அவைத்தலைவர்கள் பட்டியல் ஒன்றை அறிவித்தார். அப்பட்டியலிலுள்ள ஓர் அவைத்தலைவர், சபையின் நிரந்தரத் தலைவரும், உபதலைவரும் இல்லாத நேரத்தில் தலைமை வகித்தார். நியமிக்கப்பட்ட தலைவரின் ஊதியம் கவர்னரால் நிர்ணயிக்கப் பட்டது; தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவருக்கும் சட்டசபை ஊதியங்களை நிர்ணயித்தது.

தலைமை தாங்கும் அதிகாரி சட்டசபையின் சட்ட நடவடிக்கைகளைக்[2] கட்டுப்படுத்தினர். தலைவரும், அவர் இல்லாத நேரத்தில் உப தலைவரும் சட்டசபை கூட்டங்களையும், சட்டசபை கூடாத நேரத்திலும், சட்டமன்றங்களின் வெளியில் அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட பணிகளைச் செயல் படுத்தினர். சட்ட மன்றங்கள் கவர்னரால் இயற்றப்பட்ட நிலை ஆணைகளின் (Standina Orders) படியும், அதிலிருந்து உருவாக்கப்பட்ட நடைமுறை (Rules of Business) உத்தரவுகளின்படியும் செயலாற்றியது. தலைமை தாங்கும் அதிகாரி இந்த உத்திரவுகளைக் குறுக்கு விசாரணை செய்தும், அங்கத்தினர்களால் எழுப்பப்பட்ட ஒழுங்குப்பிரச்சினை (Points of Orders) மூலமாகவும் அவருடைய பொறுப்புக்களைச் செயல்படுத்தினர் இம்முறைகளில் அங்கத்தினர்களோ, அங்கத்தினரல்லாதவர்களோ சட்டத்தின் செயல் முறையை மீறி நடக்கும்போது அச்செய்கை தலைவரின் கவனத்தைக் கவர்ந்தது, தலைமை தாங்கும் அதிகாரி சில

[1] Ibid P. 187

[2] Ibid, Page No. 188

சமயங்களில் சபையின் அன்றைய அலுவலை முடிக்க அவகாசமும், வாதம் நடந்த பிரச்சினைக்குந் தீர்ப்புக் கூற ஆராய்வதற்கு வேண்டிய அனுமதியையும் பெற்றார்.[1] பெரும்பான்மையான நிர்வாக சபை அங்கத்தினர்கள், தங்களுக்கென்று செயலாளர்களைத், தலைமை அதிகாரியின் ஒப்புதலைப் பெற்று நியமித்தனர். சில சட்டமன்றங்களில் போலீஸ் அல்லது இராணுவ உத்தியோகஸ்தர்கள், தலைமை அதிகாரிக்கு உதவியாக, ஒழுங்கைநிலை நிறுத்த, நியமிக்கப் பட்டனர். தலைமை அதிகாரியின் அழைப்பில்லாமல் எந்த அங்கத்தினரும், சபையைக் கூட்டிப் பிரசாங்கம் செய்யமுடியாது. சபையில் பேச வாய்ப்பு அளிக்கப்பட்ட அங்கத்தினர் தமது பேச்சுக்களைத் தலைமை அதிகாரியைப் பார்த்தே பேச வேண்டும். அங்ஙனம், பேசும் அங்கத்தினர் சபையின் நடவடிக்கைகளுக்குப் புறம்பாக ஏதாவது பேசுவாரேயாயின், அவர் நியாயப்படி பேச அழைப்பதற்குச் சபைத் தலைவருக்கு (Speaker) அதிகாரம் உண்டு. தலைமை அதிகாரி, தம் ஆசனத்திலிருந்து எழும்போது, சபையில் சொற்பொழிவு ஆற்றும் அங்கத்தினர் அமர்ந்து, தலைமை அதிகாரியின் குறுக்கு விசாரணை முடிவு பெற்ற பின்னர் தம்முடைய சொற்பொழிவை மீண்டும் தொடங்க வேண்டும். அங்கத்தினர்கள் சபையில் பேச்சு சுதந்திரம் பெற்றிருந்தனர். ஆனால், அதிகார பூர்வமற்ற வெளியீடுகளில் சொற்பொழிவின் முழுமையான அறிக்கையை வெளியிடுவதில்லை.[2]

## தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களிடையே மந்திரிகளின் பொறுப்பு

மந்திரிகளை நியமனம் செய்யும் அதிகாரத்தைக் கட்டுப்படுத்துவதில்தான் சட்டசபை முதல் தடவையாகத் தோல்வி[3] அடைந்தது. இரட்டையாட்சியின் ஆரம்பகாலத்தில், பஞ்சாபில் மந்திரியாக இருந்த ஒருவர், தாம் கொண்டு வந்த வீட்டுவரி மசோதா சட்டசபையால் நிராகரிக்கப்பட்ட போதிலும், அவர் இராஜிநாமா செய்யவில்லை. ஐக்கிய மாகாணத்தின் சட்டசபை அங்கத்தினர்கள், ஒரு குறிப்பிட்ட மந்திரி சபையை ஆதரித்தனர். அம்மந்திரி சபை, கவர்னரால் விலக்கப்பட்ட போதும், கவர்னரே நியமித்த புதிய மந்திரி சபையை ஆதரித்தனர். இவ்வாறு, அரசியல் கட்சிகளிடையே கொள்கைகளில் மாறுதல் அடையாமல் இருந்த போதிலும், கவர்னருடைய புதிய நிய

1. Ibid page No. 188
2. Ibid Page No. 188
3. Ibid Page No. 193

மனங்கள், சட்டசபையில் மந்திரிகளுக்கு முன்பு எத்துணைப் பின் பலம் இருந்ததோ, அதே பின்பலம் மாற்றியமைக்கப்பட்ட மந்திரிகளுக்கும் இருந்து வந்தது. இதனுல், கவர்னருடைய நல்லெண்ணத்தால்தான், மந்திரிகள் பதவியில் இருக்க முடியும் என்ற ஒரு கருத்து ஓங்கி வளர்ந்தது. ஒரே சமயம் மட்டுமே கவர்னர் நியமனம் செய்த ஒரு மந்திரி இராஜிநாமா செய்யும் அளவுக்குச் சட்டசபை வலியுறுத்த முடிந்தது. இதன் முக்கிய மான காரணம், அம்மந்திரி, பல கையாடல்களில் உட்பட்டுள் ளார் எனத் தேர்தல் தீர்ப்பாயம் (tribunal) அவரைச் சட்ட சபையில் ஐந்து வருடம் அங்கம் வகிக்கத் தகுதியற்றவர் எனக் கூறியதே.[1]

குழுக்களின் மூலம் ஆற்றப்பட்ட வேலைகள்

தேர்வுக்குழுவிலும், (Select Committee) நிலைக்குழுவிலும் (Standing Committee) அரசாங்கக் கொள்கைகளைப் பிரபல்யம் ஆக்க எல்லாஉதவிகளையும்[2] அங்கத்தினர்கள் மேற்கொண்டனர். இரண்டாவது குறிப்பிட்ட, நிலைக்குழுக்களுள், பொதுக்கணக் கிட்டுக் குழு, மாகாணங்களில் வரவு செலவுகளைப் பற்றி அதிகாரி யின் கணக்கு அறிக்கையைப் பரிசீலனை செய்தது. அக்குழு நிதிமந்திரியின் தலைமையில் கூடியது. குற்றம்புரிந்த இலாக்காத் தலைவர்களைப் பொது விசாரணைக்கு உட்படுத்தியது. பல்வேறு மாகாணங்களில் போற்றுதற்குரிய கணக்கீட்டு முறையை அறிமுகப்படுத்தியது.[3]

## 9

## இரட்டையாடசி செயல்படும் முறை

இரட்டையாட்சி,[4] அரசியலமைப்பில், எந்தவிதமான முன் னேற்றத்தையும் ஏற்படுத்தவில்லை என்பது தவருன கருத்தாகும். அது மாகாண அரசாங்கத்தின் அடிப்படையான மாறுதல்களை ஏற்படுத்தியது,[5] பழைய அதிகாரிகளுக்கு ருசிகரமானதாக இல்லை. முதன்முறையாக ஏராளமான மக்களுக்கு ஓட்டுரிமை அளிக்கப்பட்டது, மேலும், சட்டசபைக்கு ஓர் அங்கத்தினரைத் தேர்ந்தெடுக்கும் முறையும், அரசியல் அடிப்படையில் பிரச்சினை களைப் பொதுமக்கள் முன்பு வைத்து, மக்களுக்கு அன்றுள்ள

1. Ibid P.193
2. Ibid P.193
3. Ibid P.193
4. Ibid P. 193.
5. Ibid

பிரச்சினைகளின் முக்கியத்துவத்தை அறிவித்து, அவர்கள் ஒரு தீர்ப்பு வழங்க, இக்காலங்களில், நடந்த பொதுத் தேர்தல்கள் பெரும் வாய்ப்பளித்தது. அன்று மக்கள் தீர்ப்பு கண்ட அரசியல் கேள்விகள், முன்னுளில், அதிகாரிகளுக்காகவே ஒதுக்கப்பட்டிருந்தது. ஆனல், 1919ஆம் ஆண்டு சீர்திருத்தத்தின்பின்,[1] மிகவும் பணிவான ஒரு வாக்காளர் கூடப் பெரும் அரசியல் கேள்விகளுக்குத் தீர்வு காணுவதில் பங்கு கொள்ள வாய்ப்பு அளிக்கப்பட்டது. பல மாகாணங்களில், சட்டசபைத் தேர்வுக்கு உரிமை அளிக்கப்பட்ட வாக்காளர்களுக்கு உயர்ந்த யோக்கிய தாம்சங்கள் குறிப்பிடப்பட்ட போதிலும், சில மாகாணங்களில் ஸ்தலஸ்தாபனங்களுக்குக் கூட ஓட்டளிக்க உரிமை பெருத ஏராளமான பெண்களும், ஆண்களும் மாகாண சட்டசபைத் தேர்வுகளுக்கு ஓட்டளிக்க உரிமை பெற்றனர். சட்டசபைகளும் விரிவாக்கப்பட்டன. சில பெரும்பான்மையான மாகாணங்களில் சட்ட சபைகள் நான்கு மடங்காக விஸ்தரிக்கப் பட்டன. மொத்த அங்கத்தினர்கள் எண்ணிக்கையில் 4/5 பாகம் தேர்ந்தெடுக்கப்பட்டனர். அமைப்பிலும், சூழ்நிலையிலும், புதிய மாகாணசட்டசபைகள், பழையசபைகளின் உத்தியோகஸ்தரல்லாதவர்கள், ஆதரவு பெற்ற அதிகாரிகள், இவர்களால் ஆக்கப்பட்ட சட்டமன்றங்களைப் போலல்லாமல் பாராளுமன்றத்தையே ஒத்திருந்தது: ஆரம்பத்திலிருந்தே ஒவ்வொரு சபையும், ஒரு தலைவரையும், உதவித் தலைவரையும் பெற்றிருந்தது. நான்கு வருடங்கள் கழித்து ஒவ்வொரு சட்டமன்றமும் அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட, தலைவரின் கீழ்க் கூடியது. ஆனல், மாகாண நிர்வாக சபைகள் சட்டசபையின் அதிகாரத்திலிருந்து விடுவிக்கப்பட்டன. நடைமுறைச்சட்டங்கள் கவர்னரின் ஒப்பு தலைப்பெற வேண்டுமென்ற விதி இருந்தபோதும், அச்சட்டங்கள், நாளடைவில், சட்டசபையினுல், பாராளுமன்ற முறைப்படியே உருவாக்கபபட்டன. மந்திரிகளும், நீதி சாசனக் குழுவில் அங்கத்தினர்களும் பொதுக்கணக்கியல் குழுக்களின் அங்கத்தினர்களும், மிகவும் கவனத்துடன் கண்காணிக்கப்பட்டு வந்த அரசியல் இரகசியங்களைக் கூட அறிய வாய்ப்பு ஏற்பட்டது.[2] அநேக மாகாணங்களில் சில இலாக்காவுடன் இணைக்கப்பட்டுள்ள யோசனைக் குழுக்களுக்கும், இரகசியங்களையறியும் பல சந்தர்ப்பங்கள் அவர்களுடைய இலாக்காக்களில் அடைய வாய்ப்பிருந்தது. மந்திரிகள், தன்னிச்சையாக, இலாக்காக்களின் கொள்கைகளையும், உத்திரவுகளையும் பிறப்பிக்கும் பொறுப்பை ஏற்றனர். மாற்றப்பட்ட பகுதி

1. Ibid, Page 194
2. Ibid P. 195

களில் இந்தியரல்லாத சிவில் உத்தியோகஸ்தர்களைச் சேர்த்துக் கொள்ளும் முறை படிப்படியாகவும், வேகமாகவும் முன்னேறியது. இரட்டையாட்சி அதன் காலவரையறையை எய்துவதற்கு முன்னுள், ஏறக்குறைய எல்லா மாகாணங்களிலும், மாற்றப்பட்ட இலாக்கா தலைவர்கள், இந்தியர்களாகவே நியமிக்கப்பட்டனர். பல முக்கியமான இலாக்காக்களில் அரசியல் தலைவர்களாக இந்திய மந்திரிகள் பொறுப்பு பெற்றதால், ஆங்கில அரசாங்கப் பதவிகளை, இந்திய மயதாக்குவதை துரிதப்படுத்தினர்.[1] இனி மேலும், ஓர் உயர்ந்த குடிமகன் மாவட்ட அதிகாரியாகவே வாழ்நாள் பூராவும் செலவிட முடியாது. இப்பொழுது மாகாண அரசின் தன்மையும் அடிப்படையில் மாறி விட்டது. அயல் நாட்டு எதேச்சாதிகார அதிகாரிகளைப் போலல்லாமல், இந்திய மந்திரிகள் சமூக விரோதமான எப்பிரச்சினையையும் தீவிரமாக அணுக, அஞ்சத்தேவையில்லை. ஏனெனில், அவர்கள் இந்திய மக்களின் நல்லெண்ணத்திற்கு அஞ்சி நடக்க வேண்டியிருந்தது. மெச்சத்தக்க சமூகசட்டங்கள் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டன. அவைகளை, அயல் நாட்டு ஆட்சியாளர்கள் தடுத்தனர். அடிப்படையான பழக்க வழக்கங்களிலும், நம்பிக்கையிலும் தலையிடுவதாகத் தடுக்க முயன்றனர்.[2]

ஆனால், இதற்கெல்லாம் மேலாக இந்த 16 ஆண்டுகளில் மாகாண அரசாங்கங்கள் செயல்பட்ட முறை, சிந்தனையின் பொய்த் தோற்றத்தைச் சிதற அடித்தது. மேல்நாட்டுக் குடியரசு நிறுவனங்களை வெகு வேகத்துடன் இந்தியாவில் புகுத்தினர். எனக்கூறமுடியாது. 17ஆம் நூற்றூண்டில், பாராளுமன்றங்களில் தேர்வுபெற்ற ஆங்கிலேயர்களைப் போல் இந்தியர்களும், வன்மை பொருந்திய பாராளுமன்றத்தினர்களாக ஆக்கப்பட்டார்கள். ஆனல், மந்திரிகளுக்கும், சட்டசபை உறுப்பினர்களுக்கும், இந்திய அரசாங்கச் சட்டத்தினல் அளிக்கப்படாத உரிமைகளைத் தாஸ் (Dass) என்பவரும், இராகவேந்திரராவ் (Ragavendra Rao) என்பவரும் கோரினர், கொடுக்காத உரிமைகளைக் கேட்ட இவர்கள், ஹாம்டென் (Hampden) வெண்ட்வொர்த் (Went Worth), வால்போல் (Walpole) பிட் (Pitt) ஆகியவர்களை விட உரிமைகளைப் பெறுவதில் தீவிரவாதிகள் எனலாம். இந்தியர்கள், தங்களுடைய கருத்துக்களுக்குப் பொருந்துமாறு கட்டுக்கதைகளைக் கண்டு பிடிப்பதில், ஆங்கில அதிகாரிகளைப் பின்பற்றினர்.[3]

[1] Ibid P. 189
[2] Ibid
[3]. Ibid P. 189

## சட்டசபை அங்கத்தினர்கள் வேலைகள்[1]

சட்டமன்ற உறுப்பினர்கள், மாகாண நிர்வாகத்தைப் பற்றிக் கேள்விகள் மூலம், ஆழ்ந்த பரிசோதனைக்கு உள்ளானுர்கள். சட்டசபையில் எழுப்பப்படும் முக்கியக்கேள்வியைத் தொடர்ந்து பல உப கேள்விகளைக் கேட்டு, மாகாண நிர்வாகத்தைப் பரிசீலனைக்கு உள்ளாக்கினர். தொடர்ந்து கேள்விகள் கேட்கும் வாய்ப்பு, முதல் கேள்வி கேட்ட அங்கத்தினர்களோடல்லாமல், அக்கேள்வியில் திருப்தி அடையாத வேறு அங்கத்தினர்கள் கூடத் தொடர்ந்து கேள்வி கேட்கும் உரிமை அளிக்கப்பட்டது. கேட்கப்படும் கேள்விகள் எல்லாம் விவகாரங்களைப் பற்றிய செய்திகளைக் கேட்டறியும் தோரணையில் அமையும். சாதாரணமாகக் கேள்விகள் 15 நாட்களுக்குமுன்பாகவே அரசாங்கத்திற்கு அனுப்பப்பட வேண்டும். சரியான பதில் தயாரித்து அரசாங்கம் விடையளிக்க அவகாசம் தேவையாயிருந்தது. ஆனுல், நிர்வாக சபை அங்கத்தினர்களோடு அல்லது மந்திரிகளோடுள்ள முன்னேற்பாட்டின்படி குறுகிய கால கேள்விகளும் அனுமதிக்கப்பட்டன. 1919ஆம் ஆண்டின் சீர்திருத்தத்திற்கு முன்பே, தீர்மானங்களை, அசெம்பிளியில் பிரேரணை[2] செய்ய உரிமை வழங்கப்பட்டது. ஆனுல், 1919ஆம் ஆண்டு சட்டத்தின்படிதான் பொதுமக்கள் நன்மை குறித்துள்ள எக் கேள்வியையும், அச்சபை வாதப்பிரதிவாதம் செய்யவும், சபை அலுவல்களை ஒத்திப்போடவும் உரிமை வழங்கப்பட்டது. கேள்வி கேட்பதற்குள் அனுமதி தேவைப்படுவதைப்போலத், தீர்மானங்களைக் கொண்டு வருவதற்கும் முன்னறிவிப்பு தேவை.[3] கேட்கப்படும் கேள்விகட்குச், சாதாரணமாக அதற்காக ஒதுக்கப்பட்ட நேரத்தில் மட்டும் சட்ட சபையில் பதில் கூறப்படும். ஆனுல், அதிகாரிகளல்லாதவர்கள் கொண்டு வரும் தீர்மானங்கள், அதற்காகக் கவர்னரால் குறிப்பிடப்பட்ட தினத்திலும், நேரத்திலும் வாதிக்கப்படும். ஆனுல், அநேக தீர்மானங்கள் நேரமில்லாமல் சபையில் நடவடிக்கைக்கு வராமலேயே இருந்துவிடும். சபையின் சர்ச்சைக்குக் கொண்டு வரப்படும் தீர்மானங்கள், ஓட்டின் அடிப்படையில் தீர்மானிக்கப்பட்டன. ஆகவே, புதிதாகக் கொண்டுவரும் குறுகிய கால அறிவிப்புக்களில் உள்ள தீர்மானங்களை விவகாரத்திற்கு எடுத்துக் கொள்ளப்படும் என்ற நம்பிக்கை நாளடைவில் இல்லாமல் ஆயிற்று. சபை நடக்கும்போது முக்கியமான பிரச்சினைகள் எழலாம். ஆங்கிலப் பாராளுமன்ற விதிகளின் அடிப்படையில்,

1. Ibid
2. Ibid
3. Ibid P. 19)

அப்பிரச்சினைகள் ஒத்திவைக்கப்பட்ட பிரேரணையாக விவாதிக்கப் படும். அதுபோன்ற பிரேரணைகள் சட்டசபை காரியதரிசியிடம், கேள்வி நேரம் முடிந்தவுடன் கொடுத்து, அனுமதிபெற்று, விவா தத்திற்கு எடுத்துக்கொள்ளப்படும்.[1] அதன்பின் சபையினுடைய தலைவர், அப்பிரேரணையை விவாதத்திற்கு எடுத்துக் கொள்ள அனுமதி வழங்குவாராயின், அப்பிரேரணையை எல்லா அங்கத் தினர்களும் கேட்குமாறு உரக்கப்படிப்பார். இதுபோன்ற நட வடிக்கைகள், எடுத்துக் கொண்ட கேள்வியின் அவசரத்தைப் பொறுத்ததேயாகும். அக்குறிப்பிட்ட அங்கத்தினர், அச்செய்தி கேட்ட நிமிடமே அப்பிரேரணையைக் கொண்டு வந்ததாக இருப் பின், அது அவசரமானதாக எடுத்துக்கொள்ளப்படும். பொது நன்மையான பிரச்சினைக்களுக்கு மட்டுமே இவ்வாறுன அனுமதி வழங்கப்படும். சாதாரண தீர்மானத்தின் அடிப்படையில் எழுப்பப் பட்ட ஒரு கேள்வி ஒத்திவைப்புப் பிரேரணை மூலம் அனுமதிக்கப் பட்டது.[2] பட்ஜெட் மூலமாகவோ, 'மேல் நின்ற நிதி அளிப்பு' ("Supplementary Grants") என்ற தலைப்பிலோ எழுப்ப வேண்டிய பிரச்சினையை ஒரு ஒத்துப் பிரேரணை மூலம் வாதத்திற்குக் கொண்டு வரப்படுமாயின், அது போன்ற பிரச்சினைகளை நிராகரிக்கச் சபைத்தலைவருக்கு அதிகாரம் உண்டு. ஏனெனில், இங்ஙனம், கொண்டு வரப்படும் ஒத்திவைப்புப் பிரேரணை சபையில் குறிப்பிட்ட வேலைகளைப் பாதிப்பதாக இருக்கும். சாதாரணமாக இப்பிரேரணைகளைத் தலைவர், அறிவிப்பு விடுத்த அன்று 4 மணிக்கு விவாதத்திற்கு எடுத்துக் கொள்வார்.

அப்பிரச்சினை பற்றியுள்ள வாதம் சுமார் 2 மணி நேரம் வரை நடைபெறும். அப்பிரேரணை சபையினுல் ஒத்துக் கொள்ளப்பட்டதாயின், சபை நடவடிக்கைகள் ஒத்திப் போடப் படும். அவ்வகையில், எடுத்துக் கொண்ட பிரேரணை வாதத் தோடு மட்டும் நின்று விடும் (Talked out). விவாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட ஒத்துப் பிரேரணை நிர்வாகத்தில் ஏற் பட்டுள்ள தவறுகளையும், அரசாங்கத்தின் கவனக் குறைவைப் பற்றியும் விவாதிப்பதாக இருக்கும். எழுப்பப்பட்ட பிரச்சினைக்கு அரசாங்கத் தரப்பில் கொடுக்கப்பட்ட விளக்கம் திருப்திகரமாக இருக்குமேயாயின், பிரேரணையைத் தாக்கல் செய்தவர் வாபஸ் பெற்றுக் கொள்வார். அவர் அங்ஙனம் திருப்தி அடையாவிடில்,

1. Ibid P. 190

2. Ibid P. 190

அப்பொழுது நடக்கின்ற வாதப்பிரதிவாதங்களுக்கு முடிவு கூறும் பிரேரணை ஒன்று கொண்டுவந்து, குறிப்பிட்ட இரண்டு மணி நேரத்துக்குள், சபையில் பிளவு ஏற்படுத்தி, ஓட்டு எடுக்கக் கட்டாயப்படுத்துவார். மக்கள் அதிகாரத்துக்கு மாற்றப்பட்ட தலைப்பிலுள்ள ஒரு பிரச்சினை பற்றி ஏற்பட்ட வாதத்தில் அரசாங்கத்திற்குக் குறைந்தபட்ச ஓட்டு கிடைக்குமாயின், அப் பிரச்சினை சம்பந்தப்பட்ட இலாக்காவின் பொறுப்பை வகிக்கும் மந்திரியின் பேரில் கொண்டுவரப்பட்ட ஒரு நம்பிக்கையில்லாத் தீர்மானமாக எடுத்துக் கொள்ளப்படும்.[1]

மந்திரி தம் இலாக்காவை நிர்ணயிக்கும் முறையைக் குறித்துச், சட்டசபை கையாண்ட மற்றொரு முறை[2] யாதெனின், மந்திரியினுடைய போக்கைக் கண்டித்து நேரடியாகக் கண்டனம் கொண்டு வர முடியும். அல்லது, சட்டசபை, அம்மந்திரியின் பேரில் நம்பிக்கை இல்லாத் தீர்மானத்தைக் (No Confidence Motion) கொண்டு வர வாய்ப்பிருந்தது. இவ்வாறு, அவசர மாகக் கொண்டு வரும் பிரேரணைகளை அன்றே வாதத்திற்கு எடுத்துக் கொள்ளத் தேவையில்லை. அங்ஙனம், வாதத்திற்குக் கொண்டு வரும் கண்டனம், தொடர்புள்ள மந்திரியின் இராஜிநா மாவிலோ அல்லது அவரைப் பதவியிலிருந்து நீக்குவதிலோ முடியும். சட்டசபை தனக்கு வழங்கப்பட்டுள்ள தலைப்பிலுள்ள இலாக்காவை நிர்ணயிக்க வேண்டிய சட்டங்களை இயற்றியது. எல்லா முக்கிய நடவடிக்கைகளும், சபையில் மும்முறை வாசிக்கப்படும். சபையின் முதல் தடவை அம்மசோதா வாசிக்கப்படும்போது, சபை அம்மசோதா குறிப்பிடும் பொதுவான, கொள்கைகளைப் பற்றி ஆராய்வதில் ஈடுபட்டிருக்கும். இங்ஙனம், அதன் பொதுக் கொள்கைகளைப் பற்றி வாக்குவாதம் நடந்ததன் முடிவில், அம் மசோதாவைப் பற்றி, பொதுமக்களின் அபிப்பிராயத்தை அறிய அவசியம் ஏற்படுமாயின், சுற்றறிக்கை ஒன்று அனுப்பப்படும். அல்லது, அது ஒரு தேர்வுக்குழுவின் பரிசீலனைக்கு வேண்டி ஒப்படைக்கப்படும். அம்மசோதாவை, நிர்வாகசபை அங்கத் தினரோ அல்லது மந்திரியோ, அத்தேர்வுக் குழுவுக்கு அனுப்பு வர். குறிப்பிட்ட இலாக்காவின் நிர்வாகசபை அங்கத்தினரோ அல்லது மந்திரியோ இக்குழுவின் ஆலோசனைகளுக்குத் தலைமை வகிப்பார்.[3] தேர்வுக் குழுவின் தணிக்கை பின்னுல் சட்ட சபைக்கு வழங்கப்பட்டு, மசோதாவின் ஒவ்வொரு கூருக எல்லா அங்கத்தினர்களும் கொண்ட சபையில் ஆலோசிக்கப்படும்.

1. Ibid P. 191
2. Ibid P. 191
3. Ibid, page 192

இவ்வாறு அதனுடைய கடைசி முடிவில், அம்மசோதா மேலும், சபையின் ஒரு பொதுத் திறனாய்வுக்குப் பாத்திரமாகி, மூன்றாம் முறையாக வாசிக்கப்படும்.

சட்டசபை, மாகாண நிதியிலிருந்து நிதியளிப்பு ("Vote for Grants")[1] என்ற தலைப்பில் நிதியை அரசாங்கத்திற்கு வழங்க ஆலோசனை செய்யும். அரசாங்கத்தின் முழு வரவு செலவு திட்டமும் சபையின் பரிசீலனைக்குச் சமர்ப்பிக்கப்படும். மாற்றப் பட்ட இலாக்காவின் செலவு ஒதுக்கப்பட்ட இலாக்காவிலிருந்து தனியாகவே பரிசீலிக்கப்படும். மாகாண கவர்னர்கள், நிர்வாக சபை அங்கத்தினர்கள், ஆங்கிலப் பாராளுமன்ற அதிகாரத்திற் குட்பட்ட அரசாங்க அதிகாரிகள், உயர்நீதிமன்ற நீதிபதிகள், இவர்களுடைய ஊதியங்கள், ஆகிய இப்பிரச்சினைகள், சட்ட சபையின் ஓட்டுக்குட்பட்டவை அல்ல. கடன் சம்பந்தமான தொகைகள் அல்லது கடன் வட்டிகள், திருப்பி மாற்றுவதற்கான கட்டணங்கள் (Reconversion charges) போன்ற தலைப்புக்கள், ஓட்டின் மூலம் நிர்ணயிக்கப்பட முடியாதவையாகும். இவை களுடன் சட்டபூர்வமாகக் கொடுக்கப்பட வேண்டிய தொகை களும் சட்டசபையின் ஓட்டுக்குட்படாதவை. தனது ஊதியத் தையும், உயர்நீதிமன்ற நீதிபதிகளின் ஊதியத்தையும் தவிர, ஓட்டு மூலம் நிர்ணயிக்க முடியாத தலைப்புகளையும் சட்டசபையின் வாதத்திற்கு விட்டுவிடக் கவர்னருக்கு அதிகாரம் இருந்தது. ஆனால், ஓட்டின் மூலம் நிர்ணயிக்க முடியாத தலைப்பிலுள்ள செலவைக் கவர்னரே நிர்ணயிக்க முடியும். ஓட்டின் மூலம் நிர்ண யிக்கும் செலவுகளை அங்கத்தினர்கள் ஒரு சிறு தொகைக் குறைப்பினாலோ அல்லது பெருந்தொகைக் குறைப்பிற்கு வேண்டியே ஒரு வெட்டுப் பிரேரணையினாலோ கொண்டு வரலாம். அடையாளக் குறைப்பு (Token cuts) கொண்டு வருவதன் காரணம், பெரிய தொகையால் நடத்தப்படும் அரசாங் கத்தின் கொள்கையைச் சபையில் வாக்குவாதத்திற்குக் கொண்டு வர மட்டுமேயாகும். ஆனால், பெருந்தொகைக் குறைப்பு அரசாங்கச் செலவில் சிக்கனம் உண்டாகவும், அரசாங்கத்தின் அத்தகைய நடவடிக்கையைக் கண்டிக்கவும் ஆகும். ஆங்கிலப் பாராளுமன்ற நடவடக்கைகளைப் பின்பற்றி, ஓர் அங்கத்தின ருக்கு, ஓர் இலாக்காவின் செலவைக் கூட்டுவதற்கு என ஒரு பிரேரணை கொண்டு வர முடியாது. அங்ஙனம், அரசாங்கம் செலவிடும் தொகையைக் கூட்ட வேண்டுமாயின், சிறுதொகைக் குறைப்பு என்ற பிரேரணை மூலமாகவே அத்தலைப்பில் அரசாங்கம்

1. Ibid

செலவுகள் செய்ய வேண்டும் என்பதைக் கூற வேண்டும். சாதாரணமாகச் சட்டசபைகள் மந்திரிகள் கூடுதலாகச் செலவிட வேண்டும் என்ற கோரிக்கைகளை அனுதாபத்தோடு ஆராய்ந் தன. அங்கத்தினர்கள், நாட்டின் புனரமைப்புக்கு வேண்டி, அரசாங்கத்தின் செலவை அதிகப்படுத்துவதற்கு அடிக்கடி 'அடையாளக் குறைப்பு' கொண்டு வந்தார்கள். ஆனால், ஒதுக்கப்பட்ட அரசாங்கத் தலைப்பிலுள்ள செலவுத் தொகை களைச் சட்டசபை ஆராயும்போது அவ்விலாக்காக்களிலுள்ள குறைபாடுகளைச் சுட்டிக் காட்டவும் செய்தன.[1]

மாற்றப்பட்ட தலைப்பிலுள்ள இலாக்காக்களின் செலவு களைச்[2] சட்டசபை பரிசோதனை செய்து ஏதேனும் குறை கூறு மாயின் மாற்றப்பட்ட இலாக்காக்கள்[3] அக்குறைகளை நீக்கச் சம்மதித்தன. ஆனால், மத்திய மாகாணத்திலும், வங்காளத் திலும் மாற்றப்பட்ட இலாகாவுக்கு ஒதுக்கப்பட்ட தொகைகள் பூராவையுமே, அன்றுள்ள இந்தியச் சீர்திருத்தச் சட்டத்தின்கீழ் வெறுப்புக் கொண்டதின் காரணமாக நிராகரித்தனர். ஆனால், மாகாண அரசாங்கத்தை நடத்துவதற்குக், கடந்த வருடத்தின் வரவுசெலவுகளின் அடிப்படையில், நிதியைச் செலவு செய்யக் கவர்னர் அனுமதி அளித்தார். இப்படி ஓர் இக்கட்டான நிலை யில் கவர்னர் செலவு தொகைக்கு அதிகாரம் வழங்குவதை விட அவரே மாகாணங்களில் எல்லா இலாக்கா அதிகாரிகளையும் பொறுப்பேற்று, பின் செலவுத் தொகையை அளித்திருக்கலாம். மாகாணங்களில் மாற்றப்பட்ட தலைப்புக்கள் மறுபடியும், கவர்னரின் அதிகாரத்திற்குக் கொண்டு வரப்படுமாயின், இத்தலைப்பிலுள்ள இலாக்காக்களை நடத்துவதற்கு நிர்வாக சபையில் கவர்னர் பொறுப்புள்ளவராக ஆவதோடு, சட்டசபை மறுத்துள்ள தொகையைச் செலவு செய்ய அதிகாரமும் வழங்கியிருக்கலாம்.[4]

மாகாணங்களில், மக்கள் அதிகாரத்துக்கு மாற்றப்பட்ட இலாக்காக்களைச் சுமார் 16ஆண்டுகள் நடத்துவதற்கு வேண்டிய சட்டதிட்டங்கள் இயற்றப்பட்டன. ஒன்றிரண்டு காலக் கட்டங்களில், மாகாண சட்டசபைகள் நிறைவேற்றிய மசோதாக்களைக கவர்னர்கள் ஒப்புக் கொள்ளாமல், கவர்னர் ஜெனரல் அனுமதிக்கு ஒதுக்கி வைத்தார்கள். மேற்குறிப்பிட்ட காலகட்டத்திலும், சட்டசபைகளுக்கு, மந்திரிகள் குறிப்பிட்ட

1. Ibid, page 193
2. Ibid, page, 194
3. Ibid, page, 195.
4. See Rajeswara Rao P. J. 'A Survey of Indian Constitutionalism' 1950, Chapter IX, Working of Dyarchy, page no. 54-58.

திட்டங்களின் பேரில் அனுதாபம் இருந்தது. பஞ்சாபிலும், மற்றும சில மாகாணங்களிலும், ஸ்தல ஸ்தாபனங்களில், ஜாதி மத அடிப்படையில், வாக்காளர் பட்டியல் தயாரித்தபோது சட்டசபைகள் அதற்குப் பெரிதும் மறுத்துரைத்தன.[1] அது போலவே, மாகாணங்களில் ஜாதிமத அடிப்படையில் வேலைகளை ஒதுக்கியபோது மாகாண சட்டசபைகளில் பெரும் சூடும், வாக்கு வாதமும் ஏற்பட்டன. பத்திரிகை உலகத்திற்கும், பேச்சுரிமைக் கும் அளிக்கப்பட்ட சுதந்திரத்தைக் குறுக்கும் வகையில் ஏதே னும் மசோதாக்கள் கொண்டு வரப்படுமேயாயின், அவைகள், சட்டசபையில் பெரிதாக எதிர்க்கப் பட்டன. அம்மசோதாக்கள் சட்டசபையில் அங்கீகாரம் பெற்றச் சட்டமாக்கப்படவில்லை. ஆனால், அவைகள் மத்திய அரசாங்கத்தின் சட்டங்களாகவும், 'விசேட சட்டங்களாகவும்' ('ordinances') பிறப்பிக்கப்பட்டன.[2]

[1]. Ibid

[2]. Mrs. Ranjita Coondoo, op. cit. page no. 63

# இரட்டையாட்சி செயல்படும்போது காணப்பட்ட பெரும் குறைபாடுகள்

## 1

### இலாக்கா பிரிவினையில் ஏற்பட்ட அதிகார சிக்கல்கள்

1919 ஆம் ஆண்டின் இந்திய சீர்திருத்தச்சட்டம் அமுல் செய்யப்படுவதற்கு முன்னால், பரதகண்டம் முழுவதிலும் ஏற்பட்ட அடக்கு முறையினால்,இந்திய சீர்திருத்தங்களைப் பொதுமக்களால் மனமுவந்து வரவேற்க முடியவில்லை.[1] வங்காளத்தில், இரட்டையாட்சி நடைமுறையில் வரவில்லை. மத்திய மாகாணத்தில் கூடச் சீர்திருத்தங்கள் பெரும் சிக்கலுக்குப் பின்னால்தான் ஓரளவு செயல்படுத்த முடிந்தது. இதர மாகாணங்களில், அரசியல் சூழ்நிலை இரட்டையாட்சிக்குச் சாதகமாக இல்லை. இரட்டையாட்சியின் அமைப்பில் கூட்டுப் பொறுப்பு என்பது ஏட்டுச் சுரைக்காயாகவே இருந்தது. அதுபோலவே, ஒதுக்கப்பட்ட இலாக்காக்கள், மாற்றப்பட்ட இலாக்காக்கள் எனத் திட்டவட்டமாக வரையறுப்பது ஒரு முடியாத காரியமாகும். என்றாலும், சென்னையில் நீதிக்கட்சி அதிகாரத்தை ஒப்புக்கொண்டு அரசாங்கத்தை நடத்த முன் வந்ததால், கூட்டுப் பொறுப்பு ஓரளவுக்கு நடைமுறையில் கொண்டு வரப்பட்டது. சென்னையில், ஒரு முதல் மந்திரியும், சீர்திருத்தச் சட்டத்தின் கீழ்ப் பணியாற்ற வாய்ப்பு இருந்தது. இரட்டையாட்சி நடைமுறையில் இருந்த காலத்தில், நீதிக்கட்சி அல்லாமல் சுயராஜ்யக் கட்சியும் கூட ஒரு முதல் மந்திரியை நியமனம் செய்வதை ஒத்துக்கொண்டது.

என்றாலும், இரட்டையாட்சியின் கீழ் அளிக்கப்பட்ட பதவிப் பொறுப்பு.[2] ஒரு மலர் மஞ்சமல்ல. திரு. கே. வி. ரெட்டி அவர்கள் மூடிமன் குழுவின் முன்பு அளித்த வாக்கு மொழியில்,

1. **Ibid**
2. **See P. Rajeswara Rao, op. cit. P. 54**

பொதுவாகப் புனரமைப்பிற்குப் பொறுப்புள்ள மந்திரியாகத் தாம் பணியாற்றிய போதிலும், காட்டிலாக்கா தம் பொறுப்பில் இல்லாமல் இருந்தது எனவும், விவசாய மந்திரியாக இருந்த போதிலும், நீர்ப்பாசனம், சென்னை விவசாயக்-கடன்-கொடுப்பு, சென்னை நில முன்னேற்றக் கடன் கொடுப்பு ஆகிய இலாக்காக்களின் பொறுப்பு தமக்கு வழங்கப்படவில்லை எனவும் கூறினர். மேலும், தாம் தொழில் மந்திரியாக இருந்தபொழுதிலும், தொழிற்சாலை, பாய்லர்கள், மின்சாரம், தண்ணீர், மின்விசை சுரங்கங்கள் ஆகிய நிறுவனங்களைப் பரிபாலிக்கும் அதிகாரம் தமக்கில்லாமல் இருந்தது எனவும் கூறினர். இவ்வாருக விவசாயம் மாற்றப்பட்ட தலைப்பில் இருந்தபோதும், நீர்ப்பாசனம் ஒதுக்கப்பட்ட இலாக்காவின்கீழ் இருந்தது [1] தொழிற்சாலை முன்னேற்றங்கள் மாற்றப்பட்ட துறையிலும், காடுகள் சம்பந்தப்பட்டவை ஒதுக்கப்பட்ட துறையிலும் இருந்தன. இப்படிப்பட்ட ஒழுங்குமுறையில்லாத பிரிவுகள்,[2] ஏராளமான குழப்பங்களை உண்டாக்கியது. இப் பிரிவினைச் சட்டத்தின் முக்கியமானதொரு குறைபாடாகவும் விளங்கியது. சர். ஏ. பி. பாட்ரோ[3] அவர்கள் தாம் கல்வி மந்திரியாக இருக்கும்போது கொடுத்த வாக்குமூலத்தில், மேற்குறிப்பிட்ட தகராறுகள் மாற்றப்பட்ட இலாக்காக்களில்தான் அதிகமாகக் காணப்பட்டன எனக் குறிப்பிட்டார்.

1919 ஆம் ஆண்டு சீர்திருத்தச் சட்டத்தின் கீழ் 52-வது பகுதியின் அடிப்படையில், மந்திரிகளின் பொறுப்பிலிருந்த மாற்றப்பட்ட இலாக்காக்களுக்கும், கவர்னரே தொடர்ந்து மேற்பார்வையாளராக இருந்தார்.[4] சர். சிந்தாமணி[5] என்பவர், தாம் மந்திரியாக இருந்த அனுபவத்தைப் பற்றிக் கூறும்போது, பல முறை தம் அதிகாரம் முறியடிக்கப்பட்டது எனக் கூறினர். முக்கியமானது அல்லது முக்கியமற்றது என்ற வேறுபாடின்றி எல்லாப் பிரச்சினைகளிலும் தம்முடைய அபிப்பிராயங்கள் மாற்றியமைக்கப்பட்டன எனக் கூறினர். வங்காளத்தில் மந்திரிப் பதவி வகித்த நவாப் அலி என்பவர், தாம் ஒதுக்கப்பட்ட இலாக்காவுக்குப் பொறுப்பு உள்ளவராக இருந்த போதிலும், சட்டசபை அங்கத்தினரல்லாத கவர்னர், இவ்விலாக்காவைப் பற்றியுள்ள தீர்மான முடிவு எடுப்பதற்கு அதிகாரம் பெற்றிருந்தார் எனக் கூறினர். ஒரு சமயம், சென்னையில் அதிகாரம் வகித்திருந்த மந்திரிகளுக்குச், சட்ட

1. Ibid
2. Ibid
3. Ibid, pege 55
4. Ibid, page 56
5. Ibid

சபையில் மிக அதிகமான ஓட்டுக்கள் பின் துணையாக இருந்த போதிலும், தங்களைப் பின் பற்றியவர்களைக் கொண்டு நீர்ப்பாசன வசதி சம்பந்தமாக ஒதுக்கப்பட்ட அரசாங்கத் தரப்பில் கொண்டு வந்த ஒரு மசோதாவை, மறுத்து விடக் கேட்டுக் கொண்டனர். இச் சம்பவம் நடந்ததுமே அவ்விலாக்காவிற்குப் பொறுப்புள்ள நிர்வாகசபை அங்கத்தினர் ஒருவர் இராஜிநாமா செய்துவிட்டார். இதற்கு மாருகப், பாராளுமன்ற முறையில்லாமல், சட்டங்களை அமுல் செய்யும் அதிகாரி ஒருவர், ஐக்கிய மாகாணத்தின் சட்ட சபையில், தம் கொள்கைக்கு ஓட்டு அளிக்கவும், மந்திரிகளை அணுகித் தம் கொள்கைகளை ஆதரிக்கவும் கேட்டுக்கொண்டார்.[1] அதுபோலவே, ஜில்லா போர்டுகள் பராமரிப்பு சம்பந்தமான ஒரு மசோதாவில், நிர்வாகசபை அங்கத்தினர் ஒருவர், மந்திரிகளின் கொள்கைகளுக்கு விரோதமாகச் சட்டமன்றத்தில் பேசினர். மேற்கூறிய மசோதாவில் நடந்த வாக்குவாதத்தின் இரண் டாவது நாளன்று, நிதி அங்கத்தினர், அதிகாரிகளாகச் சட்ட சபையில் அங்கம் வகித்த அங்கத்தினர்களை, அம்மசோதாவிற்கு விரோதமாக ஓட்டளிக்க வெளிப்படையாகக் கேட்டுக்கொண்டார். இவ்வாறு, சட்டசபையின் பொறுப்பற்றப் பகுதியைச் சார்ந்து, அதன் எதேச்சாதிகார அதிகாரங்களைக் காப்பாற்ற முன் வந்தவர் களில் அநேகர், முதிர்வு பெற்ற அகில இந்திய சிவில் சர்வீஸ் அங்கத்தினர்களாவார். சர். சி. பி. இராமஸ்வாமி ஐயர் புதிதாக ஒரு கருத்தை வெளியிட்டார்.[2] கிழக்கிந்தியக் கம்பெனியின் இயக்குநர்கள் விடுத்துள்ள அறிக்கையிலிருந்து, அரசாங்கத்தில் பணியாற்றும் எல்லா இலாக்காக்களையும் சார்ந்த அதிகாரிகளை (மாற்றப்பட்ட இலாக்கா உட்பட) நியமனம் செய்வது கவர்னரே யாகும் எனத் தெரிவித்தார். அது போன்று வங்காளத்தில் சர். அப்துல் ரஹ்மான் என்பவர் வங்காளச் சட்டசபையின் செல் வாக்கு தம்மைப் பாதிக்காது எனக் கூறிச் சபையின் வேண்டு கோள்களை மறுதளிப்பதில் பெரும் பெயர் பெற்ருர். முகதாபாத் மகாராஜா ஐக்கிய மாகாணத்தில் உள்நாட்டு அங்கத்தினராகப் பணியாற்றியபோது, ஒதுக்கப்பட்ட இலாக்காக்களில் பொறுப் பற்ற முறையில் பணியாற்றும் ஆங்கில அதிகாரிகளைப்போன்று, பொறுப்பற்ற ஆட்சிக் கொள்கைகளை விளக்கி வந்தார்.[3]

மந்திரிகள், தங்கள் கொள்கைகளை உருவாக்குவதற்கும், ஒதுக்கப்பட்ட இலாக்காக்களுக்குப் பொறுப்புள்ள நிர்வாகசபை அங்கத்தினர்களின் நல்லெண்ணத்தைப் பெறுவதற்கும், அவர்

[1] Ibid, page 57
[2] Ibid, page 58
[3] See Mrs. Ranjita coondoo, op. cit. p. 62

களோடு கலந்தாலோசித்தனர். மேலும், 1923 ஆம் ஆண்டில் கண்டனத் தீர்மானத்திற்குப் (Vote of Censure) பதில் அளிக்கையில், பனகல் ராஜா, தாம் கவர்னரால் தேர்ந்தெடுக்கப்பட்டதனுல், அவருக்குத்தாம் பொறுப்புடையவர் எனக் கூறினர். வங்காளத்தில் நம்பிக்கையில்லாத் தீர்மானமொன்று, சட்டத்திற்கு உட்படவில்லை என மறுக்கப்பட்டபோது, சென்னையில் அவ்வகைத் தீர்மானமொன்று ஒப்புக்கொள்ளப்பட்டது. எட்வர்டு வில்லிம்ஸ்[1] என்பவர் மூன்ருவது முறையாக வங்காள சபைக்குப் போட்டியிட மறுத்தபோது, இரட்டையாட்சி, இந்தியர்கட்குப் பொறுப்புக்களைக் கற்பிப்பதைவிட, பொறுப்பின்மையையே கற்பித்து வருவதாகக் கூறினர். மேலும், சீர்திருத்தங்கள் மாற்றியமைக்கப்பட்டு, மாற்றப்பட்ட பகுதிகள் சிறியதாகவோ அல்லது முக்கியத்துவமற்ருே இருந்தபோதிலும், அவ்வதிகாரங்களில் கவர்னர் தலையீடு இல்லாமலும், சட்டசபைகளில் அரசாங்க சார்பிலுள்ள ஓட்டுக்கள் செல்வாக்குற்றதாகவும் ஆகும் வரையில் சீர்திருத்தங்கள் எந்தவிதமான வெற்றியும் அடையாதெனக் கூறினர். இம்மாதிரியான கண்காணிப்புக்கள், தடைகளெல்லாம் மாற்றப்பட்ட பகுதிகளுக்கு மட்டும் உட்பட்டதல்ல. சென்னையில் திரு. டி. ஆர். வெங்கட்ராம சாஸ்திரிகள், சில நாட்கள், அலுவலகத்தில் சட்ட அங்கத்தினராகப் பணியாற்றிய பிறகு, சட்ட அங்கத்தினர்களுக்கிருந்த போலீஸ் அதிகாரம் நீக்கப்பட்டவுடன், இராஜினுமாசெய்தார். இதற்கெல்லாம் மேலாகப், பம்பாயைச் சார்ந்த திரு. சீமன்லால் செடால்வார்டு என்பவர், கவர்னர் ஒதுக்கப்பட்ட பகுதியின் நிர்வாகத்தை நடத்தும்போது, நிர்வாகசபை அங்கத்தினர்களை ஆலோசிக்காமலே அரசை நடத்தினுர்எனப் புகார் செய்தார்.[2]

## 2

## இலாக்கா பிரிவினையில் ஏற்பட்ட முரண்பாடுகள்[3]

மாண்டேகு செம்ஸ்போர்டின் சீர்திருத்தங்களில் கண்கூடாகப் பல குறைபாடுகள் இருந்ததுதான் அது தோல்வியுறக் காரணமாயிருந்தது. உதாரணமாக மாகாண அரசாங்கத்துடன் இணைக்கப்பட்ட பகுதியே காரணமாய் இருந்தது. முதன் முதலாக, முழு நிர்வாகமும் மிகவும் நெருக்கமாக இருந்ததோடல்லாமல், நீர்கூடப் புகமுடியாத அளவுக்கு அதனைச் சிறுசிறு பகுதி

[1] Ibid
[2] Ibid, P. 63
[3] Ibid

களாகப் பிரிப்பதென்பது முடியாததொன்றாக இருந்தது. 1919 ஆம் ஆண்டின் சட்டம், பிரிவுபடுத்த இயலாத அரசைப் பிரிவுபடுத்த முயற்சி செய்தது. ஆனால், அவைகள், வாதத்தில் மட்டும் வெற்றிதரக் கூடியதாக இருந்தன. நடைமுறையில் பயனளிக்க வில்லை. உதாரணமாகக் கல்வி இலாக்கா மாற்றப்பட்ட பிரிவின் கீழ் இருந்தது; ஆனால், ஐரோப்பியர்கள், ஆங்கிலோ இந்தியர்கள், இவர்களின் கல்விமுறை ஒதுக்கப்பட்ட தலைப்பில் இருந்தது. இந்திய மந்திரிகள் இந்த இனங்களைச் சார்ந்தவர் நன்முறையில் நடத்துவதுபற்றி நம்பிக்கை இல்லாததினால்தான், கல்வி முறை இவ்வாறு பிரிக்கப்பட்டது எனத் தெரிய வருகிறது. இந்தக் குறிப்பிட்ட பிரிவில் மட்டும், இத்தகைய பிரிவினை விளக்க முடியாததாக இருந்தது. இதர இலாக்காவிலுள்ள பிரிவினைகளும், அதுபான்று, நியாயமான பிரிவினைக்கு உட்படாமல் இருந்தன.[1]

அரசாங்கத்தின் இருகூறுகளான, ஒதுக்கப்பட்ட, மாற்றப் பட்ட பகுதிகள், அரசாங்கத்தில் இருதரப்பட்ட முரணான கருத்துக்களை உருவாக்க ஏதுவாகி, அரசின் கருத்தையும், ஏகோபித்த உறுதியையும் இல்லாமலாக்கிவிடும் என்றும், ஒன்று பட்ட கருத்தும், உறுதியுந்தான் அரசின் திறமைக்கும், அரசை நடத்துவதற்கும் வேண்டற்பாலது என்றும், அதுவே நாளடை வில் மக்களின் சம்மதம் கிடைக்க வழிவகுக்கும் என்றும், அரசியல் வாதிகள் உணர்ந்தனர்.[2]

## 3

## கவர்னரின் பாதகமான போக்கு[3]

கவர்னர் மந்திரிகளைக் கலந்தாலோசிக்கும் வழக்கத்தை வளரச் செய்தபோதிலும், அவர்களிடையே கருத்து வேறுபாடு தோன்றியபோது, கவர்னர் அக்கருத்துக்களை உதாசீனமாகத் தள்ளிவிட்டார். வேற்றுமை கருத்துக்களைத் தவிர்த்து, மந்திரி சபையின் ஆலோசனைப்படி நடக்க வேண்டுமென்ற சட்ட உடன் படிக்கைக்குக் கவர்னரின் இப்போக்கு, எதிராக இருந்தது.[4]

இராம்சே மாக்டனல்ட் என்பவர், சீர்திருத்த விவாதக் குழுவின் சேர்மனாக அலெக்ஸாண்டர் மூடிமனை நியமித்தபோது, ஐக்கிய மாகாணத்தில் முதல் கல்வி மந்திரியாக இருந்த, திரு. சிந்தாமணியின் அறிக்கையில், தாம் உருவாக்கிய நூலகக்

[1] Ibid
[2] Ibid P. 64
[3] Ibid
[4] Ibid

குழுவின் நியமனத்தையும் கவர்னர் ரத்து செய்துவிட்டார் எனக் குறிப்பிட்டார். கவர்னர், அவருடைய சட்டசபையைக் கலைத்து, தேர்தல் மூலம் புதிய மந்திரிகளை நியமிப்பதில் அதிகாரம் பெற்றிருந்தார். மேலும், அவசர காலத்தில், மந்திரிகளின் காலியிடங்களை நிரப்பாமலேயே மாற்றப்பட்ட துறைகளின் நிர்வாகத்தைக் கவர்னரே நடத்தும் அதிகாரம் பெற்றிருந்தார். இது தாற்காலிகமான அதிகாரமாக இருந்தபோதிலும், அக்குறுகிய காலத்தில் கவர்னருடைய குறுக்கீடு, மந்திரிகளின் சிறிய பெரிய பொறுப்புக்களை நிர்வகிப்பதில் பெரும் தடை உண்டாக்கக் காரணமாக இருக்கும் எனக் கருதினர்.[1]

கவர்னர், சாதாரண காலங்களில், மந்திரிகள் அதிகாரம் வகிக்கும்போது, மாகாண அரசாங்கத்தின் இரு பிரிவுகளையும் இணைக்கும் கருவியாக இருந்தார். அவர் பட்சபாதமற்றவராகவும், இரண்டு பிரிவுகளிடையே ஏற்படும் வேறுபட்ட கருத்துக்களுக்குத் தீர்வு காணும் மத்தியஸ்தராகவும், இருப்பாரென எதிர்பார்க்கப்பட்டார். ஆனால், நடைமுறையில் கவர்னர் அவரிடமிருந்து எதிர்பார்க்கப்பட்ட நீதியைக் கூட, மாற்றப்பட்ட இலாக்காககளுக்கு அளிக்கவில்லை. இதற்கு மாறாக ஒதுக்கப்பட்ட பிரிவுக்கு மட்டும் சாதகமாக விளங்கினர்.[2]

## 4

## சட்டதிட்டமற்ற மந்திரி சபைகள்

### (அ) கூட்டுப்பொறுப்பின்மை[3]

மந்திரிசபை கூடுவதற்கோ அல்லது கலந்தாலோசிக்கவோ மாண்ட்போர்டு சீர்திருத்தச் சட்டங்களில் எந்தவிதமான முன்னேற்பாடும் செய்யப்படவில்லை. கவர்னருக்கு அளிக்கப்பட்ட உத்திரவுகளில், மாகாண கவர்னர்கள் மந்திரிகளைக் கலந்தாலோசிக்கவும், மந்திரிசபையைக் கூட்டுவதற்கும் எந்தவிதமான குறிப்புக்களும் அளிக்கப்படவில்லை. மந்திரிகள் தனிப்பட்ட முறையில் கவர்னரால் நியமிக்கப்பட்டு, சட்டசபைக்குத் தனிப்பட்ட முறையில் பொறுப்பு வாய்ந்தவராக விளங்கினர். மந்திரிகள் பலதரப்பட்ட அரசியல் கருத்துக்களைக்கொண்டே கூட்டங்களிலிருந்தும், பலதரப்பட்ட ஜாதியினர் அமைத்துக்

[1] A. B. Keith, op. cit., page 277
[2] Mrs. Ranjita coondoo, op. cit., page 64
[3] Ibid, page 65

கொண்ட கூட்டங்களிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்டதால், கூட்டுப் பொறுப்பு செயல்படுவது இயலாததாக இருந்தது. மந்திரிகள் எல்லோரும் ஒரே கட்சியிலிருந்து மட்டும் தேர்ந்தெடுக்கப்பட வில்லை. மந்திரி சபையில் அவர்கள் நியமனம் பெறக் காரணம், அன்று சட்டசபையில் அமைக்கப்பட்ட பலம் பொருந்திய ஒரு கூட்டத்தின் தலைவர்கள் என்ற முறையில் மட்டுமேயாகும். இக்கூட்டங்கள் தங்களுக்கு மந்திரி சபையில் பிரதிநிதித்துவம் வேண்டுமென்று வலியுறுத்தும் அளவுக்குப் பலம் பொருந்திய தாக இருந்தன.'[1]

### (ஆ) மந்திரிகள் கவர்னரின் கைப்பாவைகள்[2]

மந்திரிகளை ஒன்றாகவோ அல்லது தனிப்பட்ட முறையிலோ கலந்தாலோசிப்பதுபற்றி கவர்னரே முடிவெடுத்தார். மந்திரிகளில் யாராவது ஒருவர் பதவியிலிருந்து நீக்கப்பட்டால், மந்திரிகள் ஒற்றுமையாக இராஜினமா செய்வது என்ற கொள்கை மந்திரி களுக்கே விடப்பட்டிருந்தது. கவர்னர், மந்திரிகளுக்குத் துணை யாக இருப்பதோடு, மந்திரிகளுக்கும், சட்டசபைக்குமுள்ள உறவுகளைப்பற்றி அறிவுரை கூறவும், கூடியமட்டிலும் அவர்களை ஆதரிக்கவும் வேண்டுமெனக் கவர்னர் அறிவிக்கபட்டிருந்தார். மந்திரிகள் சட்டசபையின் நம்பிக்கையை இழப்பது வரையில் பதவி வகிக்கலாம் எனக் குறிப்பிடப்பட்டிருந்தது. இச்சூழ்நிலைகள் காரணமாக, மந்திரிகள், ஆங்கில-ஆளும் பிரபுக்களின் கைப் பாவையாக மாற்றப்பட்டார்கள். மந்திரிகள் இந்தத் தாழ்ந்த நிலைக்கு வர மற்றொரு காரணமும் இருந்தது. அன்று, பொறுப் பாட்சியை அறிமுகப்படுத்தப் பொறுப்புள்ள அரசியல் கட்சிகள் இல்லாமல் இருந்தது. ஆனால், சென்னை மாகாணத்தில் மட்டும் பிராமணரல்லாத இந்துக்கள், நீதிக்கட்சியோடு சேர்ந்து சிறு பான்மையான அதிகாரம் பெற்ற பிராமணராட்சிக்குச் சவால் விட்டதால், இரட்டையாட்சி வளர்ச்சிடைந்து வெற்றி பெற்றது.[3]

### (இ) அலுவலகப் பணியை எதிர்பார்த்த மந்திரிசபைகள்[4]

சென்னையைத் தவிர மற்ற மாகாணங்களில் ஜாதிமத அடிப்படையிலுள்ள கட்சிகள் கூடக் குறைவாகவே காணப் பட்டன. சுயேச்சை அங்கத்தினர்களே அதிகம். இதன் விளை வாக மந்திரிகளைக் கட்சித் தலைவர்களாக மாற்றுவதற்கு, வாக்குறுதியளிக்கும் ஒரு குறிப்பிட்ட பெரும்பான்மையோரின்

[1] Ibid, page 65
[2] Coupland : The Constitutional Problem in India, Part I, page 71
[3] Mrs. Raniita coondoo op. cit. page 65
[4] Ibid

ஆதரவு இல்லாமல் இருந்தது. இதனால், மந்திரிகள், சட்டசபையின் அலுவலகப் பகுதியைச் சார்ந்த அங்கத்தினர்களின் உதவியைப் பெற்றுத்தான், பதவியில் இருக்க முடியும் என்ற சூழ்நிலை உருவாயிற்று. அலுவலகப் பகுதியினர் அரசின் உதவியை எதிர்பார்த்துப் பதவிப் பொறுப்புக்களை அளிக்க ஒத்துழைத்தால், மந்திரிகள் உண்மையான பொறுப்பு பெற்று ஆட்சி நடத்த முடியவில்லை. அரசாங்க அதிகாரத்திற்குட்பட்ட பகுதியோடு நல்லுறவு கொண்ட ஒரு மந்திரிசபை தங்களுக்கு உறுதியான ஆதரவைத் தேடிக்கொண்டது. இதனால், மந்திரிகளுக்குச் சட்டசபையிலுள்ள ஆதரவாளர்கள் எதிர்க்கட்சியை விட வலுவற்று இருந்தபோதிலும், அரசாங்கப் பகுதியைச் சார்ந்த அங்கத்தினர் உதவியோடு பதவியில் நீடித்திருக்க முடிந்தது.[1]

மொத்த அங்கத்தினர்களில், அதிகாரிகளும், நியமிக்கப்பட்ட அங்கத்தினர்களும் 30 சதவிகிதமாக இருந்தனர். இவர்கள் ஒன்றுகூடி ஒரு பகுதியை உருவாக்கி, மந்திரிகளைப் பதவியில் அமர்த்தினர். தேர்ந்தெடுக்கப்பட்ட 70 சதவிகித அங்கத்தினர்கள் எந்தவிதமான பகுதியிலும் உட்படாமலிருந்தனர். அப்பகுதிகளின் பெருமளவு இடங்களில் விசேஷத் தொகுதிகளான, ஐரோப்பிய வர்த்தகசபை, நிலச்சுவான்தார் சங்கங்கள் பிரதிநிதித்துவம் பெற்று, அரசாங்கத்திற்கு உதவியாகப் பணியாற்றினர். இதனால், மந்திரிகள், சட்டசபைக்கு நியமிக்கப்பட்டவர்கள், அதிகார பூர்வமான அங்கத்தினர்கள் ஆகியவர்களின் ஆதரவைப்பெறக் கவர்னரைப் பற்றிக்கொள்ள வேண்டியிருந்தது. இதன் பலனாக, மந்திரிகள் செயலாளர்கள் நிலைக்கு வரவேண்டியிருந்தது.[2]

(ஈ) மந்திரிகளுக்கு நற்பயிற்சியின்மை[3]

மேலும், மந்திரிகளுக்குப் பொறுப்புக்களைப் பற்றிய பயிற்சி அளிப்பதற்கு எவ்வித முயற்சிகளும் எடுக்கப்படவில்லை. சென்னையில் கவர்னர் வெலிங்டன் பிரபு, ('Lord Wellington') சட்ட உடன்படிக்கைகளைத் தவிர்த்து, நிர்வாகசபை அங்கத்தினர்களையும், மந்திரிகளையும் ஒன்றுபட்ட சபையாகவே கருத முடிவு கொண்டார். அதுபோலவே, வங்காளத்தில் லிட்டன் பிரபுவாலும் (Lord Lytton) ஐக்கிய மாகாணங்களில் முதல் சபையைத்

[1] Coupland : op. cit. p. 69.
[2] Mrs. Ranjita coondoo : op. cit. p. 66.
[3] Ibid P. 66

துவக்குவதற்கு முதல் இரண்டு வருடங்களுள் சர். ஹார்கோர்ட் பட்லர் (Sir Harcourt Butler) என்பவராலும் இக்கொள்கை பின்பற்றப்பட்டது. இப்படிப்பட்ட ஓர் அமைப்பு, மந்திரி சபை பொறுப்புக்களுக்கு நல்லதொரு பயிற்சியை அளிக்கவில்லை. ஆனால், இது போன்ற பயிற்சி அளிப்பதுதான் 1919ஆம் ஆண்டு சீர்திருத்தத்தின் முக்கியத்துவமென எதிர்பார்க்கப் பட்டது. இது போன்ற பயிற்சி தேவையாக இருந்ததற்குக் காரணம், அவ்வமைப்பு சட்டசபைக்குப் பொறுப்புள்ள மந்திரிகள் என்றும் அச்சட்டசபைக்குப் பொறுப்பில்லாத நிர்வாகசபை அங்கத்தினர்கள் என்றும் குறிப்பிட்டுள்ள பாகுபாட்டைத் தெளிவு படுத்தாமல் இருந்ததேயாகும்.[1]

(உ) மந்திரிகளுக்கும் இலாக்கா செயலாளர்களுக்குமிடையே பதவிநிலை வரையறுக்கப்படாமை[2]

மந்திரிகளுக்கும், நிலையான செயலாளர்களுக்குமிடையே யிருந்த உறவு குறைபாடுடையதாகவே இருந்தது. நியதியின் அடிப்படையில் மந்திரிகள் உயர்ந்த அதிகாரம் பெற்றிருந்தும், செயலாளர்கள் மந்திரிகளுக்கு எதிராகக் கவர்னரிடம் நேரிடை யாகவே முறையிட முடிந்தது. நிரந்தரமான செயலாளர் களுக்குக் கவர்னர் பொறுப்புக்களைப் பாதிக்கின்ற முக்கியமான விஷயங்களை அவர் கவனத்திற்குக் கொண்டு வரவும், நேரிடை யாக அவரிடத்தில் முறையிடவும், சட்டத்தில் அதிகாரம் வழங்கப் பட்டிருந்தது. ஆனால், அதுவே மந்திரிகளுடைய பொறுப்புக்களைத் தரம் தாழ்த்துவதாக அமைந்தது.

நடைமுறையில் பாராளுமன்ற இந்தியச் செயலாளர், பொதுப் பணியாளர்கள் மூலமாகவும், நிதி இலாக்கா மூலமாக வும், மாற்றப்பட்ட இலாக்காக்களைக் கட்டுப்படுத்தினர்.[3]

மாற்றப்பட்ட இலாக்காக்களை நடத்திவந்த அகில இந்தியப் பணிகளின் அங்கத்தினர்கள், மந்திரிகளின் அதிகாரத்திற்குட் படவில்லை. அவர்கள் கவர்னரிடத்தில் நேரிடையாக முறையீடு செய்யவும், அவர்களுடைய நலன்கள் பாராளுமன்ற இந்தியச் செயலாளரால் பாதுகாக்கப்படவும் உரிமை பெற்றிருந்தனர்.

[1] Ibid
[2] Ibid
[3] Ibid, page 67

(உ) மந்திரிகளுக்கு மாற்றப்பட்ட இலாக்காக்களை நடத்தப் போதிய அதிகாரமின்மை[1]

மந்திரிகளுக்குச், செயலாளர்களைப் பதவியில் அமர்த்து வதற்கான அதிகாரம் அளிக்கப்படவில்லை. அல்லது, அவர்களது இலாக்காவில் தேவைக்கு மிஞ்சிய சிவில் சர்வீஸ் அங்கத்தினர் களை நீக்குவதற்கு அதிகாரம் இல்லை. மந்திரிகளுக்கு ஒதுக்கப் பட்ட இலாக்காக்களிடம் நேரிடையாகவோ அல்லது மறைமுக மாகவோ எவ்வித அதிகாரமும் வழங்கப்படவில்லை. அதே சமயத்தில் ஒதுக்கப்பட்ட பிரிவுகளுக்கு, மந்திரிகளிடத்தில் அதிகாரங்கள் செலுத்த, அதிகாரங்கள் மறைமுகமாக வழங்கப் பட்டிருந்தது. உதாரணமாக, நீதி, சட்டம், ஒழுங்கு போன்ற வைகள் ஒதுக்கப்பட்ட பிரிவுகளைச் சார்ந்திருந்தது. ஆனல், இவைகளை நிர்வகிக்கும் அதிகாரங்கள் மறைமுகமாக மாற்றப் பட்ட இலாக்காக்களிடமிருந்தன. மேலும், ஒதுக்கப்பட்ட பகுதி களில், நிதி இலாக்காவில் போதுமான நிதி இருந்தாலும், நிதி அங்கத்தினர்கள், மாற்றப்பட்ட இலாக்காவுக்குப் போதுமான நிதி கொடுப்பதுபற்றி அக்கரை காட்டவில்லை. இதனல், மாற்றப்பட்ட இலாக்காவினர் தங்கள் கடமைகளை மிகச் சிரமத் துடன் நடத்த வேண்டியிருந்தது.[2]

## 5

## வகுப்புவாத வாக்காளர் பட்டியலும, ஒற்றுமையின்மையும்[3]

ஜாதிமத அடிப்படையிலுள்ள வாக்காளர் பட்டியல் இரட்டையாட்சி காலத்தில் தற்காலிமாகத் கருதப்பட்ட போதும், அது கால அளவில் மாற்றப்படாமல், நிர்வாக முறையில் ஒரு நிரந்தரமான ஏற்பாடாகி விட்டது. மாண்டேகு செம்ஸ்போர்டு தணிக்கையின் கூட்டாசிரியர்கள். வகுப்புவாத வாக்காளர் பட்டியல்பற்றிக் குறிப்பிடும்போது, இந்துக்களும், முஸ்லீம்களும் தனிப்பட்ட பிரதிநிதித்துவம் பற்றிக் கூறிக் கொண்டிருப்பார் களேயாயின், இவ்விரு மதத்தினருக்குமிடையே, மதச் சண்டை கள் என்பது நிச்சயமாக எதிர் பார்க்கக் கூடிய ஒன்ருகிவிடும் எனக் கூறினர். இந்துக்களும், முஸ்லீம்களும் இன்னும் தாங்கள் இந்தியர்கள் என்ற பொது நன்மையைக் கருதி

[1] Coupland : op. cit. p.:58.
[2] Mrs. Rapntacoondoo. cit. p. 67.
[3] Ibid, page 68

ஐக்கியப்படவில்லையென்றும் அவர்கள் கருதினர். நடைமுறையிலும் அவ்வாறே இருந்தது. மேலும், கூட்டாசிரியர்கள், வரலாற்றில், சுயாட்சி விரும்பும் எந்த மக்களும் இருதரப்பட்ட உரிமைகளை ஒப்புக் கொண்டதில்லை எனக் கூறினர். இருந்த போதிலும் வகுப்புவாத பிரதிநிதித்துவம் நடைமுறையில் இருந்து வந்தது. கோப்லண்ட் கூறியது போல, 'இரு மதத்தினரிடையே நிலவிவந்த தனிப்பட்ட நோக்குகள், மாண்டேகு செம்ஸ்போர்டையும், அவர்கட்கு முன்பு பதவியிலிருந்து மார்லி-மிண்டோவையும், மத அடிப்படையில், இருவருக்கும் தனி வாக்காளர் பட்டியல் கொடுக்கக் கட்டாயப்படுத்தியது'.[1]

பிற்கால ஜாதிச் சரித்திரத்திலிருந்து, மிண்டோ பிரபுவினால் அறிமுகப்படுத்தப்பட்ட தனிப்பட்ட வாக்காளர் பட்டியல், விரும்பத்தகாததான ஓர் அளிப்பு என்பதை நாம் ஒப்புக் கொள்ள முடியாது. ஆனால், மாண்டேகுவையும், செம்ஸ்போர்டையும் பொறுத்த வரையில். கோப்லண்ட் கூறியபடி, அவ்விருவரும் இரண்டு பிரச்சினைகளினால் கட்டாயப்படுத்தப் பட்டனர். முதல் பிரச்சினை 1909ஆம் ஆண்டு சட்டத்தின்படி வகுப்புவாத வாக்காளர் பட்டியல், அறிமுகப்படுத்தப் பட்டிருந்ததாகும். இரண்டாவது பிரச்சினை காங்கிரஸ்-லீக் திட்டத்தினால் வகுப்புவாதப் பிரதிநிதித்துவம் ஒப்புக் கொள்ளப்பட்டிருந்ததாகும். 1909ஆம் ஆண்டிலுள்ள அடிப்படை, 1919ஆம் ஆண்டு வரை எந்தவிதமான, மத ஐக்கியத்திலும் முன்னேற்றம் அடையாமல் இருந்தது. இவ்வாருகச் சட்டசபைகள் வகுப்புவாதத் தொகுதிகள் வழியாக விரிவாக்கப்பட்டு வகுப்புவாத வேற்றுமையைத் தொடரச் செய்யப்பட்டது. இது ஜாதி அடிப்படையிலும் பிரதிநிதித்துவம் வழங்க ஏதுவாக இருந்தது.[2] மந்திரிகளிடையே கூட்டுப் பொறுப்பு இல்லாததினால், ஒற்றுமையும், ஒன்றுபட்ட தன்மையும் குறைந்தன. சட்டசபைக்கு வெளியேயும், உள்ளேயும், மந்திரிகள் அரசாங்கத்தைச் சார்ந்த மனிதர்களாகவே கருதப்பட்டார்களேயொழிய, மக்கள் பிரதிநிதியாகத் திகழவில்லை.

1919ஆம் ஆண்டு சீர்திருத்தங்களைப் பற்றிய ஒரு நெருக்கமான ஆராய்ச்சி, முழுமை பெருத, குறைவு பெற்ற அரசாங்கத்தைத் தவணை முறையில் இந்தியர்களுக்கு, ஆங்கிலேயர் அளித்த கருமித்தமான கொள்கையினால், இந்தியத் தேசியமும், ஒற்றுமை

[1] See 'Reports on the working of the Reforms Constitutien' 1927 page 84-88.

[2] Ibid

யும் வளரப் பெரும் இடையூருக இருந்தது எனப் பலரும் கருதி ணர். இந்தியக் குடிமகன் என்ற அந்தஸ்தை அடைய எத்துணை இன்னல்கள் எனக் கருதுவாரும் உளர். வகுப்புவாத முறையில் பின்பு உருவான அரசியல் அமைப்பு சரித்திரத்தில் கொடிய விளைவுகளைக் காண்பித்தது. மதக் கோட்பாடுகளும், ஜாதிப் பிரிவினைகளும் இந்திய மக்களில் முதல் விரோதிகள் என்பதை நாம் உணரவேண்டும்.[1]

## 6

## சென்னையில் அரசியல் கட்சிகளும், இரட்டையாட்சி செயல்பட்ட முறைகளும்[2]

சென்னையில் அரசியல் கருத்துக்கள், பழைமையான பிராமணர், பிராமணரல்லாதவர்கள் என்ற பிரிவினை, இன அடிப் படையில் அமைந்ததாகும். இப்பிரிவினை நாளடைவில் இரட்டையாட்சியை எதிர்ப்பவர்கள், ஆதரிப்பவர்கள் என மாறி யது. ஆனால், காங்கிரஸ் இயக்கம், அதன் அமைப்பின் வேகத் தினுல் பிராமணரல்லாதவர்களையும் அதில் சேருமாறு செய்தது. பொதுவாக இரட்டையாட்சியில் மாகாண சட்டசபைகளிலுள்ள கட்சிப் பிரிவுகள், அகில இந்தியப் பாதையைப் பின்பற்றின. அகில இந்தியக் காங்கிரஸ் குழுவின் கருத்துக்களைத் தழுவி அதன் முடிவுகளை மேற்கொண்டு, அதன் கொள்கைகளைச் சட்ட சபையில் நிறைவேற்ற முயற்சி செய்தன. பிளவுபட்ட மாகாண சட்டசபை கட்சிகளுக்கு விரோதமாகவே அகில இந்தியக் கட்சிகள் செயல்பட்டன.[3] சென்னை சட்டமன்றத்தில் முகமதி யர்கள் சிறிய அளவினராகவே இருந்ததால், அவர்கள் தேசிய இயக்கத்தில் கலந்து பணியாற்றினர். சென்னை சட்டமன்றத்தில் இந்து முஸ்லீம் பிரிவு இடம் பெறவில்லை.

சென்னை மாகாண சட்டசபையில் பலமுடைய எதிர்க் கட்சிக் காங்கிரஸ் அல்லது சுயராச்சிய கட்சியாகும். 1926ஆம் ஆண்டு நடைபெற்ற மாகாண மாநாட்டில் தமிழரும், தெலுங்க ரும் இந்தியாவுக்கு, ஆங்கிலச் சாம்ராஜ்யத்திற்கு வெளியே சுதந்திரம் கேட்டுத் தீர்மானங்களை நிறைவேற்றினர். தெலுங் கர்கள் நிறைவேற்றிய சுதந்திரத் தீர்மானம் பெரும்பான்மை யரால் உணர்ச்சி வேறுபாடு இல்லாமல் ஒப்புக் கொள்ளப்

[1] Ibid P. 85.
[2] Ibid
[3] Ibid

பட்டது. ஆனால், இதுபோன்ற தீவிரமான அறிவிப்புகள், சுயராஜிஸ்ட் போன்ற கட்சிகளின் அதிகாரபூர்வமான கொள்கை என்றோ, பெருவாரியான மக்களுடைய கொள்கை என்றோ கூறுவதற்கில்லை.[1]

1926ஆம் ஆண்டு தீர்மானத்தைப் பல காங்கிரஸ்காரர்கள் எதிர்த்தார்கள். சென்னையில், காங்கிரசைச் சார்ந்தவர்கள், ஆங்கில சாம்ராஜ்யத்தோடு எவ்வித உறவு கொள்ள வேண்டும் என்பதை அக்காலங்களில் துருவி ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வரவில்லை. ஆகவே, பரிபூரண சுதந்திரம் வேண்டுமென்று கூறும் தீவிரவாதிகளோடு மக்கள் எவ்வாறு பின்பற்றிச் செல்கிறார்கள் என்பது சந்தேகத்துக்குரியதாகவே இருந்தது. பொதுவாகத் தேசியப் போராட்டத்தில் மக்களுடைய கருத்துக்களும், எண்ணங்களும், இடசாரியாகவும், தீவிரவாதத்திற்குத்தான் இழுத்துச் சென்றது.[2] ஆனால், இதில் சுயராச்சியக் கருத்தைக் கொண்டவர்கள் அதிகமாகப் பங்கு கொள்ளவில்லை. ஆனால், மற்றைய வகுப்பினர்கள் ஒரு நிதானமான கொள்கையைத்தான் கடைப்பிடித்தனர். ஆனால், சட்டமன்றத்திலுள்ள எல்லாப் பிரிவினருக்கும், எல்லாக் கட்சியினருக்கும் முடிவான நோக்கம் இந்தியா சுயாட்சி பெறவேண்டுமென்பதே. இந்தியாவின் சுயாட்சி பற்றி வெவ்வேறு பகுதியினரிடையே சில வேறுபாடுகள் மட்டுமே இருந்து வந்தன. எதிர்ப்பு வேண்டும் என்பதற்காக, சென்னையில், குறிப்பாக முதல் சபைக் கூட்டத்தில் பிராமணர்கள் நீதிக்கட்சியின் மந்திரி சபையையும், மூன்றாவது சட்டசபைக் கூட்டத்தில் பிராமணரல்லாதவர்கள் பிடிவாதத்துடன் சுப்பராயன் மந்திரி சபையையும் எதிர்த்தனர்.[3]

சென்னையில் மதஅறநிலைய மசோதா விவாதிக்கப்பட்ட போது, ஏற்பட்ட பிளவுகள் பெருமளவிற்கு, அரசியல் கட்சிகளை உருவாக்குவதற்கு வாய்ப்பளிக்கவில்லை. ஆனால், தனிப்பட்ட கட்சிகளிடையே, வேண்டுமளவு, ஒழுங்குமுறை இருந்தது. அது போலவே சட்டசபையில் பணியாற்றும்போது அவர்களுக்கு வேண்டிய சட்டசபையில் விளக்கங்கள் அவ்வப்போது கொடுக்கப் பட்டன. ஆனால், சென்னை சட்டசபையைப் பொறுத்த வரையில், சட்டசபைகளை நிராகரிப்பது என்ற சுயராச்சியக் கட்சியின் கொள்கைகளை நிரந்தரமாகக் கடைப்பிடிக்க முடியவில்லை.[4]

[1] Ibid88
[2] C.R. Reddy 'Dyarchy and After' Page 16.
[3] Ibid P. 17

# 7

## இரட்டையாட்சி செயல்பட்ட முறை பற்றி சி. ஆர். ரெட்டி கூறிய குறைபாடுகள்[1]

### (அ) பழைய பாரம்பரியத்தின் எதிரொலிகள்

இரட்டையாட்சி செயல்பட்ட முறை, இங்கிலாந்தில் பாராளுமன்ற மனோதத்துவ முறைகளில் பழகிய பலருக்கும் பெரும் ஏமாற்றத்தைக் கொடுத்தது இங்கிலாந்து எத்தனையோ ஆண்டுகளாக நடைமுறையில் கொண்டு வந்த பாராளுமன்ற முறையை, இந்தியர்களால் உடனடியாகப் புரிந்து செயல்பட முடியாமல் இருந்ததைப் பற்றி ஆச்சரியப்படுவதிற்கில்லை. பொறுப்பாட்சி, அரசாங்கத்தின் ஒரு பகுதியில் மட்டும் ஏற்பட்டதன் காரணமாக, மக்களிடையே மனக் குழப்பமும் அதிகரித்தது. கரும் மேகங்களால் சூழ்ந்த இந்திய அரசியலில், பாராளுமன்ற ஒளி இயங்குவதும், வழி காட்டுவதும் கடினமாகவே இருந்தன. ஒதுக்கப்பட்ட தலைப்புக்களிலுள்ள இலாக்காக்களை இயக்குவதில் நிர்வாகசபை அங்கத்தினர்களின் மனோபாவம் அதிகாரிகளின் தோரணையில் நீடித்து வந்தது[2] மந்திரிகளும், சட்டமியற்றுபவர்களும், மக்களும் பாராளுமன்ற முறைகளையும், நோக்கங்களையும், தன்மைகளையும் நன்கு உணரவில்லை. மந்திரிகள் கூட அதிகாரிகளுடைய போக்கைப் பின்பற்றினார்கள். அவர்களுக்கு நிர்வாகசபை அங்கத்தினர்கள் தன்மையும், போக்கும்தான் அதிகமாகத தெரிய வந்தது, ஒரு காலத்தில் சட்டசபைகள் உபதேசம் கூறும் சபைகளாக இருக்கும்போதும் நிர்வாகசபை அங்கத்தினர்கள் எவ்வாறு பொறுப்பற்று நடந்தார்களோ, அது போன்றே மந்திரிகளும் 1919ஆம் ஆண்டு சீர்திருத்தங்களுக்குப் பின்பு கட்சியின் கொள்கைகளை அதிகம் பொருட்படுத்தாமலும், வார்த்தைகள் மூலமாகவும், வணக்கத்தின் மூலமாகவும் சட்டசபை அங்கத்தினர்களோடு செல்வாக்கை உயர்த்திக் கொண்டு, அவ்வங்கததினர்களுக்கு இனிக்கும் வார்த்தைகளால், அவர்கள் கூறிய கருத்துக்களை ஆரவாரத்துடன் வரவேற்றுப் போற்றினார்கள்.[3] சட்டசபையில் அதிகப்படி எண்ணிக்கையுள்ள அரசியல் கட்சியின் தலைவராக இல்லாமல் இருந்த போதிலும் (கூடுதல் எண்ணிக்கையுள்ள அரசியல் கட்சியின் தலைவர் என்ற முறையில் பணியாற்ற முடியாமல்) வரவு செலவு கணக்குகளைச் சட்டசபை ஒப்புக்

[1] Ibid P. 17
[2] Ibid,
[3] Ibid

கொள்ளுமேயாயின் மந்திரிகள், சபை அங்கத்தினர்கள் அத்தனை பேருக்கும் நன்றி கூறத் தேவைப்பட்டது. இது பழங்கால நிர்வாக சபை அங்கத்தினர்கள் போக்கேயாகும். இங்கிலாந்தில் மந்திரிகள் தங்களது கட்சிகளுடைய முற்போக்கிலும், கட்சிக் கொள்கையிலும் எப்போதும் கண்ணும் கருத்துமாக இருந்தனர். ஆனால், இரட்டையாட்சியின அடிப்படையில் அதிகாரிகளுடைய போக்கின் தன்மையினால், கட்சியின் தலைவர்கள் எனப் பதவியேற்ற போதிலும், மந்திரிகள், அதிகாரிகள் பாணியில் செல்ல நேர்ந்தது [1]

(ஆ) கட்சிகளின்ஊக்கமின்மையும், தனிப்பட்ட அங்கத்தினர்களின் அதிகப்படி வளர்ச்சியும்[2]

இதனால், தனிப்பட்ட அங்கத்தினர்கள், கொள்கைகளைத் தங்கள் வசம் ஆக்கிக் கொண்டனர். முதல் தரமான தீர்மானங்களைத் தனிப்பட்ட அங்கத்தினர்களே சட்டசபையில் தாக்கல் செய்தனர். இவர்களுடைய கொள்கைகள் சாதாரணமாகவே சட்டசபையில் அங்கீகாரம் பெற்றன. பொறுப்பிலுள்ள மந்திரிகளுடைய ஆதரவோ ஓட்டோ கூட இல்லாமல், இத்தனியார் கொள்கைகள் தேர்வு பெற்றன. மந்திரிகள், காலம் கழித்து நிர்வாகசபை அங்கத்தினர்கள் கௌரவத்தைப் பின் பற்றியதின் காரணமாக, இவர்கள் கையாண்ட மாற்றப்பட்ட தலைப்பிலுள்ள அதிகாரங்கள் கூட ஒதுக்கப்பட்ட தலைப்பிலுள்ள அதிகாரங்களைப் போல் எதேச்சதிகார ஆட்சிக்குள்ளாகியது. தனிப்பட்ட அங்கத்தினருடைய தீர்மானங்கள், பெரும் கொள்கை விளக்கங்களிலிருந்து சாதாரண நிர்வாகக் காரியங்கள் வரை பரவி இருந்தது. ஆங்கிலப் பாராளுமன்றத்திலோ, இங்ஙனமுள்ள சாதாரண சட்டம் இயற்றும் பணியிலுள்ள காரியங்களில் தனிப்பட்ட அங்கத்தினர்கள் அதிக ஆர்வம் கொள்வதுமில்லை. ஆனால், பாராளுமன்றம் பொதுவாக உள்ள காரியங்களைக் கேட்டறிவதில் மிகவும் ஆர்வம் கொண்டது. ஆனால், மாகாணங்களில் சட்ட சபைகள் ஒவ்வொரு சிறு கருத்தையும் கேட்டறிவதில் மிகவும் விருப்பம் கொண்டன. ஆகவே இச்சபைகள் தங்களுடைய முக்கிய கடமையான சட்டம் இயற்றும் பணியில் மட்டும் கவனத்தைச் செலுத்தினர்களொழிய, அரசாங்கத்தைக் கட்டுப் படுத்துவதில் தங்கள் கவனத்தைச் செலுத்தவில்லை.[3] இதற்கு மூன்றுவித காரணங்கள் உள்ளன,

[1] Ibid
[2] Ibip
[3] Ibid P. 18.

(1) பல காலமாக அடிமைப்படுத்தப்பட்டவர்கள் அதிகாரம் வேண்டுமென்ற ஆசையினுல், தங்களைத் தாங்களே கட்டுப்படுத்துவதற்குள்ள மனேபாவத்திலில்லை.

(2) சபையில் நடக்கும் விதாங்களுக்கு மந்திரிகளிடமிருந்து எவ்விதமான வழி காட்டுதலும் இல்லாமலிருந்தது.

(3) அயல் நாட்டு அதிகாரிகள் பேரிலுள்ள பொருமையும், அவர்கள் இந்நாட்டை அனுதாபதோடு எவ்வாறு நிர்வகிக்க வேண்டுமென்று எடுத்துக்காட்ட அங்கத்தினர்களிடையே ஏற்பட்ட உணர்ச்சியுமேயாகும்.[1]

அதிகார வர்க்கத்திற்குட்பட்டவர்கள் ஐரோப்பியரல்லாதவர்களாக இருந்த போதிலும், அவர்கள் வேறு எந்த ஜாதி மதத்தைச் சார்ந்தவர்களாக இருந்தாலும் குற்றம் சாட்டப்பட்டனர்.[2] பொதுமக்களிடையே தங்களுக்கு ஏற்பட்ட செல்வாக்கை நிரந்தரமாகப் ஸ்தாபிக்கப் பொதுமக்கள் கண் முன்பு, அவர்கள் ஒரு சட்டசபை அங்கத்தினர் என்பதைத் தெரியப்படுத்தும் வகையில், பல பேச்சுக்களாலும், பல தீர்மானங்களாலும், பல கேள்விகளாலும் தங்கள் அந்தஸ்தை நிலை நாட்டிக் கொள்ள முயன்றனர். சட்டசபையில் கேள்வி கேட்கும்போது பொது மக்கள் ஆதரவுக்குள்ளாவதற்காகக் கேள்விகளுக்கு அனுதாபமான ஒரு பதிலைக் கொடுத்தனர். இதனுல், அங்கத்தினர் கொண்டுவந்த ஒரு தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. தாற்காலிகமாக மந்திரிகளுக்கு ஒரு வெற்றியும் கிடைத்தது.[3]

கல்வி நிர்வாகத்தைச் சீர்திருத்த வேண்டுமா அல்லது ஒரு புதிய பல்கலைக்கழகத்தை நிறுவ வேண்டுமா? இதில் எதெல்லாம் அங்கத்தினர்கள் கோருகின்றனர்? என்பதையெல்லாம் மந்திரிகள் உடனடியாக ஒரு கமிட்டியை நியமனம் செய்து கொள்வர். இப்படிப்பட்ட ஒரு கமிட்டியில் எந்த அங்கத்தினரும், தாம் பதவி வகிக்க வேண்டுமென்று நினைப்பது இயற்கையே. இவ்வாறு நிறுவப்பட்ட கமிட்டிகள் மந்திரிகளைச் சூழ்ந்திருந்தது. மந்திரிகளுக்கு, இக்கமிட்டிகளைப் போன்று, உலக நாடுகளில் சபை கூட, உண்மையான ஒரு பாதுகாப்பு அளிக்க முடியாது. ஏனெனில் இக்கமிட்டிகள், இம்மந்திரிகளினுல் நியமனம்

[1] Ibid
[2] Ibid, Page 19
[3] Ibid

செய்யப்பட்டவைகள். பொறுப்புள்ள மந்திரிசபை என்று கூறும் போது பொறுப்புள்ள மந்திரிகளால் நடத்தப்படும் ஓர் அரசாங்கம் எனக் கொள்வது நியாயம். அம்மந்திரிகள், ஏற்படும் பிரச்சினைகளைப் பற்றி நியாயமான ஒரு கொள்கையை மேற் கொள்வர் என்று யாராலும் எதிர் பரர்க்கப்படும். இம்மந்திரி களுக்குத் தங்களுக்கென ஒரு திட்டமும், நிறைவேற்றும் முறை யும் இருந்ததின் காரணமாக, அவர்கள் ஒவ்வொரு திட்டத் தையும், எவ்வாறு, எப்போது, எப்பணத்தை வைத்துச் செய் வார்கள் என்பதைப் புரிந்து செயல்படுவார்கள் என எதிர் பார்க்கப்பட்டது.[1] ஆனால், இத்தனை இலக்கணங்களுக்கும் ஆளான மந்திரிகளை அன்று காண்பதரிது. அதற்கு மாறாக மந்திரிகள் அனுதாபத்தோடும், இளகிய மனத்தோடும், சபை எதைக் கூறுமோ அதைத் தான் செய்வதற்குத் தயாராக இருப் பதாகப் பேசிவிட்டு, அத்திட்டங்களை நிறைவேற்றுவதற்கு மட்டும் நிதி வகைகளைக் கண்டுபிடிக்க வேண்டும் எனக் கூறி விடுவர். இதைப் பார்க்கும்போது, ஒரு திட்டத்திற்குத் தேவைப் படும் நிதியைத் திரட்டுவது மந்திரியினுடைய வேலையல்லவா எனக் கேட்கத் தோன்றும். ஆனால், திரு. சிந்தாமணி, பரஞ்செய்ப்[2] (Paranjape) போன்றவர்கள் முதுகெலும்பற்றவர் களல்லர். ஆனால் திரு. பரஞ்செய்ப் கூட ஒரு சமயம் ஆம் என்றும், இல்லை என்றும் சொல்வதினால் வரும் பொறுப்புக் களைத்தான் மேற்கொள்ள வேண்டுமென்றும், ஒரு திட்டத்தை ஆமோதித்தால் அதைச் செய்து காட்டுவதற்கு வேண்டிய வழிகளைத்தான் கண்டு பிடிக்க வேண்டுமென்றும் ஞாபகப் படுத்தப்பட்டார்.

சென்னையிலுள்ள மந்திரி ஒருவர், தமக்குத் திறந்த ஒரு மனம் இருப்பதாகவும், முன் கருதலான எந்த யோசனையும் இல்லையென்றும், மக்கள் தங்கள் அபிப்பிராயங்களை வெளிப் படையாகத் தெரிவிக்க வேண்டுமென்றும், அதைத்தாம் கவன மாக ஆலோசிப்பதாகவும் கூறினார்.[3] இப்படிப்பட்ட ஒரு வார்த்தையைக் கழிந்த காலத்திய ஒரு நிர்வாகசபை அங்கத் தினர் கூறி இருப்பாரேயாயின், அது அவர் பொது ஜனங்களின் பேரிலுள்ள அனுதாபத்தையும், ஜனநாயகத்தின் பேரிலுள்ள பற்றுதலையும் காட்டுவதாக இருக்கும். ஆனால், கட்சியின் தலை வராகக் காட்சியளிக்கின்ற மந்திரிகள் இங்ஙனம் நடப்பது, மந்திரி களிடையே ஏற்பட்ட குழப்பத்தையும், பொறுப்பாட்சியின் தன்

[1] Ibid
[2] Ibid P. 23
[3] Ibid (P. 20)

மைகளையும் புரிந்து கொள்ளவில்லை என்பதையும்தான் காட்டும். தமக்கென்று ஒரு எண்ணமும், கொள்கையும் மந்திரிகளுக்கு இல்லாமல், மற்றவர்கள் கூறுவதையெல்லாம் செய்து முடிப்பேன் என்று கூறுவதினுல், கட்சிக்குள்ள பொறுப்பும், சட்ட ரீதியான அரசாங்கத்தை நடத்துவதற்குள்ள தன்மையும், இங்கிலாந்தைப்போல் வளர முடியாமலாகி விட்டது. அவர்கள் மற்றவர்களுடைய பிரதிநிதிகளாகவும், கையாளாகவும்தான் இருக்க முடிந்ததே தவிர தலைவராக இருக்க முடியவில்லை. இவர்கள் சுய உணர்வோடு காரியங்களைச் செய்து முடிக்க வாய்ப்பில்லாமல், மற்றவர்கள் கூறுவதைக் கேட்டு நடத்தும் சாதாரண மனிதராகி விட்டனர்.[1]

(இ) மக்களும், ஜனநாயகமும்[2]

மக்கள் கூட ஜனநாயகத்தின் மதிப்பை எவ்வாறு காப்பாற்றுவது எனத் தெரிந்து கொள்ளவில்லை. ஒருவரை அடி பணிந்து நடக்கக்கூடிய தன்மையும் மாறிவிடவில்லை. மக்கள் சங்கங்களும், கமிட்டிகளும், சபைகளும் மந்திரிகளைப் பார்த்து அவர்களுடைய நன்மை பயக்கும் கொள்கைகளைப் பொதுக் கொள்கைகளில் புகுத்திவிட முயற்சிசெய்தனர். ஓரளவிற்கு, இம் முயற்சிகளில் குறை ஒன்றும் இல்லை. ஆனுல். நிரந்தரமாக மந்திரிகளுடைய பின் வாசற்படிக்கு எடுபிடியாக ஓடுவது ஜன நாயக சுயமரியாதைக்கு நல்ல எடுத்துக் காட்டல்ல. மக்களைப் பார்த்து அவர்கள் குறைகளைக் கேட்பது என்பது, இது போன்ற சூழ்நிலையில், ஒரு கலையாகும். அதுபோலவே மந்திரிகளைப் பார்க்கச் செல்வதென்பது ஒரு புனித தீர்த்த யாத்திரையாகவே கருதப்பட்டது. பணம் படைத்தவர்கள், மந்திரிகள் தங்களை ஆடம்பரமாக வந்துபார்க்கவும், அவர்களுக்காகப் பல பணிவிடைகளையும் செய்யாவிட்டால், அதைக் குறை எனக் கருதினர்.[3] பொது வாழ்வில் ஈடுபட்ட மந்திரிசபை சாகா வரம் பெற்றவையல்ல என எவரும் கருதவில்லை. மந்திரிசபைகள் செய்யும் காரியங்களை மக்களுக்கு அறிவிக்கவும், அவர்கள் கொள்கைகளை மாற்றியமைக்கவும், பின்னுல்வரும் சட்டசபைக்கு அதிகாரமுண்டு என்பதை உணரவில்லை. அதற்கு மாருக, அம்மந்திரி சபைகள் சகல சக்தி வாய்ந்தது எனவும், அவர்கள் கூறும் கருத்து தவறற்றது எனவும், தம் கருத்துக்களை அவர்கள் ஒப்புக் கொள்ள வேண்டியது மிக அவசியமென்றும் கருதினுர்கள். அன்று

[1] Ibid P. 21
[2] Ibid
[3] Ibid

அரசாங்கத்தை நடத்தும் கட்சியோடு ஒத்துழைக்க வேண்டு மென்பது உண்மை. ஆனால், பொதுநல வாழ்க்கைக்கு வேண்டிய கௌரவத்தோடு இவ்வொத்துழைப்பு அமையவில்லை. 1919ஆம் ஆண்டு சீர்திருத்தச் சட்டத்தின் பின் ஏகாதிபத்தியத்தின் பேரிலுள்ள பயம்நீங்கி விட்டது. மக்கள் மேலும் ஏகாதிபத்திய ஆட்சிக்கு அடிபணியார். ஆனால், கொண்டாடும் வரவேற்பில், மந்திரிகளுக்கு அதிகாரிகளும், அதிகாரிகளல்லாதவர்களும் மாலை அணிவிப்பதென்பது அடிமைத் தனத்தின் ஓர் எடுத்துக் காட்டாகும் ஒவ்வொரு மந்திரியும் முதல்தடவையாக நகரத்திற்குச் செல்லும்போது அங்கு அவருக்கு ஒரு நகர வரவேற்பு வாசித்து அளிக்கப்பட்டது. அங்கு அவருக்குஅதிகாரிகளும், ஏனையோரும் ஆரவாரத்துடன் மாலை அணிவிப்பதுமுண்டு. உண்மையில், கௌரவங்கள், ஒருவருடைய அசாதாரணசிறப்புக்கும், அவருடைய சாதனைக்கும் எடுத்துக் காட்டாக அமைய வேண்டுமே யொழிய, ஒரு பதவியாகவோ அல்லது கட்சி உணர்வாகவோ அமையக் கூடாது. ஆனால், இது போன்ற உணர்ச்சிகள் இரட்டையாட்சிக் காலத்தில் தாண்டவமாடிற்று.[1]

(ஈ) இரட்டையாட்சியும், பொறுப்பாட்சியும்[2]

பிராமணரல்லாதவர்களுடைய அணிவகுப்பு ஒன்றில் பேசும் போது சி ஆர்.ரெட்டி பின்வருமாறு கூறினர். ‘இரட்டையாட்சி மாற்றப்பட்டு, மாகாணங்களுக்குப் பூரண சுதந்திரம் அளிக்கும் சமயம் வந்துவிட்டது. இரட்டையாட்சி என்பது ஓர் ஒத்தித் தீர்ப்பாகவே நடைமுறையில் கொண்டு வரப்பட்டது என்றும், எல்லா ஒத்தித் தீர்ப்புக்களைப் போன்று இரட்டையாட்சியும், அதில் சம்பந்தப்பட்ட இரு தரப்பினருக்கும் திருப்பத்தை உண்டாக்க வில்லை. அரசியல் அடிப்படையில் இது ஒரு முரண்பாடான தீர்ப்பாகும். ஆகவே, அது வெற்றி அடைந்ததா, தோல்வி அடைந்ததா என்பதைப்பற்றி ஒருபிரச்சினை எழுவதேகிடையாது. அங்ஙனமே, அது ஒரு வெற்றி எனக் கொள்ள வேண்டுமே யாகில் இயற்கையான ஒரு பூரண சுயாட்சி மாகாணங்களுக்குத் தேவை; அது ஒரு தோல்வி எனக் கருதினல், மாகாணங் களுக்குச் சுயாட்சி உடனடியாகக் கொண்டு வர வேண்டும்’. தன்னைப் பொறுத்தமட்டில், இரட்டையாட்சி என்பது பொறுத்த மற்ற ஒரு கொள்கை எனவும், அது ஆங்கில இராஜதந்திரத்திற்கு மதிப்பைத் தேடித் தரும் ஒரு கொள்கையல்ல எனவும் கூறினர்.

[1] Ibid page 22

[2] Ibid

இரட்டையாட்சியின் அடிப்படையில் மந்திரிகளோ, நிர்வாகசபை அங்கத்தினர்களோ எந்தவிதமான சுதந்திரத்தையும், அதிகாரத்தையும் அடைந்துவிடவில்லையென்றும், இவைஇரண்டும் இல்லாத போது அரசியல் சட்டத்தின் அடிப்படையில் பொறுப்படைய இயலாது எனவும் கூறினர்.[1] அரசாங்கத்தரப்பில் உட்பட்ட நிர்வாக சபை அங்கத்தினர்கள், தாங்கள் உதவியின்றிக் காற்றில் எறியப்பட்டனர் எனக் கருதினர். மந்திரிகளும், அதுபோன்று, அவர்களுடைய செல்வாக்கு, அரசாங்கத்தில் பூரணமாக இல்லை என்றும், நிதிப்பிரச்சினைகள் ஏற்படும்போது அவர்கள் தங்கள் கொள்கைகளை நிறைவேற்ற முடியாமற் போயிற்றுஎனவும் கருதினர், மேலும், தேர்தல்கள் எல்லாம் மக்கள் அதிகாரத்திற்கு மாற்றப்பட்ட தலைப்பிலுள்ள இலாக்காவைப் பொறுத்த வரையில் நடத்தப்பட்டதல்ல. என்றாலும், ஒதுக்கப்பட்ட தலைப்பிலுள்ள இலாக்காக்களைப் பற்றிய கொள்கைகளைக்கூட அரசியல் தலைவர்கள் மக்களிடையே விளக்க வேண்டிய தேவை இருந்தது,[2] இப்படிப்பட்ட பிரச்சினைகள் வரும்போது அரசியல் தலைவர்கள் பெரிதும் வேதனைப் பட்டனர். பொறுப்புள்ள பெரும் அதிகாரிகள் அரசாங்கத்தில் மந்திரிகளின் பூரண அதிகாரத்தில் இல்லாமல் இருந்ததினால் மந்திரிகள் வெறும் அரசாங்க ஆலோசகர்களாக இருந்தார்களே தவிர, பொறுப்புப் பெற்றுச் சட்டங்களை அமுல் செய்யும் அதிகாரிகளாக இல்லை. மேலும், இரட்டையாட்சியில் ஏற்பட்ட மந்திரிசபை அமைப்புக்கள் கூட்டுப்பொறுப்பின் (Collective responsibility)[3] அடிப்படையில் அமைக்கப்பட்டதா என்பது ஒரு கேள்விக்குறியாகும். நிர்வாகசபை அங்கத்தினர்களோடு பொருத்தமற்ற தொடர்பு பெற்றதினால் சட்டசபைகள் இம்மந்திரிகள் இங்கிலாந்திலுள்ள 'காபினெட்' மந்திரிகளைப் போல் செல்வாக்குடனும், அதிகாரத்துடனும் சட்டசபை முன் தோன்ற முடியவில்லை. இதனால், சட்டசபைகள் அதிக அதிகாரம் பெற்றதின் பின்பும், சீர்திருத்தத்துக்கு முன்பிருந்த நிலையிலேயே இருந்தன. அநேக மாகாணங்களில் மந்திரிகளுடைய அரசாங்கம் அதிகமாக செயல்படாமலேயே இருந்தன. இம்மந்திரிசபைகள் நிர்வாகசபை அங்கத்தினர்கள் மேற்கொள்ளும் தோல்விகளையும் தாங்களே மேற்கொண்டு, சட்டசபை தங்களுக்குத் தோன்றியதை எழுதும் கரும்பலகையாகக்காட்சி அளித்தனர். இதற்குக் காரணம் இரட்டையாட்சியாகும். அதில் கலந்துகொண்ட மந்திரிகளைக் குறை கூறுவதில் பயனில்லை, கள்ளுக்கடைகளை உருவகப்படுத்தி, இரட்டையாட்சிக்கு உயர்ந்த பீடத்தில் ஏற்றி

[1] Ibid
[2] Ibid, page 23
[3] Ibid

மைத்துப் பரிகசித்தனர். அரசாங்கத்திற்குவரும் வருமானத்தை இவ்வாறு காந்தியின் கொள்கையைக் கடைப்பிடித்தோர் பெரிதும் தாக்கினர். இக்காலங்களில் மந்திரிகள் தங்கள் அதிகாரத்தை நிர்வகிப்பது கடினமாகவேயிருந்தது. என்றாலும், சென்னையிலுள்ள சட்டசபை அங்கத்தினர்களுடைய ஒத்துழைப்பிலும், சென்னை அரசாங்கத்தில் தலைமைவகித்த ஐரோப்பியர்களுடைய ஒத்துழைப்பினாலும் சென்னையிலுள்ள இரட்டையாட்சி மற்ற மாகாணங்களைப் போல் தோல்வி பெறவில்லை. என்றாலும், சீக்கிரமாகவே இரட்டையாட்சி சென்னையிலும் மாற்றி அமைக்க வேண்டும் என சி, ஆர். ரெட்டி கேட்டுக்கொண்டார்.[2]

சர். சுரேந்திரநாத் பானர்ஜி வங்காளத்தில் ஏற்பட்ட அடக்கு முறைகளுக்கும், தமக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லையென அறிக்கை வெளியிட்டார். ஆனால், அவர் தமது அபிப்பிராயத்தைச் சட்டமன்றத்திலேயே வெளியிட்டு இருக்கலாம். சென்னையில் மந்திரிகள் நடுநிலைமை வகித்தனர். அதேசமயம் அவர்களுடைய கட்சிகள் பூரணமாக விழி காண ஓட்டு அளித்தன. அதிலிருந்து இரண்டு முக்கியக் கருத்துக்கள் தெளிவாகும். (1) இரட்டையாட்சி என்பது பொறுப்பாட்சிக்கும், ஒரே அரசு எனக்கூறும் கொள்கைக்கும் மத்தியிலான ஓர் ஒத்தி த்தீர்ப்பன்று. (2) மந்திரிகள் கூடப் பொறுப்பாட்சி அற்ற நிலைமையில் சில நேரம் நடக்க வேண்டிய தேவை ஏற்பட்டு அதே நேரத்தில் கட்சியின் தலைவர்களாகவும் நீடிப்பது என்பது பொருத்தமற்றது.[1] அவர்கள் தேர்தலின் மூலம் வெற்றி பெறுவது அசாத்தியமான காரியம். சென்னையில் 'ஜஸ்டீஸ்' போன்ற பத்திரிகைகள்கூட இரட்டையாட்சியைக் குறை கூறி எதிர்த்தது. புதிதாக அமைக்கப்பட்ட சட்ட மன்றத்தில் அரசியல் அடிப்படையில் கட்சிகள் அமையும் என எதிர்ப்பார்க்கப்பட்டது. கட்சிகள் தம்மிடையேயுள்ள போட்டியினாலும், குறை கூறும் வாய்ப்புக்கள் இருப்பதினாலும், மக்கள் பொறுப்பில், மாற்றப்பட்ட பகுதியில் பொறுப்பாட்சி ஏற்படுமென எல்லோரும் எதிர்பார்த்தனர். பொறுப்பாட்சி என்பதுதான் புதிய ஆட்சியின் முக்கிய அம்சம். இங்குத்தான் அதிகார வர்க்கத்தின் ஆட்சியும், மக்கள் பிரதிநிதித்துவத்தின் ஆட்சியும் தாரதம்மியப்படுத்திப் பார்க்கப்படும். இவ் வடிப்படையில் 1919ஆம் ஆண்டின் சீர்திருத்தம் தோற்று

[1] Ibid
[2] Ibid page 24
[3] Ibid

விட்டது எனவே கூறலாம். அச் சீர்திருத்தம் நிச்சயமாகத் தேர்வு பெறவில்லை. தனிப்பட்ட மந்திரிகள் கவர்னருடைய எண்ணம் போல் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.[1] ஆகவே, மந்திரி சபையின் கூட்டுப் பொறுப்பு என்பது சபைக்குப் பொருத்தமற்றதாக இருந்தது. மேலும், சட்டசபைக்கு நியமனம் செய்யப்பட்ட அங்கத்தினர்களோடு விவாதத்தில் கலந்து கொள்வதற்கும், அரசாங்கத்தில் மக்கள் அதிகாரத்திற்கு மாற்றப்பட்ட தலைப்பிலுள்ள இலாக்காக்களைக் கொடுத்துக் கூட வாதங்கள் நடத்தவும், ஓட்டளிக்கவும் உரிமைபெற்றதினால், மந்திரிகளுக்கும், அரசாங்கத்திற்கும் தங்களுக்குத் துணையாக ஒரு நிரந்தர உதவியாளர்களைத் தேடிக் கொண்டார்கள். ஆனால், இக் கொள்கை அரசியலில் பல காலம் ஒப்புக்கொள்ளப்பட்டும், ஜனநாயக எண்ணங்களுக்கு முரணாக இருந்தது. அதிகாரிகள் அரசியலில் பங்கு கொள்ள நேர்ந்தது.[2] கட்சி அடிப்படையில் அரசாங்கம் 'நடத்தப்பட வேண்டுமெனக் கவர்னர்கள் எண்ணியிருந்தால், இதுபோன்றுள்ள முரண்பட்டகொள்கைகளை எண்ணி இருக்க மாட்டார்கள். இதுபோலவே, அதிகாரிகள் மாற்றப்பட்ட தலைப்பிலுள்ள இலாக்காக்களில் பணியாற்றும்பொழுது ஒரு பாணியிலும், ஒதுக்கப்பட்ட இலாக்காக்களில் பணியாற்றும்போது மற்றொரு பாணியிலும் சட்டசபை முன்பு பேசுவதென்பது ஓர் அரசியல் அநாகரிகமாகவே கருதப்பட்டது. ஆகவே, இது போன்ற பல முரண்பாடுகள் அமைந்ததினால், இரட்டையாட்சியில் மந்திரிகளுடைய பொறுப்பு பூரணமாகத் தெரியப்படாமலும், அப்பொறுப்பு உதாசீனம் செய்யப்படுவதாகவும் இருந்தது. இதற்கெல்லாம் முக்கியமான காரணம் அதிகாரிகளுடைய ஆட்சி நீடிப்பதற்கு எடுத்துக்கொண்ட முயற்சிகளேயாகும். மேலும், சென்னையில் மந்திரிகளோடு ஓட்டு அளிக்குமபோது, பல அங்கத்தினர்கள் ஒரே சமயம் தனித்தனியாகவும், மந்திரிகள் வெவ்வேறு விதங்களிலும் ஓட்டளித்தனர். இதுபோன்ற விபரீதமான தோன்றல்கள் பம்பாயிலும், வங்காளத்திலும், ஐக்கிய மாகாணத்திலும் காணப்பட்டன. ஔத் வாடகை மசோதா (Oudh Rent Bill)[3] சம்பந்தமாக ஏற்பட்ட ஓட்டுக்களில் முற்போக்குக் கட்சி மெம்பரான சிந்தாமணி என்பவர் அக் கட்சியிலிருந்து வெளியேறி அம் மசோதாவை எதிர்த்தார். என்றாலும், சிந்தாமணி ஒரு மந்திரியாகவே இருந்தார். அவர் தமதுகொள்கையை எதிர்க்கவோ, ஆதரிக்கவோ இல்லாமல் நடுநிலைமையாளராக இருந்தார்.[4] வங்காளத்தில்.

[1] Ibid Page 26
[2] The West Coast Spectator, 28th November, 1916.
[3] The Hindu dated 1st August, 1916, Leading article.
[4] The Hyddu, dated 20th December, 1916.

கல்வி மந்திரியும, ஸ்தலஸ்தாபன மந்திரியும் சட்டசபையோடு ஏற்பட்ட வாக்குவாதத்தில், அவர் தம் கட்சிக் கொள்கைக்கு விரோதமாக நடந்தபோதும், அவர் மந்திரியாகவே இருந்தார். ஆனால், அவருக்குத் தமது கட்சியின் கொள்கையினால் எவ்வித மாயினும் பாதிக்கப்படுவாரா என்பது ஒரு கேள்விக் குறியாக இருந்தது. அவ்வாறு இல்லையெனில், அவர் புதிதாகத் தோன்றிய ஓர் அரசாங்க அதிகாரியா என்ற கேள்வி எழுந்தது. அங்ஙன மாயின் அவர் தமக்கு ஒரு பதவிக்கு வேண்டித் தம் விருப்பம் போல் நீரிலும், நிலத்திலும் நீந்தக் கற்றுக் கொண்ட ஒரு சந்தர்ப்பவாதி என்பது புலனாகும்.[1] இரட்டையாட்சியின் கோரமான முரண்பாடு மாவட்ட அதிகாரிகளிடையே கூடுதலாகப் பிரதிபலித்தது. மாவட்ட அதிகாரிகளுக்கு மந்திரிகளைக் காணும் போது ஒரு விதமாகப் பேச வேண்டிய அவசியமும், போலீஸ், நிதி போன்ற இலாக்காக்களைக் கையாளும் நிர்வாகசபை அங்கத்தினர்களைக் காணும்போது மற்றொரு விதமாகவும் காட்சியளிக்க வேண்டியிருந்தது. ஒரே நபருக்கு இரண்டு விதமான முரண்பட்ட செய்கைகளைக் கடைப்பிடிப்பது பெரும் சோதனையாகவே இருந்தது. ஒரே நாளில் ஒரு பகுதியில் ஜன நாயக வாதியாகவும், மறு பகுதியில், ஓர் அதிகாரியின் பிரதிநிதியாகவும் நடிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. மந்திரிகள் அக்காலங்களில் அதிகப்படியாகப் பிரயாணங்கள் செய்வதின் காரணமாக, மாவட்ட அதிகாரிகள், பெரும் கூட்டங்களில் மக்களுடன் தோளோடு தோள் தட்டி இரயில் நிலையங்களில் காவல் இருந்தனர். ஆனால், இப்பேர்ப்பட்ட கருத்துக்கள் அதிகாரிகளுடைய நிர்வாகத் திற்குப் பொருத்தமற்றதாக இருந்தது. அரசியல் அடிப் படையில் இரட்டையாட்சி இந்தியாவில் தோல்வியுற்றது என்பது சி.ஆர்.ரெட்டி அவர்களின் கருத்தாகும்.[2]

[1] Refer the article on 'The Justice Party' 1916-1920, Dr. S. Saras watfy. vide page no. 13 of the Justice Party Golden Justice Souvenir, 1968.

[2] Ibid Page 25

# நீதிக்கட்சியின் வரலாறு

## 1

## ஆரம்பம்

சென்னை மாகாணத்தின் சரித்திரத்தில் நீதிக்கட்சி 1920 முதல் 1935 வரை மாற்றப்பட்ட இலாக்காக்களின் பொறுப்பை யேற்று, ஆளும் கட்சியாகப் பணியாற்றி, ஒரு பெரும் அரசியல் புகழைத் தேடிக் கொண்டது. சமுதாயப் பிரச்சினைகளைப் பொறுத்த வரையில் சீர்திருத்தக் கருத்துக்களை முன் வைத்து, அரசாங்கத்தை நடத்துவதற்குத் தேவையான கொள்கையோடு, ஆங்கிலேயர் அளித்த புதிய சலுகைகளின் அடிப்படையில் வந்தடைந்த ஜனநாயகக் கருத்துக்களை வரவேற்று, ஆட்சிப் பொறுப் பேற்று, மாகாணங்களுக்குப் பூரண பொறுப்பாட்சி வழங்கப் படுவது வரை பணியாற்றி, பெயர் பெற்றனர். நீதிக்கட்சி அரசியலில் செயல்படக் காரணமாயிருந்த அடிப்படைக் கொள்கைகளெல்லாம் அதனுடைய ஆரம்ப காலமாகிய 1916 ஆண்டு முதல் 1920 ஆம் ஆண்டு வரை உருவாக்கப் பட்டது.

இந்தியாவில் ஜனநாயகம் ஓங்கி வளரும்போது, பிராமணர் களுடைய ஆதிக்கமும் வளர்ந்து விடக்கூடாது எனவும், அவர் களுடைய நியாயமற்ற வளர்ச்சியை முளையிலே கிள்ளி விட வேண்டும் எனவும் நினைத்த முதல் பிராமணரல்லாதவர் நீதிபதி சி. சங்கரநாயர் ஆவார்.[1] இவர் 1915–ஆண்டு கவர்னர் ஜென ரலினுடைய நிர்வாகசபையில் கல்வி அங்கத்தினராக நியமிக்கப் பட்டார்.

ஆனால் 1916-ஆம் ஆண்டு மத்திய சட்டமன்றத்திற்கு அங்கத்தினர் தேர்வில் பெருவாரியான பிராமணரல்லாதவர் களுடைய பின்பலம் இருந்தும், டாக்டர் டி.எம். நாயர் அவர்கள்

[1] Ibid

(ஒரு பிரபல்ய மருத்துவ நிபுணர்) தோற்கடிக்கப்பட்டார்,[1] அவருடைய தோல்வி, பிராமணர்களிடம் பிராமணரல்லாதார் அடைந்த தோல்வியாகக் கருதப் பட்டது. ஆகவே, சென்னை சட்டசபையில், மத்திய சட்டசபை அங்கத்தினரைத் தேர்ந்தெடுக்கும் அங்கத்தினர்கள், பூரணமாகப் பிராமணரல்லாதவர்களாக இருக்க வேண்டும் எனக் கருதப்பட்டது. இதற்கு முதற்படியாகத்தான் 1916ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 26ஆம் தேதி பிராமணரல்லாதவர்களுடைய தலைவராகிய சர் பி.டி. தியாகராச செட்டியரரின் தலைமையில்,[2] டாக்டர் டி எம், நாயர் அவர்களும், கலந்தாலோசித்து, சென்னை நீதிமன்றத்தில் வக்கீலாகப் பணியாற்றிய கி. எத்திராஜ முதலியாருடைய பூந்தமல்லி நெடுஞ் சாலை வீட்டின் பிராமணரல்லாதவர்களுடைய உரிமைகளைப் பாதுகாச்கவும், பரிசீலிக்கவும் ஓர் அரசியல் சங்கத்தை ஆரம்பிக்க முடிவு செய்தார். கூட்டுறவுச் சங்கத்தின் அடிப்படையில் 'தென்னிந்திய மக்கள் நல உரிமைச்சங்கமொன்றை' நிர்மாணித்து, 'ஜஸ்டீஸ்' என்ற பெயரில் ஓர் ஆங்கிலப் பத்திரிகையும் ஆரம்பிக்கப் பட்டது. இதைத் தொடர்ந்து 'திராவிடன்' என்ற ஒரு தமிழ்ப் பத்திரிகையும் 'ஆந்திரப் பிரகாசிகா' என்ற ஒரு தெலுங்குப் பத்திரிகையும், இச் சங்கத்தின் கொள்கைகளை விளக்க வெளியிடப் பட்டது. 1917-ஆம் ஆண்டு சர் பி.டி, தியாகராசச் செட்டியார், தென்னிந்திய நல உரிமைச் சங்கத்தின் காரியதரிசி என்ற முறையில் தாம் கையெழுத்திட்ட ஒரு 'பிரசித்த பத்திரிகை' ஒன்றை அன்று நடத்த 'உள்ளாட்சி இயக்கத்தைப்' பிராமணரல்லாதவர்கள் ஏன் எதிர்த்தனர் என்பதை விளக்கி வெளியிட்டார். பல துறைகளிலும், சிறுபான்மையான சமுதாயமாக இருந்தபோதிலும், பிராமணர்கள் எத்துணை முன்னேறியுள்ளார்கள் என்பதை விளக்கிப் பிராமணரல்லாதவர்கள் மேலும் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதையும் தெளிவாக்கினர்.

முத்தியாலுப்பேட்டை முஸ்லீம்களின் அஞ்சமன்[3] ஆதரவில், 1917ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 14-ஆம் தேதி சென்னை விக்டோரியா ஹாலில் நடந்த கூட்டத்தில் டாக்டர் நாயர் பிராமணரல்லாதவர்களுடைய அரசியல் கொள்கையை விளக்கும் போது, இந்திய சட்டசபை அங்கத்தினர்கள் பத்தொன்பது பேர் கொடுத்த அறிக்கையை ஒப்புக் கொள்ள முடியாதெனவும், அது

[1] Ibid
[2] Ibid
[3] Ibid page, 14

நடைமுறையில் சாத்தியமல்ல எனவும் கூறினர். அதற்குக் காரணம் கூறும்போது அவர் குறிப்பிட்டதாவது: இந்தியர் களுக்குச் சுயாட்சியில், பரம்பரைப் பழக்கமில்லை எனவும், ஆகவே, சுயாட்சி கால அளவில் ஏற்படப் பயிற்சி தேவையென வும், நீதிக்கட்சியின் பத்திரிகை வழியாகத் தெரிவித்தார். உள் ளாட்சி இயக்கம் ஒரே நாளில் அமைத்துவிட முடியாதெனவும், சட்டசபைகளை விஸ்தரித்து எல்லா ஜாதி மக்களுக்கும் பயிற்சி அளிக்க வேண்டுமெனவும் கூறினர். உடனடியாகக் கல்வி, ஸ்தலஸ்தாபன சுயாட்சி போன்ற அதிகாரங்கள் மக்களின் அதிகாரத்திற்கு விடப்பட வேண்டுமெனவும் கூறினர். தென் னிந்திய நல உரிமைச் சங்கம் நாளடைவில் தென்னிந்திய முற்போக்குக் கூட்டணி எனப் பெயர் பெற்று, பின்னுளில் நீதிக் கட்சி எனப் பெயர் பெற்றது. அதனுடைய முக்கியக் கொள் கைகள் பின்வருமாறு:–[1]

(1) தென்னிந்தியாவிலுள்ளபிராமணரல்லாதவர்களுடைய கல்வி, சமுதாயம், பொருளாதாரம் அரசியல் போன்ற எல்லாத் துறைகளிலும் முன்னேற்றம் காண்பது;

(2) மக்களின் அன்றாடத் தேவைகளை விவாதிப்பது, இவ் வாதத்தின் அடிப்படையில் அரசாங்கத்திற்குப் பிராமணரல்லாத மக்களுடைய நலன்களை எடுத்து ரைப்பது;

(3) பொது மேடைப் பிரச்சாரங்கள் வழியாகவும், புத்தகங் கள் வழியாகவும் கட்சியினுடைய கொள்கையைப் பொதுமக்களிடையே பரப்புவது.

நீதிக்கட்சியில் அங்கத்தினராகச் சேர விரும்புவர்கள், உடனடி யாக அரசியல் நிர்ணயத்தில் பெரும் மாறுதல் வேண்டும் எனக் கோராதவர்களாக இருக்க வேண்டும். அவர்கள் நாளடைவில் அரசியல் முன்னேற்றம் எனக் கோருபவர்களாக இருக்கத் தேவை. எல்லா ஜாதி மதத்தினருக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கும் முன்பு, எந்தவிதமான சுயாட்சியையும், ஒத்துக் கொள்ளாதவர்களாக இருக்க வேண்டும், நீதிக்கட்சி எல்லாப் பிராமணரல்லாத ஜாதிகளுக்கும் திறந்து விடப்பட்டது.[2]

[1] Ibid
[2] Ibid 14

1917ஆம் ஆண்டு பிராமணரல்லாதவர்களுடைய மாநாடுகள் பல மாவட்டங்களிலும் நடந்தன.[1] பிராமணரல்லாதவர்களிடையே பலதரப்பட்ட வாழ்க்கையில் முக்கியத்துவம் பெற்றவர்கள் இம்மாநாடுகளில் கலந்து கொண்டனர். அம்மாடுகளில் நீதிக்கட்சியினுடைய கொள்கைகளும், மக்களுடைய சமுதாயப் பொருளாதார முன்னேற்றத்தை முற்போக்கடையச் செய்யவும், பல தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன. சமுதாயத்திலுள்ள உயர்வு தாழ்வுகளை மாற்ற வேண்டும் என்றும், சென்னை மாகாணத்தில் கட்டாய ஆரம்பக் கல்வியைப் புகுத்த வேண்டும் என்றும், மத அடிப்படையிலுள்ள நிறுவனங்களைச் சீர்திருத்தி, அந்நிறுவனங்களைச் சமுதாயத்திற்கு உபயோகமுள்ளவைகளாக ஆக்க வேண்டுமென்றும், மேலும் பொதுப் பணிகளில் எல்லாத் துறைகளுக்கும் பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டும் என்றும் கோரினர். 1920ஆம் ஆண்டு முதல் 30–ஆம் ஆண்டு வரை நீதிக்கட்சியின் சரித்திரம் இத்தீர்மானங்களை நிறைவேற்றுவதில் அமைந்திருந்தது. இதுவே, முதல் உலக மகாயுத்தத்திற்குப் பின்னால் சென்னையில் ஏற்பட்ட மாபெரும் மாற்றமாகும்.[2]

1917ஆம் ஆண்டு ஆகஸ்ட் 20ஆம் தேதி ஆங்கில அரசாங்கம் வெளியிட்ட முக்கியமான அரசியல் அறிவிப்பின் முன்பு, மாண்டேகுவையும், செம்ஸ்போர்டு துரையும், புதிய பாராளுமன்றச் சீர்திருத்தங்களைப் பற்றி மாகாணத் தலைவர்களுடன் பேசுவதற்குச் சென்னை வந்தபோது, தென்னிந்திய முற்போக்குக் கூட்டணி, ஒரு வரவேற்புரையை, பி.டி. தியாகராசச் செட்டியார் தலைமையில் வாசித்தளித்தது. அவ்வரவேற்பில், பிராமணரல்லாதவர்கள் இந்தியாவிற்கு உள்ளாட்சி பெறும் காலம் வந்துவிட்டதென நம்பவில்லையென்றும், மக்கள்மேல் நம்பிக்கை கொண்டு நாளடைவில் அமுலாக்கப்படும் அரசியல் சீர்திருத்தங்களைத் தாங்கள் வரவேற்பதாகவும், மக்களுடைய அரசியல் விழிப்பிற்கு ஏற்ற நன்மைகளை ஆங்கில அரசாங்கம் அளிக்குமானால், அதை முழு மனதுடன் தாம் வரவேற்கத் தயாராக இருப்பதாகவும் கூறினர்.[3] எவ்வகைப்பட்ட சீர்திருத்தம் வேண்டும் எனக் குறிப்பிடும்போது, அதில் ஸ்தலசுயாட்சி விரிவடைய வேண்டுமென்றும், அரசாங்க நிர்வாகத்தில் எல்லாத் தரப்பட்ட மக்களுடைய நலன்களைக் கோரும் சங்கங்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டுமென்றும், மாகாண சட்டமன்றங்களை விரிவடையச் செய்ய வேண்டுமென்றும், ஜாதி

[1] Ibid
[2] Ibid
[3] Ibid, page 15

அடிப்படையில் வாக்காளர் பட்டியல் வேண்டுமென்றும், ஸ்தல ஸ்தாபனம், சுகாதாரம், விவசாயம், கூட்டுறவு, தொழில் போன்ற இலாக்காக்கள் சட்டமன்றங்களின் அதிகாரங்களுக்கு மாற்றப் பட வேண்டுமென்றும் குறிப்பிட்டனர்,[1]

எல்லா ஜாதியைச் சார்ந்த பிராமணரல்லாதவர்களுடைய ஒரு மாநாடு,[2] சென்னையில், 1917ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் கூட்டப்பட்டது. அதில் சுமார் 1500 பிரதிநிதிகள் சென்னை மாகாணம் பூராவிலிருந்தும் வந்திருந்தனர். அம்மகாநாட்டில் பின்வரும் ஒரு முக்கிய தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. அத் தீர்மானமாவது ; பொறுப்பாட்சி வழங்க மேற்கொள்ளும் எந்த நடவடிக்கையும், பிராமணரல்லாதவர்களுடைய ஜாதிகளுக்கு, அவர்களுடைய வரி கொடுக்கும் திறமையைப் பொறுத்தும், சொத்தின் அடிப்படையில், பூரணப் பிரதிநிதித்துவம் கொடுக்க முடியாத எந்தத் திட்டமும் தோல்வி பெறுமென்றும், ஆம்மக்கட் குப் பிரதிநிதித்துவமில்லாத எச்சீர்திருத்தத்தையும், அவர்கள் வெகுவாக எதிர்ப்பார்கள் என்றும் தீர்மானம் கூறியது. இதன் அடிப்படையில்தான், மாண்டேகு செம்ஸ்போர்டு சீர்திருத்தத் தில் சில இலாக்காக்களை மாகாண சட்டசபைகளின் அதிகாரத் திற்கு மாற்றப்பட வேண்டுமென்றும், மாகாண நிர்வாக சபையில் இந்தியர்களுக்குப் பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டுமென்றும், மாகாண சட்டசபைகளை விரிவுபடச் செய்ய வேண்டுமென்றும் குறிப்பிட்டிருந்தார். கூட்டாசிரியர்கள், முகமதியர்களுக்குத் தனிப்பிரதிநிதித்துவம் வேண்டுமெனச் சிபாரிசு செய்த போதிலும், மற்றைய பிராமணரல்லாதவர்களுக்கு ஜாதி அடிப் படையில், பிரதிநிதித்துவம் கொடுப்பதைப் பற்றிச் சரியான சிபாரிசு செய்யவில்லை. இதனால், பிராமணரல்லாதவர்கள் மாண்டேகு செம்ஸ்போர்டு தணிக்கையை ஒப்புக்கொள்ள முடியாதென மறுத்து விட்டனர்.[3] 1918ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் தென்னிந்திய பிராமணரல்லாதவர்கள் மற்றொரு பெரிய மாநாடு கூட்டினர். அம்மாநாட்டில் ஜாதி அடிப்படையில் வாக்காளர் பட்டியலும், பிரதிநிதித்துவமும் கொடுக்க முடியாத எந்தச் சீர்திருத்தமும், தங்களால் ஒப்புக் கொள்ள முடியாது எனத் தீர்மானம் நிறைவேற்றினர். இவ்வாறு, பிராமணரல்லாதவர்கள் கூறிய அபிப்பிராயங்களைச் சென்னை அரசாங்கம் ஆங்கில அரசாங்கத்துக்கு எடுத்துக்கூறி அவர்கள் கோரிக்கை நியாயமானது என்றும், தனிப்பட்ட

[1] Ibid
[2] Ibid
[3] Ibid

வாக்காளர் பட்டியல் ஜாதி அடிப்படையில் தேவையெனவும் கூறியது.[1]

என்றாலும், தனிப்பட்ட முறையிலுள்ள பிரதிநிதித்துவத்தைத் தீர்மானமாகவும், வாக்காளர் பட்டியல் தயார் செய்வதும் பற்றியுள்ள பிரச்சினைகளை ஆலோசிக்க, 1918ஆம் ஆண்டு மத்திய அரசாங்கம் சௌத் பர்ரோ வாக்குரிமைக் கமிட்டி ஒன்றை நியமனம் செய்தது. அதில் திரு. எஸ். என். பானர்ஜியும், திரு. வி. எஸ். எஸ். ஸ்ரீனிவாச சாஸ்திரியும் அங்கத்தினர்களாக இருந்தனர். இவ்விருவரும், பிராமணர்கள் இதை எதிர்த்துப் பிராமணரல்லாதவர்கள் எல்லா ஜில்லாக்களிலும் பெரும் எதிர்ப்புத் தெரிவித்தனர். பிராமணரல்லாதவர்களுடைய ஒரு பெரும் மாநாடு அக்டோபர் மாதம், 1918ஆம் ஆண்டு சென்னையில் கூடி, சௌத்பர்ரோ கமிட்டியுடன் தாங்கள் ஒத்துழைக்கக் கூடாதெனத் தீர்மானம் நிறைவேற்றினர். ஜனவரி 1919ஆம் ஆண்டு மற்றொரு பிராமணர்களல்லாதவர்களுடைய மாநாடு கூடி வாக்குரிமைக் கமிட்டி முன்பு எந்தப் பிராமணரல்லாதவரும் சென்று வாக்குமூலம் கொடுக்கக் கூடாது எனவும் தீர்மானம் செய்தனர்.[2]

சௌத் பர்ரோ கமிட்டி பிராமணரல்லாதவர்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம் கொடுக்கக் கூடாது எனக் கூறினர். அவர்கள் கூறிய காரணமாவது: பிராமணரல்லாதவர்கள் பிராமணர்களை விட 22 மடங்கு ஜனத்தொகையில் கூடியுள்ளார்கள் எனவும், வாக்காளர் பட்டியல் அடிப்படையில் 4:1 என்ற விகிதத்தில் இருக்கிறார்கள் எனவும் கூறினர். ஆனால், வாக்குரிமைக் கமிட்டி கூறியுள்ள காரணங்களை இந்திய அரசாங்கம் ஏற்கவில்லை. அவர்கள் அனுப்பிய ஐந்தாவது சீர்திருத்தத் தணிக்கையில் பிராமணர்களுடைய அதிகாரத்தை வாக்குரிமைக் கமிட்டி அறியவில்லையென்றும், சமுதாயத்தில், கல்வியில், மதத்தில், அவர்களுடைய பலத்தையும், மேன்மையையும் அக்கமிட்டி ஆராய்ந்து பார்க்கவில்லையெனவும் கூறியது.[3] அண்மையில் நடந்த தேர்தலிலிருந்து பிராமணரல்லாதவர்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம் கொடுக்காவிடிலுள்ள அபாயத்தை அவர்கள் தணிக்கையில் குறிப்பிட்டு, முகமதியர்களல்லாத 61 தொகுதிகளில் 30 தொகுதிகளைப் பிராமணரல்லாதவர்கட்கு ஒதுக்கிவிட வேண்டும் எனச் சிபாரிசு செய்தனர்.

[1] Ibid, Page 16
[2] Ibid
[3] Ibid

1919ஆம் ஆண்டு பாராளுமன்ற இருசபைக் குழு கூடிய போது டாக்டர் டி. எம். நாயர் தலைமையில் நீதிக்கட்சித் தூது கோஷ்டி ஒன்று இலண்டன் சென்றது.[1] இலண்டனில் டாக்டர் டி.எம். நாயர் அகாலமரணம் அடைந்ததால் ராவ் பகதூர் கே. வி. ரெட்டி தலைமையில், ஜாதி அடிப்படையில் பிரதிநிதித்துவம் வேண்டுமென்று ஒரு மனு சமர்ப்பிக்கப் பட்டது இந்தியாவிலுள்ள அரசியல், சமுதாய, நிர்வாக அமைப்பை விளக்கப் பிராமணரல்லாதவர்களுக்கு நிர்வாக அடிப்படையில் ஆதரவு எத்துணை அவசியமென்றும், பிராமணரல்லாதவர் களுடைய பலம் எத்துணை மதிப்பு வாய்ந்ததென்பதையும் குறிப்பிட்டது. இவ்வடிப்படையில் பிராமணரல்லாதவர்களுக்கு ஒரு வாக்காளர் பட்டியல் வேண்டுமெனவும் கூறப்பட்டது. காங்கிரஸ் தரப்பில் பிராமணரல்லாதவர்களுடைய சென்னை மாகாண சபை கூடிப் பிராமணரல்லாதவர்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம் வேண்டும் எனக் கூறியது.[2]

இதைத் தொடர்ந்து, இந்திய அரசு எந்தெந்த அடிப்படை யில் பிராமணரல்லாதவர்களுக்குத் தனிப்பட்ட ஜாதிமதப் பிரதி நிதித்துவத்தைப் பற்றி, மத்திய அரசு சிபாரிசு போதிலும், பிராமணர்களும், பிராமணரல்லாதவர்களும் சேர்ந்து பேச்சு வார்த்தை நடத்த அரசாங்கம் கேட்டுக் கொண்டது. ஆனால், இவ்வடிப்படையில் நடந்த பேச்சு வார்த்தை முறிந்தது. உண்மையில் சி.பி. இராமசுவாமி ஐயர் அவர்கள், பிராமணரல் லாதவர்களுக்குத் தனிப் பாதுகாப்பு வேண்டுமென்றும், இல்லா விடில் அவர்கள் புதிய சீர்திருத்தச் சட்டசபையில் பிரதிநிதித் துவம் வகிக்கும் வாய்ப்பு இல்லாமற் போய்விடும் எனவும் கூறினர். ஆனால், பிராமணரல்லாதவர்களைச் சார்ந்த பிரதி நிதிகள் பிராமணரல்லாதவர்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம் தேவையென மிகையாக வாதாடினர். பிராமணர்களுக்கு மூன்று இடங்கள் மட்டுமே ஒதுக்க வேண்டுமென்றும், மற்ற எல்லா இடங்களும் பிராமணரல்லாதவர்களுக்குக் கொடுக்க வேண்டுமெ னவும் வாதித்தனர். சென்னை கவர்னர் வெலிங்டன் துரை, 50 சதவிகித இடங்கள் பிராமணரல்லாதவர்களுக்கு ஒதுக்க ஒப்புக் கொண்டார். ஆனால், தென்னிந்திய முற்போக்குக் கூட்டணி, 75 சதவிகித இடங்கள் பிராமணரல்லாதவர்களுக்கு வேண்டு மென்றும், கவர்னருடைய 50 சதவிகித இடங்கள் தேவையில்லை

[1] The Hindu, 6th February, 1920.

[2] Dravidan, 28th January 1920.

யென்றும் மறுத்து விட்டனர்.[1] வெலிங்டன் துரையைப் "பிராமணர் துரை"[2] என நீதிக்கட்சி பெயர் சூட்டியழைத்தது.

இவ்வாறு பிராமணர்களும், பிராமணரல்லாதவர்களும் தங்களுக்குச் சட்டசபையில் எத்துணை இடம் வேண்டுமென்பதைக் குறித்து ஒத்தித் தீர்ப்பு காணுததால் 'மெஸ்டன் துரை' ('Lord Meston') பிராமணர், பிராமணரல்லாதவர் இவ்விரு வகுப்பிலிருந்தும் ஆறு நபர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பக்கேட்டுக் கொண்டார். ஆகவே, மெஸ்டன் துரையை ஒரு நடுவராக நியமனம் செய்து, தொகுதிகளையும், இடங்களையும் ஒதுக்க இந்திய அரசு கேட்டுக்கொண்டது.[3] மெஸ்டன் துரை அளித்த தீர்ப்பின் ('Meston Award') அடிப்படையில் அரசாங்கம் 24 இடத்தைப் பிராமணரல்லாதவர்களுக்கு ஒதுக்கியது. அன்று மொத்தம் சென்னை சட்டசபையில் பொது இடங்கள் 65 (நகராட்சித் தொகுகள் 9, மாவட்டத் தொகுதிகள் 56) திருநெல்வேலியிலும், பாளையங் கோட்டையிலும், ஒவ்வொரு இடங்கள் பிராமணரல்லாதவர்களுக்கு ஒதுக்கப் பட்டன.[4]

## 2

## சர்.பி. தியாகராசச் செட்டியாரின் முற்போக்குக் கொள்கைகள்

### (அ) தொழில் முன்னேற்றம்[5]

சென்னையில் பின்தங்கிய வகுப்பினரிடையே மாபெரும் அரசியல், பொருளாதார, சமுதாயப் புரட்சிக்குத் தலைமை வகித்த சர்.பி. தியாகராசச் செட்டியார் அவர்கள், 1852ஆம் ஆண்டு ஏப்ரல் 27–ஆம் தேதி பிறந்தார்.1876ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழகத்திலிருந்து இளங்கலைப் பட்டத்தைப் பெற்றுர் பெற்றோர்களுக்கு உதவியாக அவர் அரசாங்க வேலையில் அமராமல், தோல்கள் பதனிட்டு இங்கிலாந்திற்கு அனுப்பும் வியாபாரத்தில் ஈடுபட்டிருந்தார். பரம்பரையாகக், கைத்தறித் துணிகள் நெய்வதில் ஈடுபட்டிருந்த தேவாங்கச் செட்டியார் சமுதாயத்தைச் சேர்ந்ததினுல், கைத்தறி நெசவுத் தொழிலில் அதிக ஆர்வம் காட்டி, கைத்தறி நெசவுத் தொழிலாளிகளுக்கு

[1] The Hindu, 19th February 1920, Page 5.
[2] The Hindu, 2nd March 1620, Page 6
[3] The Hindu, 18th March, 1920
[4] Refer the article on 'Sir P. Theagaraya Chettiar' by A.A. Nair vide page no. 29 of ihe Justice Party Colden Jubilee Souvenir, 1968. P
[5] **Ibid P. 30**

வேலை கிடைப்பதற்கு ஒரு நெசவாலையை ஸ்தாபனம் செய்தார். தம்மைப் போன்ற இதர பணம் படைத்த தம் சமுதாய அங்கத்தினர்களும், தம்மைப்பற்றித் தொழிலை வளர்க்க வேண்டும் என்பது அவர் அவா. கைத்தறி நெசவுத் தொழிலை மேலும் சீர்திருத்த, மேல் நாடுகளிலிருந்து நுட்பமான இயந்திரங்களை இறக்குமதி செய்து, மேலும் விருத்தி அடையச் செய்ய வேண்டுமென்பது அவருடைய எண்ணம். 1905ஆம் ஆண்டில நடந்த வங்காளப் பிரிவினையின் காரணமாக இந்தியாவில் சுதேசி இயக்கம் நாடு பூராவிலும் பரவியது. இதைப் பயன்ப்படுத்தி அவர் கைத்தறி நெசவுத் தொழிலை விருத்தியடையச் செய்தார். 1908ஆம் ஆண்டில் சென்னையில் 'தேசிய நிதியும், தொழில் மன்றமும்' என்ற ஸ்தாபனத்தின் கீழ் நடந்த அகில இந்திய நெசவாளர் போட்டியில் அவர் தொழிற்சாலையும் பங்கு கொண்டது. அதில் அவருக்கு முதற்பரிசும கிடைத்தது.[1]

### (ஆ) பொருளாதார முன்னேற்றக் கருத்துக்கள்[2]

பொருளாதார முன்னேற்றத்திற்கும், தொழிலாளர் நலத்திற்கும், சமுதாய மாற்றத்திற்கும் நாட்டின் செழிப்பிற்கும் என்னென்ன தேவை என்பதை அனுபவரீதியாகக் கண்டறிந்தவர் தியாகராசச் செட்டியார். இவர், தென்னிய வர்த்தகர் சங்கத்தின் அஸ்திவாரக்கல்லை நாட்டியவர், 1909ஆம் ஆண்டிலிருந்து அதனுடைய தலைவராக 1921ஆம் ஆண்டு வரை சுமார் 12 ஆண்டுகள் பணியாற்றினர் சமூக முன்னேற்றத்திலும், பொது ஊழியத்திலும் ஆர்வம் காட்டி உழைத்தார். நாட்டின் பொருளாதாரம் முன்னேறப், புதிய தொழிற்சாலைகள் தேவையென்பதும், சென்னைத் துறைமுகத்தை மேலும் விஸ்தரிக்க வேண்டுமென்பதும், பக்கிங்ஹாம் கால்வாயை மேலும் செப்பனிட்டுப் போக்குவரத்தைச் சீர்படுத்த வேண்டுமென்பதும் அவர் கருத்து. அன்று, ஆரம்பித்த எல்லாப் புதிய தொழில்களையும் அரசாங்கம் காப்பாற்ற வேண்டும் என்று அவர் ஆலோசனை கூறினர். 1914ஆம் ஆண்டு முதல் 1915ஆம் ஆண்டு வரை உலக மகா யுத்தத்தில் பல மூலப்பொருட்கள் வெளி நாடுகளிலிருந்து வராததின் காரணமாக, அப்பொருள்களை உள் நாட்டில் உற்பத்தி செய்ய வேண்டுமென்று கூறினர். தீவிரமான முயற்சிகளின்மூலம் இந்தியக் கப்பல் வியாபாரத்தைப் பெருக்க வேண்டுமென்றும், கப்பல் கட்டும் தொழிலை இந்தியா

[1] Ibid
[2] Ibid

மேற்கொள்ள வேண்டுமென்றும் வாதாடினர். தொழிற்சாலை களுக்குத் தேவையான மின்விசை உற்பத்தியைப் பெருக்க, அரசாங்கம் தகுந்த நடவடிக்கை எடுக்க வேண்டும் எனக் கூறினர். அதுபோலப் பண விவகாரம், பணமாற்று, ஏற்றுமதி போன்ற கொள்கைகளில் அவர் சிறந்த கருத்துக்களை வெளியிட்டு வந்தார்.[1]

### (இ) தொழிற்பயிற்சியின் தேவை[2]

தொழில் முன்னேற்றத்தைப் போன்று, தொழிற் பயிற்சியும் மக்களுக்கு வழங்க வேண்டுமென்பது அவர் கருத்து. 1908ஆம் ஆண்டு சென்னையில் நடந்த தொழில் மாநாட்டில் தொழிற் பயிற்சியற்ற வெறும் இலக்கியக் கல்வியை அவர் வெறுத்தார். அன்றைய கல்வி நிலையை ஆராய்ந்து, அக்கல்வி இலக்கியக் கருத்துக்களைத் தெரிவிப்பதற்கு மட்டும் உதவியது எனக் கூறினர். சுமார் 50 ஆண்டுகளாகப் பல்கலைக்கழகங்களில் படித்து வெளிவந்தவர்களில் அதிகமானவர்கள் சட்டம் தெரிந் தவர்கள், ஆசிரியர்கள், இளம்கலைப் பட்டம் பெற்றவர்கள். இப்படிப்பட்ட ஒரு கல்வி நாட்டினுடைய பொருளாதாரத்தையோ, கைத்தொழில்களையோ அல்லது பெரும் தொழிற்சாலைகளையோ நிறுவுவதற்கு உதவி அளிக்காமற் போயிற்று என்று கூறினர். நாட்டு மக்கள் தொழிற் கல்வியின் நுட்பத்தில் நாளடைவில் தேர்ந்து வருகிறார்கள் என்றும், ஆனல், தொழில் முன்னேற்றத் திற்கு அரசாங்கம் ஒதுக்கும் பணம் போதாது என்றும் கூறினர். ஆகவே, நாட்டின் கல்வி முறையைப் பூரணமாக மாற்றி, நாட்டு மக்களுக்குத் தொழில் நுட்பக்கல்வியும், தொழிற் கல்வியும், ஆரம்ப வகுப்பிலிருந்தே மாணவர்களுக்குக் கற்பிக்க வேண்டும் எனக் கூறினர்.[3] இப்படிப்பட்ட பயிற்சிகள், ஆரம்ப காலத்தில் பள்ளி மாணவர்களுக்குக் கற்பிக்கப்படுமேயாயின், அப்பயிற்சி தொழில்களின் முக்கியதத்துவத்தை உணர்த்தி கோட்பாடுகளின் காரணமாக வேலை செய்வது, இழிந்தவர்கள் தொழில் என நம்பி வரும் மூடத்தனம் நாளடைவில் மாறிவிடும் எனக் கருதி ஞர். இதனல், கல்வி அதிகாரிகளுக்கும், கல்வி நிலையங்களை நடத்துபவர்களுக்கும், கைத்தறி நெசவிலும், சிறு தொழில்களிலும் பள்ளி மாணவர்களுக்கு, மாலட்டப் பள்ளி நிலையங்களில் பயிற்சி யளிக்க வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார் திருமலைப்பிள்ளை என்பவரோடு சேர்ந்து, செங்கல்வராய நாயக்கருடைய தொழில்

[1] Ibid page 3
[2] Ibid
[3] Ibid

நுட்ப நிலையத்தை நிறுவினர். அதைப் பரிபாலனம் செய்யும் கமிட்டியில் தாம் முக்கிய அங்கத்தினராகப் பணியாற்றி வந்தார். இதுபோன்று வண்ணாரப்பேட்டையில் ஒரு கல்வி நிலையமும் நடத்தினர்.[1] உயர் கல்வியில் பெரும் அக்கரைக்காட்டி, பச்சையப்பன் கல்லூரியை நடத்திவந்த நிர்வாக சபையில் அங்கம் வகித்தார். இதுபோல், பச்சையப்பருடைய மற்ற அறநிலையங்களைப் பரிபாலிக்கும் ஓர் அங்கத்தினராகவும் பணியாற்றினர். 1898ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஒரு சகபாடகனாக (Fellow) அனுமதிக்கப்பட்டார்.

(ஈ) பொதுப்பணி[2]

அநேக வருடங்களாகத் தியாகராசச் செட்டியார் சென்னை மாகாண சபையில் அங்கம் வகித்து, பொதுமக்களுக்கு முக்கியமாக வேண்டிய அரசியல் விவகாரங்களை அவ்வப்போது வெளியிட்டு வந்தார். தேசிய நிதியும், தொழில் மன்றமும் சென்னையில் நிறுவுவதற்கு அவர் மிகவும் அக்கரையோடு பணியாற்றினர். 1885ஆம் ஆண்டு காங்கிரஸ் உருவெடுத்தபோது அதில் மிகவும் ஆர்வம் கொண்டு, சென்னையில் நடந்த காங்கிரஸ் கூட்டத்திற்கு அவர் வருகை தந்தார். அது போன்று சென்னை மாகாணத்தில் அன்று நடந்த சமுதாயப் பொருளாதார அரசியல் கூட்டங்களில் கலந்து, தென்னிந்தியப் பிரச்சினைகளில் அவர் மிகவும் தேர்வு பெற்றார்.

(உ) புரட்சி வீரர்[3]

ஆனல், தென்னிந்தியாவில் பிராமணரல்லாதவர்களுடைய சமுதாயம் அன்று அடைந்த கொடுமைகள் அவர் மனதை வாட்டியன. அன்று அவர்களுக்குக் கல்வி இல்லாத நிலையும், அரசாங்கத்திலேயோ, அரசாங்க நிறுவனங்களிலேயோ பிரதிநிதித்துவம் இல்லாதது பற்றியும் கவலை கொண்டார். ஆகவே, அம்மக்களுக்குத் தனியான பாதுகாப்பு அளிக்காவிடில் அவர்கள் நிரந்தரமாகச் சமுதாயத்தில் மூழ்கி இருக்க வேண்டி நிலை வரும் என உணர்ந்தார். அவர்களுடைய சமுதாய நிலையை உயர்த்தித் தனிப்பட்ட பிராமணரல்லாத வகுப்பினர்களுக்குக் கல்வி புகட்டி, அரசாங்கத்தில் வேலை அளிப்பது மிக முக்கியமென உணர்ந்து, டாக்டர் டி.எம். நாயர் அவர்களோடு சேர்ந்து, பிற்காலத்தில் ஆரம்பிக்கப்பட்ட நீதிக்கட்சியை ஆரம்பித்தார். ஆனல், இவர்கள்

[1] Ibid
[2] Ibid p. 31
[3] Ibid

இருவரும் சென்னை நகரசபை அங்கத்தினர்களாகப் பணியாற்றியபோது, ஒருவருக்கொருவர் நிர்வாகக் காரியங்களில் பல அபிப்பிராய பேதங்களுடன் இருந்து வந்தனர்[1] ஆனால், பிராமணரல்தாதவர்கள் நலன் கருதி, இருவரும், தங்கள் கருத்துக்களை மாற்றியமைத்துச் சமுதாயத்திற்கு வேண்டிப் பாடு படத் துணிந்தனர். 1916-ஆம் ஆண்டு நவம்பர் 20-ஆம் தேதி தியாக ராசச் செட்டியாருடைய கையெழுத்தோடு பிராமணரல்லாதவர்களுடைய பிரசித்த பத்திரிகை வெளியாயிற்று. மார்ட்டின் லூதரைப் போன்று, பெரிய புரட்சி ஒன்று சமுதாயத்தில் ஏற்பட்ட போதிலும், மன திடத்தோடு அதை நடைமுறையிலாக்குவதற்குத் துணிந்தார். திவான்பகதூர் கேசவப்பிள்ளை அவர்கள் பிரசித்த பத்திரிகையைப் பார்த்துவிட்டு, அது ஒரு தனிப்பட்ட நபரின் சுயநலக் கருத்து எனக் குறிப்பிட்டார். ஆனால், அதில் தலையிட்டிருந்த பெரும் தலைவர்களையெல்லாம் பார்த்துத் தாம் கூறிய வார்த்தைகள் தவறு என மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.[2] என்றாலும், பிரசித்த பத்திரிகையை அவர் ஒப்புக் கொள்ளவில்லை. ஆனால், பிராமணரல்லாதவர்களிடையே இப்பிரசித்த பத்திரிகை மேலும் முக்கியத்துவம் அடைந்தது. பிராமணரல்லாதவர்களுக்கு அது ஒரு பைபிளாகவும் அமைந்தது. தென்னிந்திய முற்போக்குக் கூட்டணி பிராமணரல்லாதவர்களுக்குத் தனிப்பிரதிநிதித்துவம் கேட்டது. பல பெரும் போராட்டங்களுக்குப் பின் பிராமணரல்லாதவர்களுக்கு 1919-ஆம் ஆண்டு சீர்திருத்தத்தின் அடிப்படையில் பிரதிநிதித்துவம் வழங்கப் பட்டது. மக்கள் அதிகாரத்திற்கு சில முக்கியமான இலாக்காக்கள் மாற்றப்பட்டன. அதை நீதிக் கட்சி ஏற்றுச் செவ்வனே பணியாற்றி வந்தது. சீர்திருத்தச் சட்டசபையில்1920-ஆம் ஆண்டிலிருந்து அவர் அங்கத்தினராக இருந்து வந்தார்.[3] ஆனால், 1924-ஆம் ஆண்டு ஒத்துழையாமை இயக்கத்தை (Civil Disobedience) அவர் தாக்கிப் பேசியபோது சத்தியமூர்த்திக்கும், அவருக்கும் பெரும் வாக்குவாதம் ஏற்பட்டது. பார்வையாளர்கள் கை தட்டி, சட்டசபையில் நடந்த வாதப்பிரதி வாதத்திற்குத் தடையுண்டு பண்ணியதால், அவர்களை அரங்கத்திலிருந்து வெளியேற்றத் தலைவர்உத்திரவு பிறப்பித்தார். அவர் அளித்த பதில் அவருடைய அரசியல் அறிவையும் அவருடைய மனத்திடத்தையும், பெருந்தன்மையையும், கொள்கையில் அவருக்குள்ள கட்டுப்பாட்டையும்

[1] Ibid
[2] Ibid P. 31.
[3] Ibid

எடுத்துக் காட்டியது.[1] மாகாணங்கள், மத்திய அரசாங்கத்திற்கு ஆண்டுதோறும் கொடுக்கும் நிதியைத் தரப் பெரிதும் மறுத்தார். சென்னை போன்ற ஏழைப்பட்ட ஒரு மாகாணம் தன் வரவு, செலவுகளை மிகவும்சிக்கனமாக நடத்தி வரும்போது மத்திய அரசாங்கத்திற்கு ஆண்டுதோறும் பணம் கொடுப்பதென்பது ஒரு முடியாத காரியம் என்று அவர் கருதினார். சென்னை மாகாணத்தைப்பற்றி 'இந்தியாவின் பால் சுரக்கும் பசு' (The Milch Cow ofIndia)' என்ற ஒரு புத்தகத்தை எழுதி வெளியிட்டார். சென்னை மாகாணத்தில் நீதிக்கட்சியின் கொள்கைகளை நடைமுறையாக்குவதில் அவர் பெரும் பங்கு எடுத்துக் கொண்டார். சென்னைப் பல்கலைக்கழகத்தின் நிர்வாகத்தை ஜன நாயக அடிப்படையில் மாற்றியமைக்கவும், அதற்குத் தனிச் சுதந்திரம் கிடைக்கவும் அவர் காரணமாக இருந்தார். புதிதாக ஆரம்பிக்கும் தொழில்களுக்கு அரசாங்கம் கொடுக்கும் உபகாரங்களைப் பற்றிய சட்டத்தைத் தீர்வு பெறச் செய்யவும், இந்து மத அற நிலையங்கள் சீர்திருத்த மசோதா தேர்வு பெறவும், கூட்டுறவுச் சங்கங்கள் நிர்ணயிக்கவும், ஸ்தல ஸ்தாபன நிர்வாகங்கள் முன்னேறப் பல மசோதாக்கள் சட்டமாகவும் உதவி புரிந்தார்.[2]

### (உ) சென்னை நகரசபை அங்கத்தினர் பதவி[3]

தியாகராசச் செட்டியார் அவர்கள் சென்னை நகரசபையின் நிர்வாகத்தில் 40 வருடமாக அங்கத்தினராக இருந்து வந்தார். சென்னை நகரசபைச் சட்டத்தின் அடிப்படையில் 1919-ஆம் ஆண்டு, கமிஷனராகத் தேர்வு பெற்றார். அதற்கு முன்பெல்லாம் கமிஷனர்தான் அதனுடைய முக்கிய நிர்வாக அதிகாரியாக இருந்து வந்தார். 1923-ஆம் ஆண்டு வரை அவர் தொடர்ந்து அதன் தலைவராகப் பணியாற்றினார். ஆண்டுதோறும் சென்னையில் ஒரு "பூ" கண்காட்சியும், குழந்தைகள் அணி வகுப்பும், ஒரு தேசிய விழா போலக் கொண்டாட ஏற்பாடு செய்தார்.

### (ஊ) கௌரவங்கள்[4]

1909-ஆம் ஆண்டு ராவ்பகதூர் பட்டமும், 1919-ஆம் ஆண்டு திவான்பகதூர் பட்டமும், 1921-ஆம் ஆண்டு 'Knight' அளிக்கப்பட்டன. மாண்டேகு சீர்திருத்தத்தின்படி முதல் முதலாக மேல்சபையைத் தொடங்கி வைக்கக் காணாட் பிரபு சென்னைக்கு வந்தார். அப்பொழுது தியாகராசச் செட்டியார்

[1] Ibid
[2] Ibid, page No. 31
[3] Ibid
[4] Ibid

நீதிக்கட்சியின் தலைவராகவும், சென்னை மாநகராட்சியின் தலைவராகவும் இருந்தார், சென்னை துறைமுகத்தில் காறுட் பிரபுவை வரவேற்க மாநகராட்சி ஏற்பாடு செய்திருந்தது. அக்காலத்தில், ஆங்கிலேயர் ஏற்படுத்தியிருந்த கட்டுத்திட்டங்களின்படி காறுட் பிரபுவை வரவேற்கத் துறைமுகத்திற்கு வருபவர்கள் குறிப்பிட்ட முறையில் உடைகள் அணிந்து வரவேண்டும். அதாவது ஒரு தலைப்பாகை, நீண்ட கறுப்புக்கோட்டு, வெள்ளைக் கால்சட்டைகளையே ஒவ்வொருவரும் அணிய வேண்டுமென்று விதிக்கப்பட்டிருந்தது. ஆனால், தியாகராசச் செட்டியார் அதை விரும்பவில்லை, 'நான் வழக்கமாக அணியும் தூய வெள்ளை உடையைத்தான் அணிந்து வருவேன்; அது கூடாது என்றால், நான் விழாவில் கலந்து கொள்ள விரும்பவில்லை; துணைத் தலைவர் வரவேற்பார்,' எனக் கூறிவிட்டார். அரசினர் அவர் விருப்பத்திற்குப் பணிய வேண்டியதாயிற்று. செட்டியாரின் வெள்ளையுடை நிகழ்ச்சி எவ்வளவு பொலிவைக் கொடுத்தது என்பதை நிகழ்ச்சியின் புகைப்படங்களைக் கண்ணுற்றோர் ஒப்புக் கொள்வர். 1925-ஆம் ஆண்டு வரை தியாகராசச் செட்டியார் சென்னை மாகாண மக்களுக்கு நற்பணி புரிந்தார். தியாகராசச் செட்டியாரைப் பிராமணரல்லாத மக்களின் வழிகாட்டி எனக் கொள்ளலாம்.[1]

## 3

## முஸ்லீம்களுக்கும், தாழ்த்தப்பட்டவர்களுக்கும் பிரதிநிதித்துவம்[2]

1906-ஆம் ஆண்டு வைஸ்ராயினுடைய நிர்வாக சபையின் ஒரு கமிட்டி, சீர்திருத்தத்தைப் பற்றி ஆலோசிக்கும் பொருட்டு நிறுவப்பட்டது. ஆகாகானுடைய தலைமையில் ஒரு தூது கோஷ்டி வைஸ்ராய் மிண்டோ பிரபுவைச் சந்தித்தது. முகமதியர்களுடைய எண்ணிக்கை அடிப்படையிலும், அரசியல், இராணுவ முக்கியத்துவத்தைப் பொறுத்தும் அவர்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம் வழங்க வேண்டும் எனக் கேட்டுக் கொண்டது. அவர்களுக்கு அதுவரை இருந்த பிரதிநிதித்துவம் மிகக் குறைவு எனவும், எல்லா மதத்தினருக்கும் சேர்ந்து அமைக்கப்படும் வாக்காளர் பட்டியல் தங்களுக்குச் சாதகமாக இருக்காது எனவும் கூறினர். ஆகவே, சட்டத்தின் அடிப்படையில் அவர்களுக்குப் பிரதிநிதித்துவமும், தனி வாக்காளர்

[1] Report of the Indian Statutory Commission, 1930, Vol.I, Survey, Page 184.

[2] Ibid

பட்டியலும் வேண்டுமெனவும் கூறினர்.[1] இதற்குப்பதிலளித்த மிண்டோ பிரபு, மக்களுடைய அபிலாஷைகளுக்கும், கொள்கைகளுக்கும் மத நம்பிக்கைகளுக்கும், பிரதிநிதித்துவம் அளிக்க முடியாத ஒரு நிர்வாக முறை, அக்கிரமமான தோல்வி அடைந்தது எனத் தாம் கருதுவதாகக் கூறினர்.[2] ஆகவே, முதன் முதலாக மிண்டோ பிரபு, முகமதியர்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம், அவர்களுடைய ஜனத்தொகைக்கேற்பக் கொடுக்க ஒப்புக் கொண்டார்.

மிண்டோவைப் பார்த்ததின்பின், 1906-ஆம்ஆண்டிலேயே முஸ்லீம்கள் டாக்காவில் கூடி, அகில இந்திய முஸ்லீம் லீக் என்ற ஒன்றை நவம்பர் மாதம் 1906-ஆம் ஆண்டு ஆரம்பித்தனர். முஸ்லீம்கள் இதைத் தங்கள் அடிப்படை உரிமைகளைப் பாதுகாக்கும் ஒரு நடவடிக்கையாகக் கருதினர். 1916-ஆம் ஆண்டு இந்திய தேசியக் காங்கிரஸ் கூட்டத்தில் பேசும்போது, முகமது அலி ஜிண்ணு,[3] அகில இந்திய முஸ்லீம்களின் நலனைப் பாதுகாக்கவே அந்த ஸ்தாபனம் ஆரம்பிக்கப்பட்டது எனக் கூறினர். 1906-ஆம் ஆண்டு பிரதிநிதித்துவம், பிராமணர்கள், பிராமணரல்லாதவர்கள், கிறிஸ்தவர்கள், ஜமீன்தார்கள், செனேட் சபை, வர்த்தக சங்கங்கள், மற்ற ஏனையோர், இவர்களுடைய நலனைப் பாதுகாக்கும் அடிப்படையில்தான் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

1919-ஆம் ஆண்டு சீர்திருத்தத்தின் அடிப்படையில் இந்திய அரசாங்கம் வாக்குரிமைக் கமிட்டி கூறிய வகுப்பு வாதப் பிரதிநிதித்துவத்தை ஒப்புக் கொண்டது.[3] இந்த அடிப்படையில் தான் பொறுப்பாட்சியை முற்போக்குப் பாதையில் செயல்படுத்த முடியும் என்பது இந்திய அரசாங்கத்தின் கருத்து. ஆகவே, முகமதியர்களுக்கும், ஐரோப்பியர்களுக்கும், ஆங்கிலேய இந்தியர்களுக்கும், இந்திய கிறிஸ்தவர்களுக்கும், பல்கலைக்கழகங்களுக்கும், நிலச்சுவான்தாரர்களுக்கும் பிராமணரல்லாதவர்களுக்கும் பிரதிநிதித்துவம் வழங்க ஆங்கில அரசு முன் வந்தது. அது போலவே, ஒவ்வொரு மாகாண சட்டசபைகளிலும், தனிப்பட்ட சமுதாயத்தினருக்குப் பிரதிநிதித்துவம் வழங்க வேண்டும் எனக் கூறியது. சென்னையில், அவ்வடிப்படையில் பின்வருமாறு சபை நிர்ணயிக்கப் பட்டது.[4]

[1] Ibid
[2] India's claim for Home Rule (Collection of speeches and writings), PP. 268-69
[3] Fifth Despatch on Indian Constitutional Reforms (Franchises), para 13, Page 367.
[4] Report of the Indian Statutory Commission, Vol. I, Page 144

| | |
|---|---|
| மொத்த நியமனம் — தேர்வுபெற்ற அங்கத்தினர்களின் எண்ணிக்கை | 132 |
| (அ) நியமனம் செய்யப்பட்டவர்கள் (34)[1] | |
| (1) ஜாதி மதத்தையும், மற்றவகைகளையும் பிரதிநிதித்துவம் வகிப்பவர்கள் | 23 |
| (2) தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் | 10 |
| (3) தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் பின்தங்கிய மாவட்டங்களிலுள்ளவர்களுடைய பிரதிநிதித்துவம் | 1 |
| (ஆ) தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் (98) | |
| (1) தனி வாக்காளர் பட்டியல்: | |
| நகரங்களில் வாழும் முகமதியர்கள் | 2 |
| மாவட்டங்களில் வாழும் முகமதியர்கள் | 11 |
| ஆங்கிலோ இந்தியர்கள் | 1 |
| இந்தியக் கிறிஸ்தவர்கள் | 5 |
| ஐரோப்பியர்கள் | 1 |
| (2) தனித் தொகுதிகள் | |
| நிலச்சுவான்தார்கள் | 6 |
| பல்கலைக்கழகங்கள் | 1 |
| வியாபாரங்களும், தொழில் நிறுவனங்களும் | 6 |
| (3) பொதுத்தொகுதிகள் | |
| முகமதியர்களல்லாதவர்களுடைய நகரத் தொகுதிகள்[2] | 9 |
| முகமதியர்களல்லாத மாவட்டத் தொகுதிகள்[3] | 56 |

தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் தங்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம் வேண்டும் எனக் கேட்டதின் அடிப்படையில் இந்திய அரசு, சென்னையைப் பொறுத்தமட்டில், சட்டசபையில்

1. இதில் அதிகாரிகள் 19-க்கு மேல் இருக்கக்கூடாது எனக் கூறப்பட்டது.
2. இதில் 3 தொகுதிகள் பிராமணரல்லாதவர்களுக்கு எனவும் ஒதுக்கப்பட்டது.
3. 56 தொகுதிகள் பிராமணரல்லாதவர்களுக்கென தனியாக ஒதுக்கப்பட்டது.

10 இடங்களைத் தாழ்த்தப்பட்ட சமூகத்தினருக்கு ஒதுக்கி, அவர்களுடைய பிரதிநிதிகளை நியமனம் செய்யக் கேட்டுக்கொண்டது. அதில், பறையர்கள் (Paraiyans), பள்ளர்கள் (Pallans), வளவர்கள் (Valluvars), மாலர்கள் (Malars), மாதிக்கர்கள் (Madikkars), சக்கிலியர்கள் (Chakkiliyars), தொட்டையர்கள் (Tottiyans), சேருமாரிகள் (Cherumas), ஹோலியர்கள் (Holeyas) இவர்களின் சமுதாயத்தைச் சார்ந்த பிரதிநிதிகளால் நியமனம் செய்யப்பட்டதாகும்.[1] இதைத் தொடர்ந்து சென்னை அரசு, நம்பூதிரிகள் (Nambudiris), தீயர்கள் (Thiyyas), ஜெயினர்கள் (Jains), நாடார்கள் (Nadars), ஆங்கிலோ-இந்தியர்கள் (Anglo-Indians), பிராடஸ்டண்ட் கிறிஸ்தவர்கள் (Protestant-Christians), உரியர்கள் (Uriyas), கம்மர்கள் (Kammas), இன்னும் பிற்பட்ட வகுப்பினர்களுக்கும் (Backward - Communities), பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டியது. சில கலெக்டர்கள் நெசவாளர்கள் (Weavers), குயவர்கள் (Potters) செங்குந்தவர்கள் (Sengundars) ஆகியவர்களுக்குப் பிரதிநிதித்துவம் வழங்கச்சிபாரிசு செய்தனர்,[2] அதுபோன்று சிறிய வகுப்பினரான ஜெயினர்கள் (Jains)[3], மராட்டியர்கள் (Mahrattas)[4] ஆகியோருக்கு சிறுவன்மையின் அடிப்படையில் பிரதிநிதித்துவம் கொடுக்கச் சிபாரிசு செய்தனர். ஆனல், 1923 ஆம் ஆண்டு சென்னை சட்டசபையில் நாடார்கள் (Nadars), முக்குவர்கள் (Mukkuwars), அறுதத் தீயர்கள் (Arudhateeyas), லிங்காயத்தர் (Lingayarhas( நம்பூதிரிகள் (Nambudiris), மருத்துவக்குவர் (Maruthuwakulars), கள்ளர்கள் (Kallrs), தீயர்கள் (Tiyyas), ஆங்கிலோ-இந்தியர்கள் (Anglo-Indians), பிராடஸ்ட்டண்ட் கிறிஸ்தவர்கள் (Protestan-Christians), ஆதி திராவிடர்கள் (Adi-Dravidas) முதலியோருக்குப் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டது. இதுபோன்று பிரதிநிதித்துவங்களை வன்னியகுல சாத்தியர்களும் (Vanniakula Ksatriyas), விச்வகுல பிராமணர்களும் (Viswakula brahmins) பெரிதும் விரும்பினர்.

## 4

## நீதிக்கட்சியின் வெற்றி[5]

1920 ஆம் ஆண்டு தேர்தலில் போட்டியிட்ட நல உரிமைச் சங்கம், பெரும்பான்மையான இடங்களைக் கைப்பற்றியது.

[1] Memorandum submitted to the Indian Statutory Commission by the Government of India, Vol. IV, Chapter VI, page 152

[2] G. O. 521, dated 8th Deeember 1926, Law Legislative

[3] G. O. 32, dated 23rd June 1924, Paw Legislative

[4] G. O. 379, dated 24 th Sept. 1924, Law Legislative

[5] Refer the article 'Justice Party Golden Juvillee' by P. T. Rajan, vide Justicc Party Golden Jubilee Souvenir, 1968, p.

மாண்ட்போர்டு சீர்திருத்தத்தின் அடிப்படையில் பிராமணரல்லாத வர்களுக்குக் கொடுத்த பல சலுகைகள் இவ்வெற்றிக்குக் காரண மாகும். தேர்தலின் முடிவைப் பார்த்தபொழுது, பெரும் கிளர்ச்சியின் பலனைப் பெற்ற பல சலுகைகளைத் தேவையற்ற தாகவே நீதிக்கட்சிக்குத் தோன்றிற்று. அரசாங்கப் பிரதிநிதிகள், நியமனம் பெற்ற உறுப்பினர்கள், ஆகியவர்களின் உதவி இல்லாமலே அமைச்சரவையை அமைக்கும் அளவிற்குத் தென்னிந்திய உல உரிமைச் சங்கம் பெரும்பான்மை பெற்றது. சட்டமன்ற நல உரிமைச்சங்கத்திற்கு 'நீதிக்கட்சி' எனப் பெயர் வழங்கப்பட்டது தேர்தலில் வெற்றி பெற்ற நீதிக்கட்சி யின் தலைவரான திருவாளர் பி. தியாகராசச் செட்டியார் அவர்களை மந்திரிசபை அமைக்குவாறு கவர்னர் வேண்டிக் கொண்டார். ஆனாலும், தியாகராசச் செட்டியார் அவர்கள் அந்த அழைப்பை ஏற்றுக்கொள்ளாமல், தமது நண்பரான திவான் பகதூர் ஏ. சுப்பராயலு ரெட்டியார், ராமராயர் (பனகல் இராஜா), ராவ் பகதூர் ரெங்க ரெட்டி இம்மூவரையும், முதலாவது, இரண்டாவது, மூன்ருவது மந்திரிகள் என வரிசையாகச் சிபாரிசு செய்தார்.[1] ஆனல், முதல் மந்திரியாகப் பதவி ஏற்ற சுப்பராய ரெட்டியார் இறந்து விட்டார். ஆகவே, இரண்டாவது மந்திரி, முதல் மந்திரியாகவும், மூன்ருவது மந்திரி இரண்டாவது மந்திரி யாகவும் மாற்றப்பட்டதோடு, ஏ. பி. பாட்ரோ அவர்கள் மூன்ருவது மந்திரியாகவும் நியமிக்கப்பட்டார். இம் மந்திரிசபை மூன்று ஆண்டுகளுக்கு நிலையான ஆட்சி செய்தது. அந்நிலை பெற்ற ஆட்சியும், அம் மந்திரிகளுடைய திறமையும், அவர் களுடைய பரந்த மனப்பான்மையும், அவர்கள் கையாண்ட தந்திரங்களும், நீதிக்கட்சியின் அமைப்பும்தான் இரட்டையாட்சி சென்னையில் வெற்றி பெறக் காரணமாக இருந்தது எனக் கூறினர். அப்போது சென்னை ஆளுநராக இருந்து வெலிங்டன் பிரபு, சட்டமன்றத் தலைவராக சர். பி. இராஜகோபாலாச்சாரி யார்வர்களை நியமனம் செய்தார். அனுபவம் மிகுந்த இவ்விரு வரும் சென்னைக்குக் கிடைத்தது ஒரு நல்வாய்ப்பு என்று நீதிக் கட்சி கூறியது.[2]

## 5

## (அ) முதல் தேர்தலின்பின் சட்டசபை அங்கத்தினர்களின் நல்லுறவு[3]

நாட்டில் பிராமணர், பிராமண ரல்லாதார் என்ற வேற்றுமை உணர்ச்சி அதிகமாக இருந்தும், சட்டமன்றத்திற்குப் பதினறு

[1] See the List of Ministers vide Apperdix p. I.
[2] Ibid
[3] Ibid

பிராமணர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தனர். அவர்கள் அனைவரும் சென்னையையும், வெளியூர்களையும் சேர்ந்த சிறந்த வழக்கறிஞர்கள். உறுப்பினர்களுக்கிடையே ஜாதியிலும், கொள்கையிலும் கருத்து வேறுபாடுகள் இருந்த போதிலும், ஒருவருக்கொருவர் அளவளாவி உரையாடிக் கொண்டிருப்பர். ஜாதியோ, கட்சியோ, கொள்கையோ, வயதோ அவர்கள் உறவை ஒரு நாளும் பாதிக்கவில்லை. அம் முதல் சட்டமன்றம், ஓர் இணைந்த குடும்பம்போல் விளங்கிற்று. பாராளுமன்ற நடைமுறைகளும், பழக்க வழக்கங்களும் நல்ல முறையில் உருவாக்கப்பெற்றன. சட்டமன்றங்களில் குழப்பங்கள் ஏற்படுவதும், உறுப்பினர்கள் வெளிநடப்புச் செய்வதும் அன்று கேட்டறியாத செய்திகளாகும். நாட்டிலுள்ள எல்லா மாநிலச் சட்டமன்றங்களிலும், சென்னை மன்றந்தான் சிறந்த முறையில் நடைபெறுகின்றது என்று எல்லோராலும் புகழப்பட்டது. அதனால், வெளி நாட்டிலிருந்து இந்தியாவிற்கு வந்த பெருமக்களில் பலர், தில்லி பாராளுமன்றத்தைப் பார்வையிட்டபின், சென்னை மன்றத்தையும் பார்வையிட வருவது வழக்கம். இத்தகைய புகழைச் சென்னை மன்றத்திற்குத் தேடித்தந்த பெருமை அதன் தலைவர் சர். பி. இராசகோபாலாச்சாரியாரையே சாரும். அவர் அரசாங்க உயர் அதிகாரியாக இருந்தாலும், சட்டமன்றத் தலைமைப் பதவிக்குத் தம்மைத்தானே வெகுவிரைவில் தகுதியாக்கிக் கொண்டது வியப்பேயாகும்.[1]

### (ஆ) பாராளுமன்ற முறை[2]

இரட்டையாட்சி சென்னை மாகாணத்தில் நடந்த காலத்தில் சென்னை சட்டசபை ஒரு சிறு பாராளுமன்றம் போலவேயிருந்தது. ஆங்கிலப் பாராளுமன்றம் உலகத்தின் பெரும் பாகத்தின் ஆட்சிப் பொறுப்பையேற்றிருந்தபோதிலும், அதை ஒரு நட்புறவுக் கழகத்திற்கு ஒப்பாகவே ஆங்கிலேயர்கள் கருதினர், சாதாரணமாக ஆங்கிலேயர்கட்கு, வீட்டிற்கு அடுத்த படியாக இன்பம் தரும் இடம் நட்புறக்கழகமேயானதால், அவர்கள் பாராளுமன்றத்தை அவ்வாறு கருதினர். 'ஆங்கிலப் பாராளுமன்றம் பாராளுமன்றங்களுக்கே அன்னை[3] எனக் கருதப்படுகின்றது. அம்மன்ற உறுப்பினர்கள், எக்கட்சியைச் சார்ந்தவர்களாயினும் மன்றத்திற்குக் கட்டுப்பட்டிருப்பதையும்,

[1] Ibid P. xliv
[2] Ibid
[3] Ibid

அதன் நம்பிக்கைக்குப் பாத்திரமாக விளங்குவதையுமே தங்களுடைய தலையாய கடமையாக கருதினர். அப்பாராளு மனறத் தலைவருக்கு 'ஸ்பீக்கர்' என்ற பெயர் வழங்கி வருகிறது.[1] அவர் சபையின் எண்ணங்களை மன்னரிடம் எடுத்துப் பேசிவதினாலேயே அவருக்கு 'ஸ்பீக்கர்' என்ற பெயர் வந்தது. ஆனால், அவர் சபையில் நீண்ட பேச்சுக்களைப் பேசு வதில்லை. உறுப்பினர்கள் தங்கள் சார்பாகவும், மக்கள் சார்பாக வும், கட்சி சார்பாகவும், அரசாங்கத்தின் சார்பாகவும் பேசுவதற்கு உரிமை பெற்றவர்கள். ஆனால், கட்சி சார்பற்று நடுநிலையிலுள்ள தலைவர் (ஸ்பீக்கர்) மட்டுமே மன்றத்தின் சார்பாகப் பேச உரிமை பெற்றவர் அது பற்றியே அவருக்கு மட்டும் 'பேச்சாளர்' என்ற பெயர் கொடுக்கப்பட்டது. மன்றத்தின் பெருமையையும், கவுரத்தையும் அதற்கென அமைந்த மரபுகளையும் கண்ணும் கருத்துமாகக் காப்பது தலைவரின் கடமையாகும். தலைவரின் அந்தஸ்துக்கும், அதிகாரத்திற்கும் உரிய மரியாதையைக் கொடுத்துச் செயல்பட வேண்டியது உறுப்பினர்களின் கடமை யாகும். ஆங்கிலேயர் நாட்டில் மக்களாட்சி நன்றாக நடைபெறு வதற்குக் காரணம், பாராளுமன்றத் தலைவர்கள் மன்றத்தை நடத்திச் செல்லும் முறையேயாகும்.[3]

### (இ) சட்டசபையும் கொறடாவும்[3]

சட்டமன்றக் கூட்டங்கள் நடைபெறும்பொழுது எந்த நேரத்தில் வாக்கெடுப்பு நடைபெறும் என்று கூற முடியாது. திடீரென்று வாக்கெடுப்பு எடுக்க வேண்டிய நிலை தோன்றி விடும் அதனால், ஆளும் கட்சி உறுப்பினர்கள் மன்றத்தில் விழிப்புடன் இருக்க வேண்டும். இதைக் கண்காணிக்கும் பொறுப்பை பி. டி. ராஜன் அவர்கள் ஏற்று நடத்தினார்கள். அமைச்சர்களும், மற்ற உறுப்பினர்களும் அதனை ஒத்துக் கொண்டனர். கட்சியின் கொறடா என்ற முறையில் பல கட்டுத் திட்டங்களை ராஜன் கொண்டு வந்தார். அதனை அனைவரும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டனர். முழு நேரமும் கட்சி உறுப்பினர்கள் மன்றத்தில் இருக்கவேண்டுமென்று ராஜன் கட்டாயப்படுத்தினார், இதிலிருந்து தலைவர் தியாகராசச் செட்டி யாருக்கு மட்டும் விதிவிலக்குக் கொடுக்கப்பட்டது, ஒவ்வொரு நாளும் சட்டமன்றம் காலை 11 மணி முதல் மாலை 5 மணி வரையில் இருந்து விட்டு ஓய்வு எடுப்பதற்காகச் சென்று விடுவார், பிறகு மாலையில்தான் கூட்டத்திற்கு வருவார்.[4]

1 Ibid, XIN
2 [illegible]
3 Ibid
4 Ibid, page XLV

கட்சியின் செயற்குழுவிற்கான சட்ட திட்டங்களை சர். பி. டி. ராஜன் வகுத்துக் கொடுத்தார். அதனைக் கட்சி ஏற்றுக்கொண்டதுடன், கொறடா என்ற காரணத்தால் அவரையே அதற்குத் தலைவராகவும் தேர்ந்தெடுத்தனர். அமைச்சரவைக்கும், கட்சி உறுப்பினர்களுக்குமிடையே ஒரு தொடர்பாக இருப்பதே தலைவரின் வேலை. உறுப்பினர் அனைவரும் கடமையுணர்ச்சி மிக்கவர்கள். ஒவ்வொருவரும் சமுதாயத்தில் உயர்ந்த அந்தஸ்து வகிப்பவர்கள். மக்கள் அவர்களையே எதற்கும் வழிகாட்டியாகக் கருதினர், அதனால், அவர்கள் மிகுந்த பொறுப்புணர்ச்சியுடன் பேசியும், செயலாற்றியும் வந்தனர். பொது முன்னேற்றத்திற்குக் கட்டுப்பாடு எவ்வளவு இன்றியமையாதது என்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள்.[1]

நாட்டில் சட்டமும், ஒழுங்கும் எவ்வகையிலும் நிலைநாட்டப்பட வேண்டுமென்பது கட்சியின் முக்கிய கொள்கைகளில் ஒன்றாகும். அதனால், ஒத்துழையாமை இயக்கத்தில், மாணவர்கள் பங்கு கொள்வதைக் கட்சி கண்டித்தது. ஒழுங்கையும், சட்டத்தையும் நிலைநாட்டக் காவல் துறையினர் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளைக் கட்சி ஆதரித்தது; எனினும், அவர்கள் மிதமிஞ்சி செயலாற்றிய பொழுதெல்லாம் காவல் துறையைத் தண்டிக்கத் தயங்கவில்லை.

## 6

## இரட்டையாட்சியில் இரண்டாவது பொதுத்தேர்தல்[2]

1923ஆம் ஆண்டு நடைபெற்ற பொதுத்தேர்தலிலும், கட்சி வெற்றி பெற்றுச் சட்டமன்றத்தில் பெரும்பான்மைக் கட்சியாக விளங்கிற்று. பனகல் இராஜாவே தொடர்ந்து முதலமைச்சராக இருந்தார். அமைச்சரவையில் திரு. கே. வி. ரெட்டிக்குப் பதிலாகத் திவான் பகதூர் டி. என். சிவஞானம் பிள்ளை இடம் பெற்றார். முந்திய அவைச்சரவையில் தமிழர்கள் ஒருவரும் இல்லையே என்ற குறையைப் போக்குவதற்கே இம்மாற்றம் செய்யப்பட்டது. திரு. சிவஞானம் பிள்ளையை விடத் தகுதி பெற்றவர்கள் கட்சியில் பலர் இருக்கும்போது, அரசாங்க அலுவலிலிருந்து ஓய்வு பெற்ற அவரை ஏன் நியமிக்க வேண்டுமென்று பலரும் கேள்விகளை எழுப்பினர். அதனால், அமைச்சரவையின் மேல் எதிர்க்கட்சியினர் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வந்தபொழுது, அதற்கு அவர்கள் அனைவரும் ஆதரவு கொடுத்தனர். ஆயினும் தீர்மானம் தோல்வியுற்றது.[3]

1 Ibid
2 Ibid
3 Ibid

# 7

## இரட்டையாட்சியின் கீழ் சென்னை மாகாணத்தில் மூன்றுவது தேர்தலும், டாக்டர் சுப்பராயன் மந்திரி சபையும்[1]

ஒத்துழையாமை இயக்கம் (Non-cooperation movement) முடிவுறும் காலத்திலிருந்து சட்டமறுப்பு இயக்கம் (Disobedience movement) முடிவு பெறும் வரையில், சென்னையிலுள்ள அரசியல் கட்சிகள் வாளாயிருக்கவில்லை. நீதிக்கட்சி அரசாங்கத்தோடு இரட்டையாட்சிப் பொறுப்பை நடத்தப் பெரும் ஆதரவு அளித்த போதிலும், பனகல் இராஜாவும், சர். ஏ. பி. பாட்ரோவும் இரட்டையாட்சியில் நாளடைவில் நம்பிக்கை இழந்தனர். 1926ஆம் ஆண்டு நடைபெற்ற பொதுத் தேர்தலில் சட்ட மன்றத்தினுள்ளிருந்து (Council entry) பணி மாற்ற நினைத்த சுயராஜ்யக் கட்சி அதிகப்படி ஓட்டுக்களைப் பெற்றது. என்றுலும், மந்திரிசபை அமைப்பதற்கு அவர்கள் ஒத்துக் கொள்ளவில்லை. உண்மையில் எந்தக் கட்சியும், அம்மந்திரி சபை பொறுப்பை யேற்று நடத்த மெஜாரிட்டி பெறவில்லை சுயராஜ்யக் கட்சியினர் மந்திரிசபையை ஏற்றுக் கொள்ளாததற்கு மற்றொரு காரணம் இருந்தது. அவர்கள் சட்டசபையினுள்ளிருந்தே இரட்டை யாட்சியை ஒழித்து விட வேண்டும் எனக் கருதினர்.[2] இதற்காக இவர்கள் ஒரு தந்திரமான முறையைக் கையாண்டனர். சூழ்ச்சி கள் பல செய்து, இரவோடிரவாக டாக்டர் சுப்பராயனை நீதிக் கட்சியிலிருந்துபிரித்து, அவருக்குச் சுயராஜ்ய க்கட்சியின் ஆதரவு தருவதாகக் கூறி. அவர் தலைமையில் ஓர் அமைச்சரவையை அமைக்க முன் வந்தனர். சுப்பராயன் தலைமையில் ஒரு சுதந்திர மான மந்திரி சபையும் அமைக்கப்பட்டது. சுயராஜ்யக் கட்சியினர், தாங்கள் செய்த சூழ்ச்சியைத் தாங்களே பாராட்டிக் கொண்டனர். ஆங்கிலேயர்கள், அன்று, சுப்பராயன் மந்திரி சபை அமைத்ததைப் பாராட்டி, ஆதரித்தனர். ஆங்கிலேயர்கள் இம்மந்திரிசபையை ஆதரிக்க முக்கிய காரணம், அன்று ஆங்கி லேயர் ஆதிக்கத்திலிருந்து வந்த மருத்துவத் துறையைப் பனகல் இராசா இந்திய மயமாக்கியதேயாகும். இந்தியாவில் சட்டமன்ற உறுப்பினர்கள் கட்சி மாறிய பழக்கம் அன்று முதல் ஆரம்பித்தது எனக் கூறலாம். ஆனுல், டாக்டர் சுப்பராயன் கட்சி மாறிய போதிலும், அவர் எளிதில் ஏமாறக் கூடியவர்

[1] Ibid, Page xlvii
[2] Ibid

அல்லர் என்பது அப்போது காங்கிரஸ்காரர்களுக்குத் தெரியாது. ஆனால், வெகு விரைவில் தெரிந்து கொண்டனர்.[1]

'டாக்டர் சுப்பராயன் மந்திரிசபை அமைத்ததும், நீதிக்கட்சி அம்மந்திரி சபைக்கு விரோதமாகவும், பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு விரோதமாகவும் ஒரு பெரும் கிளர்ச்சியை உண்டாக்கியது. 1927ஆம் ஆண்டு ஜூலை மாதம் பிராமணரல்லாதவர்களுடைய ஒரு கூட்டம் கோயம்புத்தூரில் கூடிற்று.[2] அக்கூட்டத்திற்குப் பனகல் இராசா, சர். ஏ. பி. பாட்ரோ, சர். ஆர். கே. ஷண்முகம் செட்டி, சர். ஏ. இராமசுவாமி முதலியார், சர். சி தணிகாசலம் செட்டி முதலியோர் வந்திருந்தனர். அக் கூட்டம் ஸ்ரீ. எஸ். குமாரசுவாமி ரெட்டியாரின் தலைமையில் நடந்தது. அக் கூட்டத்தில் மூன்று முக்கியமான தீர்மானங்கள் நிறை வேற்றப்பட்டன. அதில், முதல் தீர்மானம், தனிப்பட்ட நீதிக் கட்சி அங்கத்தினர்கள் காங்கிரசில் சேர்ந்து, காங்கிரசிலுள்ள முக்கியமான அதிகாரங்களைக் கைப்பற்றிப் பிராமணரல்லாதவர் களுடைய கொள்கைகளைக் காங்கிரசினுள் புகுத்தி விட வேண்டும். இரண்டாவது தீர்மானம், இரட்டையாட்சியை நடத்த முடியாத ஒரு நிர்வாக அமைப்பு எனக் குறை கூறி ஒதுக்கி, மாகாணங்களுக்கு உடனடியாகச் சுயாட்சி கொடுக்க வேண்டும். மூன்றாவது தீர்மானம், உடனடியாகச் சென்னையில் அன்று பணியாற்றிய சுப்பராயனுடைய மந்திரிசபையின் மேல் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வருவது.[3]

நீதிக்கட்சி சட்டசபையில் கொண்டு வந்த நம்பிக்கை யில்லாத் தீர்மானத்தைச் சுயராஜ்யக் கட்சி ஆதரிக்காமல், டாக்டர் சுப்பராயன் மந்திரி தாக்கிப் பேசினர். தேர்தலில் அவர்கள் கொடுத்த வாக்குறுதியை இதனால் உடைதெறிந் தனர் என்றும், கௌஹாத்தியில் காங்கிரஸ் நிறைவேற்றிய தீர்மானத்தை முறியடித்தனர் என்றும் குற்றஞ்சாட்டப்பட்டனர். அவர்களுடைய விளக்கங்கள் மக்களிடையே, எந்த நம்பிக்கையை யும் உண்டாக்கவில்லை. இச்சம்பவத்தினால், சுயராஜ்யக் கட்சிக் குள்ளேயே பல கருத்து வேறுபாடுகள் தோன்றின, இக்கட்சி யைச் சார்ந்த ஓர் அங்கத்தினர், சுயராஜ்யக் கட்சியைச் சார்ந்த சட்டசபை அங்கத்தினர்கள் எல்லோரும் இராஜினாமா செய்யும் வகையில், ஒரு தீர்மானத்தை, அடுத்த காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் கொண்டு வரப்போவதாகத் தெரிவித்தார்.

1. Ibid
2. Ibid
3. Ibid

சுயராஜ்யக் கட்சியினுடைய போக்கினுல் காங்கிரஸ் கட்சிக்குள், தீவிரவாதிகள் ஒன்ருய் இணைந்து, கட்சியின் போக்கைக் கண்டித்தனர்.[1]

சுப்பராயன் அமைச்சரவையில், சுயராஜ்யக் கட்சியைச் சார்ந்த திருவாளர்கள் ஏ. அரங்கநாத முதலியாரும், ஆர். என். ஆரோக்கியசாமி முதலியாரும் அமைச்சர்களாக இருந்தனர். அச்சமயம் இந்தியாவிற்குச் சைமன் கமிஷன் வந்தது. அக்கமிஷனைப் புறக்கணிக்க வேண்டுமென்று காங்கிரஸ் முடிவு செய்தது. சென்னைக்குக் கமிஷன் வந்த பொழுது டாக்டர் சுப்பராயன் அதனைப் புறக்கணிப்பார் என்று சுயராஜ்யக் கட்சி எதிர்பார்த்தது.[2]

ஆனுல், அதற்கு நேர்மாருக டாக்டர் சுப்பராயன், கமிஷனை மகிழ்ச்சியுடன் வரவேற்ருர்.[3] அதனைக் கண்டு காங்கிரஸ் காரர்கள் அதிர்ச்சி அடைந்ததுடன், தாங்கள் செய்த தவறையும் உணர்ந்தார்கள். டாக்டர் சுப்பராயன், கமிஷனை முதலமைச்சர் என்ற முறையில் வரவேற்ருர். மேலும், கமிஷனின் தலைவரான சர். ஜான் சைமனும், சுப்பராயனும் ஆக்ஸ்போர்டின் சட்டக் கல்லூரியில் பயின்ற மாணவர்களில் ஒருவர். வெகு திறமை யுடன் டாக்டர் சுப்பராயனைக் கட்சியிலிருந்து பிரிக்க எண்ணியவர் கட்கு அது ஒரு பெரிய ஏமாற்றத்தைக் கொடுத்தது. சில சமயங்களில் மிதமிஞ்சிய புத்திசாலித்தனம் ஒரு சாபக் கேடாக அமைந்து விடுகின்றது. அவர்கள் கண்டதே காட்சி என்று இருப்பர். டாக்டர் சுப்பராயனின் செயலைக் கண்டிக்கும் முறை யில் ஆரோக்கியசாமி முதலியாரும், அரங்கநாத முதலியாரும் அமைச்சர் பதவியிலிருந்து விலகிக் கொண்டனர்.[3]

இச் சம்பவம் நடந்ததுமே டாக்டர் சுப்பராயன், பனகல் இராஜாவை அணுகி நீதிக்கட்சியின் ஆதரவை வேண்டினுர். அத்துடன் அவருடைய அமைச்சரவையில் திரு. பி. டி. இராஜன் அவர்களையும் சேர்த்துக் கொள்ள அனுமதி கேட்டார். பனகல் இராஜா. கட்சி ஆதரவைத் தருவதாக கூறியதுடன், இராஜன் அவர்களை அமைச்சராகச் சேர்த்துக் கொள்ளவும் சம்மதித்தார், இராஜன் அவர்கள் தம் சம்மதம் கேட்காமல் சம்மதம் தெரிவித்த தற்காக இராஜாவிடம் வருத்தம் தெரிவித்தார். டாக்டர்

1 Ibid
2 Ibid, Page XLIX
3 Ibid

சுப்பராயனுக்கு நீதிக்கட்சி முழு ஆதரவு கொடுத்தது. திரு. டபிள்யூ. பி. ஏ. சவுந்திர பாண்டிய நாடாரை, டாக்டர் சுப்பராயனின் கொறடாவாக இருக்கும்படி இராஜன் அவர்கள் கேட்டுக் கொண்டார். அவரும் அதற்கு இசைந்தார்.

நீதிக்கட்சியின் விருப்பப்படி திரு. எஸ். முத்தையா முதலியாரும், திரு. எம். ஆர். சேதுரத்தின ஐயரும் அமைச்சரவையில் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். பிராமணர் ஒருவரும் இல்லையே என்ற குறையை நீக்குவதற்காக நீதிக்கட்சிக்கு வேண்டியவரான திரு. சேதுரத்தினர் அய்யர் சேர்த்துக் கொள்ளப்பட்டார். நீதிக்கட்சி எல்லா ஜாதியினருக்கும் நீதி அளித்தன என்பதை இந்நடவடிக்கை புலனுக்கும்.

இச்சமயம், கவர்னரின் நிர்வாக சபையில் சில மாறுதல்கள் ஏற்பட்டன. சர். சி. பி. இராமசாமி அய்யர் ஓய்வு பெற்றார். அப்பதவிக்குத் திரு. டி. ஆர். வெங்கட்ராம சாஸ்திரி நியமிக்கப் பட்டார். ஆனல், அதுவரை இராமசாமி அய்யரிடம் இருந்த காவல் துறை, வெங்கட்ராம சாஸ்திரிக்குக் கொடுக்கப்படவில்லை. இதனுல், சாஸ்திரி உடனே பதவியை விட்டு விலகிக் கொண்டார். அவருக்குப் பதிலாகத் திவான்பாதூர் எம். கிருஷ்ண நாயர், சட்ட உறுப்பினராக நியமிக்கப் பட்டார். ஆனல், காவல் துறை அவரிடம் அவரிடம் கொடுக்கப்படவில்லை ; சர். முகமது உஸ்மானிடம் கொடுக்கப் பட்டது.[3]

நீதிக்கட்சியின் உதவியோடு, டாக்டர் சுப்பராயன் அமைத்த அமைச்சரவையை விரும்பாத சுயராஜ்யக் கட்சியினர், நம்பிக்கை இல்லாத் தீர்மானம் ஒன்றைக் கொண்டு வந்தனர். ஆனல், அது தோல்வியுற்றது, சென்னையில் நிலையான அமைச்சரவை ஒன்று அமைக்க முடியாமல், அரசியலமைப்பு முறிந்து, ஆளுநர் ஆட்சி ஏற்பட்டது என்ற பழிச்சொல் ஏற்படக் கூடாது என்றே நீதிக்கட்சி டாக்டர் சுப்பராயனை ஆதரித்தது. அதன் பயனுகக் கட்சிக்குச் செல்வாக்கு ஏற்பட்டது.[1]

டாக்டர் சுப்பராயன் ஆரம்ப காலத்தில் பேச்சுத் திறமையற்றவர். ஆனல், பின்பு, நாட்கள் செல்லச் செல்ல, அவர் ஒரு சிறந்த பாராளுமன்றப் பேச்சாளராகி விட்டார். பாராளு.

[1] Ibid, Page XLIX
[2] Ibid
[3] Ibid

மன்றத்தில் மிக நல்ல முறையில் நடந்து கொள்வார். எதிர்க் கட்சியினருக்கு எவ்வித ஊறும்செய்ய விரும்ப மாட்டார். உரை யாடுவதில் டாக்டர் சுப்பராயன் வல்லவர். விரும்பினுல் யாருட னும் மணிக்கணக்காகப் பேசிக் கொண்டிருப்பார்.[1]

## 8

## நீதிக்கட்சியும், சத்தியமூர்த்தியும்[2]

டாக்டர் சுப்பராயன் சத்தியமூர்த்தியின் நெருங்கிய நண்பர். சுப்பராயன் மந்திரிசபை அமைத்து, நீதிக் கட்சியை எதிர்ப்பதற்குத் துணை புரிந்தவர் சத்திய மூர்த்தியே. 1920ஆம் வருடம் கல்கத்தாவில் நடைபெற்ற விசேடக் காங்கிரஸ் கூட் டத்தில், ஒத்துழையாமை இயக்கத்தை ஒப்புக் கொண்ட சமயம், சத்தியமூர்த்தி சட்டசபைகளை நிராகரிப்பது, ஜனங்களின் எதிரி களுக்கே உபயோகப்படுமென்று வாதாடினுர். ஆனுல், காங்கிரஸ் கட்சியின் கட்டுப்பாட்டிற்கு இணங்கி, தம் ஆர்வத்தைக் கட்டுப் படுத்தி, சட்டசபைக்குப் போகாமல் இருந்தார்.

1923ஆம் வருடத்தில் சுயராஜ்யக் கட்சியை ஆரம்பித்தவுடன், சத்தியமூர்த்தி சென்னைப்பல்கலைக் கழகத்தினரால் தேர்ந்தெடுக் கப்பட்டு, சென்னை சட்டசபை அங்கத்தினரானுர்.[3] அதுவரை அமைதியாக நடந்து வந்த சட்டமன்றம்திரு. சத்தியமூர்த்தியின் வருகையினுல் பெரும் மாறுதலைப் பெற்றது. அமைதி குன்றி, பெரும் விதண்டாவாதம் தலை தூக்கிற்று. ஒத்துழையாமை இயக்கம் அப்பொழுது தீவிரமாக இருந்ததெனினும், தமிழ்ப் பெருமக்கள் தேர்தலில் பங்கு கொள்ளத் தவறவில்லை, முதல் இரண்டு தேர்தல்களிலும் நீதிக்கட்சி வெற்றி பெற்று, அமைச் சரவை அமைத்துத் திறம்பட ஆட்சியை நடத்தியதைக் கண்ட காங்கிரஸ்காரர்கள் கோபமுற்றனர். அதனுல், நீதிக்கட்சியை எதிர்த்துக் கடுமையான பிரசாரத்தைத்தொடங்கினர். திரு.சத்திய மூர்த்தி முழு மூச்சாகப் பிரசாரத்தில் ஈடுபட்டார்.

அப்பொழுது சுயராஜ்யக் கட்சியில் ஐந்து அல்லது ஆறு அங்கத்தினர்களே இருந்தனர். பனகல் இராஜா அவர்கள் இரண்டாம் முறை மந்திரிசபை அமைக்கும்படி நேர்ந்தது

[1] Ibid P. XLIX
[2] Ibid Page LI
[3] 'சத்தியமூர்த்தி''–விவேகசிந்தாமணிப்பிரசுரம்–நிர்வாகஆசிரியர் எஸ். நடராசன் பி ஏ., முதல் பதிப்பு மார்ச் 1944. டாக்டர் சுப்பராயன் எழுதிய பகுதி–பக்கங்கள் 15–19.

அதைஎதிர்த்து, சர்.ஸி.ஆர். ரெட்டி நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டுவந்த சமயத்தில் சத்தியமூர்த்தி அதைஆதரித்து, முதன் முதலாகச் சட்டசபையில் பேசினர்.[1]

அச்சமயம், மந்திரிசபையில், திரு,டி.என். சிவஞானம்பிள்ளை அவர்களைப் புதிதாகச் சேர்த்துக் கொண்டதைக் குறித்து, முதல் மந்திரி அந்நியமனத்தில் எப்படிப்பட்ட பங்குகொண்டார் என்பதை அறியப் பின்வரும் கேள்வி மூலம் ஒரு பெரும் விவாதத்தை ஆரம்பித்தார்.

'இரட்டையாட்சியின் கீழ்,[2] மாகாணங்களில் மாற்றப்பட்ட இலாக்காக்களைப் பொறுத்த வரையில் கவர்னர் பொறுப்பாட்சி பெற்ற நாடுகளில் சட்டரீதியாகப் பணியாற்றி வரும் ஒரு மன்னரின் அதிகாரத்தைட்டும் மபெற்றவராவார். இந்நாடுகளில் மன்னர் எவ்விதக்குற்றமும் செய்யார். (The King can do no wrong) அது போலவே மாகாணங்களிலுள்ள கவர்னரும் மாற்றப்பட்ட இலாக்காக்களைப் பொறுத்த வரையில் எந்தவிதமான குற்றமும செய்வதில்லை. கவர்னருடைய ஒவ்வொருநடவடிக்கையையும், மந்திரிகள் அவருக்குக் கொடுத்த உபதேசத்தைப் பொறுத்தே இருக்கும்.' ஆகவே,முதல் மந்திரி அவரைச் சார்ந்த தலைவர்களையும், கவர்னர் அழைத்தபோது அவருக்கு எந்தவிதமானஉபதேசம் கொடுத்தார், எனக்கேட்டார். அதுபோலவே முன்னாள் மந்திரியாகப் பதவி வகித்த திரு.கே.வி.ரெட்டி அவர்கள் ஏன் மந்திரி சபையில் இருந்து மாற்றப்பட்டார்? என்றும் சத்தியமூர்த்தி வினவினர்.

இத்தருணத்தில் பனகல் ராஜா அவர்கள், இரட்டையாட்சியின் கீழ், கவர்னர் நிலை,[3] ஒரு சட்டத்தால் கட்டுப்படுத்தப்பட்ட மன்னரின் நிலை அல்ல என்றும், அவர் தம் அதிகாரத்தில் முதன் மந்திரியினுடைய அதிகாரத்தையும், முடியாட்சியின் கீழ் அதிகாரத்தையும் மேற்கொண்டுள்ளார் என்றும் கூறினர்.[4] ஆனல், சத்தியமூர்த்தி, இவ்வாதத்தை ஒப்புக் கொள்ளாமல், இந்திய மாகாணங்களில் இரட்டையாட்சியின் கீழ் மாற்றப்பட்ட இலாக்காக்களும், மன்னருடையவும், பிரதம மந்திரியடையவும் அதிகாரத்தைக் கவர்னர் பெறவில்லை என்றும், அவர் குடியாட்சியில்

[1] Ibid
[2] Ibid
[3] See 'Proceedings of the Madras Legislative Council' First Session Vol.XV-Nos. 1- 0, 1923., Motion for an addres to His Excellency the Governor regarding the convribution of the Ministry, Mr. S. Satyamurthi) 27th November 1923
[4] Ibid

தொடர்ந்து பதவியிலிருந்த ஒரு மன்னர் எனவும் குறிப்பிட்டார். இத்தருணம் பனகல் இராஜா அவர்கள், 'மந்திரிசபை செயல்படும்போது கவர்னர் அதனுடன் சேர்ந்து செயல்பட வேண்டும்'' என்று சட்டம் குறிப்பிடுகிறது எனவும், ஆனால், ஆங்கிலேயர் அரசாட்சியில் ஆங்கில மன்னர் மந்திரிகளுடைய செய்கைகளுக்குப் பொறுப்புள்ளராக இல்லை எனறும் குற்றம் சாட்டினர். சத்தியமூர்த்தி இவ்வித விளக்கத்தை ஏற்றுக்கொள்ளாமல், ஒவ்வொரு அங்கத்தினரும், அவரவர் மனம்போல் நியமனங்களை மனதில் கொள்ளலாம் எனக்கூறினர். ஆங்கிலப் பாராளுமன்ற முறைப்படி வக்கள் சபை புதிய தேர்வு பெற்றதும், அச்சபையின் எண்ணத்திற்கேற்ப மந்திரி சபை அமைக்கப்பட்டது; சென்னையில் 1923ஆம் ஆண்டு நடந்த பொதுத் தேர்தலின் பின் சட்டசபையின் கருத்தை அறிந்து பனகல் இராஜா புதிய மத்திரி சபையை நியமித்தாரா? எனச் சத்தியமூர்த்தி வினவினர். அப்படி அவர் நியமனம் செய்தால் இரகசியமாகவும், வெளிப்படையாகவும், அவர் அங்கத்தினர்களின் கருத்தை எந்த அடிப்படையில் அறிந்தார் என்ற பிரச்சினைகளையெல்லாம் எழுப்பினர். உண்மையில் அவர் பிற்காலஅரசியல் வாழ்வு, இக்கேள்விகளுக்கு, அவரே பதிலளிக்கும்படி அமைந்தது.[1]

ஆனல், நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை எதிர்த்து சர். ஏ. இராமசாமி முதலியார்[2] பேசும்போது, புதிதாகச் சட்டசபைக்குள் புகுந்த சுயராஜ்யக் கட்சியினர், 1920ஆம் ஆண்டிலெல்லாம் தாங்கள் சட்டசபைக்குள் பிரவேசிக்கமாட்டோம்'' எனக்கூறியவர்கள் என்றும், அரசாங்கத்தோடு ஒத்துழைக்க மறுப்புக் கூறியவர்கள் என்றும் எடுத்துக் காட்டினர். சுயராஜ்யக் கட்சியின் கொள்கைகள் முக்கோணப் பகிஷ்கரிப்பில் காணக்கிடைக்கின்றது என்பதை விளக்கினர். சட்டசபை, நீதிமன்றம், கல்வி நிலையங்கள் இவைகளைப் பகிஷ்கரிப்பதுதான் அவர்கள் கொள்கை என்பதை எடுத்துக்காட்டினர்.[3] 'ஒத்துழையாமை இயக்கத்திலிருந்த இவர்கள் 1923ஆம் ஆண்டு சுயரர்ஜ்யக் கட்சியினராகச் சட்டசபைக்குள் புகுந்துள்ளனர்; அவர்கள் நீதிமன்றங்களைப் பகிஷ்கரிப்பதிலும் கல்வி நிலையங்களைப் பகிஷ்கரிப்பதிலும் தோல்வி அடைந்தனர். அதுபோல் சட்டசபையைப் பகிஷ்கரிப்பதிலும் தோல்வியுற்று இன்று சட்டசபைக்குள் புகுந்து உள்ளனர். அவர்கள் 1919ஆம் ஆண்டு சீர்திருத்தச் சட்டத்தைப் பகிஷ்

[1] Ibid
[2] Ibid See Sir A. Ramasamy Mudaliar Page
[3] Ibid

கரிப்பதில் முனைந்துள்ளனர்' எனவும் கூறினர். அவர் மேலும் பேசுகையில், 'பல வருடங்கள் கழிந்து, கட்சி அடிப்படையிலுள்ள சூடு தணியும்பொழுது மக்கள் நீதிக்கட்சி செய்துள்ள நன்மைகளைப் பற்றி அறிவர்' என்று பதிலளித்தார்.[1]

டாக்டர் இராமசுவாமி முதலியார் கூறிய உண்மைகள் சத்திய மூர்த்தியின் அரசியல் வாழ்வில் 1926-இல் பிரதிபலித்தது. டாக்டர் சுப்பராயன் மந்திரி சபையைச் சுயராஜ்யக் கட்சி ஆதரித்ததோடு, மந்திரிசபைக்கு எதிராக நீதிக்கட்சி கொண்டு வந்த நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை எதிர்த்தும் பேசினர். ஆனல், அதே மந்திரிசபைக்கு விரோதமாக 1927-ல் நம்பிக்கையில்லாத் தீர்மானத்திற்கு ஓட்டும் அளித்தார்.

என்றாலும், 1923-லிருந்து 1927 வரை சட்டமன்றத்தில் காரசாரமான விவாதங்களுக்குச் சத்திய மூர்த்தி ஒரு காரணமாக இருந்தார். அவர் கேள்விகள் அரசாங்கத்தில் பெரும் புயலை எழுப்பியது.[2] சென்னை ஸ்தல ஸ்தாபனங்களின் சட்டத்திற்காகவும், ஜில்லா போர்டு, நகரசபைத் திருத்தச் சட்டத்திற்காகவும், மிக ஊக்கத்துடன் சத்தியமூர்த்தி உதவியளித்தார். பொதுத் தொகுதிகள் வழியாக எல்லாப் பிரதிநிதிகளும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்றும், அரசாங்கத்தார் இந்த ஸ்தாபனங்களுக்குப் பிரதிநிதிகள் நியமிக்கக் கூடாதென்றும் கொண்டு வந்த அந்தச் சீர்திருத்தச் சட்டம் பூர்த்தியாவதற்கு அவர் வாதாடினர். தேர்தலில் எல்லா வரி கொடுப்பவர்களும் வாக்காளர்களாக இருக்க வேண்டுமென்ற திருத்தத்தையும், அவர் முழு மனதுடன் ஆதரித்தார். அண்ணுமலைப் பல்கலைக்கழகம் நிறுவுவதற்காகக் கொண்டு வந்த சட்டத்திலும் இவருடைய உதவி ஏராளமாக இருந்தது. சென்னைப் பல்கலைக்கழகச் சட்டத் திருத்தத்திலும் அவர் பெரும் பங்கெடுத்துக் கொண்டார். ஆனல், இந்தி மொழியைப் பள்ளிகளில் பாடமாக வைப்பதற்கு மந்திரி சபையுடன் ஒத்துழைத்தார்.[3]

சைமன் கமிஷன் இந்தியா வந்த சமயத்தில் காங்கிரஸ் அங்கத்தினர்கள் மறுபடியும் சட்டசபையை விட்டு வெளியேறியதால், சத்தியமூர்த்தி தம் பிதவியை விட்டார். என்றாலும், சட்ட

1. Ibid
2. Ibid
3. 'சத்தியமூர்த்தி' –விவேக சிந்தாமணிப் பிரசுரம்–நிர்வாக ஆசிரியர், எஸ். நடராஜன், பி.ஏ., முதல் பதிப்பு, மார்ச் 1944. டாக்டர் சுப்பராயன் எழுதிய பகுதி-பக்கம் 15.

சபைகளுக்குச் செல்ல வேண்டுமென்று ஒவ்வொரு காங்கிரஸ் கூட்டத்திலும் அவர் வாதாடினார். அவர் பெரும் முயற்சியினால், தான் மறுபடியும் 1934ஆம் வருடத்தில், காங்கிரஸ் பேரால் அபேட்சகர்கள் மத்திய சட்டசபைக்கு நிற்க வேண்டுமென்ற தீர்மானம் பாட்னாவில் நிறைவேறியது. சத்தியமூர்த்தி சென்னை நகரத்தின் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். அவரை எதிர்த்து நின்றவர் பிற்காலத்தில் மத்திய அரசாங்கத்தில் மெம்பராக இருந்த ஸர். ஏ. இராமசாமி முதலியார் ஆவார்.[1]

அன்று, வாக்காளர் ஏராளமாகப் பிராமணரல்லாதவர்களாக இருந்தபோதிலும், அவர்கள் காங்கிரசையே ஆதரித்தனர். மத்திய சட்டசபையில் காங்கிரஸ் கட்சியின் காரியதரிசியாகவும், பின் அதன் உப தலைவராகவும் பதவி வகித்தார். அவர் கேள்விகள் ஒவ்வொன்றும், நாட்டின் சுதந்திரத்தைப் பற்றியதாகவே இருந்தது. சட்டசபை வழியாகத் தேச சேவை எவ்வாறு செய்யலாம் என்பதற்குச் சத்தியமூர்த்தி ஒரு நல்ல எடுத்துக் காட்டாக விளங்கினார். 1936-37-ல் நடந்த சென்னை சட்டசபை தேர்தல்களில் காங்கிரஸ் ஏராளமான பிரதிநிதிகளை இந்தச் சட்டசபைகளில் பெற்றதென்றால், அதற்கு முக்கிய காரணம் சத்தியமூர்த்தியின் உழைப்புதான். அச் சமயத்தில் அவர் உடல் நலம் குன்றியிருந்தும் அதைக் கவனியாமல் இரவுபகலாகத் தமிழ்நாடு முழுவதிலும் பிரசாரம் செய்து உழைத்தார். மந்திரி சபை காங்கிரஸினால் நிர்வகிக்கப்பட்டதென்றால் அதற்கும் அவருடைய ஆசைதான் காரணம் என்று சொல்லலாம். மகாத்மாகாந்தி சத்தியமூர்த்தியைப் பற்றிக் குறிப்பிடும் போது இரத்தினச் சுருக்கமாகக் காங்கிரஸின் சார்பாக திரு.சத்திய மூர்த்தி ஒருவர் மாத்திரம் சட்டசபைக்குப் போனால் போதுமானது என்றார்.[2]

சத்தியமூர்த்தி நீதிக்கட்சியை பொறுமையுடன் நடத்தி வந்தார். பிராமணரல்லாதவர் முன்னேற்றம் கண்டு உள்ளம் வெதும்பினார். நீதிக்கட்சியைத் தாக்கிப் பேசுவது போலப் பிராமணரல்லாதவர் சமூகத்தையுமே தாக்கிப் பேசி வந்தார். ஆனால், நீதிக்கட்சியும், அவர் சார்ந்த காங்கிரஸ் கட்சியும், சென்னை சரித்திரத்தில் பலமிழந்த போதிலும் பிராமணரல்லாதவர் இயக்கம் இன்னும் வலுவுற்றிருப்பது சரித்திரம் சத்திய மூர்த்திக்கு அளிக்கும் பதிலேயாகும்.[3]

1. Ibid P.17
2. Ibid P.18
3. Ibid P.19

# 9

## பனகல் இராஜாவின் வாழ்க்கை வரலாறு

இரட்டையாட்சியின் கீழ் இருமுறை முதல் மந்திரியாகப் பொறுப்பேற்ற பனகல் இராஜா, 1966-ஆம் ஆண்டு ஜூலை மாதம் 9-ஆம் தேதி காளஸ்தி சமஸ்தானத்தில் ஒரு பெருங் குடியில் பிறந்தார்.[1] அவர்களுடைய மூதாதையர்கள் குண்டூர் ஜில்லாவைச் சேர்ந்த 'பனகல்லூ' என்ற கிராமத்தைச் சார்ந்தவர்கள்; அவர் தங்கள் முன்னோர் பிறப்பிடத்தை விட்டுச் சித்தூரைச் சார்ந்த காளஸ்தியில் வாழ்ந்து வந்தார். காளஸ்தி சமஸ்தானத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டார். தெலுங்கிலும், சம்ஸ்கிருதத்திலும் மிகத் தேர்வு பெற்றவர். திருவல்லிக்கேணியில் உள்ள ஹிந்து உயர்நிலைப் பள்ளியில் 17ஆவது வயதிலிருந்து ஆங்கிலம் கற்றுக் கொண்டார். அவருடைய முயற்சியினால் இரட்டைத் தேர்வுகள் பல முறை பெற்றார். 1888-ஆம் ஆண்டு மாநிலக் கல்லூரியின் மாணவராகச் சேர்ந்து, 1892-ஆம் ஆண்டு இரசாயனத்தைத் தமது முக்கிய பாடமாகக் கொண்டார். உயர்ந்த குடும்பத்தில் தோன்றியவர்களுள், முதல் தடவையாகப் பல்கலைக்கழகத் தேர்வு பெற்றதற்காக இராமநாத ராஜா அவர்கள், அவருக்கு ஒரு தங்கக் கடிகாரம் பரிசளித்தார். அவருக்குக் கவர்னர் மாளிகையில் உத்திரவின்றி எப்போதும் செல்லலாம் என்ற சலுகை அளிக்கப்பட்டது.[2] சென்னைப் பல்கலைக்கழகச் செனேட் சபையின் அங்கத்தினராகவும், திராவிட மொழியைக் கற்கும் பிரிவைப் பரிபாலித்த போர்டின் தலைவராகவும் பணியாற்றினார். தாம் பிறந்த காளஸ்தியில் விவசாயத்தில் அதிக பங்கு கொண்டார். மத்திய சட்டசபைக்கு அங்கத்தினராகத் தேர்வு பெற்று, ஒரு 'திறமையான பேச்சாளர்' என்று பெயர் பெற்றார். வைஸ்ராய் லார்ட் ஹார்டிங்ஸ் அவர்களின் கருத்துக்களுக்குச் செவிசாய்த்து அவரைப் புகழ்ந்தார். விவசாயிகளினுடைய முன்னேற்றத்திற்கும், மாகாண மொழிகளின் முன்னேற்றத்திற்கும் அவர் கூறிய கருத்துக்கள் மிகவும் பாரரட்டப் பட்டன. 1915-ஆம் ஆண்டு, விசாகப் பட்டினத்தில் நடந்த ஆந்திர மகா சபைக் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார்.[3]

அரசியலில் ஸ்ரீ.பி. தியாகராசச் செட்டியார், டாக்டர் டி.எம். நாயர் தலைமையில் ஆரம்பிக்கப்பட்ட நீதிக்கட்சியில் அங்கத்தின

[1] See Article on 'THE RAJAH OF PANAGAL' (1866–1928) in Justice Party Golden Jubilee Sounvenir, 1968, Page No.63-65
[2] Ibid P. 63
[3] Ibid P. 64

ராஞர். 1919-ஆம் ஆண்டு ஆங்கிலப் பாராளுமன்ற இருசபைக் குழுவின் முன்பு சாட்சியம் வழங்கச் சென்றிருந்தார். இரட்டையாட்சியின்கீழ் முதல் தேர்தலில் நீதிக்கட்சி பெரும் பான்மையான ஓட்டுக்களுடன் சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப் பட்டனர். நீதிக்கட்சியின் தலைவர் என்ற முறையில் ஸ்ரீ.பி. தியாகராசச் செட்டியார் அவர்கள், வெலிங்டன்துரையினுல் மந்திரிசபை அமைக்க அழைக்கப் பட்டார். அப்போது, சுப்ப ராயலு ரெட்டியார் அவர்களை மந்திரிசபை அமைக்கச சிபாரிசு செய்தார். ஆகவே, முதல் மந்திரிசபை, சுப்பராயலு ரெட்டியார் அவர்களால் அமைக்கப்பட்டுப் பனகல் இராஜாவும், சர்.கே.வி. ரெட்டி அவர்களும் மற்ற இரு மந்திரிகளாகப் பணியாற்றினுர். சுப்பராயலு ரெட்டியார் அவர்கள் உடல்நிலை சரியில்லாத காரணத்தினுல், பதவியிலிருந்து விலகியபோது, பனகல் இராஜா பதவியில் நியமிக்கப்பட்டு 1926 வரை பதவியிலிருந்தார். இந்து நல அற நிலைய மசோதாவை நிறைவேற்றியது, வகுப்புவாதப் பிரதிநிதிக்கு அடிப்படைக் கல் நாட்டியது, ஸ்தல ஸ்தாபனங் களுக்கு அதிக அதிகாரம் வழங்கியதெல்லாம அவருடைய திறமைகளுக்குச் சான்றுகளாகும்.[1]

ஆனுல், 1926-ஆம் ஆண்டு நீதிச்கட்சி தோற்கடிக்கப்பட்ட போது அவர் சட்டசபையின் எதிர்க்கட்சித் தலைவராகப் பணி யாற்றினுர்.[2] எதிர்க்கட்சித் தலைவராக இருந்தபோது அவருடைய நேர்மையையும், பண்பையும் பெரிதாகப் பாராட் டினர். 1922-ஆம் ஆண்டு இராஜா என்ற பட்டமும், 1926-ஆம் ஆண்டு என்ற பட்டமும் அவருக்கு வழங்கப்பட்டது. பனகல் இராஜா அவர்கள் குதிரைப் பந்தயத்தில் மிகவும் பிரியமுள்ளவர். ஒருசமயம் மந்திரி சபை கூடி ஆலோசித்துக் கொண்டு இருக்கும் போது, குதிரைப் பந்தயத்திற்குத் தாம் போக வேண்டுமென் றும் அதனுல் மந்திரி சபைக் கூட்டத்தை ஒத்தி வைக்க வேண்டு மென்றும் கேட்டுக் கொண்டார். ஆந்திரப் பல்கலைக்கழகத்திற்கு வேண்டி அவர் பெரும் நிதியைக் கொடையாகக் கொடுத்தார்.[3] 1928-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 15-ஆம் தேதி மாபெரும் பணியாற்றிய புகழுடன் காலமானுர்.

[1] Ibid P. 65

[2] 1925-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 29-ம் தேதி சர்.பி. தியாகராசச் செட்டியார் காலமானது நீதிக்கட்சி தோல்வியடைய ஒரு முக்கிய காரணமாகும்.

[3] See Article on 'THE LATE RAJAH OF PANAGAL (1866-1928) in Justice Party Golden Jubilee Souvenir, 1968, Page No. 63-65

# 10

## 1929-ஆம் ஆண்டு நெல்லூரில் நடந்த நீதிக்கட்சி மாநாடு[1]

பனகல் இராஜா மறைந்த பின், நீதிக்கட்சியின் மாநாடு ஒன்று கூடித் தலைவர் ஒருவரைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று சர். பி. டி. இராஜன் கூறினர். கட்சியின் செயற்குழுத் தலைவர் என்ற முறையில் அவர் இக் கருத்தைத் தெரிவித்தார். ஆனால் உறுப்பினர்கள், மாநாடு அவசியமில்லை எனவும், இராஜன் அவர்கள் எப்போதும்போல் கட்சியை நடத்தி வர வேண்டும் எனவும் வேண்டினர், ஆனல், கட்சியின் கொறடா வாகவும், சட்டமன்றத்தில் கட்சியின் தலைவராகவும், தாமே இருப்பது சரியன்று என்று அவர் விளக்கினர். அதனல், சட்ட மன்றக் கட்சியின் தலைவராக, சர்..ஏபி. பாத்ரோ தேர்ந்தெடுக்கப் பட்டார். விரும்பத்தக்கதாகச் சிலர், கட்சியின் தலைமைக்குப் போட்டியிடுவதைத் தவிர்க்கவே, தற்காலிகமான இவ் வேற்பாடு செய்யப் பட்டது. 1929–இல் நெல்லூரில் கட்சி மாநாடு நடை பெற்றது.[2] தலைவர் பதவிக்கு பி. டி. இராஜன் பெயர் முன் மொழியப் பட்டது. எதிர்பரரரத வகையில் டாக்டர் சுப்பராயன் போட்டியிட விரும்பினர். சட்டமன்றத்தில் நீதிக்கட்சி உறுப் பினர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தபடியால், நீதிக்கட்சி உறுப்பினராகவே தங்களைக் கருதிக் கொண்டனர். அவருடைய எண்ணம் தவருக இருப்பினும், கட்சித் தலைமை பதவிக்குப் போட்டி இருப்பதை இராஜன் விரும்பவில்லை. அவர் போடடியிலிருந்து விலகிக்கொள்ளத் தயாராக இருந்தார். பிரதி நிதிகள் இதை விரும்பவில்லை. குறிப்பாகத் தென் மாவட்டங்களைச் சார்ந்தவர்கள் டாக்டர் சுப்பராயன் தலைவராவதை விரும்பவில்லை. அதனல், கருத்து வேற்றுமைகளைத் தவிர்ப்பதற்காகச் சித்தூர் திரு.பி. முனுசாமி நாயுடு தற்காலிகமாகத் தலைவராகத் தேர்ந் தடுக்கப் பட்டார்.[3] ஓராண்டுக் காலத்திற்குள், மற்ருேர் மாநாடு நடத்த வேண்டுமென்றும், அதுவரை அவர் தலைவராக இருந்து வரவேண்டும் என்றும் முடிவு செய்யப் பட்டது. பனகல் இராஜா இறந்தவுடன் ஒரு தலைவரை உடனே தேர்ந் தெடுக்க வேண்டும் என்று வற்புறுத்தியிருந்தால், டாக்டர் சுப்ப

[1] See the Article 'Justice Party Golden Jubilee', 1968 by P.T. Raian, op. cjt. Page LI

[2] Ibid P. Lii

[3] Ibid P.

ராயலும் தலைவர் பதவிக்குப் போட்டியிட விரும்பியிருக்க மாட்டார். முனுசாமியும் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்க மாட்டார். மாநாடுகளுக்கும் அவசியம் ஏற்பட்டிருக்காது.[1]

## 11

## நான்காவது பொதுத் தேர்தலும் நீதிக்கட்சியும்[2]

நான்காவது பொதுத் தேர்தல் 1930-ல் நடைபெற்றது. அதில் நீதிக்கட்சி பெரும்பான்மையான இடங்களில் வெற்றி பெற்றது. கட்சித் தலைவரான முனுசாமி நாயுடு முதலமைச்சராகவும், பி. டி. இராஜன், திரு.பி. குமாரசாமி ரெட்டியாரும் சக அமைச்சர்களாகவும் பதவி ஏற்றனர். தங்களுக்கு அமைச்சர் பதவி கிடைக்கவில்லையே யென்று கட்சியில் பலரும் கோப முற்றனர். நெல்லூர் மாநாட்டில் முடிவு செய்தபடி, ஆண்டு இறுதிக்குள் மாநாடு கூட்டவில்லையேயென்று முனுசாமி நாயுடுவைப் பலரும் குறை கூறினர்.[3] அதனால் தஞ்சாவூரில் மாநாடு கூடியபொழுது, தலைவர் தேர்வில் குழப்பமும், வாக்கு வாதங்களும் அதிகமாக இருந்தன. ஏகமனதாக ஒரு தலைவரைத் தேர்ந்தெடுக்க முடியவில்லை. பல இடையூறுகளுக்கிடையே போப்லி இராஜா தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். தஞ்சை மாநாடு கட்சிக்கு ஓர் இழிவைத் தேடித் தந்தது என்று பலர் கருதினர். தென்மாவட்ட உறுப்பினர்களின் வற்புறுத்தலுக்காக இராஜன் அமைச்சராகப் பணியாற்றினர்.

1932-ஆம் ஆண்டு தலைவராகப் போப்பிலி இராஜா தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் ஆளுநர் அவரை அழைத்து அமைச்சரவை அமைக்கக் கோரினர்.[4] இராஜனும், குமாரசாமி ரெட்டியாரும் சக அமைச்சர்களாக இருந்து வந்தனர். முதலமைச்சர் போப்பிலி இராஜாவிடம் நகராட்சி, அறநிலையம், மருத்துவம், சுகாதாரம் என்ற இலாக்காக்களும், குமாரசாமி ரெட்டியாரிடம் கல்வி, தொழில் ஆகிய துறைகளும், இராஜனிடம் கூட்டுறவு, வேளாண்மை, கால்நடைப் பராமரிப்பு, பதிவுத்துறை பொதுப்பணி முதலிய இலாக்காக்களும் ஒப்படைக்கப் பட்டன. இவைகளே, அமைச்சரவையின் பொறுப்பிலிருந்தஇலாக்காக்கள்.

[1] Ibid

[2] Ibid

[3] Ibid, Page Lii

[4] Ibid ,,

## 12

## 1932-ஆம் ஆண்டு பிராமணர்களுக்கு நீதிக்கட்சியில் அனுமதியும், 1934-ஆம் ஆண்டு பொதுத் தேர்தலும்[1]

1932-ஆம் ஆண்டிலிருந்து நீதிக்கட்சி பயமின்றி அரசியல் செயலாற்றத் துணிந்தது. ஏனெனில், தேர்கலில், அரசியல் அடிப்படையில் பிராமணர் அல்லாதவர்கள் பிராமணர்களைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை. ஆகவே, தமது அங்கத்தினர் பதவியைப் பிராமணர்களுக்குக் கூடத் திறந்து விடப்பட்டதாக அறிவித்தது. ஆனால், நீதிக்கட்சியினுடைய எல்லா ஹேஷ்யங்களும் முற்றுப் பெறவில்லை. 1934ஆம் ஆண்டு நடந்த பொதுத் தேர்தலில் நீதிக்கட்சி பரிபூரணமாகத் தோற்கடிக்கப் பட்டது ஏனெனில், இக் காலத்தில் காங்கிரஸ் சட்டமன்றங்களுக்குச் செல்லக் கூடாது என்ற எதிர்ப்பை நீக்கி விட்டது. என்றாலும், காங்கிரஸ் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வில்லை. ஆகவே போப்பிலி இராஜாவின் தலைமையில் மீண்டும் மந்திரிசபை உருவாகியது. ஆனால், நீதிக்கட்சியில் பெரும் பிளவுகள் ஏற்பட்டன. கட்சி பலமிழந்து காணப்பட்டது. அதுபோலவே, நீதிக்கட்சி ஒரு தீவிரமான தேசியக் கொள்கையைக் கடைப்பிடிக்காததும், கட்சி குறுகிய காலத்தில் பலஹீனமடையக் காரணமாக இருந்தது.

## 13

## 1937இல் நடந்த பொதுத் தேர்தல்[2]

1937ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில், அன்றுவரை மாவட்ட வாரியாகப் பிரிக்கப் பட்டிருந்த தொகுதிகள், சிறு சிறு தொகுதிகளாகப் பிரிக்கப் பட்டன. பி. டி. இராஜன் பெரியகுளம் தொகுதியில் போட்டியிட்டார். வாக்காளர்கள் அவரைப் போட்டி யிட வேண்டாமென்றனர். காரணம், காங்கிரஸ்காரர்கள் வாக்காளர்களிடம் சில வாக்குறுதிகள் கொடுத்ததாகக் கூறப் பட்டது. காங்கிரஸ்காரர்கள் பதவிக்கு வந்தால், நிலவரி ரத்து செய்வதாகவும், கட்டணங்கள் இல்லாமல் காடுகளில் விறகு வெட்டிக் கொள்ள உரிமை வழங்குவதாகவும், 'தேவையான உரங்களையும் காடுகளில் சேகரிக்க உரிமை வழங்குவதாகவும் வாக்களித்திருந்தனர். ஆகவே, வாக்காளர்கள் அவரைச் சுயேச்சையாகப் போட்டியிட வேண்டினர். சட்டமன்றத்தில்

[1] Ibid
[2] Ibid Page Liii

ஓர் இடத்திற்காகத் தாம் கட்சியை விட்டு விலகப் போவதில்லை என பி. டி. இராஜன் மறுத்து விட்டார். இத் தேர்தலில் வர்ண வாக்குப் பெட்டி முறை கையாளப் பட்டது. காங்கிரசிற்கு மஞ்சள் நிறப்பெட்டியும், நீதிக்கட்சிக்குச் சிகப்பு நிறப்பெட்டியும் ஒதுக்கப் பட்டிருந்தன. காங்கிரஸ் கட்சியினர், தங்கள் பிரசாரத்தில் 'மஞ்சள் பெட்டி மாங்கல்யப் பெட்டி, அதற்கே உங்கள் ஓட்டைப் போடுங்கள்; சிகப்புப் பெட்கு அபாயப் பெட்டி ; அதற்கு உங்கள் ஓட்டைப் போடாதீர்கள்' எனப் பிரசாரம் செய்தனர்.[1]

தேர்தலில் வெற்றி பெற்ற காங்கிரஸ் கட்சி பதவியேற்றுக் கொள்வதைப் பற்றி ஒரு முடிவிற்கு வரவில்லை. அதனால், தற்காலிகமாகச் சர். கே. வி. ரெட்டியின் தலைமையில் ஓர் அமைச்சரவை அமைக்கப்பட்டது. பின்னர், காங்கிரஸ் பதவி யேற்க முடிவு செய்ததும், இராஜாஜி தலைமையில் அமைச்சரவை அமைக்கப்பட்டது. அவர் பள்ளிகளில் இந்தியைக் கட்டாயப் பாடமாக்கினர். அதனை, வன்மையாகக் கண்டித்து நீதிக்கட்சி பெரும் கிளர்ச்சியைத் தொடங்கிற்று. சுமார் 1000 பேர்கள் கைது செய்யப் பட்டனர். திரு. ஈ. வே. ராவும் சிறைசென்றார்.[2]

இராஜாஜி, அமைச்சரவையில் வெகு நாட்கள் இருக்க வில்லை. இரண்டாம் உலகப் போர் தொடங்கியதும் அவர் பதவியை விட்டு விலகினர். அமைச்சரவைக்குப் பதிலாக, ஆலோசகர் குழு ஒன்று ஆட்சிப் பொறுப்பை யேற்றது. இராஜாஜி செயல்படுத்திய கட்டாயப் பாடத்திட்டத்தை ஆலோசகர் குழு கைவிட்டது.

## 14

## 1937ஆம் ஆண்டுப் பொதுத்தேர்தலின்பின் பிராமணரல்லாதார் இயக்கத்தில் ஏற்பட்ட மாறுதல்கள்[3]

1926ஆம் ஆண்டு நீதிக்கட்சி இரண்டாவது பொதுத் தேர்தலில் தோல்வியுற்றதும், பெரியார் அவர்கள், 'சுயமரியாதை இயக்கத்தை' ஆரம்பித்து வைத்தார். 1929ஆம் ஆண்டு பிராமணரல்லாதவர்களுடைய சமூகத்தில் சமுதாய முன்னேற்றம் பெருமளவில் மேலும் தேவை என்றும், சுயமரியாதையோடும்,

[1] Ibid

[2] Ibid Page Li

[3] கிந்தனரின் 'நவரச அண்ணு' 15-9-71 இதழிலுள்ள ''அண்ணுவின் வாழ்க் கைத் திருப்பங்கள்'', பக்கம் 34.

பகுத்தறிவோடும் அவர்கள் செயலாற்றச், சமுதாய சீர்திருத்தம் அவசியம் என்றும் குறிப்பிட்டார். 1929ஆம் ஆண்டு, முதல் சுயமரியாதை மாநாடு செங்கற்பட்டில் நடந்தது.[1] இம் மாநாட்டிற்கு டபிள்யூ. பி. எஸ். சௌந்தர பாண்டியன் தலைமை தாங்கினர். சுயமரியாதை இயக்கம், பிராமணரல்லாதவர்கள் மேலும் சமுதாய விழிப்படையவும், மூட நம்பிக்கைகளிலிருந்து அவர்கள் விடுபடவும், சமுதாய அடிப்படையிலுள்ள பொருமை களிலிருந்து அவர்கள் விடுதலை பெறவும், இந்த முன்னேற்றங் களினுல் அரசியல் முன்னேற்றம் அடையவும் பெரிதும் பாடு பட்டது. ஈ. வே. இராமசாமி அவர்கள், தென்னிந்திய சரித்திரத் தில் தோன்றிய ஒரு மாபெரும் சமுதாயப் புரட்சி வீரர். நீதிக் கட்சியினுடைய கொள்கைகளை அவர் மேலும் விஸ்தாரமாக மக்களிடையே பரப்பி வந்தார். இராஜாஜி மந்திரி சபையின் போது ஏற்பட்ட இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் பெரியார் பெரும் புகழைத் தேடிக் கொண்டார். 1937ஆம் ஆண்டு நீதிக் கட்சிக்குக் கிடைத்த தோல்விக்குக் காரணம் பொது மக்களுடன் அதிக தொடர்பு கொள்ளாததேயாகும் என்று பொப்பிலி இராஜா நினைத்தார். மக்களுடன் தொடர்பு கொள்வதற்காகத் திரு. ஈ. வே. இராமசாமி நாயக்கரை அழைத்துத் 'திராவிடன்' செய்தித்தாளையும், அச்சுக் கூடத்தையும் அவரிடம் ஒப்படைத் தார்.[2]

1938ல் சென்னையில் நீதிக்கட்சி மாநாடு நடைபெற்றது. அதற்கு ஈ. வே. ரா. தலைமை தாங்கியிருக்க வேண்டும். ஆனல், அச்சமயம் பெரியார் சிறையிலிருந்தார். அதனல், அவருடைய தலைமையுரை மட்டும் மாநாட்டில் படிக்கப்பட்டது. 1940ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 24ஆம் தேதி நீதிக்கட்சியின் மாநில மாநாடு திருவாரூரில் கூடிற்று.[3] பெரியார் இம்மாநாட்டிற்குத் தலைமை தாங்கினர். தமிழ்நாடு தமிழருக்கே எனும் இலட்சியம், திராவிட நாடு திராவிடருக்கே எனும் இலட்சியமாகத் தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. திராவிடர்களுடைய கலை, நாகரிகம், பொருளாதாரம் ஆகியவை முன்னேறப், பாதுகாக்கப்பட, திராவிடர்களின் அகமாகிய சென்னை மாநிலம், இந்திய அமைச் சரின் மேற்பார்வையின் கீழ் ஒரு தனி நாடாகப் பிரிக்கப்பட வேண்டுமென்பதுதான் அத்தீர்மானம். இதை வழிமொழிந்து

[1] Ibid Page 35

[2] Refer the Article 'Justice Party Goldeu Jubilee', by P. T. Rajan, vide op. cit. page Liv

[3] அண்ணவின் வாழ்க்கைத் திருப்பங்கள் – சிந்தனர், op. cit. page 37

அண்ணு ஆற்றிய சொற்பொழிவு, மாபெரும் சரித்திர விளக்க மாகத் திகழ்ந்தது.

1944ஆம் ஆண்டு சேலத்தில் நடந்த நீதிக்கட்சி மாநாட்டில் பெரியாரின் தலைமைக்கு எதிர்ப்பு கிளம்பியது. அரும்பாடுபட்டுப் பெரியாரின் தலைமையைக் காப்பாற்றினர். பட்டம், பதவித்துறப்பு, ஜாதிப் பெயர்களை விட்டொழிப்பது, நீதிக்கட்சி எனும் பெயரைத் 'திராவிடக்கழகம்' என்று மாற்றுவது ஆகிய தீர்மானங்களைக் கொண்டு வந்தார். இதற்குத் 'அண்ணுதுரை தீர்மானம்' என்று மாநாட்டில் அழைக்கப் பட்டது. இத் தீர்மானத்தை விரும்பாத பலர் மாநாட்டிலிருந்து வெளி நடப்பு செய்தனர்.[1] இவர்களில், அநேகர் நீதிக்கட்சியைச் சார்ந்தவர்கள். இவர்கள், 1945ல் சென்னையில் ஒரு மாநாடு கூட்டி, நீதிக்கட்சிக்கு பி. டி. இராஜன் அவர்களைத் தேர்ந்தெடுத்தனர். ஆனல், திராவிடக் கழகம் ஓங்கி வளர வளர, நீதிக்கட்சி சென்னையில் இல்லாமலேயே ஆகி விட்டது. பிராமணரல்லாதவர்கள் இயக்கமாமத் திராவிடக் கழகம் சீரிய முறையில் பணியாற்றியது.

1946ல் மதுரையில் கருஞ்சட்டைத் தொண்டர் படை மாநாடு, தந்தை பெரியார் தலைமையில் துவங்கியது.[2] அண்ணு மாநாட்டைத் திறந்து வைத்தார். 1946ஆம் ஆண்டு நடைபெற்ற பொதுத் தேர்தலில் நீதிக்கட்சி பங்கு கொள்ளவில்லை. ஆனல், 1952ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில் நீதிக் கட்சி போட்டியிட்டு, பி. டி. இராஜன் மட்டுமே கட்சியின் சார்பாக வெற்றி பெற்ருர்.

1952ஆம் ஆண்டு திராவிடக் கழகத்திற்குள் பிரிவினை ஏற்பட்டு, அண்ணுவின் தலைமையில் பெரும்பான்மையோர் திராவிடக் கழகத்திலிருந்து வெளியேறித் திராவிட முன்னேற்றக் கழகத்தை அமைத்தனர். திராவிடக் கழகம் பெரியாரின் தலைமையில் தொடர்ந்து பணியாற்றியது.[3]

1957ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில் முதல் தடவையாகத் திராவிட முன்னேற்றக் கழகம் கலந்து கொண்டது. 1962ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில் திராவிட முன்னேற்றக் கழகம்

[1] Refer the Article 'Jusiice Party Golden Jubilee', by P. T. Rajan' vide op. cit. page LIV
[2] அண்ணுவின் வாழ்க்கைத் திருப்பங்கள் – கிந்தனர், op. cit. 39
[3] Refer the Article 'Justice Party Golden Jubillee', by P. T. Rajan, vide op. cit., page Lv

52 இடங்களைக் கைப்பற்றியது. 1967ஆம் ஆண்டு நடந்த பொதுத் தேர்தலில் 150 இடங்களைப் பெற்றது. திரு. அண்ணாத்துரை தலைமையில் 9 அமைச்சர்கள் கொண்ட திராவிட முன்னேற்றக் கழக அமைச்சரவை பதவியேற்றது.[1] 1968ஆம் ஆண்டு அண்ணாவின் மறைவின் பின்பு திரு. மு. கருணாநிதி முதன்மந்திரி பதவியேற்றார். 1971ஆம் ஆண்டு பொதுத் தேர்தலில் 185 இடங்களைப் பெற்று, மீண்டும் தி. மு. க.வைச் சேர்ந்த திரு. மு. கருணாநிதியே மந்திரிசபை அமைத்தார். அண்ணாவின் மந்திரிசபையைப் போன்றே, கருணாநிதியின் மந்திரிசபையும், பிராமணரல்லாதவர்களைக் கொண்ட மந்திரி சபையாகும்.[2] கருணாநிதி மந்திரிசபையில் பின் தங்கிய வகுப்பினர்களின் நலனைக் கவனிக்க, ஒரு தனி இலாக்கா (Department of Backward Classes) அமைக்கப்பட்டது, சென்னை சரித்திரத்தில் முக்கியத்துவம் வாய்ந்த ஒரு நடவடிக்கையாகும்.

## 14

## சென்னையில் இரட்டையாட்சி வெற்றி பெற்றதேன்?[3]

சென்னையில் மட்டும் இரட்டையாட்சி வெற்றிகரமாக நடப்பதற்குக் காரணம், முக்கியமாக அன்றைய சென்னை மாகாண மக்கள் ஆங்கிலப் பாராளுமன்ற ஆட்சி முறையைப் பெரிதும் விரும்பினார்கள் என்பதே. ஆங்கிலேயர்கள் தங்கள் ஆட்சி முறை வளர்ச்சி அடைவதற்குத் தக்கவாறு தங்கள் உள்ளங்களையும் வளர்த்துக் கொண்டனர். நீண்டகாலப் பயிற்சியின் பலனாகவே ஆங்கில மக்கள் அரசாங்கத்தைச் சீராக நடத்துவதற்கேற்ற சூழ்நிலையை உருவாக்கிக் கொண்டனர். சென்னை மக்கள் ஆங்கிலேயருடைய அரசியல் முறையை மட்டுமே உருவாக்கிக் கொண்டனர். ஆனால், அவர்கள் நாட்டிலுள்ள சூழ்நிலை இந்தியாவில் இன்னும் அமையவில்லை. இதனால்தான் பொறுப்புள்ள ஆட்சி முறையை ஆங்கிலேயர்களைப்போல் நடத்த முடியவில்லை என்றாலும் இந்தியாவின் மற்றப் பகுதிகளைப்போல் இல்லாமல் சென்னையில் மட்டும் இதற்கு விதிவிலக்கு இருந்தது. இதன் முக்கியக் காரணம் ஆங்கிலேயர்களுக்கும், தமிழர்களுக்கும் அடிப்படையில் ஒரு பரந்த மனப்பான்மை இருந்துதான். ஆங்கிலேயர்கள் எவ்வாறு ஒரு கப்பல் ஓட்டும் இனத்தைச் சார்ந்தவர்களோ, அதுபோலவே பண்டைத் தமிழ்

[1] Ibid Page Lxiii (See also the List of Ministers Vide Appendix P. 11)
[2] See the List of Ministers Vide Appendix PP 13-14
[3] Refer the Article Justice Party Golden Jubilee by P. T. Rajan, vide op. cit. PLxi

மக்களும் 'திரைகடல் ஓடியும் திரவியம் தேடு' என்ற இலக்கணத்திற்கு ஒப்பாக நடந்தனர்.[1] கிழக்கிந்திய நாடுகளோடும், மேற்கத்திய ரோம் நாடு வரையிலும் கடல் கடந்து வாணிபம் செய்தார்கள். இதனால், ஒரு மாலுமிக்கு ஏற்பட்ட குணங்கள் ஆங்கிலேயருக்கும், தமிழருக்கும் இருந்தது எனத் திறம்படக் கூறலாம். மேலும், சென்னை மாகாணத்தின் சமுதாய அமைப்பிலும் இன அடிப்படையிலும் ஓங்கி வளர்கின்ற ஓர் அரசியல் அமைப்பு மட்டுமே நாடிச் செல்லக் காரணம் இருந்தது. சென்னையில், இரட்டையாட்சியின் காலத்தில், இன்றும் நாம் மதிப்புடன் திரும்பிப் பார்த்துப் பெருமைப்படும் பாராளுமன்ற முறைகள், எல்லாத்தரப்பட்ட மக்கள் வகுப்பினர்களுக்கும் தனி உதவியளித்தது எனக் கூறலாம்.[2] தர்ம சிந்தனையும், சமாதானப் போக்கும், அரசியல் நிதானமும், மற்றவர்கள் கருத்தைக்கேட்டு, ஆராய்ந்து, அறிந்து திறம்பட செயல்படும் தமிழ் மக்களுடைய பண்பாடும்தான், சென்னையில் இரட்டையாட்சி வெற்றி பெறக் காரணம் என அறியக் கிடைக்கின்றது. சமுதாயத்திலுள்ள புரட்சிதான் அரசியல் புரட்சிக்கு முன்னோடி எனவும், சமுதாயச் சீர்திருத்தமே அரசியல் நல்வாழ்வுக்கு வழி வகுக்கும் எனவும் இரட்டையாட்சியின் சரித்திரத்தில் நாம் காண்கின்றோம்.

[1] Ibid Page Lxi
[2] Ibid

# 7. நீதிக்கட்சியின் அரசியல்-நிர்வாக சாதனைகள்

இந்தியத் தேசியக் காங்கிரசின் தலைவராகவும், நீதிக் கட்சியின் ஆரம்ப காலத்தில் ஒரு சிந்தனையாளராகவும், திகழ்ந்த சர். சி. சங்கரன் நாயர் அவர்கள் 1897ஆம் ஆண்டு அகில இந்தியக் காங்கிரஸ் கூட்டத்தில், தம்முடைய தலைமை உரையில் பின்வருமாறு கூறினர் :-[1] ‘படிப்பற்றப் பாமர மக்கள் ஆங்கிலேயர்களின் அதிகாரம் கிழக்கில் குறைபடும்போது ஏற்படும் அபாயத்தை ஒரு நேரமும் மறைந்திருக்க மாட்டார்கள்; இங்கிலாந்தையும், இந்தியாவையும் பிணைக்கும் ஒரு நம்பிக்கை யாதெனின், இங்கிலாந்தின் உதவியினலும், வழி காட்டிலினலும் ஒற்றுமை அடைந்து, தேச சுதந்திரம் அடைவோம்’. இக் கருத்தை 1908 ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழகத்தில் நடந்த பட்டமளிப்பு விழாவில், ‘இந்தியாவின் அரசியல் அந்தஸ்தை ஆங்கிலேயர்களிடமிருந்து பிரிப்பதால் மட்டும், சில அரசியல் வாதிகள் கருதுவது போல, மாற்றியமைத்த ஒருமைப்பட்ட நாடாக ஆக்கிவிட முடியாது’. எனக் கூறினர். 1916 ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்ட தென்னிந்திய மக்கள் பிரதிநிதி சபை இக்கருத்துக்களைப் பிராமணரல்லாத மக்களுக்கு எடுத்துக் கூறி, அவர்களிடம் அரசியல் விழிப்பு ஏற்பட உதவி செய்தது. இதைத் தொடர்ந்து 1916 ஆம் ஆண்டு வெளியிட்ட பிரசித்த பத்திரிகை பிராமணரல்லாதவர்களிடையே அரசியல் விழிப்பை ஏற்படுத்தியது.[2]

ஆனல், காந்திஜியின் தலைமையில், இந்தியத் தேசியக் காங்கிரஸ் 1919 ஆம் ஆண்டு அமுல் செய்த சீர்திருத்தத்தை மறுத்ததுமல்லாமல், அச் சீர்திருத்தங்களை நடைமுறையில் ஆக்குவதற்கு எவ்வித ஒத்துழைப்பும் தர முடியாத என மறுத்து

[1] Refer the Article ‘Dyarchy in Madras’ - Dr. S. Saraswathi, M. A., Phd., vide Justice Party Golden, Souvenir 1961 Page No. 20

[2] Ibid

விட்டது. அதனால், சி, ஆர். தாஸ் அவர்கள் தலைமையிலுள்ள ஒரு பெரும் காங்கிரஸ் பிரிவு, 1923 ஆம் ஆண்டு ஸ்தாபிக்கப் பட்டுத் தேர்தல்களைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்று விடுத்துள்ள ஒத்துழையாமை இயக்கத்தினரின் கூக்குரலுக்குச் செவி சாய்க்காமல், இரட்டையாட்சி, நடைமுறையில் கொண்டு வரும் அமைப்பல்ல என்று புலனுக்க சட்டசபைக்குத் தேர்தல் பெற்று, பின் சட்டசபைக்குள்ளேயே பெரும் எதிர்ப்புக்கள் காண்பித்து, அரசியல் நிர்வாகத்தை உள்ளிருந்தே உடைக்க வேண்டுமெனக் கருதினர். ஒத்துழையாமை இயக்கத்தை நடத்தியவர்களுக்கு 'மாற்ற மற்றவர்கள்' (Nochangers) என மற்ருெரு பெயர் வழங்கப்பட்டது.[1] சட்டசபைக்குள் புகுந்து பணியாற்றிய காங்கிரஸ் வாதிகள் 'சுயராஜ்யவாதிகள்' (Swarajists) எனப் பெயர் பெற்றனர். பின் கூறிய இவர்கள் அநேக மாகாணங்களில் அரசியல் நிர்வாகத்தை உடைத்தனர். ஆனல், சென்னையில் மட்டும் இரட்டையாட்சியின் இயந்திரம் பழுதுபடவில்லை. சுமார் 17 ஆண்டுகள் மக்கள் நல்ல அரசியல் கல்வியும், பயிற்சியும் பெற்றனர்.[2]

அரசியல் முறைகளைப் பாராளுமன்ற அடிப்படையில் நடத்துவதற்கு வேண்டிய சட்டங்களும், பழக்க வழக்கங்களும் உருவாவதற்கும், மந்திரிசபைகள் அமைத்துப் பணியாற்ற அனுபவமும், பாராளுமன்ற விவாதங்களில் திறமையுடன் பங்கு கொள்ளும் அனுபவமும், தேர்தல்களில் போட்டியிடவும், தேர்தல் முறைகளை அறிந்து கொள்ளவும், அரசியல் கட்சிகள் துணிந்து தேர்தல்களில் பங்கு கொள்ளவும் பெரும் வாய்ப்பு ஏற்பட்டது. நிர்வாகம் தகராறின்றி அமைதியாக நடத்தப்பட்டதின் காரணமாக, ஜனநாயகக் கருத்துக்கள் நிலவுவதற்கேற்ப நிலைத்த அரசாங்கம் நிறுவ வாய்ப்பிருந்தது. சென்னை அன்றும், இன்றும் ஒரு நல்ல நிர்வாகத்தினுல் நடத்தப்படுகின்றது என்ற மரபு, இரட்டையரட்சியின் கீழ் ஏற்பட்ட அரசியல் கல்வியும், அனுபவமும் காரணம் எனக்கூறுவர்.[3] 1950ஆம் ஆண்டு வயது வந்தவர்களுக்கெல்லாம் ஓட்டளிக்கப்பட்டபோது, சென்னை மாகாணம் இதற்குத் தயாராக இருந்தது. ஏனெனில், அதற்கு முக்கிய காரணம் மக்கள் 1919ஆம் ஆண்டு சீர்திருத்தத்தின் கீழும், 1935ஆம் ஆண்டு சட்டத்தின் அடிப்படையிலும் ஏற்கெனவே, அரசியல் அனுபவம் பெற்றிருந்தனர் என்பதேயாகும்.

1. Ibid P.20
2. Ibid
3. Ibid

பல மொழி பேசும் ஒரு பெரிய மாகாணமாகச் சென்னை இருந்த போதிலும், ஒவ்வொரு பகுதியும், பிற்காலத்தில் சமாதானமாகப் பிரிந்து போக, மக்கள் வேண்டுமளவு அரசியல் ஞானம் இக் காலத்தில் பெற்றதேயாகும்.[1]

சென்னை சட்டசபையின் வாதப் பிரதிவாதங்களைப் பார்க்க வந்தபலரும், சென்னை சட்டசபையில் நடந்த வாதப்பிரதி வாதங் களின் உயர்வையும், தெளிவையும் பாராட்டினர். பெருவாரியான அங்கத்தினர்கள் ஆங்கிலத்தில் சொற்பொழிவாற்றுவதில் மிகவும் தேர்ச்சி பெற்றவர்கள். 1919ஆம் ஆண்டுக்குப் பின் சென்னை யில் பாராளுமன்ற நிறுவனங்களின் பணிகள், மக்களுக்குத் தெளி வாகத் தெரியவந்தன. பாராளுமன்ற நிறுவனங்களையும், பாரளு மன்ற உரிமைகளையும் பாதுகாப்பதில் சென்னை சட்டசபை அங்கத்தினர்கள் முதன்மைபெற்றனர். ஆனல், பாராளுமன்றப் பாணி, சில சமயங்களில் காரசாரமாக இருப்பதில்லை. பாராளு மன்ற அரசாங்கம் சென்னை மக்கள் மனதில ஆழமாக வேரூன்றியது.[2]

1927ஆம் ஆண்டு சென்னை மாகாணத்தில் இரட்டையாட்சி செயல்படும் முறையைக் குறித்து இத்திய அரசாங்கத்திற்கு அனுப்பிய ஒரு தணிக்கையில், சென்னை சட்டசபையை வேலை செய்யும் முறைகளைப் பார்த்த பலரும், அங்கு நடக்கும் வாதப் பிரதிவாதங்களையும், மேன்மை தங்கிய பாராளுமன்ற முறை களையும் புகழ்ந்துள்ளார்கள் எனக் கூறியது. சட்டசபையில் பேசும் அங்கத்தினர்களில் அநேகம்பேர் ஆங்கிலத்தில் தெள்ளத் தெளிவாகப் பேசினர்கள் எனவும், அதில் ஒரு சிலர் ஆங்கிலேயர் கள் கூட வியக்குமளவில் சீரிய முறையில் உரை நிகழ்த்தினர்கள் எனவும் குறிப்பிட்டது. அதுபோலவே பாராளுமன்ற நிறு வனங்கள் மக்களிடையே நாளடைவில் செல்வாக்குப் பெற்று வருகின்றன என்றும், சட்டசபையை ஒரு புதிய நிர்வாகம் என எண்ணி, அது பணியாற்றும் முறையைப் பார்த்துத் தாங்களும் அதைப் பின் தொடர்ந்தார்கள் எனவும் கூறியது.[3] சுருங்கக் கூறின், சென்னை சட்டமன்றம் பாராளுமன்ற நியதிகளையும், கௌரவமான போக்கையும், பாராளுமன்ற உரிமைகளையும், நிலை நாட்டியுள்ளனர் எனத் தணிக்கையில் குறிப்பிடப் பட்டிருந்தது. பாராளுமன்றத்தில் சொற்பொழிவு, பாராளுமன்ற விதிக்கு இலக் கணமாக அமைந்துள்ளதாகவும், பாராளுமன்ற விதிகள் சில

[1] Ibid
[1] Ibid P. 20
[2] Ibid P .24

நேரங்களில் அதிகமாகக் கையாளப்படுவதாகவும் குறிப்பிட்டது. பாராளுமன்ற அரசாங்கம் சென்னை மக்களிடையே உடனடியாக நிர்வாக உணர்ச்சியை உண்டாக்கியுள்ளது எனவும் குறிப்பிட்டது.[1]

## 2

## நீதிக்கட்சியின் செயலாற்றலும், சென்னையில் ஏற்பட்ட ஜனநாயகப் புரட்சியும்[2]

இரட்டையாட்சியின்கீழ் மக்களும் திருப்தி அடைந்தனர். தேர்தல்களில் கொடுத்த வாக்கு மூலங்கள் செவ்வனே நடைமுறையில் ஆக்கப்பட்டன. இவ்வாறு கொடுக்கப்பட்ட வாக்கு மூலங்கள் நிறைவேற்றப்பட்டுக கல்வியும், ஸ்தலஸ்தாபனஉரிமைகளும் மேலும் விஸ்தரிக்கப்பட்டது. சென்னைப் பல்கலைக்கழக, சட்டத்தின்அடிப்படையில், ஸ்தல ஸ்தாபனங்களும், நகராண்மைக் கழகங்களும், பல்கலைக்கழகத்தை நிர்வகிக்கும் செனட் சபைக்குப் பிரதிநிதிகளை அனுப்ப வாய்ப்பு ஏற்பட்டது. இப்பிரதிநிதிகளின் தேர்வு பல்கலைக்கழகத்தின் பட்டதாரிகளுக்கு 1923 ஆம் ஆண்டு அளிக்கப்பட்டிருந்தது. இந்நடவடிக்கை, உயர்தரக் கல்வியை, ஜனநாயக மயமாக்க உதவியது. அதுபோல 1922ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட வகுப்புவாத அரசாங்க ஆணை[3] ஒவ்வொரு வகுப்பினருக்கும் பொது நிறுவனங்களில், சுற்றுதல் முறையில் அளிக்கப்பட்டு, அது ஜனநாயக அடிப்படையில். சமுதாய, அரசியல் முன்னேற்றத்திற்கேற்பவும், வயது வந்தோர்கள் ஓட்டளிக்கவும், ஜனநாயகக் கொள்கை வளர்வதற்கும் முன்னோடியாக இருந்தது. ஸ்தல ஸ்தாபனங்களுக்குக் கொடுக்கப்பட்ட உரிமைகள், பொதுமக்கள் அரசாங்கத்தின் நிர்வாகங்களை நடத்துவதற்குப் பயிற்சி அளித்தன. இந்தியாவிலுள்ள மற்ற மாகாணங்களில் ஜாதி மதங்களுக்கிடையே ஏற்பட்டக் கெடுபிடிகள், சென்னை மாகாணத்தில், சுதந்திரத்திற்குப் பின்னும், இருந்ததில்லை என்பதற்கு முக்கிய காரணம், இரட்டையாட்சிக்குக் கீழ் எல்லா ஜாதி மதங்களும் அடைந்த நலன்களேயாகும். அதுபோலவே சென்னை மாகாணம், மொழிவழி மாகாணமாகப் பிரிக்கப்பட்ட போதும், சமுதாயங்களுக்கிடையே கெடுபிடிகள் இல்லாமல் இருந்தது. எதேச்சாதிகார ஆட்சியிலிருந்து முதல் தடவையாக, அதிகாரம், 1919ஆம் ஆண்டு சீர்திருத்தத்

[1]. Ibid
[2]. Ibid
[3]. Ibid page 25

தின் அடிப்படையில் மக்கள் கைக்கு மாற்றப்பட்டது.[1] அரசியல் அடிப்படையில் சென்னையில் ஒரு மாபெரும் ஜனநாயகப் புரட்சியை உண்டாக்கியது எனக் கூறலாம். இதுவரை நீதிமன்றங்களிலும், ஸ்தல ஸ்தாபன நிறுவனங்களிலும் பணியாற்றி அனுபவம் கொண்டவர்கள், சீர்திருத்த அடிப்படையில் கொண்ட பொறுப்புக்களைச் செவ்வனே நிறைவேற்றினர். இவர்கள் தலைமையை மக்கள் ஒப்புக் கொண்டதற்கு முக்கிய காரணங்கள், அத் தலைவர்களுடைய ஜாதி, பொருளாதார அந்தஸ்து, அவர்களுடைய கல்வி, அத்தலைவர்களுடைய தொழில்திறமை இவைகள் பெருவாரியான மக்களுக்கு நமபிக்கை ஊட்டுவதாகவும், மேலும் மக்கள் கைக் கீழ் அதிகாரம் மாற்றப்படுவதால் வரும் நன்மைகள் அத்தலைவர்களையும் பின்பற்றும் தலைவர்களுக்கு நல்ல நம்பிக்கையை ஊட்டியது. இவ்வாறு ஜனநாயகத் தேர்தல் கொள்கைகள் சிறிதளவாக இருந்தாலும் நடைமுறையில் ஆக்கத்தக்கதாகவும், அர்த்தமுள்ளதாகவும், பயனுடையதாகவும், பாராளுமன்ற அரசாங்கத்தின் பலன் பெற ஏதுவாகவும் இருந்தது.[2]

வாதமுறையாக அந்நியர்கள் ஆட்சியில் அவர்களோடு அதிகாரத்தைப் பங்கிட்டுக் கொள்வதில் எதிர்ப்பும், அவர்கள் நல்கிய சீர்திருத்தங்களைச் சுயாட்சியே வெண்டுமெனக் கூறி வெறுத்து, நடைமுறையில் இல்லாத கொள்கைகளைப் பேசி வந்ததால் தான் காங்கிரஸ் கட்சி இரட்டையாட்சியில் கலந்து கொள்ள மறுத்தது. அவர்களுடைய நியாயமற்ற போக்குக்குப்பின் சென்னையைத் தவிர மற்ற மாகாணங்களில் இரட்டையாட்சி தோல்வியடையக் காரணமாயிருந்தது. ஆனல், நீதிக்கட்சி, இந்தியர்களுக்கு அளித்த சலுகையையும், சமத்துவமும், வாய்ப்பும் வருங்காலத்தில் மேலும் வாய்ப்புகள் வந்தேற வழியும் வகுத்துக் காட்டியது. உண்மையில் 1935ஆம் ஆண்டு சட்டத்தின் கீழ் மாகாணங்களுக்குச் சுயாட்சி உரிமை வழங்கப்பட்ட போது, நீதிக்கட்சி ஒரு பெரும் பாராளுமன்ற, பாரம்பரியத்தைச் சென்னையில் நிலை நாட்டியுள்ளதைக் காங்கிரஸ் கட்சியினர் உணர்ந்தனர்.[3] 1937 ஆம் ஆண்டு நடந்த மாகாண சுயாட்சியின் கீழ் நடந்த முதல் தேர்தலில், காங்கிரஸ் கட்சிதான் சட்டசபையில் கூடுதல் இடங்களைக் கைப்பற்றி. மந்திரிசபை அமைக்கும் அளவுக்குப் பலம் பொருந்தியிருந்தது. அரசாங்க நிர்வாகமும், திறமையுள்ளதாக இருந்தது. காங்கிரஸ் கட்சி தன் மாகாணக் கிளைகளைத் தூண்டி, அதிகாரங்களை விட்டுத் தேசிய இயக்கத்தில் சேர்ந்து, ஆங்கில

[1] Ibid
[2] Ibid P..25.
[3] Ibid

ஆட்சியை உடனடியாக மாற்ற வேண்டும் என்று கூறியபோது, சென்னை காங்கிரஸ் முதல் மந்திரி மட்டும், தம் கட்சியைப் பரிபாலித்து, அரசாங்கத்தில், மேலும் தொடர நம்பிக்கை கொண்டார். காங்கிரசின் கெடுபிடியினால் மட்டும், அந்த நம்பிக்கை கைவிடப்பட்டது. இதிலிருந்து பாராளுமன்ற முறைக்கு 1919ஆம் ஆண்டிலிருந்து 1936ஆம் ஆண்டு வரை எவ்வித நடவடிக்கை எடுக்கப்பட்டன என்பது புலனாகும். நீதிக்கட்சி இரட்டையாட்சியின் கீழ் பாராளுமன்றமுறைகளுக்கு அஸ்திவாரம் இட்டுள்ளது.[1]

## 3

## பின்தங்கியோர் சமூகங்களில் ஏற்பட்ட மறுமலர்ச்சி

நீதிக்கட்சி சென்னையில் உருவெடுத்த காலத்தில், பின் தங்கிய மக்களிடையே ஏற்பட்ட அரசியல் இயக்கத்தைப் 'பின் தங்கிய சமுதாயங்களின் இயக்கம்' எனக் குறிப்பிடுவோரும் உளர். இதில், கலாச்சார அடிப்படையில் உரிமையற்ற, தீண்டப் படாத ஹரிஜனங்களும், மலை ஜாதியினரும் விசேஷப் பங்கெடுத்துக் கொண்டனர். கல்வி, அரசாங்கத்தில் பதவிகள், சமுதாயத்தில் உரிமைகள் இவைகள்தான் இவர்கள் அடிப்படை நோக்கம் ஆகவே, கல்வி கற்பதற்கு வாய்ப்பும், அரசாங்கத்தில் பதவியும், அரசியலில் தகுந்த பங்கும், பொது வாழ்க்கையில் நலனையும்தான் இவர்கள் கோரினார்கள். ஒவ்வொரு ஜாதியினரும் தங்கள் சலுகைகளைப் பெறுவதற்கு, அவர்கள் சரித்திரத்தைக் கூறி, இலக்கிய அடிப்படையில், அவர்கள் முற்காலத்தில் ஆற்றிய பெரும் செயல்களையும், அவர்களுடைய உறவையும் எடுத்துக் கூறினர்.[2]

இந்தியாவின் எல்லாப் பகுதியிலும் ஏற்பட்ட இந்தப் பின் தங்கிய வகுப்பினர்களுடைய உரிமைகளைத்தான் நீதிக்கட்சி எடுத்துக் கூறி, மாகாண அடிப்படையில் அம்மக்களுக்குப் பல வசதிகள் செய்து கொடுக்க முன் வந்தது. இதில் அது வெற்றியும் பெற்றது. தமிழ் நாட்டைப் பொறுத்த அளவில் பிராமணர்களுக்கும், பிராமணரல்லாதவர்களுக்கும் ஏற்பட்டிருந்த ஏற்றத் தாழ்வும். நீதிக்கட்சியின் வெற்றிக்கு முக்கியமான காரணமாகும். சென்னை நகரைப் பொறுத்த வரையில் உத்தியோக பூர்வமாக, பிராமணர்களுக்கும், பிராமணரல்லாதவர்களுக்கும் ஏற்பட்ட

[1] Ibid Page 26

[2] Refer the Article 'The Significance of the Justice Party' Eugene F. Irschick - University of California vide the Justice Party Golden Jubilee Souvenir - 1968, Page 67

தகராறுகள் நீதிக்கட்சிக்குச் சென்னையில் செல்வாக்கு பெறக் காரணமாக இருந்தது. இக் காலங்களில் ஐ. ஸி. எஸ். படித்த அரசாங்க உயர் அதிகாரிகள் பற்றிப், பிராமணரல்லாதவர்களிடம் ஏற்பட்டிருந்த மனக்கசப்பும். நீதிக்கட்சி வளர்வதற்குக் காரணமாக இருந்தது. ஆகவே, இதுபோன்ற குறைகளைத் தீர்ப்பதற்கு நீதிக்கட்சி முன் வந்தது. பிராமணரல்லாதவர்கள் தமிழிலும், ஆங்கிலத்திலும் தேர்வு பெற்று, தொழில் சம்பந்தமான பயிற்சியும் பெற்று அரசாங்கத்தில் வேலை பெற்றனர்.[1]

திராவிட மக்களுடைய பழைய பெருமைகளை மக்களிடையே வெகுவாகப் பரப்பி, அதற்கு ஒரு தனி இடம் இந்தியாவில் பெற்றதுதான், நீதிக்கட்சி செய்த ஒரு மகத்தான சாதனையாகும். நீதிக்கட்சி மூலமாகப் பிராமணரலலாத மக்களுக்குச் சென்னை அரசியலில் முதல் இடம் கிடைத்தது. 1927ல் பிராமணரல்லாதவர்களும், அகில இந்தியக் காங்கிரஸ் ஸ்தாபனத்தில் சேர்ந்து பணியாற்றலாம் எனக் கட்சி குறிப்பிட்டபோது, பெருவாரியான பிராமணரல்லாதவர்கள் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்து, தேசியப் போராட்டத்தில் பெரும் பங்கெடுத்துக் கொண்டனர்.[1] ஆனால், அதே சமயம் மற்ற மாகாணங்களைப் போலல்லாமல் இரட்டையாட்சி, சென்னையில் வெற்றி பெற நீதிக்கட்சி பெரிதும் உதவியது. ஆனால், நீதிக்கட்சியினுடைய செயல்பாடுகள், மத்திய தர வகுப்பினரிடத்தும், உயர்தர வகுப்பினரிடத்துமே முக்கிய செல்வாக்குப் பெற்றிருந்தது. என்றாலும், அக் கட்சியில் அனுபவம் பெற்ற பலர் பிற்காலத்தில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் முன்னேற உதவி புரிந்தனர்.[2]

## 4

## நீதிக்கட்சியும் தமிழ்மறுமலர்ச்சியும்[3]

பிராமணரல்லாதவர்களுடைய பிரசித்த பத்திரிகை வெளியிட்டுச் சுமார் 50 ஆண்டுகள், சென்னையில் பிராமணர்களின் அரசியல் செல்வாக்கு அறவே ஒழிந்து, 1967ஆம் ஆண்டிலிருந்து திராவிட முன்னேற்றக் கழகம் தேர்வு பெற்று, அரசியல் அதிகாரத்தை நடத்தி வருவது, நீதிக்கட்சி காலத்தில் அமைத்த அஸ்திவாரத்தின் அடிப்படையிலாகும். வங்காளத்தில் மறுமலர்ச்சி ஆரம்பித்த காலத்தில் சென்னையில் ராபர்ட் கால்டுவெல்

[1] Ibid Page 68
[2] Ibid Page 69
[3] Ibid Page 70

போன்றவர்கள், தமிழ் மொழியின் பழமையையும், அதன் பெருமையையும் எடுத்துக் கூற ஆரம்பித்தனர். பிராமணர்கள் தமிழ் கலாச்சரரத்தின் மேல் சுமார் 2,000 வருடங்களாகப் பலத்த செல்வாக்கைக் காட்டி வந்தனர். 1900ஆம் ஆண்டில்[1] தமிழ் மொழியில் 50 சதவிகிதம் வடமொழி கலந்திருந்தது எனக் கூறுவர் மேலும் பிராமணர்கள் ஆதிக்கத்தின் கீழ் வளர்ந்த தமிழ் மொழி அதிகமாகவும், மத சம்பந்தப்பட்டதாகவும், வடமொழியிலுள்ள மத இலக்கியங்களையும், வேதங்களையும், இதிகாசங்களையும் மொழி பெயர்ப்பதில்தான் காணப்பட்டது. இக் காலங்களில் தமிழ் மொழியைப் போற்றி வந்த பிராமணரல்லாதவர்கள் தங்கள் வரையறையைக் குறுக்கிக் கொண்டனர். தமிழ் மொழியின் சிறப்பெல்லாம் சாதாரண மக்களிடையே மட்டும் நிலவி வந்தது.

தமிழ் மொழியின் மாறுபட்ட மலர்ச்சிக்குக் காரணம், தமிழ் பிராமணர்கள்தான் எனக் கூறலாம். ஆனால் அவ்வளர்ச்சியைப் பூரணமாக்கக் கலாச்சாரத்தில் ஊறிப்போனவர்கள் தேவைப் பட்டனர். நீதிக்கட்சியும், பொதுவாகப் பிராமணரல்லாதவர்களுடைய இயக்கமும், இம் மறுமலர்ச்சி ஏற்படுவதற்கு வேண்டிய சூழ்நிலையை உருவாக்கிற்று.[2] இக் காலங்களிலிருந்து பிராகணர்களுடைய ஒதுங்கிய வாழ்க்கை முறியடிக்கப் பட்டது. பழக்க வழக்கத்திலும், அரசாங்க உத்தியோகத்திலும் பிராமணரல்லாதவர்கள் முன்னேறித். திராவிடர்களுக்குத் தங்களைப் பற்றியுள்ள எண்ணத்தையும், கலாச்சாரத்திலுள்ள மகிமையையும் எடுத்துக் காட்ட உதவியது. வடமொழிக் கலப்பில்லாமல் தமிழ் எழுதும் பழக்கம் ஆரம்பமாயிற்று. பின்னால் அதனுடைய தூய்மையையும், அதன் சக்தியையும் வலுப்படுத்த முடிந்தது. 1929ஆம் ஆண்டு சுயமரியாதை இயக்கம் ஆரம்பித்ததும், திராவிடக் கலாச்சாரம் புதிய முற்போக்கடைந்த தமிழ் மக்கள் மனதில் பகுத்தறிவை விளக்கிக் காட்டியது. தமிழ்நாடு முழுவதிலும், விஜயம் செய்த மக்களிடையே, பல நாடகங்கள் மூலமாக மக்களுக்குத் திராவிடக் கலாச்சாரத்தினுடைய பெருமை எடுத்துக் காட்டப்பட்டது.[3]

இத்தகைய கலாச்சார உயர்வை எடுத்துக் காட்டியபோது மக்களிடையே தமிழ் மக்கள் என்ற ஒரு புதிய விழிப்புணர்ச்சி

[1] Ibid Page 70

[2] Refer the Article 'The Justice Party and the Tamil Renaissance. Report L. Hardgrave, Jr. University of Texas vide Justice Party Golden Jubilee Souvenir 1968 Page 73

[3] Ibid Page 74

பான்மை இல்லாமல், தமிழ் மக்கள் என்ற விரிவான எண்ணம் ஏற்பட்டது. விசாலமான எண்ணங்களும், கலாச்சார உயர்வைப் பற்றியுள்ள பெருமையும், சுயமரியாதையும் அவர்கள் அரசியலில் செயல்படுவதற்கு மிகவும் தூண்டுகோலாக இருந்தது. இக் காலத்தில் அலைமோதிய கருத்துக்களும், கலாச்சார உணர்ச்சியும், தமிழ் நாட்டின் எல்லையைத் தாண்டி ஏற்பட்டது. கிராமங்கள், நகரங்கள் என்ற குறுகிய மனப் உலகம் பூராவிலும் பரவியது எனக் கூறலாம். திராவிட இயக்கம் ஒரு தமிழ் இன உணர்ச்சியையும். தமிழ் மொழிக்கு ஒரு பலத்தையும், தமிழ்க் கலாச்சாரத்திற்கு ஒரு பழமையையும், செழிப்பையும் நல்கியது. தமிழர் என ஏற்பட்ட உணர்ச்சி தமிழ் மறுமலர்ச்சியால் ஏற்பட்ட உணர்ச்சியேயாகும். என்றாலும், இவ் வுணர்ச்சி இந்தியர் என்ற புது எண்ணத்தைச் சற்றேனும் குறைக்காமல், அதே சமயம் பெருமை பெற்ற இந்தியர்களின் ஒரு பாகம் தமிழர் என்ற உணர வைத்தது.[1]

## 5

## நீதிக்கட்சி இயற்றிய முக்கிய சீர்திருத்தச் சட்டங்கள்

### (அ) பெண்களுக்கு வாக்குரிமை அளித்தலும், பெண்களின் விடுதலைக்கு வழி கோலியதும்

1921ஆம் ஆண்டு திவான் பகதூர் திரு. கிருஷ்ணன் நாயர்[2] சென்னை சட்டசபையில், தேர்தலில் ஓட்டளிப்பதற்கு, ஆண், பெண் என்ற வித்தியாசம் இருக்கக் கூடாது என்றும், ஓட்டளிப்பவர்களுடைய சட்டத்தில், ஆண், பெண் என்ற வேறுபாடு இல்லாமலிருக்க வேண்டுமென்றும், ஒரு தீர்மானத்தைப் பிரேரித்தார். அத் தீர்மானமும் அனுமதிக்கப் பட்டது. அத் தீர்மானத்தின் அடிப்படையில் நிறைவேறிய சட்டம் பெண்களுக்கு ஓட்டுரிமை அளித்தது. அத் தீர்மானம் விவாதிக்கப் பட்டபோது டாக்டர் நடேச முதலியார் அவர்கள்[3] தாம் பெண்களின் விடுதலைக்கு வாதாடுவதாகக் கூறினர். சமுதாய அடிப்படையில் பெண்களுக்கு இருக்கும் கட்டுப்பாடுகள்தான் அவர்கள் பின் தங்கி இருப்பதற்குக் காரணம் என்றும், அவர்கள் அன்றாட வாழ்க்கையில் வாய்ப்பின்றி, ஒதுங்கி வாழ்வதுதான் சமுதாயத்தின் பிற்போக்குக் காரணம் என்றும் கூறினர். ஆகவே, முதற்படியாக அவர்களுக்கு, ஓட்டுரிமை வழங்க வேண்டும் என்றும் குறிப்பிட்டார். என்றாலும், இவ்வுரிமை முதற்படியாக, மலபாரி

[1] Ibid P. 74
[2] Ibid
[3] Ibid Page 75

லுள்ள முற்போக்கடைந்த கிறிஸ்தவப் பெண்களுக்கு அளிக்கப் பட வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அரசாங்க தரப்பில் பேசிய லயனல் டேவிட்ஸன் (Lionel Davidson)[1] விவாதத்திற் குப் பதிலளிக்கையில் பெண்களுக்கு உரிமைகள் வழங்கவேண்டும் எனக் குறிப்பிடும் சீர்திருத்தங்கள் இன்னும் முற்போக்கடைய வில்லை எனவும், ஆகவே, அரசாங்கம் பெண்களுக்கு உரிமைகள் வழங்குவதற்கு இன்னும் தயாராகவில்லை எனவும் குறிப்பிட்டார். ஆனால், அத் தீர்மானம் 44 ஓட்டுக்கள் பெற்று தேர்வு பெற்றது. எதிர் ஓட்டளித்தவர்கள் 13 பேர்.[2] இங்கிலாந்தில் 1916ஆம் ஆண்டுதான் பெண்களுக்கு ஓட்டுரிமை வழங்கப்பட்டது. ஆனால், இவ்வுரிமை இந்தியப் பெண்களுக்குச் சுமார் 3 வருட காலம் கழிந்தவுடன் வழங்கப்பட்டது. ஒரு மாபெரும் சலுகை யாகும். பெண்கள் சமுதாயத்தில் ஒதுக்கி வைக்கப்படுவதோடு மற்ற ஜாதியினரோடு நெருங்கிப் பழகுவதற்கே வாய்ப்பு இல்லாமல் இருந்தது. இப்படிப்பட்ட ஒரு பிற்போக்குள்ள சமுதாயத்தில் பெண்களுக்குத் தேர்தல் அடிப்படையில் ஓட்டுரிமை வழங்குவது, இந்தியாவில் ஒரு பெரும் புரட்சி எனக் கூறலாம்,

### (ஆ) அரசாங்கத்தில் வகுப்புவாதப் பிரதிநிதித்துவம்—1921

நீதிக்கட்சியினுடைய ஓர் அடிப்படையான கொள்கை, எல்லா ஜாதிமதங்களுக்கும் அரசாங்க அலுவல்களில் சமப் பிரதி நிதித்துவம் கொடுக்க வேண்டுமென்பதேயாகும். நீதிக்கட்சி, பிராமணரல்லாதவர்கள் எண்ணிக்கையில் அதிகப்படியாக உள் ளார்கள் எனவும், வரி கொடுக்கும் திறமையில் அவர்கள் பிராமணர்களைவிட முக்கியத்துவம் பெற்றிருந்தனர் எனவும் கூறியது. ஆகவே, நீதிக்கட்சி, 1920ஆம் ஆண்டு, அதிகாரத் திற்கு வந்ததுமே, அரசாங்க அலுவல்களிலுள்ள ஏற்றத்தாழ்வு களை மாற்றுவதற்குப் புதிய ஆணை ஒன்றைப் பிறப்பித்தது.[3] 1921ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 5ஆம் தேதி திரு. ஓ. தணிகா சலம் செட்டியார்[4] கொண்டு வந்த தீர்மானத்தின் அடிப்படை யில், நிர்வாக சபை நிதி அங்கத்தினராகிய ஏ. ஆர். நவாப் அவர்களின் திருத்தப் பிரேரணையின் அடிப்படையில் தேர்வு பெற்றுச் சட்டசபையில் நிறைவேறியது. அதன் அடிப்படையில் பிறப்பித்த ஆணையில், அரசாங்கச் செயலகத்திலும், மற்ற

[1] G. O. No. 139 dt. 4—7—1921 ,Law Legiilative·Departtment (Ordi- nary Series) Govrnment of Madras P· 1.
[2] Ibid
[3] Ibid
[4] Ibid

இலாக்காக்களிலும், பின் வரும் விநியோக அடிப்படையில் நியமனங்கள் செய்யப்படும் எனக் குறிப்பிடப்பட்டது.[1]

| | | |
|---|---|---|
| (1) | பிராமணரல்லாத இந்துக்கள் .... | 5 |
| (2) | பிராமணர்கள் ... | 2 |
| (3) | முகமதியர்கள் ... | 2 |
| (4) | ஆங்கிலோ இந்தியர்கள், கிறிஸ்தவர்கள், ஐரோப்பியர்கள் .... | 2 |
| (5) | மற்ற தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சார்ந்தவர்கள் ... | 1 |
| | | 12 |

இத்தகைய விநியோகம், இச் சமுதாயங்களிடையே சுற்றாலாக அமையும். அதாவது, அரசாங்க வேலை வாய்ப்புக்கள் கீழ்க் குறிப்பிடும் வரிசையில் விநியோகிக்கப்படும்.

(1) பிராமணரல்லாத இந்துக்கள்
(2) முகமதியர்கள்
(3) பிராமணரல்லாத இந்துக்கள்
(4) ஆங்கிலேய இந்தியர்கள் அல்லது கிறிஸ்தவர்கள்
(5) பிராமணர்கள்
(6) பிராமணரல்லாத இந்துக்கள்
(7) பின்தங்கிய சமுதாயித்தினர்
(8) பிராமணரல்லாத இந்துக்கள்
(9) முகமதியர்கள்
(10) பிராமணரல்லாத இந்துக்கள்
ஆங்கிலோ இந்தியர்கள் அல்லது கிறிஸ்தவர்கள்
(12) பிராமணர்கள்

[1] Procecding of the Legislative Council, 1925, Vol.;22.P, 600

இந்த அரசாங்க ஆணையின்[1] அடிப்படையில்தான் நியமனங்கள் செய்யப்பட வேண்டுமென்றும், தேர்வுகளைக் கூட இதன் அடிப்படையில்தான் அரசாங்கம் நடத்த வேண்டும் எனவும் குறிப்பட்டது. இச் சட்டம் சென்னையிலுள்ள பிராமண ரல்லாதவர்களுக்கு அளிக்கப்பட்ட உரிமைப் பிராமணமாகும்.[2]

### (இ) இந்துமத அறநிலையச் சீர்திருத்த மசோதா-1923

சமுதாயத்தில் ஏற்பட்ட பெரும் குறைகளை நீக்குவதற்கு நீதிக்கட்சி எடுத்துக் கொண்ட முக்கிய நடவடிக்கைகள்தான் இந்து மத அற நிலையப் பாதுகாப்பு மசோதாவாகும். இந்துக் களுக்குச் சமுதாயத்தில் ஏற்பட்ட வழக்குகளையும், தோல்விகளைப் பராமரிப்பதிலுள்ள தகராறுகளையும் தீர்ப்பதற்கு 1922-ஆம் ஆண்டு முதல் மந்திரி பனகல் இராஜா[3] அவர்கள் ஒரு முக்கிய மசோதாவைக் கொண்டு வந்தார்.

அம் மசோதாவின் முன்னுரையில், இந்துக்கள் சுயநலத்தி னாலும், நேர்மையற்ற முறையினாலும், பொது நிதிகளை நிர்வகிப் பதில் நேர்மையற்றவர்கள் என்றும். இதனால், மத சம்பிரதாய மான நிதிகள் சரியான முறையில் பாதுகாக்கப்படவில்லை என்றும் குறிப்பிட்டிருந்தது.[4] பொது ஸ்தாபனங்களாகிய ஸ்தலஸ்தாபனங்களைக் கூடச் சரியாகப் பாதுகாக்க இந்தியர் களுக்கு முடியவில்லை என்று 1882-ஆம் ஆண்டிலிருந்தே புகார்கள் கூறப்பட்டன. மேலும், இக் கோவில்களைப் பராமரிப் பதில், பிராமணரல்லாதவர்களுக்கும், தாழ்த்தப்பட்டவர்களுக்கும் எந்தவிதமான பங்குகளும் இல்லை என்ற குற்றச்சாட்டும், சமுதா யத்திலிருந்து வந்தது. ஆகவே, கோவில் நிதிகளைச் சரியான முறையில் பராமரிப்பது மிக அவசியம் எனக் குறிப்பிட்டது. அன்றுவரை கோவில் நிதிகளைப் பராமரிப்பதற்கு வேண்டிக் கொண்டு ஏற்பட்ட மசோதாக்களின் முக்கியக் குறைபாடு யாதெனில், அம்மசோதாக்கள் கோவில் நிதிகளைப் பாதுகாத்து வரும் தர்மகர்த்தாக்களுக்கு வாழ்நாள் பூராவுமே தர்மகர்த்தாவாக நீடித்திருக்க வாய்ப்பளிக்கப் பட்டதே காரணம் எனக் கூறியது. ஆகவே, அம் மசோதாவின் முக்கியக் குறிக்கோள், அறநிலைகளைத் திறமையாகப் பராமரிப்பதோடு, நிதிகளைச் சரியான முறையில் பாதுகாக்க வேண்டும் என்பதாகும். அறநிலையங்கள் மக்களின்

[1] Proceedings of the Meeting of the Legislative Council, 5th August, 1021 Page 426.
[2] G. O. 613. Public Departmant, dated 16 th September, 1921
[3] G. O. 733, Public Department, dated 3rd August, 1925
[4] G.O. No. 733, Pnblic Department, dated 3rd August 1925

அதிகாரத்திற்கு மாற்றப்பட்டபோது, இந்நிதிகள் சம்பந்தமாக அரசாங்கம் தக்க பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுக்கத் தேவை என்பதையும் இம்மசோதா அறிவுறுத்தியது.

ஆகவே, பொது அற நிலையங்களைப் பாதுகாப்பதற்கு வேண்டி ஒரு குழுவை நியமனம் செய்ய இம்மசோதா கோரியது.[1] மத சம்பந்தமாக அற நிலையங்களை மேற்பார்வை செய்வதற்கு அரசாங்கம் அதிகாரம் வழங்க முன் வந்தது. கோவில்களையும், பாதுகாக்க ஒரு குழு நியமனம் செய்யப்படும். அக் குழுவில், ஒரு பகுதி அங்கத்தினர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப் படுவார்கள் எனவும், மற்றொரு பகுதி அரசாங்கத்தால் நியமனம் செய்யப்படுவார்கள் எனவும் மசோதா கூறியது. அவர்கள் ஐந்து வருடத்திற்குப் பணியாற்றுவர். அக் குழுக்கள் அற நிலையம் சம்பந்தமாக மேற்பார்வை செய்து, அவர்கள் கருத்துக்களை ஒரு பதிவேட்டில் குறிப்பிட வேண்டும். அதன் அடிப்படையில் அரசாங்கம் எப்பொழுதும் அற நிலையங்களில் நிர்வாகத்தில் தலையிடுவதற்கு அதிகாரம் பெற்றது [2]

இம்மசோதாவில் முக்கியமான மற்றொரு குறிக்கோள் கோவில்களிலும், அற நிலையங்களிலும் மிகுதியாக வரும் பணத்தைப் பொதுக் காரியங்களுக்கு உபயோகப் படுத்த அரசாங்கம் அனுமதி பெற்றது. சைபர் கொள்கையின் அடிப்படையில் இப் பணங்கள் பொதுக் காரியங்களுக்குக் கொடுக்கப் படும். இச் சட்டம் 1923-ஆம் ஆண்டு கௌன்சிலில் தேர்வு பெற்றது [3]

நீதிக்கட்சி சமுதாய முன்னேற்றத்தில் அதிக அக்கறை கொண்டதன் காரணமாக, இந்து மத அற நிலையங்களைப் பாதுகாக்கும் பெரும் பணியிலும் ஈடுபட நேர்ந்தது. சென்னை அரசாங்கததின் கீழுள்ள நூற்றுக்கணக்கான கோவில்களிலும், மடங்களிலும், மத ஸ்தாபனங்களிலும், ஏற்பட்டிருந்த குறைகளை மாற்றுவதற்று, 1923 ஆம் ஆண்டு, இந்து மத அறநிலையப் பாதுகாப்புச் சட்டம் வந்தது. 1817-ஆம் ஆண்டிலிருந்தே அரசாங்கத்தில் பொது மத சம்பந்தமான ஸ்தாபனங்களையும், அற நிலையங்களையும், பாதுகாக்கச் சட்டங்கள் இயற்றப்பட்டன. ஆனால், 1841 ஆம் ஆண்டு அரசாங்கம் மத சம்பந்தமான

[1] G. O. 584, Ordinary Public, dated 10th September 1921 G.O. 480, Public Dated 16th June 1921

[2] G.O. No. 272, dated 5.12.1922, Law Legislative Department, Government of Madras.

[3] Ibid

பொறுப்புக்களை ஏற்றுக் கொள்ளக் கூடாது என்று கூறவே இந்த அற நிலையங்களையெல்லாம் தனிப்பட்டவர்களுடைய அதிகாரத்திற்கு விடப்பட்டது. 1863 ஆம் ஆண்டு அற நிலையங்கள் இரு வகைகளாகப் பிரிக்கப்பட்டு, முதல் வகுப்பில் உட்பட்ட அற நிலையங்களை நேரடியாகத் தர்மகர்த்தாக்கள் மூலமாகவோ, கண்காணிப்பாளர் மூலமாவோ நிர்வாகம் செய்யப் பட்டு வந்தன. இரண்டாவது வகுப்பிலுள்ள அற நிலையங்கள் தர்மகர்த்தாக்களினுடைய பொறுப்பில் விடப்பட்டன.[1] அவர்கள் எப்படி அற நிலையங்களைப் பாதுகாத்தார்கள் என்பதைப் பற்றி அபிப்பிராய பேதங்கள் ஏற்பட்டன. ஆகவே, அவைகளைச் சரியாகப் பரிபாலனம் செய்யப் புதிய சட்டம் 1923 ஆம் ஆண்டு நிறைவேற்றப் பட்டது. அச் சட்டத்தின் அடிப்படையில் ஒரு போர்டு நியமனம் செய்யப்பட்டது. அப் போர்டின் தலைவர் ஒருவர் அரசாங்கத்தால் நியமனம் செய்யப்பட்டார். அவர்களுக்கு அரசாங்கத்திலுள்ள இந்துமத அற நிலையங்களைக் கண்காணிக்க அதிகாரம் வழங்கப் பட்டது புதிதாக ஆரம்பிக்கப் பட்ட போர்டு கண்காணிப்பில் ஏற்படும் குறைகளை அகற்ற நல்ல நிர்வாகம் நடத்த சட்டம் ஏற்பாடு செய்தது. கோவில்களை நிவாரணம் செய்து அற நிலையங்களில் உபரியாக வரும் பணத்தை அரசாங்கத்தில் கல்வி இலாக்காவில் உபயோகப் படுத்த, அரசாங்கம் அதிகாரம் பெற்றது.[2]

(ஈ) புதிய தொழில்களுக்கு அரசாங்க உதவி-1923

1923 ஆம் ஆண்டில் நியைவேற்றிய சட்டத்தின்படி புதிய தொழில் ஆரம்பிப்பதற்கு அரசாங்கம் உதவி செய்ய முன் வந்தது. 1914 ஆம் ஆண்டு அரசாங்கத்தில் தொழில்களை மேற்பார்க்கும் பொறுப்பு தனியாக்கப்பட்டு,அவ் விலாக்காக்களுக்கு ஓர் இயக்குநரையும் நியமனம் செய்தது. அவருக்குக் கிராமக் கைத்தொழிலை விருத்தி செய்யவும், பெரும் தொழிற்சாலைகள் நிறுவவும், ஆண்டுதோறும் கண்காட்சிகள் நடத்தவும், நெசவுத் தொழிலில் புதிய முறைகளை நடைமுறையாக்கவும், தொழில் கல்வி புகட்டவும், புதிய தொழில் ஸ்தாபனங்களை உருவாக்கவும், மக்களுக்குத் தொழில் பயிற்சி அளிக்கவும், புதிய தொழில்கள் முன்னேற உதவி செய்யவும், தொழிற்கல்வி நிலையங்களுக்கு வேண்டிய பணம் கொடுக்கவும், 1922 ஆம் ஆண்டு சட்டமும், 1923-ஆம் ஆண்டு சட்டமும் உதவின.[3]

[1] Ibid 13
[2] G.O. No. 272, dated 5.12.1922, Law Legislative Department Government of Madras.
[3] Ibid P 15

புதிதாக ஆரம்பிக்கப்பட்ட தொழில்களுக்கு உதவியாகக் கடன் தொகையும், பாங்கு மூலமாக அவர்களுக்கு அதிக பணம் பெறவும், புதிய பணம் பங்கு மூலமாக அவர்கள் ஈட்டவும், குறைந்த பட்சம் அவர்களுக்கு இலாபத் தொகையை அரசாங்கம் பெற்றுக்கொள்ள அனுமதிக்கவும், புதிதாக இயற்றப்பட்ட சட்டம் வழி வகுத்தது. மேலும், புதிதாக ஆரம்பிக்கப்படும் தொழில்கள் முன்னேறக் கச்சாப் பொருள்கள் கிடைப்பது, தண்ணீர், கரி, நிலக்கரி, வரிக்குறைவு போன்ற வசதிகள் செய்து கொடுக்கப் பட்டன. 1923 ஆம் ஆண்டின் புதிய சட்டத்தின் அடிப்படையில், தொழில் சம்பந்தமான ஒரு போர்டு, அரசாங்கத்தால் நியமனம் செய்யப்பட்டு, அரசாங்கத்திற்கு ஆலோசனை கூறக் கேட்டுக் கொண்டது. சுமார் 500 ரூபாய் வரை குடிசைத் தொழிலுக்கு, தொழில் இலாக்கா இயக்குநர் கடன் வழங்க அதிகாரம் வழங்கப் பட்டது.[1]

### (உ) சென்னைப் பல்கலைக்கழகச் சீர்திருத்த மசோதா-1923

1857 ஆம் ஆண்டு இயற்றிய சட்டத்தின் அடிப்படையில் சென்னைப் பல்கலைக்கழகம் பணியாற்றி வந்தது. இதன் அடிப் படையில், சென்னைப் பல்கலைக்கழகம் அதன் கீழ்க் கொண்டு வரப்பட்ட கல்லூரிகளிலும், புகுத்தப்படும் கல்வியினுடைய தன்மையை நிர்ணயிக்க அதிகாரம் வழங்கப்பட்டது. அதை நிர்வாகம் செய்ய, ஓர் ஆலோசனைத் தலைவரையும், ப்ரோ ஆலோசனைத் தலைவரையும், உப ஆலோசனைத் தலைவரையும், செனட், சிண்டிகேட் என்ற இரு சபைகளும், கல்வி மன்றங் களும் உருவாக்கப்பட்டன. பல்கலைக்கழகத்தை மேற்பார்க்கக் கவர்னர் ஜெனரலும், அதன் ஆலோசனைத் தலைவராகக் கல்வி மந்திரியும், உப ஆலோசனைத் தலைவராக ஒரு முழுநேர அதி காரியும் நியமிக்கப்பட்டார். அவருடைய சம்பளம் சட்டப்படி நிர்ணயிக்கப்பட்டது. செனேட் சபை அனுப்பும் ஐந்து பேர் களில் ஒருவரை அரசாங்கம் நியமனம் செய்யலாம். புதிய சட்டத்தின் கீழ் அமைக்கப்பட்ட நிறுவனங்கள் :[2]

(1) செனேட் சபை (The Senate)

(2) சிண்டிகேட் (The Syndicate)

(3) கல்விபற்றிய மன்றம் (The Academic Couucil)

[1] Ibid
[2] Ibid

(4) பல்கலைக்கழகக் கலையியற் குழு (The Faculties)

(5) பாடத் திட்டக் குழு (The Board of Studies)

(6) இணைக்கப்பட்ட கல்லூரிகளின் மன்றம் (The Council Affiliated Colleges)

(7) அரசாங்கம் வழங்கும் இதர அதிகாரங்கள்

சென்னைப் பல்கலைக்கழகத்தைக் கல்லூரிகளோடும், ஆசிரியர்களோடும், மாணவர்களோடும் நெருங்கிய தொடர்பு கொள்வதற்காக, 1923-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 28-ந் தேதி இப் புதிய சட்டம் இயற்றப்பட்டது.[1]

(ஊ) ஆந்திராப் பல்கலைக்கழகச் சட்டம்-1926

1925 ஆம் ஆண்டிலிருந்தே ஆந்திர மாவட்டத்தில் ஒரு பல்கலைக்கழகம் நிறுவப் பனகல் இராஜா மிகவும் அக்கறை கொண்டார். திருப்பதி தேவஸ்தான நிதியில் அப்போது சுமார் 40 இலட்சம் ரூபாய் செலவு இல்லாமல் உபரியாக இருந்து வந்தது. மேலும், அத் தேவஸ்தானத்தில் சுமார் 8 இலட்சம் ரூபாய் ஆண்டுதோறும் வருமானமாக வந்தது. ஆகவே, இப் பணத்தைச் சமுதாய முன்னேற்றத்திற்கு உபயோகப்படுத்தலாம் எனவும், திருப்பதியில் ஒரு பல்கலைக்கழகம் நிறுவலாம் எனவும் அக்காலத்திலேயே ஊர்ஜிதம் செய்தனர்.[2]

ஆனால், தெலுங்கு மாவட்டங்களிலுள்ள கல்லூரிகள் எல்லாம் ஒன்றாக இணைக்கப்பட்டு, ஆந்திரர்களுடைய எண்ணம் ஈடேற, ஒரு பல்கலைக்கழகம் இச் சட்டத்தின் அடிப்படையில் நிறுவப்பட்டது. இதன் அடிப்படையில் கல்லூரிகளில் மேல் வகுப்புகளை ஆங்காங்கு நிறுவப்படுவதற்கு அதிகாரமும், அக் கல்லூரிகளில் விஞ்ஞானம், பொறியியல், பொறி நுணுக்கங்கள் எல்லாம் தெலுங்கு மொழியிலேயே கற்பிக்க அதிகாரமும் அளிக்கப்பட்டன. இது 1925 ஆம் ஆண்டு கவர்னர் ஜெனரலின் கையெழுத்தோடு சட்டமாகியது.

தெலுங்கு மாவட்டங்களுக்கு ஒரு தனிப் பல்கலைக்கழகம் வேண்டுமென்பதைப்பற்றி, 1910 ஆம் ஆண்டிலிருந்தே மக்களால் வேண்டிக்கொள்ளப்பட்டது. தெலுங்கு மாவட்டங்களில்

[1] Asylum Press Almanac and State aid to Industries Act.

[2] Ibid

ஒரு தனிப்பல்கலைக்கழகம் வேண்டுமென்ற கோரிக்கையோடு, சென்னைப் பல்கலைக்கழகம் இம் மாவட்டங்களிலுள்ள உயர் கல்வியைச் சரிவரப் பரிபாலிக்க முடியாது என்பதை அறிந்துக் கொண்டது.[1] 1923 ஆம் ஆண்டு நிறுவப்பட்ட சென்னைப் பல்கலைக்கழகச் சட்டம், சென்னை மாகாணத்தில் பல மாவட்டங் களிலும் புதிய பல்கலைக்கழகங்கள் நிறுவப்படும் என்பதை அறி வித்தது. இதன் அடிப்படையில், தென்னிந்தியாவிலுள்ள பல சமஸ்தானங்களிலும், தனிப் பல்கலைக்கழகங்கள் நிறுவப்பட்டன. மைசூர் பல்கலைக்கழகம், ஹைதராபாத்தில் உஸ்மானியா பல் கலைக்கழகம் ஆரம்பிப்பதற்கும், அதைத் தொடர்ந்து திருவிதாங் கூரில் கல்லூரி ஆரம்பிப்பதற்கும், வழிகோலியது. 1924-ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக்கழகத்தின் அதிகாரத்திற்குட்பட்ட கல்லூரிகளில் சுமார் 15,000 மாணவர்கள் கல்வி கற்றனர். ஒரே பல்கலைக்கழகம் இத்தனை மாணவர்களுக்கும் தேர்வுகள் நடத்தி, தேர்வுகள் நடக்கும் முறைகளை மேற்பார்வை செய்வது என்பது கடினமாக இருந்தது. ஆகவே, மாகாணத்தில் புதிய பல்கலைக்கழகங்கள் நிறுவுவதற்கு அரசாங்கம் முன் வந்தது. தெலுங்கு மாவட்டங்களிலிருந்து கல்வி கற்ற மாணவர்களின் எண்ணிக்கை 12-ல் 5 பாகங்கள் ஆகும். இதில் சுமார் 2,000 மாணவர்கள் தெலுங்கு மாவட்டங்களிலேயுள்ள கல்லூரிகளில் கற்றுவந்தனர். தெலுங்கு மாவட்டங்களிலிருந்து சென்னை மாநகரில் கல்லூரிகளில் படித்து வந்தவர்களின் எண்ணிக்கை 900. இக் காரணங்களின் அடிப்படையில்தான் தெலுங்கு மாவட்டங்களுக்கு ஒரு தனிப் பல்கலைக்கழகம் வேண்டும் என்ற புதிய சட்டம் கொண்டு வரப்பட்டது.[2]

மேலும், தெலுங்கு மாவட்டங்களிலுள்ளவர்கள் மொழி அடிப்படையில் அவர்களுக்கென்ற ஒரு தனிப் பல்கலைக்கழம் அங்ஙனம், ஒரு தனிப் பல்கலைக்கழகம் அமையும்போது உயர்தரக் கல்வியை அவர்கள் மொழியிலேயே மேலும் விருத்தி அடையச் செய்யும் என்று அவர்கள் நம்பினர். தெலுங்கு மாவட்டங்களிலிருந்து இதர இடங்களில் படித்த மாணவர்கள் பல வசதிக் குறைவுகளினால் அவதியுற்றதாகவும், அரசாங்கம் அறிந்தது. தெலுங்கு மாவட்டங்களிலுள்ள கல்லூரிகளுக்குச் சென்னைப் பல்கலைக்கழகத்திலுள்ள நிறுவனங்களுக்குச் சரியான பிரதிநிதித்துவம் இல்லையென்றும், தெலுங்கு மாவட்டத்திலுள்ள

[1] Madras University Act, 1923 Part IV Supplment Gazette 1923 (Fort Saint George P. 106

[2] Ibid

தலைவர்கள் குறைபட்டனர். மேலும், மாவட்டங்களிலிருந்து வரும் மாணவர்களுடைய பிரச்சினைகளை அவர்கள் பிரதிநிதிகளே சரிக்கட்ட வேண்டுமென்பது மற்றொரு காரணமாகும். தெலுங்கு மாணவர்களுக்கு, மேற்படிப்புக்குச் சென்னைப் பல்கலைக்கழகத்தில் தெலுங்கு மொழியிலேயே கல்வி கற்க வாய்ப்புக்கள் இல்லை.[1] ஆகவே, இளங்கலைக்கு மேற்பட்ட படிப்பு படிக்க, விசேஷ வசதிகள் செய்து கொடுக்க வேண்டுமென்றும் கருதப்பட்டது. அங்ஙனம், புதிதாக ஆரம்பிக்கப்படும் ஒரு பல்கலைக்கழகம் ஆராய்ச்சி மாணவர்களுக்கும் போதிய வசதிகள் செய்து கொடுக்கும் எனத் தெலுங்கு மக்கள் உணர்ந்தனர். பொருளாதார அடிப்படையிலும், தெலுங்கு மாவட்டத்தில் ஒரு பல்கலைக்கழகம் தோன்றி அம் மாவட்டங்களிலே கல்லூரிகளில் மேற்படிப்புக்கு வசதி செய்து கொடுப்பார்களேயானால். மாணவர்கள் நூற்றுக் கணக்கான மைல்கள் கடந்து, சென்னைக்கு வரவேண்டிய தேவை இல்லை என்பது மற்றொரு காரணம்.[2]

சென்னைப் பல்கலைக்கழகத்தில் தொழில் அபிவிருத்தி பற்றி யுள்ள கல்லூரி ஒன்று அன்று இல்லாமல் இருந்தது. ஆகவே, புதிதாக ஆரம்பிக்கப்படும் கல்லூரிகளில் வஞ்ஞானத்திலும், தொழில் நுட்பக் கல்வியிலும் சீர்திருத்தங்கள் தேவை என அரசாங்கம் கூறியது. அன்றைய நிலையில், பல்கலைக்கழகங்களில் படித்தவர்கள் வேலையில்லாத் திண்டாட்டம் வாலிபர்களிடையே அதிகமாகக் காணப்பட்டது. ஆகவே, புதிதாக ஆரம்பிக்கப்படும ஒரு பல்கலைக்கழகத்தில், தொழில் நுட்பக் கல்வியும், அவர்கள் தொழில்களை நிறுவுவதற்கும், தொழிற்சாலைகளில் வேலை வாய்ப்புக்களைத் தேடிக் கொள்வதற்கும், நல்ல முறையில் அமைக்க எண்ணினர். புதிதாக ஆரம்பிக்கும் பல்கலைக்கழகத்தில் வேலை வாய்ப்புத் தேடிக் கொடுக்கும் சங்கம் ஒன்று பொருந்தி வேலை செய்யும். இவ்வாறு புதிய கல்வி, தொழில் முன்னேற்றத் தையும் வேலை வாய்புக்களை ஏற்றுக்கொண்டதாக இருக்க வேண்டி தான் ஆந்திரப் பல்கலைக்கழக மசோதா கொண்டு வரப்பட்டது[3]

பல்கலைக்கழகத்தின் படிப்பில் உயர்தரக் கல்வி கற்பதோடு தங்கள் பழக்க வழக்கங்களை ஒரு தரப்பட்ட பல்கலைக்கழக அமைப் பிலிருந்து ஒரே ஒரு விதமாக அமைத்துக்கொள்ள வாய்ப்புண்டு-

[1] Ibid

[2] Andhra University Bill, 1927 Fort Saint George Gazette Part VI Supplement page 148

[3] Ibid

மேலும், மாவட்டத்தின் அவசியத்தின் அடிப்படையில், மாவட்டத் தொழில் கல்வி புகட்டுவது, கலவி முறையில் பெரும் மாறறத்தை ஏற்படுத்தும். அவர்களுக்கு வேண்டிய பாடப் புத்தகங்களை வெளியிடுவது எளிதாகி விடும். ஆந்திரப் பல்கலைக்கழக மசோதாவின் அடிப்படையில் அங்கு ஆரம்பிக்கும் பல்கலைக் கழகத்தில் ஒரு செனேட் சபையும், கல்வி பற்றிய மன்றமும் நிறுவப்படும். தெலுங்கு மாவட்டங்களிலுஅள எல்லாக் கல்லூரி களும், அப் பல்கலைக்கழகத்தில் இணைக்கப்படும். செனேட் சபை யோடு இணைக்கப்பட்ட எல்லாக் கல்லூரிகளுக்கும், பிரதிநிதித் துவம் வழங்கப்படும். ஆந்திரப் பல்கலைக்கழகம் உயர்தரக் கல்விக்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுப்பதோடு, ஆராய்ச்சி மாணவர்களுக்கு ஊதியமும் வழங்கும். பொது மக்களுடைய சமுதாய வாழ்க்கை முன்னேறுவதற்கு வேண்டிய ஆராய்ச்சிகள் கல்லூரிகளில் மேற்கொள்ளப்படும்.[1]

1926 ஆம் ஆண்டு நிறுவப்பட்ட ஆந்திரப் பல்கலைக் கழகம், 1926 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 26 ஆம் தேதி ஆரம்பிக்கப்பட்டது. மாணவர்களுக்குத் தேர்வு நடத்தும் அடிப் படையில் மட்டும் ஆரம்பிக்கப்பட்ட இப் பல்கலைக்கழகம், நாளடைவில் கல்வி கற்பிக்கும் ஒரு பல்கலைக்கழகமாக மாறியது. நிர்வாகத்தைப் பொறுப்போடு நடத்த ஓர் உப ஆலோசனைத் தலைவரும், செனேட், சிண்டிகேட், கல்வி பற்றிய மன்றம், பல்கலைக்கழகக் கலையியற்குழு, மாநிலக்குழு ஆகியவையெல்லாம் அமைக்கப்பட்டன. இப் பல்கலைக்கழகத்தின் தலைநகர் பெசவாடா வாக ஆரம்பித்தில் நிர்ணயிக்கப்பட்டது. 1926 ஆம் ஆண்டி லேயே ஆந்திரப் பல்கலைக்கழகத்தின் தலைநகர் வால்டேருக்கு மாற்றப்பட்டது. 1942 ஆம் ஆண்டு இதன் தலைநகர் இரண் டாவது உலக மகாயுத்தத்தின் காரணமாகக் குண்டூருக்கு மாற்றப் பட்டது.[2]

## (ஏ) அண்ணமலைப் பல்கலைக்கழகம் - 1928

ஆந்திர மாவட்டத்தில், தெலுங்கு மொழியின் அடிப் படையில் ஒரு பல்கலைக்கழகம் நிறுவப்பட்டபோது, தமிழ் மொழியின் அடிப்படையில், ஒரு பல்கலைக்கழகம் வேண்டுமென்ற ஓர் எண்ணம் உருவாயிற்று. 1928 ஆம் ஆண்டு அண்ணமலைப் பல்கலைக்கழகம், செட்டி நாட்டைச் சேர்ந்த டாக்டர் இராஜா

[1] Ibid, 148
[2] Ibid

சர். அண்ணாமலைச் செட்டியார் அவர்களுடைய 20 லட்ச ரூபாய் அன்பளிப்பில் சிதம்பரத்திலுள்ள அண்ணாமலை நகர் என்னும் இடத்தில் ஆரம்பிக்கப்பட்டது. சென்னை அரசாங்கம் இந்த அன்பளிப்பை வரவேற்று, அரசாங்க நிதியிலிருந்து 28 லட்ச ரூபாய் அப் பல்கலைக்கழக நிதிக்காகக் கொடுக்க முன் வந்தது. கலை, விஞ்ஞானம், இருதுறைகள் போக, அக் கல்லூரிகளில் கிழக்கத்திய மொழிகளைப் படிப்பதற்கும் ஒரு தனித் துறை நிறுவப்பட்டது. இப் பல்கலைக்கழக மாணவர்களுக்குக் கல்வி ஊட்டும் முறையில் 12 மாணவர்களுக்கு ஓர் ஆசிரியர் நியமிக்கப் பட்டார். 1928 ஆம் ஆண்டு சட்டத்தின் அடிப்படையில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் செனேட் சபை, கல்வி பற்றிய மன்றம், பல்கலைக்கழகக் கலையியற்குழு, பொருளாதாரக் கமிட்டி ஆகியவை நிறுவப்பட்டன.[1]

## (ஏ) ஊரக ஒலிபரப்பு (Rural Broadcasting)

1933 ஆம் ஆண்டு அரசாங்கம் ஒரு தனி வானொலி வல்லுநர் ஒருவரை நியமித்து, நடுத்தர அல்லது குறுகிய அலைகள் நிலையம் ஒன்றைச் சென்னை நகரத்தில் நிறுவ அரசாங்கத்தினிடமே இருந்து வந்தது. திருச்சியில் அகில இந்திய வானொலி நிலையம் 1938 ஆம் ஆண்டு நிறுவப்பட்டது. கிராம மக்களுக்குக் கல்வி ஊட்டுவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. இதற்கு வேண்டிச் சென்னையில் மாநில ஒலிபரப்புத்துறை (State Broadcasting Department) ஒன்று ஆரம்பிக்கப்பட்டது. சுகாதாரம், கல்வி, விவசாயம் முன்னேற்றம், மதுவிலக்கு, போன்ற பிரச்சினைகளில் பொது மக்களுக்குக் கருத்துறையும் வழங்கியது.[2]

## (ஐ) மின்சாரம்

1908 ஆம் ஆண்டில் உதகமண்டலத்திலும், 1924-ஆம் ஆண்டில், சென்னை மாவட்டத்திலும், மின்சாரம் விநியோகிக்கப் பட்டது. ஆனால், தனி இலாக்கா அமைத்து மக்களுக்குக் கூடுதல் அளவில், மின்சாரம், 2933 ஆம் ஆண்டு பைக்காரா விலும், 1937 ஆம் ஆண்டு மேட்டூரிலும், 1941 ஆம் ஆண்டு பாபநாசத்திலும் ஹைட்ரோ எலெக்ட்ரிக் ஸ்கிமிலிருந்தும் விநியோகிக்கப் பட்டது. பைக்காரா மின் நிலையம் உருவாவ

[1] Ibid

[2] Ibid page 149

தற்கு ஸ்ரீ. பி. இராமசாமி அவர்கள் உதவியாக இருந்தார். பைக்காரா, மேட்டூர், பாபநாசம் இம்மூன்று மின் நிலையங்களும் பொறுப்பெடுத்து நடத்தியவர் முதன்மைப் பொறியாளர் சர். ஹென்றி ஹொவார்டு (Sir Henry Howard) ஆவார்.

மதுரை நகரசபைக்கு 1910-ஆம் ஆண்டே மின்சாரம் விநியோகிக்கப்பட்டது.[1] 1932 ஆம் ஆண்டு மின்சார இலாக்கா மேலும் நிறுத்தி அமைக்கப்பட்டு, பல நகரசபைகளுக்கும், மாவட்டங்களுக்கும் மின்சாரம் வழங்கப்பட்டது. திண்டுக்களிலும், பழநியிலும், 1934 ஆம் ஆண்டும், தேனீ, பெரியகுளம், போடிநாயக்கனூர் போன்ற இடங்களில் 1935-36-லும் மின்சாரம் விஸ்தரிக்கப்பட்டது.

(ஓ) தொழில், தொழிலாளர் நலம்[2]-*1923*

தொழில் அதிகரிக்கப் புதிதாக ஆரம்பிக்கப்படும் தொழில்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்க, 1922-ஆம் ஆண்டு ஒரு மசோதா (A bill to regulate State Aid to Indnstries) கொண்டு வரப்பட்டது. புதிதாகத் தொழில் ஆரம்பிப்பதற்குப் பல உதவியும், கச்சாப் பொருள்களும், வேண்டிய வசதிகளைச் செய்து கொடுக்கப்பட்டன. 1923ஆம் ஆண்டு ஜனவரி மாதம் கவர்னருடைய கையெழுத்தோடு அது சட்டமாக்கப் பட்டது.

1922, 1922, 1916, 1934 ஆம் ஆண்டுகளில் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் தொழிலாளர்களுடைய நலத்தைக் கருதி. பல புதிய சட்டங்கள் கொண்டுவரப்பட்டன, 1934-ஆம் ஆண்டு தொழிலாளிகளுக்கு எனப் புதிய சட்டம் தொகுத்து வெளியிடப்பட்டது. தொழிலாளிகள் வேலை செய்யும் நேரம் அவர்களுக்கு ஓய்வு பெற வசதிகள், பெண் தொழிலாளிகளுக்குக் குழந்தைகளைக்கவனிப்பதற்கு வசதி முதலியவைகளை அமைத்துக் கொடுக்கச் சட்டம் கொண்டு வரப்பட்டது. மேலும், 1923 ஆம் ஆண்டு தொழிலாளர் நலம் கருதி, வேலையில் ஊனமடைந்த தொழிலாளர்களுக்குத் கொடுக்கும் உபகாரப் பணத்தைப்பற்றிப் புதிய அரசு ஆணைகள் கொண்டுவந்தன. 1926 ஆம் ஆண்டில் தொழிலாளர்கள் சங்கம் அமைப்பதற்குள்ள உரிமைகள் பற்றிச் சட்டம் நிறைவேறியது. 1936-ஆம் ஆண்டு நிறைவேற்றிய சட்டத்தின் அடிப்படையில் தொழிலாளர்களுக்குக் கொடுக்கும் ஊதியம் நிர்ணயிக்கப்பட்டது.[3]

[1] Ibid

[2] Annamalai University Bill – 1928 Fort Saint George Gazette Part IV P. 31

[3] Ibid P. 30

(ஓ) இதர சீர்திருத்தங்கள்[1]

(1) 1916 ஆம் ஆண்டுச் சீர்திருத்தம் சென்னையில் ஆரம்பித்ததும் வரவு செலவு கணக்குகள் அதிகரித்தன. அரசாங்கம் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுடைய நிலையை மாற்றத் தனியாக தொழிலாளர் துறை ஒன்று அமைத்தது, 1920 ம் ஆண்டிலிருந்து அரிசன மாணவர்கள், பொருளாதார, சமுதாய அடிப்படையில் முன்னேறக் கல்வி வசதியும், உபகாரச் சம்பளமும் அவர்கள் வீடுகள் அமைப்பதற்குக் காலி இடங்களும் கொடுக்கப்பட்டன. சேரிகளில், சுகாதார வசதிகள், கிணறுகள், பாதைகள் இடுகாடுகள் எல்லாம் அமைத்துக் கொடுக்கப்பட்டன. கல்வி நிலையங்கள் தேவைக்கேற்றவாறு ஆரம்பிக்கப்பட்டன. தீண்டாமையை ஒழிக்கச் சமுதாய அடிப்படையில் வேண்டியமுன்னேற்றங்கள் வகுப்பதே அரிசன முன்னேற்றத்தின் முக்கியக் குறிக்கோளாக அமைந்தது. 1920 ஆம் ஆண்டிலிருந்தே ஸ்தல ஸ்தாபனங்களில், பிற்போக்கு சமுதாயத்தினர் தேர்வுபெற்று பதவி வகிக்க வாய்ப்புகள் அளிக்கப்பட்டன.[2]

(2) பின் தங்கிய மாவட்டங்களில் போக்குவரத்தை அதிகரிக்கப் புதிய ஏற்பாடுகள் செய்யப்பட்டது. இதனால், நகர சபைகளுக்கும், மற்ற ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் ரோடு வசதி, சுகாதார வசதிகள், கல்வி வசதி, தொழில் வசதி ஆகியவற்றைப் பெருக்கப் பண உதவிகள் அதிகம் அளிக்கப்பட்டன.

(3) நாட்டின் புனரமைப்பு வேலைகளுக்கென இலாக்காக்களின் வேலைகள் அதிகரித்தன.

(4) கல்வி அதிகாரிகளாக, இலாக்காக்களில் வேலை செய்பவர்களுக்கு அனுபவம் பெறப் பயிற்சி அளிக்கப்பட்டது.

(5) 1923-ஆம் ஆண்டு தூத்துக்குடித் துறைமுகத்தைச் செம்மைப்படுத்தவும், வளர்ச்சி அடையச் செய்யவும் 'நம்பகர் குழு' (Board of Trustees) ஒன்று நியமனம் செய்யப்பட்டது. இச்சட்டம் 1924-ம் ஆண்டு நடைமுறையில் வந்தது. 1925ஆம் ஆண்டு கொச்சின் துறைமுகத்தைச் செம்மைப்படுத்தவும், விஸ்தரிக்கவும், 1929ஆம் ஆண்டு புதிய சட்டம் கொண்டு வரப்பட்டது.[3]

[1] போர்ட் ஸெயிண்ட் ஜார்ஜ் கெசட் 4-வது பாகத்தின் ஸப்ளிமெண்ட, நெ. 18, ஜூலை 25, 1933, பக்கம் 1-3.

[2] Ibid p. 2.

[3] Ibid

(6) 1926 ஆம் ஆண்டு சென்னை மாகாண சுகாதார முற்போக்குக்கு வேண்டி ஒரு தனி இலாக்கா ஆரம்பிக்கப்பட்டு அதற்குப் பொதுஜன ஆரோக்கிய இலாக்கா இயக்குநர் ஒருவரும் நியமிக்கப்பட்டார். நர்சுகளின் பயிற்சி சம்பந்தமாகவும், நியமனம் சம்பந்தமாகவும், அவர்களுக்கு ஓர் ஆலோசனைசபை நியமனம் சம்பந்தமாகவும், இச் சட்டம் புதிய ஏற்பாடுகளைச் செய்தது. இந்த நர்சுகளின் ஆலோசனை சபையில், பொதுஜன தேக ஆரோக்கிய இலாக்காவுக்கு அதில் பிரதிநிதித்துவம் பெற்றுக் கர்ப்ப சம்பந்தமான சிகிச்சையையும், சிசு சம்ரக்ஷண ஏற்பாட்டையும் நடப்பித்து மேற்பார்வையிடுவதற்கான ஆலோசனைகளை இச் சபை கோரும்.[1]

[1] Ibid p. 3

# 8. இரட்டையாட்சிக் காலமும், 1935ஆம் ஆண்டு சீர்திருத்தக் கோரிக்கைகளும்; தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினரின் விடுதலை

## 1

## மாகாண சுயாட்சியும், மத்தியில் பொறுப்பாட்சியும்

### (அ) மாகாண சுயாட்சியும், நீதிக்கட்சியும்

இரட்டையாட்சியை ஏற்று நடத்திய நீதிக்கட்சியின் தலைவர்களும், நாளடைவில் இவ்வாட்சி முறை, செயல்படுத்தத் தக்க ஓர் அரசாங்க அமைப்பு அல்ல என ஒப்புக் கொண்டனர். ஆகவே, இரட்டையாட்சி, நடைமுறையில் அரசியலுக்குகந்த தல்ல என நீதிக்கட்சி குறிப்பிட்டது. 1924ஆம் ஆண்டு நடந்த பிராமணரல்லாதவர்களுடைய மாநாட்டில், திவான் பகதூர் கிருஷ்ணன் நாயர்[1] அவர்கள் தம் உரையில், இரட்டையாட்சி சென்னையைப் பொறுத்த அளவில் உபயோகமுள்ளதாக இருப்பினும், அரசாங்கத்தின் எல்லா அம்சங்களையும் ஆராய்ந்து பார்க்கின், அது வெற்றி பெறவில்லை எனக் குறிப்பிட்டார். அதுபோலவே, இரட்டையாட்சி மேலும், சீர்திருத்தப்பட்டு, மாகாணங்களுக்கு, எல்லா இலாக்காக்களிலும் பூரண சுதந்திர மும், பொறுப்பு வழங்க வேண்டுமென்றும், அது போன்றுள்ள பொறுப்பு மத்திய அரசாங்கத்திலும் கொடுக்க வேண்டுமென்றும் குறிப்பிட்டார். அம் மாநாட்டில் டாக்டர் ஏ. இராமசுவாமி முதலியார் அவர்கள்[2] ஜாதி அடிப்படையில் வாக்காளர் பட்டியல் கொடுக்க வேண்டுமென்று குறிப்பிட்டார். பேராசிரியர்

[1] No. 28, The Trilinga, 18th October 1924, MNR, Cl. p. 1378

[2] Ibid

எம். இரத்தினசாமி அவர்கள் பேசும்போது, மாகாணங்களுக்கு, மாகாண சுயாட்சி உடனடியாகக் கொடுக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். என்றாலும், சுயராஜ்ஜியம் இந்தியாவுக்கு உடனடியாகத் தேவையில்லை எனவும் கூறினர். அதுபோலவே அரசாங்கத்தோடு ஒத்துழைப்பதுதான் சுயராஜ்ஜியத்திற்கு வழி என்றும், அரசாங்கத்திற்கு எதிரிடையாகப் போவது தவறு என்றும் கூறினர்.

ராய் ஜகன்னுத் மஸூம்தார்[1] மத்திய சட்டசபையில் மாகாணங்களுக்குச் சுயாட்சி கொடுக்க வேண்டுமென ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தனர். அதற்கு ஒரு திருத்தம் பிரேரணையை ஜகன்னுத் தாஸ் துர்க்காதாஸ் கொண்டு வந்து, அரசாங்கம் இரட்டையாட்சியின் நடைமுறையைக் கவனித்து உடனடியாக மாகாணங்களுக்குப் பொறுப்பாட்சி வழங்க வேண்டும் எனக் கூறினர்.[2] மத்திய சட்டசபையின் விருப்பங்கள் ஆங்கிலப் பாராளுமன்ற இந்தியக் காரியதரிசிக்கு அனுப்பி வைக்கப்பட்டது. ஆனல், அவர் 1919ஆம் ஆண்டு சீர்திருத்தத்தின் கால அளவு இன்னும் முடியவில்லை எனக் கூறி விட்டார்,

(ஆ) சென்னை சட்டசபையில் மாகாணங்களுக்குச் சுயாட்சி வேண்டுமென்ற கோரிக்கை

1924ஆம் ஆண்டு ஏ. எஸ். கிருஷ்ணராவ்[3] அவர்களும், சென்னை சட்டசபையில் ஒரு பிரேரணை கொண்டு வந்து, சென்னை மாகாணத்திற்கு உடனடியாக மாகாண சுயாட்சி வேண்டுமென்ற கருத்தை, மத்திய அரசாங்கத்திற்கு அறிவிக்க வேண்டும் எனக் கூறினர். இப் பிரேரணை, சட்டசபையினுல் ஒப்புக் கொள்ளப்பட்டு, மத்திய அரசாங்கத்திற்கு அவர்கள் அபிப்பிராயம் தெரியப்படுத்தப் பட்டது. 1923ஆம் ஆண்டு அரங்காச் சாரியார்[4] ஒரு பாராளுமன்றக் கமிஷனை இந்தியாவில் நியமனம் செய்து, இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்து கொடுக்க வேண்டும் எனக் குறிப்பிட்டார். அவருடைய பிரேரணைக்கு ஒரு திருத்தம் கொண்டு வந்த மோதிலால், ஒரு வட்ட மேஜை மாநாடு, புதிய சீர்திருத்தத்தைத் பற்றி ஆலோசிக்கக் கூட்ட வேண்டுமென்றும், அதில் சிறுபான்மையினருக்குப் பிரதிநிதித்துவம் வழங்க வேண்டுமெனவும், குறிப்பிட்

[1] Vide R. R. Sethi and Mahajan, op. cit. p. 122
[2] Ibid
[3] No. 26, Smarasondhini, 21st August, 1924, MNR, Cl. p. 1165
[4] Ibid

டார். 1925ஆம் ஆண்டு, அரசாங்கம், இரட்டையாட்சியின் நடைமுறையைப் பற்றி அறிய ஆவல் கொண்டு மூடிமன் குழுவை நியமித்தது.[1] ஆனால், அக் கமிட்டி இரட்டையாட்சியின் நன்மை தீமைகளைப் பற்றி உடனடியாக ஆலோசித்து முடிவு செய்ய முடியாது எனவும், அவ்வாறு முடிவு கூறக் காலம் பிடிக்கும் எனவும் கூறி விட்டது. ஆனால், அக் கமிட்டியில் சிறுபான்மையோர், இரட்டையாட்சி தோல்வியடைந்தது எனக் குறிப்பிட்டனர். ஆகவே, அரசாங்கம் பெரும்பான்மையோரின் கருத்தின் அடிப்படையில் அவர்கள் சிபாரிசை ஒப்புக் கொண்டது.

1924ஆம் ஆண்டு பம்பாயில்[2] நடந்த சகல கட்சிகளின் மாநாட்டில் (நீதிக்கட்சி உட்பட) சுயராஜ்ஜியம்தான் எல்லாக் கட்சியினுடைய கொள்கை எனக் குறிப்பிட்டனர். ஆனால், ஆங்கில அரசாங்கத்தின் சார்பில், லார்ட் பிர்க்கன் ஹெட் துரை[3] பேசும்போது 1929ஆம் ஆண்டிற்கு முன்னால், அரசாங்க நிர்வாகத்தில் எந்தச் சீர்திருத்தமும் கொண்டு வர முடியாது எனக் குறிப்பிட்டனர். ஆனால், இக்காலத்திற்குள், இந்தியர்கள் தாங்கள் சுயராஜ்ஜியம் பெறுவதற்கு யோக்கியதை உள்ளவர்கள் என நிரூபிக்க, எல்லா வாய்ப்புக்களும் அளிக்கப்படும் என அவர் கூறினார்.[4]

1924ஆம் ஆண்டு, இந்திய அரசியல்வாதிகள், இலண்டனில் கூடி, ஆங்கில அரசாங்கத்திற்கு ஒரு கூட்டுமுறையீடு செய்தனர். அவர்களின், முக்கிய கோரிக்கை, ஒரு ராயல் கமிஷன் உடனடியாக இந்தியச் சீர்திருத்தங்களை ஆராய வேண்டும் என்பதுதான். 1626ஆம் ஆண்டு, பால்ட்வின் மந்திரி சபையின்மேல் நம்பிக்கையில்லாத் தீர்மானம் வந்ததின் பேரில், ஒரு சீர்திருத்தக் கமிஷன் உடனடியாக வரும் என 'ஸ்டேட்ஸ்மேன்' குறிப்பிட்டது.[5] அதன் ஹேஷ்யத்தில் கண்டது போல ,1927ஆம் ஆண்டு, சர். ஜான் சைமன் தலைமையில், ஒரு கமிஷன் இந்தியாவில் சீர்திருத்தங்களைப் பற்றி ஆலோசிக்க நிறுவப்பட்டது. ஆனால், இக் கமிஷன் அங்கத்தினர் எல்லோருமே வெள்ளையர்கள். ஆகவே, இந்தியர்கள் ஜவஹர்லால் நேருவின் தலைமையில் இக் கமிஷனைப் பகிஷ்கரித்தனர்.[6]

[1] No. 30, Dravidian, 1st Sept. 1925, MNR, Cl. p. 1154
[2] No. 25, Swadesamitran, 24th Nov. MNR, Cl. P.1541
[3] No. 23, Swadesamitran, 22nd May 1925, MNR, Cl. P. 689
[4] No. 23, Swadesamitran, 22nd June, 1925, MNR. Cl. P.838
[5] Vide No.17, Andhra Patrika, 2nd Dec. 1926, MNR, Cl. P. 1534
[6] No. 13, Azad Hind, 24th Dec. 1928 in MNR 1929, Cl. P.9

1928ஆம் ஆண்டு, மோதிலால் நேரு அவர்கள், இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்து[1] வேண்டுமென்றும், அது இந்தியர்களுடைய குறைந்தபட்சக் கோரிக்கை எனவும், குறிப்பிட்டார். ஆனால், அகில இந்திய முஸ்லீம் லீக் அதை நிராகரித்துத் தனது 14 கோரிக்கைகள்[2] நிறைந்த மனுவை அரசாங்கத்திற்கு அனுப்பியது. என்றாலும், 1928ஆம் ஆண்டு, கல்கத்தாவில் சகல கட்சிகள் மாநாட்டில் சைமன் கமிஷன் தணிக்கை வருவதற்கு முன்பே இந்தியாவுக்கு 'டொமினியன் அந்தஸ்து' வேண்டும் எனக் குறிப்பிட்டனர். ஆனால், அம் மாநாட்டில் திரு.ஜெயகர்[3] உடனடியாக, இந்திய மக்களிடையே சமுதாய அடிப்படையில் ஏற்றத்தாழ்வு இல்லாமல் இருப்பதற்கு வேண்டிய சட்டங்களைச் சட்டசபைகள் இயற்றுவதற்கு அதிகாரம் வழங்க வேண்டுமென்று குறிப்பிட்டார். அதுபோலவே, குழந்தைகள் திருமணங்கள் நிறுத்தப்பட வேண்டும் என்றும், சமுதாயத்தில் பல பெரிய மாற்றங்கள் ஏற்பட வேண்டுமெனவும், குறிப்பிட்டார். ஆனால், நாளடைவில் இம் மாநாட்டிலிருந்து பல கட்சிகளும் பின் வாங்கின. பிராமணரல்லாதவர்கள் இது வர்ணாஸ்ரம தர்ம இந்து ஜன மகா சபை எனக் குறிப்பிட்டனர். ஜாதிமத அடிப்படையில், பிரதிநிதித்துவம் வழங்க முடியாது என மாநாடு அறிவிக்கவே, ஜின்னா அம் மாட்டிலிருந்து வெளியேறினார். சீக்கியர்களும் வெளியேறினர்.[4] சென்னையில், பிராமணரல்லாதவர்கள், சமத்துவமும், சுயமரியாதையும், எல்லா ஜாதிமத அங்கத்தினர்களுக்கும் கொடுக்குமேயாயின், சுயராஜ்ஜியம் நாம் கேட்காமலேயே நம்மை வந்தடையும் எனக் குறிப்பிட்டனர்.

இப்படியாக, அரசியல் கட்சிகளுள் தங்கள் ஐக்கியமற்று இருந்த போது, சைமன் கமிஷன் தணிக்கையில் இரட்டையாட்சியை ஒழிக்க வேண்டுமென்றும், மந்திரிசபைகளைக் கட்டுப்படுத், தும் சட்டசபையைப் பொறுப்பாட்சிக்கு இலக்கணம் என்றும் கூறி மாகாணங்களுக்குச் சுயாட்சி உடனடியாகக் கொடுக்க வேண்டும் எனவும் கூறினர். இவ் வறிக்கையைக் கேட்ட, காங்கிரஸ் செயற்குழு உடனடியாகக் கூடி, சட்டசபை அங்கத்தினர்கள் தங்கள் பொறுப்புக்களை இராஜிநாமா செய்ய வேண்டும் என்றும், குறிப்பிட்டனர். அதைக் கேட்ட வைஸ்ராய் லார்ட் இர்வின் துரை, 1917ஆம் ஆண்டு, ஆங்கில அரசாங்கத்தின் அறிவிப்பின் படி, இந்திய நிர்வாகம் முன்னேறி, டொமினியன் அந்தஸ்து

1 No 14. The Tamilnadu, 22nd Dec. 1928, in MNR, 1929, Cl.P.9
2 Vide R.R. Sethi and V.D.Mahajana, op.cit P.122
3 No.22, The Swadesamitran, 24th Dec. 1928 in MNR 1929 Cl.P.14
4 No.27, The Dravidian, 31st Dec. 1928, in MNR, 1929, Cl· P.50

பெறுவதுதான் ஆங்கில அரசாங்கத்தின் குறிக்கோள் என விளக்கினர்.[1] அதுபோலவே, ஆங்கில அரசாங்கம் இந்தியப் பிரதிநிதிகளைக் கூட்டி, இவ்விஷயமாக ஆலோசிக்கத் தயாராக இருப்பதாகவும் கூறினர். இந்தியர்களுக்குச் சுயராஜ்ஜியம் அளிப்பதையோ, டொமினியன் அந்தஸ்தைக் கொடுப்பதையோ பற்றி ஆங்கில அரசாங்கம் தகராறு செய்ததில்லை. ஆனால், அவ் வுரிமைகள் அளிக்கும் காலத்தைப் பற்றியே பல முறை கூறி வந்தது எனக் கூறினர்.[2] ஆனால், வைஸ்ராயினுடைய வார்த்தையைக் கேட்ட இந்தியத் தலைவர்கள், வைஸ்ராய் இந்தியர்களுக்கு டொமினியன் அந்தஸ்து கொடுப்பதைப் பற்றியே அறிவித்துள்ளார் எனக் கருதினர். இதன் அடிப் படையில் சென்னை சட்டமன்றம் 1930ஆம் ஆண்டு, ஜனவரி மாதம் வைஸ்ராயினுடைய அறிக்கையை வரவேற்று, ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. சட்டசபையில் பேசிய அங்கத்தி னர்கள் எல்லோருமே, டொமினியன் அந்தஸ்து வந்து விட்டது எனவும், டொமினியன் அந்தஸ்து எத்துணைச் சிறப்பானது எனவும் சொற்பொழிவு ஆற்றினர். முதல்மந்திரி, காங்கிரஸ் அங்கத்தினர்களைப் புன்னகையுடன் பார்த்துப் 'பரிபூரண சுதந்தி ரத்திற்கு' இன்று, காங்கிரஸ்காரர்கள் போராடுவது பூதத்துடன் போராடுவது போலாகும் என்று கூறினர். டில்லியில், காங்கிரஸ் தலைவர்கள் வெளியிட்ட அறிக்கையை, வரவேற்று சால்தானு என்பவர் கொண்டு வந்த திருத்தப் பிரேரணை மறுக்கப்பட்டது, முதல்மந்திரி, காங்கிரஸ் கட்சியும், ஆங்கில அரசாங்கத்துடன் ஒத்துழைக்க வேண்டுமென்றும், மேல் நடக்க இருக்கும் மாநாட் டில் எல்லாக் கருத்துக்களையும் கேட்டறிய வாய்ப்பு உண்டு என்றும் கூறினர்.

ஆனல், காந்திஜி வைஸ்ராயினுடைய அறிவிப்பைக் கேட்டுத் திருப்தி அடையவில்லை. காங்கிரஸ் விரும்பியதுபோல வைஸ்ராயினுடைய அறிக்கை எல்லா வேண்டுகொள்கைகளுக் கும் இணங்கவில்லை. தேசிய போராட்டத்தில் ஈடுபட்ட கைதிகளை விடுதலை செய்யவும், உடனடியாக இந்தியர்களுக்கு டொமினியன் அந்தஸ்து வேண்டுமெனவும், நடக்க இருக்கும் வட்டமேஜை மாநாட்டில் காஸ்கிரஸ் கட்சிக்குப் பெருவாரியான இடங்கள் கொடுக்க வேண்டும் எனவும் கேட்டார். அது போலவே அம்மாநாட்டின் கருத்துக்களெல்லாம் பாராளுமன்றத்

[1] No.4, The Swarajya, lst Nov.1929, MNR, Cl. P.1514

[2] No. 7, The Swarajya, 20th Jan. MNR, Cl.p.150

தைக் கட்டுப்படுத்துவதாக இருக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார், இவ் வடிப்படையில் சகல கட்சிகளும் சேர்ந்து வைஸ்ராய்க்கு ஒரு பதில் அனுப்பினர்.[1]

இதற்கிடையில் 1929ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் சர்.ஜான் சைமன், தாம் இந்தியர்களோடு நடத்திய விசாரணைகள் மூலம், தாம் எழுதிய கருத்துக்களை வெயிட்டார், அதன் அடிப்படையில் இந்தியர்களுக்குக் கானடாவில் அமைந்துள்ள அரசாங்கத்தின் அடிப்படையில் ஓர் அரசாங்க அமைப்பை உடனடியாகக் கொடுக்க வேண்டுமென்றும், மேலும் மேலும் அரசாங்க அமைப்பு பற்றிச் சர்ச்சைகள் தேவையில்லை என்றும், உடனடியாக மாகாணங்களுக்குச் சுயாட்சி வழங்க வேண்டுமென்றும் கூறினர்.[2] ஆனால், சைமன் கமிஷன் இந்தியாவில் இருக்கும் போது காங்கிரஸ் அக்கமிஷனைப் பகிஷ்கரித்ததால், அக் கட்சியினுடைய கொள்கையைக்கேட்க முடியாமற் போயிற்று; என்றாலும், கமிஷன் மிகவும் மன சந்தோஷத்தோடு இந்தியாவை விட்டு வெளியேறியது எனவும் அறிவித்தது. சைமன் இந்தியாவை விட்டுப்போகும்போது, தாம் மிகவும் கவலைப்படுவதாகவும், ஆனால், உடைபட்ட மண்டைகளையும், எலும்புகளையும் பார்த்த போது, தாம் போவதில் சந்தோஷப் படுவதாகவும் கூறினர்.[3]

சைமன் கமிஷனுக்கு உதவியளித்த மத்திய அரசாங்கக் குழு,[4] இரட்டையாட்சியின்கீழ் ஒதுக்கப்பட்ட, மாற்றப்பட்ட இலாக்காக்கள் என்ற பிரிவினையே மாற்றி, எல்லா இலாக்காக்களும் மக்கள் அதிகாரத்திற்கு மாற்றப்பட வேண்டும் எனக் குறிப்பிட்டது. ஆனால், வங்காளத்தைப் பொறுத்த அளவில் சட்டத்தை அமுல் நடத்தும் இலாக்காவை மக்கள் அதிகாரத்திற்கு மாற்றக்கூடாது எனக் கூறியது. சைமன் கமிஷன் கூறியது போல, 1961ஆம் ஆண்டு வரை வயது வந்தவர்களுக்கு ஓட்டு அளிப்பு கூடாது எனக் கூறினர். மேலும், சைமன் கமிஷன் எவ்வித அரசு இந்தியாவிற்கு வேண்டும் என்று மேலும், மேலும், விசாரணை செய்யாமல், இந்தியர்களுக்கு டொமினியன் அந்தஸ்து கொடுக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டது. ஆனால், மாகாணங்களில் நிராகரிக்கப்பட்ட

1 Idid
2 No. 14, The Telenga, 18th April 1929, MNR, Cl. p.634
3 See London Times, vide No.14, The Telenga, 18th April 1923, MNR, Cl.p.634
4 No. 13, The Andhra patrika, 27th Dec. 1929, MNR 1930, Cl.p.21

இரட்டையாட்சியை மத்திய அரசாங்கத்தில் புகுத்தி, பாதுகாப்பு, வெளிநாட்டுக் கொள்கை போன்ற இலாக்காக்கள் அரசாங்கத்தின் அதிகாரத்திற்குட்பட்டு இருக்க வேண்டும் எனக் கூறியது. சங்கரன் நாயர் கமிட்டி[1] மாகாணங்களுக்குச் சுயாட்சியும், மத்தியில் பொறுப்பாட்சியும் வேண்டுமென்று கூறியது. தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களைப் பொறுத்த வரையில், இக் கமிட்டி, அம் மக்களுக்குச் சட்டசபையில் குறிப்பிட்ட இடங்கள் நியமனம் மூலம் அளிக்க வேண்டுமென்றும், ஆனால், தனி வாக்காளர் பட்டியல் அவர்களுக்குத் தேவையில்லை என்றும் கூறியது. ஆனால், பொதுவாக வயது வந்தவர்களுக்கு எல்லாம் ஓட்டுரிமை அளிக்க வேண்டுமெனச் சிபாரிசு செய்தது. ஆனால், இந்தியாவிற்குச் சுயராஜ்ஜியம் வேண்டுமெனச் சிபாரிசு செய்ய மறுத்து விட்டது. அதுபோலவே, சென்னையில் பிராமணரல்லாதவர்களுக்குத் தனித் தொகுதிகள் தேவையில்லை எனக் கூறி மறுத்து விட்டது.

இச் சமயம், 1959 ஆம் ஆண்டு, டிசம்பர் மாதம் லாகூரில் கூடிய காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் தலைமையுரை ஆற்றிய பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள்[2] சுதந்திரம்தான் காங்கிரசின் இலட்சியம் என்று அறிவித்தார். இந்தியாவிலுள்ள சகல கட்சிகளும் தங்கள் அபிப்பிராய பேதங்களை மாற்றி வைத்து விட்டுச் சுதந்திரம் அடையப் பாடுபட வேண்டுமெனக் கூறினார். ஒத்துழைப்பைப் பற்றிக் கூறும்போது, இந்தியா சுதந்திரம் அடைந்தபின், எல்லா உலக நாடுகளோடும் ஒத்துழைக்கத் தயார் என்றும், உலகத்தில் ஒரு சமஷ்டி அரசாங்கம் வரும்போது இந்தியா தனது சுதந்திரத்தின் ஒரு பகுதியைக் கூட உலக ஒத்துழைப்புக்கு வேண்டிக் கொடுக்கத் தயார் என்றும் கூறினார். தான் ஒரு சோஷிலிஸ்ட் என்றும், குடிமகன் என்றும், ஆனால், மாகாண ஆட்சியில் தமக்கு நம்பிக்கை இல்லை என்றும் கூறினார். இந்தியாவிலுள்ள சமஸ்தானங்கள் பண்டைக்கால எதேச்சாதிகார இந்தியாவின் ஓர் எடுத்துக் காட்டு என்பதை விளக்கினார். மாகாண சுயாட்சியை ஒழித்து, மக்களாட்சி வேண்டுமென்று அவர் பெரிதும் விரும்பினர்.[3] அதுபோலவே, விவசாயத் தொழிலாளிகளுக்கும், ஆலைத் தொழிலாளிகளுக்கும் வேண்டிய வசதிகள் செய்து கொடுக்க வேண்டுமென்று பெரிதும் விரும்பினர். உடனடியாக வட்டமேஜை மாநாட்டில் காங்கிரஸ் நடந்து கொள்ளும்

[1] Ibid
[2] No.6, The Justice, 30th Dec. 1929, in MNR, 1930, p.9 cl.
[3] Ibid

முறையைப் பற்றிக்கூறும்போது, காந்திஜி அம் மாநாட்டைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். அது போலவே, பண்டித ஜவஹர்லால் நேரு, நடந்து வரும் சட்ட மன்றங்களைப் பகிஷ்கரிக்க வேண்டுமென ஆலோசனை கூறினர். ஆங்கிலேயர்கள் அளந்து அளந்து கொடுக்கும் சுதந்திரத்தையும், பொறுப்பாட்சியையும் இந்தியர்கள் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை என முழங்கினர். ஆங்கிலேயர்கள், சுதந்திரம் கொடுப்பதில் காலதாமதம்ஏற்படுத்தினுல் அவர்களைச் சிநேகிக்க விரும்பும் காங்கிரஸ்காரர்களையும் அவர்கள் விரோதிக்கின்றனர் எனக் குறிப்பிட்டார். இச் சமயத்தில் சிவசாமி ஐயர், ஸ்ரீனிவாச சாஸ்திரி, பெசண்ட் அம்மையார் போலுள்ள தலைவர்கள் டொமினியன் அந்தஸ்தோடு திருப்தியடைந்தனர். 1930 ஆம் ஆண்டு, ஆரம்பித்த சைமன் கமிஷனுடைய தணிக்கை நிராகரிக்கப்பட்டது. ஆனுல், சென்னையில் சைமன் கமிஷனுடைய தணிக்கை அரசாங்கத்தின் கருத்துக்களுடன், ஒரு அறிவிப்போடு வெளியிடப்பட்டது.[1]

முதலாவது, வட்ட மேஜை மாநாட்டில், சைமன் குழுவிற்குப் பிரதிநிதித்துவம் கொடுக்க மறுத்து விட்டனர். ஆனுல், இம் மாநாடு, அவர்களுடைய தணிக்கையை விவாதித்தது. காங்கிரஸ் இம் மாநாட்டில் கலந்து கொள்ளவில்லை. இந்தியாவிலிருந்த ஜெயகர், சர்.தேஜ் பகதூர் சாப்ரூ, திரு ஜின்னு, ஆகாகான் முதலியவர்கள் கலந்துகொண்டனர். சென்னையிலிருந்து ஏ. ஆர். எம். பன்னீர்செல்வம், ஏ.பி.பாட்ரோ, டாக்டர் சுப்பராயன், ஸ்ரீநிவாச சாஸ்திரி முதலியோர் கலந்து கொண்டனர்.

1931 ஆம் ஆண்டு, பிரதம மந்திரி மாக்டனுல்ட் முதல் வட்ட மேஜை மாநாட்டில் வாதம் முடிவடைந்ததும், பொது ஜனங்கள் அபிப்பிராயத்தைக் கேட்பதற்கு வேண்டி மாநாட்டை நிறுத்தி வைத்தார்.[2] இரண்டாவது மாநாட்டில், மகாத்மா காந்தி காங்கிரசினுடைய ஏக பிரதிநிதியாகக் கலந்து கொண்டார். இச் சமயத்தில் கான்பூரில் பெரும்அமளி ஏற்பட்டது. 1931 ஆம் ஆண்டு, ஏப்ரல் மாதம் 4 ஆம் தேதி அகில இந்திய முஸ்லீம் லீக் டில்லியில் கூடி, வகுப்பிவாதப் பிரதிநிதித்துவம் சரிவரத் தீர்வு காணவில்லையாகில், வட்டமேஜை மாநாடு வெற்றி பெருது என்று எச்சரித்தது. காந்திஜியைப் பொறுத்த அளவில், சிறுபான்மை வகுப்பினர் பிரச்சினை ஒரு பெரும் பிரச்சினை இல்லை

[1] No.20 The Andhra Patrika 10th June 1930, MNR, cl· p.937

[2] No. 3, The Hindu, 20th January 1931, MNR, cl. p.87

எனவும், சுதந்திரம்தான் முக்கியம் எனவும் குறிப்பிட்டார். ஆனால், முஸ்லீம்கள் சிறுபான்மை வகுப்பினர் பிரச்சினையை முதன்மையாக வைத்தனர். அதுபோன்றே டாக்டர் அம்பேத் காரும் தாழ்த்தப்பட்டோரின் பிரதிநிதித்துவத்தை மாநாட்டில் முதன்மையாக வைத்தார். இப்பிரச்சினைகளுக்குத் தீர்வு காண முடியாமல் வட்ட மேஜை மாநாடு முடிவடைந்தது. காந்திஜி வெறும் கையோடு இந்தியா திரும்பினார். இந்தியப் பிரதிநிதி களிடையே ஏற்பட்ட அபிப்பிராய பேதமே, இந்திய சுதந் திரத்திற்குப் பெரும் சிக்கலாக இருந்தது. இந்தியர்கள் தம்முள் கூடி, தீர்வு காண முடியாத நேரத்தில் ஆங்கிலப் பிரதம மந்திரி மாக்டனால்ட், வகுப்புவாத அடிப்படையில் குறைந்தபட்ச சமுதாயங்களுக்குப் பிரதிநிதித்துவம் வழங்க ஒத்துக் கொண்டார். மூன்றாவது மாநாடு முடிவடைந்ததும் ஆங்கிலேய அரசாங்கத் தின் கொள்கையை விளக்கும், ஒரு வெள்ளைக் காகிதம் (White paper) வெளியிடப் பட்டது.[1] வெள்ளைக்காகிதத்தில் குறிப்பிட்ட திட்டத்தின்படி இந்தியர்களுக்கு டொமினியன் அந்தஸ்து கிடைக்கவில்லை எனக் காங்கிரஸ்காரர்கள் குறை கூறினர். இவ் வெள்ளைக் காகிதத்தின் அடிப்படையில் மத்திய அரசாங்கத்தில் இரட்டையாட்சியும், மாகாணங்களில் சுயாட்சியும், அதோடு வகுப்பு வாதப் பிரதிநிதித்துவம் ஒப்புக் கொள்ளப்பட்டது.

இந்தியாவில் ஆங்கிலேயர்களுடைய கொள்கையை இந்து மகாசபை பெருமிதமாக எதிர்த்து, இந்தியர்களுடைய பிரச் சினையை ஆங்கிலப் பாராளுமன்றம் நிர்ணயிக்க வேண்டிய தேவையில்லை எனக் கூறி வந்தது.[2] ஆனால், இந்தியாவை ஆண்ட ஆங்கிலேயர், இந்திய சமுதாயஅடிப்படையை ஆராய்ந்து இந்தியாவிலுள்ள சகல தரப்பட்ட மக்களுக்கும் நன்மை அளித் தனர் என்பது சரித்திரத்தின் மூலம் விளங்கும்.

## 2

### இந்தியா சுதந்திரத்திற்குத் தயாரா? - இந்திய சமுதாய - மதநிலை.

1915 ஆம் ஆண்டு, காங்கிரசினுடைய தலைவராக இருந்த வார்ட் சின்ஹா,[3] சுயாட்சி அன்றே கொடுக்க ஆங்கில அரசாங்கம் தயாராக இருந்தாலும், இந்தியா சுதந்திரத்திற்குத் தயாராக இருப்பதுவரை, தாம் பொறுத்து இருக்கத்தயார் எனக் கூறினார்.

[1] No .1, The Sahifa, 26th Dec. 1932, MNR, cl. p.29
[2] No. 10, TheHindu, 15th APril, 1935, MNR, Cl. P.187
[3] No.25, The Andhra Patrika, 31st Oct. 1925, MNR, Cl. p.1434

1925ஆம் ஆண்டு இந்திய மாகாண சுயாட்சியே கூட முன்னேற வில்லை எனக் கூறினர்.

சுயாட்சியையும், பொறுப்பாட்சியையும் பற்றிப் பேசிய காங்கிரஸ்காரர்களும், இந்தியாவிலுள்ள சகல சமுதாய மக்களும் ஒருமைப்பட்ட பின்புதான் சுதந்திரம் கொடுக்க வேண்டுமென்றும் அல்லாவிடில் சமுதாயத்திலுள்ள அடிமைத்தனம் மேலும் தொடரும் எனவும் கூறினர். 1924 ஆம் ஆண்டு, வைக்கத்தில் காங்கிரஸ்காரர்கள் தீண்டாமையை எதிர்த்துச் சத்தியாக்கிரகம் செய்தனர். தீண்டாமையினால் ஒதுக்கப்பட்ட ஜாதியினர்கள், பொதுப் பாதைகளில் செல்லக்கூடாது எனத் தடை விதிக்கப் பட்டிருந்தனர். கோவில்களையடுத்த பொதுப்பாதைகளில் அவர் கள் செல்ல முடியாது; உயர்ந்த ஜாதியினர் இந்தத் தாழ்ந்த வகுப்பினர்களுக்குக் கோவிலினுள் செல்ல அனுமதி அளிக்க வில்லை. வைக்கத்தில் கோவிலைச்சார்ந்த நான்கு வீதிகளும் கோவில்சொத்து எனக் கூறினர். இதை ஒப்புக் கொள்வதானால் அவ் வீதிகள் வழியாகத் தாழ்ந்த ஜாதியினர் நடக்க முடியவில்லை. முஸ்லீம்களும், கிறிஸ்தவர்களும் அவ் வழியே முன்பெல்லாம் நடந்ததின் காரணமாக, அவ் வீதிகள் கோவிலைச்சார்ந்த பூமிகள் அல்ல எனத் தெரிய வந்தது.[1] என்றாலும், அரசாங்கம் அவ் வீதி களைக்கோவில் சொத்து எனக் குறிப்பிட நினைத்ததின் நோக்கம், தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் அந்த வீதிவழியே நடக்கக்கூடாது எனத்தடை விதிப்பதற்காகவே. இதனால், பாதிக்கப்பட்டவர்களில் அதிகம், தாழ்த்தப்பட்ட சமூகத்தினர். இதனால், பெரும் சத்தியாக் கிரகம் நடத்தப்பட்டது.[2] தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் உரிமை பெற வேண்டி, தொண்டர்கள் முன் வந்தனர், இச் சமயத்தில் கேழப்பன்[3] அவ் வீதிகளைத் தாழ்த்தப்பட்டவர்களுக்குத் திறக்கப் படும் வரை, தாம் உண்ணாவிரதம் இருந்து உயிர் நீக்கத்தயாராக இருப்பதாகத் தெரிவித்தார். ஆனால், அரசாங்கம் சத்தியாக் கிரகிகளைச் சிறையில் தள்ளினர். காங்கிரஸ் தொண்டர்கள் சென்னையிலிருந்து கேழப்பனுக்கு உதவியாகச் சென்றனர். இச் சமயம், பிராமணரல்லாதவர்கள், திருவிதாங்கூர் இராஜ்ஜியம், மகாராஜாவையோ, அல்லது பத்மநாபசாமியையோ அல்லது எந்தத் தமிழ்ப் பிராமணர்களையோ சார்ந்ததில்லை எனக்கூறினர்.[4] 1925 ஆம் ஆண்டு திருவிதாங்கூர் சட்டசபையில் தீண்டா மையை ஒழிக்கக் கொண்டு வந்த ஒரு தீர்மானம் 18 ஓட்டுக்கள்

[1] No. 58, The Tamilnadu, 4th May, 1924, MNR, Cl p. 673
[2] Ibid
[3] Ibid
[4] No. 36, The Tamil Nadu, 29th June, 1924, MNR, Cl: p. 1940

பெற்றது: எதிர்ப்பாக 22 ஓட்டுக்கள் பெற்றமையால் தீர்மானம் தோற்றது. திருவிதாங்கூர் அரசாங்கத்தின் திவானாக இருந்த ராகவ ஐயங்கார்தான், இத்தோல்விக்குக் காரணம் எனப் பலரும் கூறினர். தீண்டாமை பற்றியுள்ள தீர்மானம்தோற்றதும் திருவிதாங்கூர் அரசாங்கத்தைப்பற்றி மக்கள் பெரிதும் வெறுப்புக் கொண்டனர். இத்தீண்டாமையை நாகரிகத்திற்கு விரோதமாக ஏற்படுத்தப்படும் கொள்கை எனப் பலரும் கருதினர்.

இதுபோலவே தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினர் பொதுக் கல்வி நிலையங்களில் அனுமதிக்கப்படாமலும், அரசாங்க அலுவலகங்களில் அனுமதிக்கப்படாமலும் இருந்தனர். இச் சமுதாயத்தைச் சார்ந்த பெண்கள், மேலாடை உடுத்துவதைச் சட்டம் தடை செய்தது. இச் சட்டங்களுக்குக் காரணம் திவான் பகதூர் சங்கர சுப்பய்யர். ஆகவே, அரசாங்கத்தில் பிராமணர்களுடைய செல்வாக்கு இருப்பது வரை தீண்டாமை ஒழியாது என மக்கள் கருதினர். திருவிதாங்கூரில் பிராமணர்களுடைய எண்ணிக்கை $1\frac{1}{4}$ சதவிகிதம். ஆனால், அரசாங்கத்தில் அவர்கள் வகித்த பதவி 97 சதவிகிதம். சுமார் 50 ஆண்டுகளாகப் பகீரதப் பிரயத்தனம் செய்த பின்னரும், பின் தங்கிய வகுப்பினர்களுக்கு எந்தவிதமான முன்னேற்றமும் இல்லை. 1930ஆம் ஆண்டு மத்திய சட்டசபையில், வைஸ்ராய் அவர்கள் இப் பிற்போக்குக் கொள்கையினைத் கண்டித்தார். அதன் அடிப்படையில், திருவிதாங்கூர் சட்டசபையில், பின் தங்கிய வகுப்பினர்களுக்கு அரசாங்கத்தில் வேலை வாய்ப்புக்கள் அளிக்க வேண்டுமென நிர்ணயிக்கப்பட்டது. ஆனால், அவைகளை நடைமுறையில் கொண்டு வரவில்லை. இதுபோலவே, பின் தங்கிய வகுப்பினர்களுடையவும் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தின் உரிமைக்கும் வேண்டி சி. ஆர். தாஸ் அவர்கள், தாரகேஸ்வர் சத்தியாக்கிரகத்தை ஆதரித்தார்.[1] 1925ஆம் ஆண்டு, ஆந்திரப் பண்டிதர்கள் மாநாடு கூடி, அதில் தீண்டாமையைச் சாஸ்திரங்கள் ஒப்புக் கொள்ளவில்லை என்றும், தீண்டாமை வகுப்பினர்களுக்குக் கோவிலினுள் செல்ல அனுமதி அளிக்க வேண்டும் எனக் கூறினர். சென்னையைப் பொறுத்த அளவில், 1925ஆம் ஆண்டிலிருந்தே உயர்தரப் பள்ளியில் படிக்கும் ஆதிதிராவிடர்களுக்கு, மதிய உணவு அளிக்கப்பட்டது.[2]

[1] No. 40, The Swarajya, 31st Oct. 1925, MNR, cl. p.1411

[2] Ibid

1925ஆம் ஆண்டு, சி. பி. இராமசுவாமி ஐயர்[1] அவர்கள் சென்னை நிர்வாக சபை அங்கத்தினராக இருக்கும்போது, கல்பதியில் நடந்த தேரோடும் திருவிழா அன்று, ஈழவர்கள் அக்கிரகாரத்துக்குள் போகக் கூடாது என ஒரு சட்டம் பிறப்பித்தார். இதற்கு விரோதமாகப் பிராமணரல்லாதவர்கள் பெரும் கிளர்ச்சி செய்தனர். பிராமணர் சபைகளுக்கு விரோதமாகவும், வர்ணாஸ்ரம தர்ம சபைகளுக்கு விரோதமாகவும் பெரும் புகார்கள் கிளம்பின.[2] எத்தனையோ பிற்போக்குள்ளதாக இந்திய சமுதாயம் இருந்தபோதிலும் அரசாங்கம் அதை மாற்றியமைக்கப் பல புதிய கருத்துக்களை, 1819ஆம் ஆண்டு, ஆரம்பத்திலிருந்தே நிறைவேற்றி வந்தது. இந்து மதத்தில் கணவனை இழந்தவர்கள் சட்டம், ஜாதி அடிப்படையில் இன்னல்களை ஒழிக்கும் சட்டம், தனிப்பட்ட திருமணங்கள் சட்டம், சதி ஒழித்தல், பிரம்மா திருமணச் சட்டம் (1872) போன்ற சட்டங்கள் நிறைவேற்றப் பட்டன.[3] ஆனால், ஜாதியின் அடிப்படையில் ஏற்பட்ட தீண்டாமையை ஒழிப்பதற்கு அரசாங்கத்தில் ஒரு சட்டம் கொண்டு வர முடியவில்லை. அதன் முக்கிய காரணம், இந்து மதம் ஜாதியை அடிப்படையாகக் கொண்டதனாலாகும். தீண்டாமையையும், ஜாதியையும் ஒழிப்பதென்றால் இந்து மதத்தின் அஸ்திவாரத்தை உடைப்பதாகும்.

இந்தியாவில் தாழ்த்தப்பட்டவர்களுடைய ஜனத்தொகை ஆறில் ஒரு பங்கு; அவர்கள் சமுதாயத்திலும், அரசியலிலும், பொருளாதாரத்திலும் அடிமைப்படுத்தப்பட்டுக் கொடுமைப் படுத்தப் பட்டனர்.[4] இவைகளை, இதுபோன்றே குறிக்கோள்களை மனதில் வைத்துக் கொண்டுதான், ஆங்கிலேயர்கள், இந்தியர்கள் இன்னும் சுதந்திரத்திற்குத் தயாராகவில்லை எனக் கூறி வந்தனர். 1924ஆம் ஆண்டு ஆங்கில—இந்திய அரசாங்க உதவிக் காரியதரிசியாக இருந்த லார்ட் விண்டர்டன் என்பவர் பின்தங்கிய வகுப்பினர்களை மேல்நிலைக்குக் கொண்டு வந்த பின்னர்தான் பூரண பொறுப்பாட்சி இந்தியர்களுக்கு வழங்கப்படும் எனக் கூறினார். 1925ஆம் ஆண்டு, சென்னை சட்டசபையில் பேசிய ஸ்ரீனிவாசன் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்கு அரசாங்கம் எல்லாச் சலுகைகளையும் அளிக்கக் கேட்டுக் கொண்டார். என்றாலும், உயர்ந்த ஜாதியினர்தான் தாழ்ந்தவர்களுக்கு உரிமை வழங்க வேண்டுமென அரசாங்கத் தரப்பில்

[1] No. 31, The Tamilnadu, 20th Dec. 1925 in MNR, 1926, d.24
[2] Idid
[3] No. 27, The Mitavadi, 2nd Nov.1925, MNR, cl. d. 1435
[4] Ibid

சர். ஆர்தார். ஹேப் கூறினர். இக் காலங்களில், சுயராஜ்ஜியம் பெறுவது என்பது ஆங்கிலேயர்களை எதிர்த்துப் போராடிக் கிடைப்பதல்ல என்றும், அது இந்தியாவிலுள்ள உயர்ந்த தரப்பினரிடமிருந்த ஏழைகளை விடுதலை செய்வதே எனப் பலரும் கருதினர். இந்தியாவிலுள்ள ஒவ்வொரு சமுதாயமும், அதன் சமுதாய உரிமைகளைப் பெற்று அரசாங்கத்தில் அதன் பலத்திற் கேற்ற பிரதிநிதித்துவம் பெறுவதுதான் உண்மையான விடுதலை என்றும், பிராமணரல்லாதவர்கள் மேலும் தொடர்ந்து அவர்க ளுடைய விடுதலை இயக்கத்தை நடத்த வேண்டும் எனவும் தெரிந்து கொண்டனர்.[1]

## 3

## நீதிக்கட்சி தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினருக்காகச் செய்த தொண்டுகள்

1925ஆம் ஆண்டு, அகில இந்தியப் பிராமணரல்லாதவர்கள் மாநாட்டில் பனகல் இராஜா பேசும்போது, தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுடைய முன்னேற்றம் நீதிக்கட்சி ஆரம்பித்த காலத்தில் பின்னுல்தான் ஆரம்பிக்கப் பட்டது எனக் குறிப்பிட் டார். இக்கருத்தை அகில இந்தியத் தாழ்த்தப்பட்டோர் சமுதாயத்தின் மாநாடு, 1926ஆம் ஆண்டு மாயவரத்தில் நடந்தபோது, அம் மக்களின் பொதுக் காரியதரிசி ஊர்ஜிதம் செய்தார். மேலும் அவர் சென்னை மாகாணத்தில் மொத்தம் 126 தாலூக்கா போர்டுகளும், 85 முனிசிபாலிட்டிகளும் உள்ளதில் 75 தாலூக்கா போர்டுகளிலும், 52 முனிசிபாலிடிகளி லும் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினருக்கு நீதிக்கட்சி, பதவியேற்ற தின் பின் பிரதிநிதித்துவம் வழங்கியது எனக் குறிப்பிட்டார். அவர் நீதிக்கட்சி தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினரின் முன்னேற் றத்திற்குச் செய்த தொண்டுகளைப் பாராட்டி நீதிக்கட்சியின் கொள்கைகளையும், வெகுவாகப் போற்றினர்.[2] என்ருலும், தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினருக்குச் சமுதாய அடிப்படையில் பல எதிர்ப்புக்கள் இருந்து வருவதின் காரணமாக,தாழ்த்தப்பட்ட சமுதாயத்தில் படித்தவர்களுக்குக் கூட அரசாங்கத்தில் வேலை அளிக்க முடியவில்லை. உதாரணமாகத் தாழ்த்தப்பட்ட சமூகத் தைச் சார்ந்த ஒருவரை, ஒரு தடவை, தஞ்சாவூர் நகராண்மைக் கழகத் தலைவர், வி. எஸ். ராஜப்பா அவர்கள் விரும்பிய போதும்,

[1] See Mrs. Sarojini Naidu at the All India Non-Brahmin Conference in 1924, vide No. 23, The Dravidian, 30th Dec. 1924 in MNR 1925, Cl. page 46

[2] No. 31, The Swadesamitran, 1st Jan. 1926, MNR, Cl. p. 51

அச் சமூகத்தைச் சார்ந்த ஒருவரை அன்று ஓர் உதவி சர்ஜனாகத் தஞ்சாவூர் முனிசிபாலிட்டியில் நியமிக்க முடியவில்லை. ஆகவே, தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் சமுதாய முன்னேற்றம் அடைவது என்பது, இன்னும் வெகு தூரத்தில் இருக்கிறது என்று அம்மக்கள் கருதினர்.[1] 1924ஆம் ஆண்டு ஜுலை மாதம் காந்திஜி காங்கிரஸ் அங்கத்தினர்களுக்கிட்ட அறிக்கையில் ஐமுறைப் பகிஷ்கரிப்பை ஒத்துக் கொள்ளாதவர்கள், அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியில் அங்கம் வகிக்க யோக்கியதையற்றவர் எனக் கூறினர். இந்தியாவில் தேசத் தொண்டு செய்ய வேண்டுமென்று நினைப்பவர்கள் இத் திட்டத்தை ஒப்புக் கொள்ள வேண்டுமென அவர் வற்புறுத்தினர். அம் முறையின் சாராம்சமாவது : 'இந்து—முஸ்லீம் ஒற்றுமை, பொது மக்களின் பொருளாதார முன்னேற்றம், தீண்டாமை ஒழிப்பு, வெளி நாட்டுத் துணிகளைப் பகிஷ்கரிப்பது, பட்டம் பதவிகளைத் துறப்பது'. காந்திஜீயினுடைய கொள்கை சுயராஜ்ஜியம் என்பது எல்லா மக்களும், எல்லாத் துறையிலும், பூரண சுதந்திரம் அடைவது என்பதாகும்.[2] காந்தியைப் பொறுத்த அளவில்[3] இந்து மதத்தின் மாபெரும் கோட்பாடு தீண்டாமை என்பதாகும்.[4] மேலும், இந்துக்கள், உணர்வோடு தங்களைத் தாங்களே கொள்கை அடிப்படையில் மட்டுமல்லாமல், மனச் சுத்தத்தோடும், தீண்டாமையை ஒழித்தால் மட்டுமே, நாட்டிற்கு ஒரு வலிமை கிடைக்கும் என்றும், அவ்வலிமை மட்டுமே சுயராஜ்ஜியம் அடைவதற்குக் காரணமாக இருக்குமென்றும் அறிவித்தார். இந்தியர்கள் சக்தியற்றுக் கிடப்பதற்கு முக்கிய காரணம், இந்திய மக்கள் ஒருமைப்படுவதற்கு சக்தியற்று இருந்ததே எனக் கூறினர். மேலும், இந்தியர்களுக்குள் ஐந்து கோடி மக்கள் ஜாதிக்குப் புறம்பாகத் தீண்டாமையால் அவதிப் படுபவர்கள் நம் மக்களே என்பதை உணர்ந்தால் மட்டும்தான் நாம் ஒரே மக்களாக முடியும். இந்த ஒரு முக்கிய சுத்தி மட்டும்தான் இந்துக்களுக்கும், முஸ்லீம்களுக்குமுள்ள பிரச்சினையைத் தீர்த்து வைக்கும் எனவும் காந்திஜி கூறினர்.[5] மேலும், தீண்டாமையினுல் வெளிப்பட்ட இந்து-முஸ்லீம் பிரச்சினைகளிலும் பல குறைகளை ஏற்படுத்தின எனக் கூறினர். இந்து மதம் மிகவும் பின் தங்கிய ஒரு மத அமைப்பு என்றும், அம்

[1] Ibid
[2] No. 31, The pallitaru, 25th July 1924, MNR, Cl. page 1065
[3] C. p. Andrews, Mahatma Gandhi's ideas, including selections from his writings, (George, Allen and Unwin Ltd., London) 1930, page 165
[4] Ibid
[5] Ibid, pp. 172-173

மதம் மனிதர்களால் கட்டப்பட்ட பல குறுக்குச் சுவர்களினுல் காப்பாற்றப்பட்டு வருகிறது எனவும் கூறினர். இதற்கெல்லாம் மேலாகத் தீண்டாமை என்பது இந்து மதத்தின் ஓர் அம்ச மாயின், நான் ஓர் இந்து அல்ல எனவும் அறிவித்தார்.[1]

காந்திஜியின் சொற்பொழிவுகளில் தீண்டாமையை ஒழிப்ப தற்கு ஆற்றிய முக்கியமான சொற்பொழிவு, சென்னை மாகாணத் தில் அமைந்தது. ஏராளமான தீண்டாமையின் கோட்டைகள் இங்குத்தான் மிகவும் பலமாக அமைக்கப்பட்டிருந்தது. மலபாரி லும் திருவிதாங்கூரிலும் ஜாதிக்குப் புறம்பான மக்களைத் தொட்டால் தீட்டு ஏற்படும். ஆனல், சென்னையிலோ, அவர்கள் பக்கம் வந்தாலோ அல்லது பார்த்து விட்டாலோ கூடத் தீட்டு எனக் கருதப்பட்டது. தீண்டாமை வகுப்பினைச் சார்ந்தவர் களுடைய நிழல்பட்டால்கூடத் தீட்டு எனப் பார்ப்பனர் கருதினர். பிராமணர் அக்கிரஹாரங்களில் தாழ்த்தப்பட்டோர் நடக்க முடியாது. சென்னையில் இவர்கள் பஞ்சமர்கள் என அழைக்கப் பட்டார்கள். சென்னையில் எத்தனையோ கோவில்களும், மத நிறுவனங்களும் உள்ளன. மத சம்பிரதாயத்தை அனுசரிப்பவர் கள் மதக்கோட்பாட்டுக்கு ஏற்றவாறு உள்ள அடையாளங்களை இட்டு, ஆண்களும்கூடத் தலையில் கொண்டைவைத்து, உடம்பில் அதிக துணி இல்லாமல் ரிஷிகளைப் போல் காட்சியளித்தனர். ஆனல், அவர்களுடைய மத சம்பிரதாயங்கள் இந்த வெளிப் படைத் தோற்றங்களோடு, நின்று விடுவதாகத் தோன்றியது. தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களைக் கடுமையாக நடத்தியது 'பேய்த் தன்மை' (Satanic) எனக் காந்திஜீ குறிப்பிட்டார். என்றுலும், தென்னிந்திய மக்களிடையே தமக்கு நம்பிக்கை உண்டு என்றும், மக்கள் மத்தியிலுள்ள இப்பேர்ப்பட்ட கொடுமைகளை மாற்ருவிடில், அவர்களுக்குச் சுயராஜ்ஜியம் கிடைக்காது எனவும் கூறினர்.[2] இந்தியர்கள் ஐரோப்பிய நாடுகளில் குஷ்டரோகி யைப் போல நடத்தப்படுவதற்கு முக்கிய காரணம், இந்திய மக்களுள் ஒரு பாகம் மக்களை அவர்கள் கொடுமைப் படுத்துவது தான் எனக் குறிப்பிட்டனர். ஒத்துழையாமை என்பது ஆங்கிலேயர்களின் மன மாற்றத்திற்கு வேண்டி நடத்தும் ஒரு போராட்டம் எனவும், ஆனல், மனமாற்றம் இந்தியர் களிடையே மிகவும் தேவை எனவும் கூறினர். மாற்றம் என்பது இந்தியர்களுள் முதலில் ஏற்பட வேண்டும் என்றும், அம்மாற்றம்

[1] C. P. Andrews, Mahatma Gandhi's ideas, including selections from his writings, (George, Allen and Unwin Ltd., London) 1930 p. 174

[2] Ibid

ஆங்கிலேயர்களிடம் உடனடியாகப் பிரதிபலிக்கும் எனவும் குறிப்பிட்டார்.[1] இங்ஙனம், உள்ள ஒரு பெரிய மாற்றம் ஏற்படு மாயின், உலகத்திலுள்ள எந்தச் சக்தியும் இந்தியர்களுடைய உரிமையையோ, சுயராஜ்யத்தையோ பறிக்க முடியாது எனவும் கூறினர்.[2] தென்னுப்பிரிக்காவில் இந்தியாவிலுள்ள உயர்ந்த ஜாதியினர் கூட, ஜாதிக்குப் புறம்பானவர்களாக நடத்தப்பட்டு வருகின்றனர் என்ற உண்மையையும் காந்திஜி நினைவூட்டினர்.[3] தென்னுப்பிரிக்காவில் காந்திஜீ ஐரோப்பியக் கிறிஸ்தவர்களுடைய சபையில் ஒரு பறையராக நடத்தப் பட்டார், தீண்டாமையினுல் ஒதுக்கப்பட்ட மக்களை உயர்ந்த ஜாதியினர் அருவருப்போடு நடத்தியது, காந்திஜீயின் மனதைப் பெரிதும் புண்படுத்தியது. பிராமணரல்லா தவர்களில் சில உயர்ந்த ஜாதியினரும் தாழ்த்தப் பட்ட வகுப்பினர்களை இம் முறையில் நடத்தி வந்தனர். சுய ராஜ்யம் என்பது இந்திய மக்கள் கையிலேயே உள்ளது என்றும், தீண்டாமை என்பது இந்துக்களுக்கும், இந்துக்களுக்கும்-கிறிஸ் தவர்களுக்கும், இந்துக்களுக்கும்-முஸ்லீம்களுக்கும் பெரும் சமுதாயக் கசப்பை உண்டாக்கி உள்ளது எனக் காந்திஜீ கூறினர். தீண்டாமை ஒழிப்பின் மூலமாகவே இந்திய மக்கள் ஐக்கிய பாதையில் அழைத்துச் செல்லப்படுவார்கள் எனவும்; எல்லோரும் விரும்பும் ஜனநாயகத்தை அப்போதுதான் அடைய முடியும் எனக் குறிப்பிட்டார். 1929ஆம் ஆண்டு நடந்த, அடிமைப் படுத்தப்பட்டவர்களுடைய மாநாட்டில், காந்திஜீ பேசும்போது, சுயராஜ்யத்தினுடைய திறவுகோல் ஆங்கிலேய ரிடமோ அல்லது வைஸ்ராயிடமோ இல்லை என்றும், அச்சாவி இங்கிலாந்தில் இல்லை என்றும், அது இந்தியர்கள் கையிலேயே யுள்ளது எனவும் குறிப்பிட்டார்.[4] அடிமைத்தனத்தில் ஆக்கப் பட்ட இம்மக்கள் விடுதலை பெற்று அவர்கள் மற்றவர்களோடு சமமாகப் பழகும் வரையில் இந்தியாவுக்குச் சுதந்திரம் என்பது 'எடுபடாத பிரச்சினையாக' இருக்கும் எனக் கூறினர்.

1930ஆம் ஆண்டு மலபாரிலுள்ள ஆதிதிராவிடர்கள் அங்குள்ள மாவட்டக் கல்வி அதிகாரிக்குத் தங்கள் குழந்தைகளை ஆண்டலூர் மேல் ஆரம்பப் பள்ளியில் அனுமதிக்க வேண்டும் எனக் கேட்டனர். அவ்வாறு, அவர்கள் அனுமதிக்காவிடில் குழந்தைகளைப் படிப்பிப்பதற்குப், பெற்றோர்கள், கிறிஸ்தவ மதத்திலோ அல்லது முஸ்லீம் மதத்திலோ சேர்ப்பதுதான்

[1] Vide C. F. Andrews, op. cit. p. 176
[2] Ibid page 177
[3] Ibid page 178
[4] No. 4. The Swarajya, 27th Dec. 1929, MNR. Cl. 1930, P. 5

மறுவழி எனக் கருதினர். தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்தவர்கள் அநேகர் கிறிஸ்துவ மதத்தைத் தழுவினர். மலபாரைச் சார்ந்த தீயர்கள் இந்து மதத்திலிருந்து பிரிந்து எந்த மதத்திலும் தொடர்பு கொள்ளாமல் தாங்களே ஒரு தனிச் சமுதாயத்தை ஆரம்பிக்க எண்ணினர். இவர்கள் 'சுதந்திர சமுதாயம் ஒன்றை யமைக்கப் பெரிதும் முயற்சி செய்தனர்.[1] இந்து மதத்தில் தொடர்ந்து இருந்து வருவது அவர்களுக்கு நன்மை பயக்கவில்லை என்றும், ஆனல், தீமைகள் தருவதற்குக் காரணமாக இருந்தது என்றும் கருதினர்.

சென்னையில் 1926ஆம் ஆண்டிலிருந்து சுய மரியாதை இயக்கம் பிராமணரல்லாதவர்களிடையேயும், தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினர்களிடையேயும் பெரும் புரட்சியை உண்டாக்கியது. ஜாதியையும், மதத்தையும், இனத்தையும், வேகத்தையும், சாஸ்திரத்தையும் பற்றி அநேக கேள்விகளை மக்கள் எழுப்பினர்.[2] மக்களைப் பிரித்து வைப்பவர்கள் பிராமணர்கள் எனத் தாழ்த்தப்பட்டவர்களும், பிராமணரல்லாதவர்களும் கருதினர். மதத்திலுள்ள கொடுமைகளும், மத ஐதீகங்களும், ஜாதிகளும், இனங்களும் ஒழிய வேண்டுமென எல்லோரும் விரும்பினர். இப்படிப்பட்ட கருத்துக்கள் இந்தியாவில் நிலவிய போதுதான், ஜெனரல் ஸ்மட்ஸ் என்பவா இந்தியர்களின் ஆத்திரத்திற்கு ஆங்கிலேயர்கள் அனுமதி அளிக்க வேண்டும் என்றும், பகுத்தறிவுற்ற நோக்குக்கு அறிவை அளிக்க வேண்டுமென்றும், முடிவில் டொமினியன் அந்தஸ்தும், சுயராஜ்யமும் அவர்களுக்கு நாம் வழங்க வேண்டுமென்றும் குறிப்பிட்டார்.[3] 1930ஆம் ஆண்டு ஜனவரி 26ஆம் தேதி இந்தியாவினுடைய சுதந்திரக்கொடி இந்திய மண்ணில் நாட்டப்பட்டது. இதைக் குறிப்பிட்டு லாயிட் ஜார்ஜ் அவர்கள், இந்தியாவுக்கு டொமினியன் அந்தஸ்தைக் கொடுப்பதை விடப் பூரண சுதந்திரம் கொடுப்பது நல்லது என்று தாம் கருதுவதாகவும், ஆனல், அதற்குக் காலம் அடுத்து வரவில்லையெனவும் குறிப்பிட்டார். இதைத் தொடர்ந்து ரசல் துரை தம் கருத்தைத் தெரிவிக்கும்போது, இவ் விரண்டுமே' இந்தியர்களுக்கு, அண்மையில் அளிக்க வாய்ப்பில்லை எனக் கூறினர்.[4]

[1] Public General Department, 1935, G. O. No. 1120, 8th July 1935

[2] Government of Madras, Public General Department, G. O. Ms. No. 58, 10th January 1935

[3] No. 5, the Hiudu, 6th January, 1920, MNR. Cl. p. 41

[4] 31, The Andhra patrika, 18th January 1930 MNR Cl. p. 137

# 4

## தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களின் கோரிக்கைகள்

### தனி வாக்காளர் பட்டியல் - சுதந்திரம் உடனே தேவையில்லை

1930ஆம் ஆண்டு பம்பாய் அரசாங்கம் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினுடைய நிலையைக் குறித்து ஒரு தணிக்கையை வேண்டியது. மக்கள் சமுதாயத்தின் ஒரு முக்கிய பகுதியை என்றென்றும் அடிமைப் படுத்தி வைப்பது, தேசத்தின் முற்போக்கைப் பெருமளவு பாதிக்கும் என அரசாங்கம் அறிவித்தது. உண்மையில் சென்னையில்தான் தீண்டாமையினுடைய கோரக் காட்சிகள் காணப்பட்டன என்றும், இருந்தபோதிலும், முதலடியாகத் தீண்டாமை ஒழிப்பு பம்பாயில் ஏற்பட வேண்டுமெனப் பம்பாய் அரசாங்கம் கூறியது.[1] ஆனால், சென்னையில், 1914ஆம் ஆண்டிலிருந்தே, தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினர் வீடு கட்டுவதற்கும், ஆரம்பப் பள்ளிகள் ஆரம்பிப்பதற்கும், புறம்போக்கு பூமிகள் தானமாக அரசாங்கத்தால் விட்டுக் கொடுக்கப்பட்டன. 1930ஆம் ஆண்டு ஜனவரி மாதம் சென்னையில் ஸ்தல ஸ்தாபன போர்டுகளைப் பற்றிய மசோதா விவாதிக்கப்பட்டபோது திரு. சி. இ. உட்ஸ் அவர்கள் ஒரு திருத்தப் பிரேரணையைக் கொண்டு வந்து, தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்குத் தனி வாக்காளர் பட்டியல் வேண்டும் எனக் கேட்டார். சைமன் கமிஷன் இந்தியா வந்தபோது, ஜாதி மதங்களுக்குத் தனி வாக்காளர் பட்டியல் வேண்டுமென்று சிபாரிசு செய்ததைச் சுட்டிக் காட்டினர். அவர்கள், இத் திருத்தப் பிரேரணையையும் ஆதரித்தனர். இத் திருத்தப் பிரேரணை ஆதரிக்கப்படுமாயின், தாழ்த்தப்பட்டவர்களுக்கு ஸ்தலஸ்தாபன போர்டுகளில் தனிப் பிரதிநிதித்துவம் கிடைக்கும் என வாதாடினர். என்றாலும், அத் திருத்தப் பிரேரணை பெருவாரியான ஓட்டுக்கள் பெறவில்லை.[2]

1930ஆம் ஆண்டு, மார்ச் மாதம் சென்னையில், மாகாணத் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் கூட்டணி, திருப்பாதிருப்புலியூரில் கூடியது.[3] தங்கள் சமுதாயம் முன்னேறுவதற்குக் கவர்னருடைய நிர்வாகசபையில் ஓர் அங்கத்தினர், தாழ்த்தப்பட்ட வகுப்பினரிடையேயிருந்து நியமிக்கப்பட வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார். பெருவாரியான விவசாயத் தொழிலாளர்களாகச் சென்னை மாகாணத்தில் வேலை செய்து வந்த தாழ்த்தப்

[1] No. 36, The Navayuga, 23rd January 1930, MNR. Cl. p. 209
[2] No. 40, The Swedesamitran, 30th January, MNR. Cl. p. 210
[3] Nirupendranath Mitra, op. cit. 1930, Vol. I, p. 359

பட்டோருடைய இக் கோரிக்கை நியாயமானது எனச் சென்னை பத்திரிகைகள் கூறின. அதுபோலவே ஸ்தல ஸ்தாபன போர்டுகளிலும், நகராண்மைக் கழகங்களிலும், தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்குத் தனி வாக்காளர் பட்டியல் வேண்டுமெனக் கேட்டனர். அன்றுள்ள பொருளாதார நிலையில், தாழ்த்தப்பட்டோருடைய ஓட்டுக்களெல்லாம் ஒரு பானை கள்ளுக்கு விற்கப்பட்டது என்றும், பொது வாக்காளர் தொகுதிகளில் தாழ்த்தப்பட்டவர்களுக்குப் பிரதிநிதித்துவம் கிடைக்காது எனவும் கூறினர். தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைப் பொறுத்த வரையில், 'பொது வாக்காளர் பட்டியல்' என்று கூறுவது 'தாழ்த்தப்பட்டவர்களை ஏமாற்றும் கொள்கையாகவே' அம் மக்கள் கருதினர்.[1]

தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினரின் பொதுக்கூட்டம் ஒன்றில் பேசும்போது, நடேச முதலியார்[2] அவர்கள், அம் மக்கள் எத்தனையோ நூருண்டு காலமாகத் தூங்கி விட்டனர் என்றும், அத் தூக்கத்திலிருந்து அவர்களை எழுப்புவது பெரும் பிரச்சினை என்றும், என்ருலும், அனுதாபமுள்ளவர்கள் அம்மக்கள் விழிப்படைய உதவி செய்ய வேண்டும் என்றும் குறிப்பிட்டார். மேலும் பேசுகையில், என் சகோதரர்களே! நாடு உங்களை விரும்புகின்றது எனக் குறிப்பிட்டார்.[3] அவர் அம் மக்களை எழுப்பி, இந்தியாவிற்கு டொமினியன் அந்தஸ்து வரவிருக்கிறது என்றும், அவர்களுடைய பின் தங்கிய நிலைமையினுல் இந்தியா சுயராஜ்யம் பெறுவதற்கு ஏற்ற ஒரு நாடாகக் கருதப்பட வில்லை என்றும் துயரத்தோடு கூறினர். பிராமணரல்லாதவர்கள் அத்தனைப் பேருமே இந்தத் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களை முன் கொண்டு வருவது அவர்களுடைய கடமை என்பதை உணர்த்தினர். அத் தாழ்த்தப் பட்ட சமுதாயத்திலுள்ள குழந்தைகளைப் பிடிப்பதுதான் உடனடியான வேலை என்றும், சுத்தமான ஒரு வாழ்க்கை நடத்துவதற்கு வழி வகுக்க வேண்டுமென்றும், குடித்து வரும் வாழ்விலிருந்து அவர்களுக்கு விடுதலை அளிக்க வேண்டுமென்றும் கூறினர்.[4] இந்திய மக்களின் ஒரு பாகம், இந்திய சமுதாய அமைப்பிற்குள்ளாகவே தங்கள் உரிமைகள் கிடைப்பதற்குப் போராடும்போது இந்தியா சுயராஜ்யம் அடைய வேண்டுமென்று கேட்பது முன்னுக்குப் பின் முரணான கருத்தாகவே அரசியல் வட்டாரங்கள் கருதின. குறிப்பாக

1 Ibid
2 Ibid
3 No.12, Aindravati, 27th June 1930, MNR.Cl.P.1030
4 Ibid

மேன்செஸ்டர் கார்டியன் போன்ற பத்திரிகைகள், இக்கருத்தைச் சுட்டிக்காட்டி, இந்தியர்கள் தங்களைத் தாங்களே ஆள்வதற்குத் தகுதியுள்ளவர் என நிரூபிக்க வேண்டுமென்றும், அல்லது ஆங்கிலேயர்கள் இந்தியாவை ஆட்சி செய்வதற்குத் தகுதியற்றவர்கள் என நிரூபிக்க வேண்டுமென்றும் வாதப்பிரதிவாதம் செய்தது.[1]

## 5

## 1935-ஆம் ஆண்டுச் சீர்திருத்தத்திற்கு வேண்டிய அபிப்பிராயங்களும் தாழ்த்தப்பட்ட சமூகத்தினருக்குத் தனிப்பிரதிநிதிதுவம் வழங்கப்பட்ட உண்மையும் வகுப்புவாதப் பிரதிநிதித்துவம் ஏன்?

### தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்குத் தனி வாக்காளர் பட்டியல்

இந்திய சமுதாய அமைப்பில் தன்மையை உணர்ந்த இந்திய நிர்வாக சீர்திருத்தக் கமிஷன்,[2] தீண்டாமையினுல் பாதிக்கப்பட்ட சமுதாயத்தினருக்கு, எலலாச் சட்டசபைகளிலும் பிரதிநிதித்துவம் அளிக்க வேண்டுமெனத் தங்கள் தணிக்கையில் கூறியது. சமுதாயத்தின் நிலேயை உணர்ந்த பலரும், சைமன் கமிஷனுடைய தணிக்கையில் குறிப்பிட்ட சிபாரிசை நிராகரிக்க முடியவில்லே. முஸ்லீம்கள் ஜாதிமத அடிப்படையில் கொடுக்கப்பட்ட பிரதிநிதித்துவம் தங்களுக்குக் கிடைத்த மாபெரும் வெற்றி எனக் கருதினர். அவர்கள ஜனத்தொகையின் அடிப்படையில் நான்கில் ஒரு பகுதி உள்ளத்ன் காரணமாகத் தனிப் பிரதிநிதித்துவம் கிடைத்தது பற்றி அரசியல், சமுதாய அடிப்படையில் தங்களுக்குப் புதிய பலம் அமைந்தது எனக் கருதினர்.[3] அதுபோலவே சைமன் கமிஷனுடைய தணிக்கை, தீண்டப்படாத வகுப்பினர்களுக்கு மிகவும் திருப்தியை ஊட்டியது. தீண்டாமை வகுப்பினர்களேக் குறிப்பிட்டுச் சீர்திருத்தக்கமிஷன் குறிப்பிட்டதாவது: 'அவர்களுக்கெனத் தனியாக அளிக்கப்பட்ட பிரதிநிதித்துவமும். தனிப்பட்ட வாக்காளர் பட்டியலும், அவர்கள் சமுதாயத்தில் தங்கள் உரிமைகளேப் பெறுவதற்கு நிச்சியமாக உதவி செய்யும்.

சட்டசபைகளில் ஐந்து முதல் 10 சதவிகிதம் வரை தொகுதிகள் பெண்களுக்காக ஒதுக்க வேண்டும் என்றும், சைமன் கமிஷன் சிமாரிசு செய்தது. ஆறு மாகாணங்களில், சைமன்

[1] Ibid,
[2] No. 14 The Kudi Arasu, 29th June 1630, MNR.Cl.P.1031
[3] Idid

கமிஷன் சிபாரிசின் அடிப்படையில், முஸ்லீம்களுக்குத் தனி வாக்காளர் பட்டியல் கொடுப்பதற்கு உரிமை வழங்கப்பட்டது.[1] அரசாங்கம் ஜாதிமதப் பிரதிநிதித்துவத்தின் அடிப்படையில் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினருக்குத் தனி வாக்காளர் பட்டியல் கொடுத்தது. வட்டமேஜை மாநாட்டின் அடிப்படையில் எடுத்த முடிவில், இந்தியாவிலுள்ள சகல வகுப்பினர்களுக்கும், சுதேச சமஸ்தானங்களுக்கும், அகில இந்தியக் கூட்டாட்சியில் பிரதி நிதித்துவம் வழங்க அரசாங்கம் முன் வந்தது. இந்தியச் சரித்திரத்தில், இந்திய சமஷ்டி அரசாங்கம் ஓர் மகத்தான மாற்றத்தை ஏற்படுத்த இருப்பதின் காரணமாக, ஆங்கில அரசாங்கம் எல்லா வகுப்பினர்களுக்கும் அவ்வரசில் பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டும் என்பதைத் தீவிரமாகக் கருதியது [2]

1930ஆம் ஆண்டு பாராளுமன்ற அங்கத்தினர்களிடையே சொற்பொழிவாற்றிய ஸ்ரீனிவாச சாஸ்திரி இந்திய சமுதாயத்தைத் திருத்தியமைக்கும் பணியை இந்தியர்களிடம் விட்டுவிட வேண்டுமென்றும், இந்தியாவின் பிற்காலத்தை அதன் விதி போல நடக்க ஆங்கிலேயர்கள் அனுமதிக்க வேண்டுமென்றும் கூறினர். ஆனல், இந்திய சமுதாயத்தில் மதங்களுக்கும், ஜாதிகளுக்குமுள்ள சண்டை சச்சரவுகளை அன்றுவரை இந்தியர்கள் தீர்வு காணுததின் காரணமாகவே ஆங்கிலேயர் சமுதாய அமைப்பில் தலையிட நேர்ந்தது.[3] வட்டமேஜை மாநாட்டின் போது கூடச் சாப்ரூ அவர்கள் தனிப்பட்ட வாக்காளர் பட்டியல் என்பது இந்தியாவிற்கு டொமினியன் அந்தஸ்து கொடுக்கும் கொள்கைக்கு விரோதமானது எனக் குறிப்பிட்டார்.[4] ஆனல், சமுதாய அடிப்படையை மாற்றுவதற்காகச் சென்னை மாகாணத்தைப் பொறுத்த அளவில் மாகாண அரசாங்கம் தாழ்த்தப்பட்டவர்களுடைய நலன் கருதி, ஒவ்வொரு தனித் தொழிலாளர் இலாக்காவை ஆரம்பித்துத் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் முற்போக்கடைய அவர்களுக்கு நலன்களைச் செய்து வந்தனர். கல்வி அடிப்படையில் தாழ்த்தப்பட்ட சமூகத்தினருக்கு ஏற்பட்ட தடைகளின் காரணமாக அரசாங்கமே அச் சமூகத்தினர்களுக்குத் தனிப் பள்ளிகள் ஆரம்பித்தது.[5] சமுதாயத்திலும், அரசியலிலும்

1 No. 14, The Kudi Arausu, 29th June, 1930, MNR. Cl. P.1031
2 See Wedgewood Benu No.1, The Hindu, 16ih July 1930, MNR.Cl. Pl.1051
3 See No.11, The Mitavadi, 7th July 1930, MNR. Cl.p.1093
4 No.14, The Dravidian, 6th January 1931,MNR.Cl.p.75
5 No.15, The Mathurbhumi, 23rd January 1932, MNR.Cl.p.161

தாழ்த்தப்பட்டவர்களுக்குப் பாதுகாப்பு தேவையாக இருந்த காலம் அது.

ஆங்கில அரசாங்கம் அரசியல் அடிப்படையில் வகுப்புவாதப் பிரதிநிதித்துவமும், தாழ்த்தப்பட்ட சமூகத்தினருக்குத் தனி வாக்காளர் பட்டியலும் கொடுத்த போது இச்சலுகைகள் சமுதாயத்தில் பல புதிய கருத்துக்களையும், சக்திகளையும் உருவாக்கிச் சமுதாய அடிப்படையில், புதிய கருத்துக்கள் ஏற்படப் பெரிதும் உதவியது. உதாரணமாக 1932ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் 'குருவாயூர்' கோவிலில் வழிபாடு நடத்த அவர்களுக்கு அனுமதி வேண்டுமென அரசாங்கத்தைத் தைரியமாகக் கேட்டனர்; அவர்களுடைய முயற்சியில் கேழப்பன் தீவிரமாகப் பங்கு கொண்டார். தாழ்த்தப்பட்டோர், உயர்ந்த ஜாதியினர்களிடையே ஒரு பெரும் மனமாற்றம் ஏற்படச் சத்தியாக்கிரகம் செய்யவும் முன் வந்தனர்.[1] அதுபோன்று 1932ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் அவர்கள் நாசுக்கிலுள்ள 'காலவாமன்' கோவிலினுள் சென்று இறைவழி பாட்டிற்கு முயற்சி செய்தனர். ஆனால், அங்குள்ள ஜில்லா அதிகாரி. கோவிலிலிருந்து 300 அடிக்குள் அவர்கள் பிரவேசிக்கக் கூடாது என்று தடை விதித்தார். அதுபோலவே 'வைக்கத்திலும்' கோவிலின் 180 அடிக்குள் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் உள்ளே செல்லக்கூடாது எனத் தடை விதிக்கப் பட்டது, இப்படியாகக் கோவிலினுள் பிரவேசிக்கும் ஒரு மனப்பான்மை, சமுதாயத்தில் ஏற்பட்ட ஒரு முற்போக்கு இயக்கம் எனவே, கருத வேண்டும்.[2] சமூகத்தில் ஒரு புதிய வேகம் ஏற்படுவதற்குக் காரணம், தாழ்த்தப்பட்ட சமூகத்தினருக்குக் கொடுக்கப்பட்ட அரசியல் உரிமைகளேயாகும். உண்மையில், அவர்களுக்குக் கிடைத்த சலுகைகள் ஒரு சமுதாயப் புரட்சி மட்டுமல்லாமல், ஒரு மதப் புரட்சியையும் உண்டாக்குவது. இதன் எதிரொலிகள் சென்னை மாகாண சட்டசபையில் பிரதிபலித்தது. 1932 ஆம் ஆண்டு ஆர்.கே.ஷண்முகம் செட்டி அவர்கள் சட்டசபை முன்பு இரண்டு மசோதாக்கள் கொண்டு வந்தார். முதல் மசோதா தீண்டாமையை ஒழிக்க வேண்டும் என்றும், இரண்டாவது மசோதா இளம் பெண்களைக் கோவில்களுக்கு அர்ப்பணிக்கும் வழக்கத்தைத் தடைசெய்ய வேண்டும் என்பதாகும்.[3]

1932ஆம் ஆண்டு, பிப்ரவரி மாதம் லோதியன் கமிட்டி (Lothian Committee) சென்னை மாகாணத்திற்கு விஜயம் செய்த

[1] No. 28, The Mathurbhumi, 4th February 1932, MNR. Cl. p.204
[2] Ibid
[3] No. 28, Pormurasu, 27th January 1932, MNL. Cl. p.205

போது, ஆதி திராவிடர்கள் தங்களுக்குத் தனி வாக்காளர் பட்டியல் வேண்டும் எனக் கேட்டுக் கொண்டனர். அது போலவே டாக்டர் அம்பேத்கார் அவர்களும் தீண்டாமையால் பாதிக்கப்பட்ட சமூகத்தினருக்குத் தனிப் பிரதிநிதித்துவமும், தனி வாக்காளர் பட்டியலும் வேண்டுமென்ற வேண்டுகோளைக் கேட்பதில் தீவிரமாக இருந்தார். சென்னையில் டாக்டர் பன்னீர் செல்வம், டாக்டர் அம்பேத்காரின் வேண்டுகோள் நியாயமானது எனக் கூறி அவருக்குத் துணை புரிந்தார். வட்டமேஜை மாநாட்டில் கலந்து கொள்ளாத எம்.சி.ராஜா அவர்கள், தாழ்த்தப்பட்ட சமூகத்தினருக்குச் சட்டசபைகளில் ஒதுக்கும் இடங்களே போதுமானது எனக் கருதினர். ஆனால், தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் வேண்டுகோளுக்கிணங்கச் சென்னை அரசாங்கத்தாரால் நியமனம் செய்யப்பட்ட வாக்குரிமைக் கமிட்டி, முஸ்லீம்களுக்கும் 29 தொகுதிகள், கொடுக்க வேண்டுமென நிச்சியம் செய்தது. பொதுவாக இந்திய சமுதாயத்தினர் மட்ட மேஜை மாநாட்டில் தங்களுள் ஒருவிதமான முடிவிற்கும் வராததின் காரணமாகவே, ஆங்கில அரசாங்கம் வகுப்புவாதப் பிரதிநிதித்துவத்தைப் பற்றி முடிவு செய்தது.[1] மாகாண சட்டசபைகளில் அவர்கள் ஒதுக்கிய தொகுதிகள் விவரம் இங்குக்கொடுக்கப் பட்டுள்ளது.

சென்னையைப் பொறுத்தமட்டில் தொகுதிகளின் விவரம்[2]

| | | |
|---|---|---|
| பொதுத் தொகுதிகள் (ஆறு பெண்கள் உட்பட) | .... | 134 |
| தாழ்த்தப்பட்ட சமூகத்தினருடைய தொகுதிகள் | .... | 18 |
| பின் தங்கிய வகுப்பினர்கள் இடம் | .... | 1 |
| முகமதியர்கள் (ஒரு பெண் உட்பட) | .... | 29 |
| இந்தியக் கிறிஸ்தவர்கள் (ஒரு பெண் உட்பட) | .... | 9 |
| ஆங்கிலோ இந்தியர்கள் | ... | 2 |
| ஐரோப்பியர்கள் | .... | 3 |
| வியாபாரம், தொழில், சுரங்கம், தோட்டம் முதலிய தொகுதிகள் | .... | 6 |
| நிலச்சுவான்தார்கள் | .... | 6 |
| பல்கலைக்கழகங்கள் | .... | 1 |
| தொழிலாளிகள் | .... | 6 |
| மொத்த தொகுதிகள் | .... | 215 |

[1] Vide R. R. Sethi & V. D. Mahajan, (Op. cit)
[2] The Indian Annual Register, Volume II, July - Dec. 1932 The Communal Award, page 236.

பம்பாய் (சிந்து உட்பட) தொகுதிகளின் விவரம்[1]

| | | |
|---|---|---|
| பொதுத் தொகுதிகள் (5 பெண்கள் உட்பட) | ... | 97 |
| பின் தங்கிய வகுப்பினர்கள் இடம் | ... | 1 |
| முகமதியர்கள் (ஒரு பெண் உட்பட) | ... | 63 |
| இந்தியக் கிறிஸ்தவர்கள் | ... | 3 |
| ஆங்கிலோ இந்தியர்கள் | ... | 2 |
| ஐரோப்பியர்கள் | .... | 4 |
| வியாபாரம் முதலியன | ... | 8 |
| நிலச்சுவான்தார்கள் | ... | 3 |
| பல்கலைக்கழகங்கள் | .... | 1 |
| தொழிலாளர்கள் | ... | 8 |
| தாழ்த்தப்பட்ட சமூகத்தினருடைய தொகுதிகள் | | 10 |
| மொத்த தொகுதிகள் | | 200 |

வங்காளத் தொகுதிகள் விவரம்[2]

| | | |
|---|---|---|
| பொதுத் தொகுதி (2 பெண்கள் உட்பட) | .... | 80 |
| தாழ்த்தப்பட்ட சமூகத்தினருடைய தொகுதிகள் | .... | குறிப்பிடவில்லை |
| முகமதியர்கள் (2 பெண்கள் உட்பட) | .... | 119 |
| இந்தியக் கிறிஸ்தவர்கள் | ... | 2 |
| ஆங்கிலோ இந்தியர்கள் (ஒரு பெண் உட்பட) | ... | 4 |
| ஐரோப்பியர்கள் | ... | 11 |
| வியாபாரம் முதலியன | ... | 10 |
| நிலச்சுவான்தார்கள் | ... | 5 |
| பல்கலைக்கழகங்கள் | .... | 2 |
| தொழில் | ... | 8 |
| மொத்த தொகுதிகள் | | 250 |

ஐக்கிய மாகாணங்களின் தொகுதி விவரங்கள்[3]

| | | |
|---|---|---|
| பொதுத் தொகுதிகள் (4 பெண்கள் உட்பட) | ... | 132 |
| தாழ்த்தப்பட்ட சமூகத்தினருடைய தொகுதிகள் | | 12 |
| முகமதியர்கள் (2 பெண்கள் உட்பட) | ... | 66 |
| இந்தியக் கிறிஸ்தவர்கள் | | 2 |

[1] Ibid Page 236
[2] Ibid
[3] Ibid P. 236

| | | |
|---|---|---|
| ஆங்கிலோ இந்தியர்கள் | .... | 1 |
| ஐரோப்பியர்கள் | .... | 2 |
| வியாபாரம் முதலியன | .... | 3 |
| நிலச்சுவான்தார்கள் | .... | 6 |
| பல்கலைக்கழகங்கள் | .... | 1 |
| தொழில் | .... | 3 |
| மொத்த தொகுதிகள் | .... | 228 |

பஞ்சாப் தொகுதிகளின் விவரங்கள்[1]

| | | |
|---|---|---|
| பொதுத் தொகுதிகள் (ஒரு பெண் உட்பட) | .... | 43 |
| சீக்கியர்கள் (ஒரு பெண் உட்பட) | .... | 32 |
| முகமதியர்கள் (இரண்டு பெண்கள் உட்பட | .. . | 2 |
| ஆங்கிலோ இந்தியர்கள் | .... | 1 |
| ஐரோப்பியர்கள் | .... | 1 |
| வியாபாரம் முதலியன | ... | 1 |
| நிலச்சுவான்தார்கள் | ... | 5 |
| பல்கலைக்கழகங்கள் | .... | 1 |
| தொழில் | .... | 3 |
| மொத்த தொகுதிகள் | ... | 175 |

பீகார், ஒரிஸ்ஸா தொகுதிகளின் விவரங்கள்[2]

| | | |
|---|---|---|
| பொதுத் தொகுதிகள் (3 பெண்கள் உடபட) | .... | 99 |
| தாழ்த்தப்பட்ட சமூகத்தினருடைய தொகுதிகள் | ... | 7 |
| பின் தங்கிய வகுப்பினர்கள் இடம் | ... | 8 |
| முகமதியர்கள் (ஒரு பெண் உட்பட) | .... | 42 |
| இந்தியக் கிறிஸ்தவர்கள் | .... | 2 |
| ஆங்கிலோ இந்தியர்கள் | .... | 1 |
| ஐரோப்பியர்கள் | ... | 2 |
| வியாபரரம் முதலியன | .... | 4 |
| நிலச்சுவான்தார்கள் | .... | 6 |
| பல்கலைக்கழகங்கள் | ... | 1 |
| தொழில் | ... | 4 |
| மொத்தத் தொகுதிகள் | .... | 176 |

[1] Ibid
[2] Ibid P. 236

**அஸ்ஸாம் தொகுதி விவரம்**[1]

| | | |
|---|---|---|
| பொதுத் தொகுதிகள் (ஒரு பெண் உட்பட) | ... | 44 |
| தாழ்த்தப்பட்ட சமூகத்தினருடைய தெரகுதிகள் | ... | 4 |
| பின்தங்கிய வகுப்பினர்களின் இடம் | .... | 9 |
| முகமதியர்கள் | .... | 34 |
| இந்தியக் கிறிஸ்தவர்கள் | ... | 1 |
| ஐரோப்பியர்கள் | .... | 1 |
| வியாபாரம் முதலியன | .... | 11 |
| தொழில் | .... | 4 |
| மொத்த தொகுதிகள் | .... | 108 |

**மத்திய மாகாணங்களின் தொகுதி விவரம் (பீகார் உட்பட)**[2]

| | | |
|---|---|---|
| பொதுத் தொகுதிகள் [3 பெண்கள் உட்பட) | .... | 77 |
| தாழ்த்தப்பட்ட சமூகத்தினருடைய தொகுதிகள் | ... | 10 |
| பின்தங்கிய வகுப்பினர்களின் இடம் | .... | 1 |
| முகமதியர்கள் | ... | 14 |
| ஆங்கிலோ இந்தியர்கள் | .... | 1 |
| ஐரோப்பியர்கள் | .... | 1 |
| வியாபாரம் முதலியன | ... | 2 |
| நிலச்சுவான்தார்கள் | .... | 3 |
| தொழில் | ... | 1 |
| பல்கலைக்கழகங்கள் | .... | 2 |
| மொத்த தொகுதிகள் | | 112 |

**வடமேற்கு எல்லையிலுள்ள மாகாணங்களில் தொகுதி விவரம்**[3]

| | | |
|---|---|---|
| பொதுத் தொகுதிகள் | ... | 9 |
| சீக்கியர்கள் | .... | 3 |
| முகமதியர்கள் | .... | 86 |
| நிலச்சுவான்தார்கள் | ... | 2 |
| மொத்த தொகுதிகள் | | 100 |

Ibid
Ibid p. 23
Ibid

பம்பாய் (சிந்து இல்லாமல்) தொகுதி விவரம்[1]

| | | |
|---|---|---|
| பொதுத்தொகுதிகள் (5 பெண்கள் உட்பட) | .... | 109 |
| தாழ்த்தப்பட்ட சமூகத்தினருக்குத் தொகுதிகள் | .... | 10 |
| பின் தங்கிய வகுப்பினர்கள் இடம்1 | .... | 1 |
| முகமதியர்கள் (ஒரு பெண் உட்பட) | ... | 30 |
| இந்தியக் கிறிஸ்தவர்கள் | .... | 3 |
| ஆங்கிலோ இந்தியர்கள் | .... | 2 |
| ஐரோப்பியர்கள் | ... | 3 |
| வியாபாரம் முதலியன | .... | 7 |
| நிலச்சுவான் தார்கள் | .... | 2 |
| பல்கலைக்கழகங்கள் | . | 1 |
| தொழில் | .... | 7 |
| மொத்த தொகுதிகள் | .... | 175 |

சிந்து தொகுதி விவரம்[2]

| | | |
|---|---|---|
| பொதுத் தொகுதிகள் (ஒரு பெண் உட்பட) | ... | 19 |
| முகமதியர்கள் (ஒரு பெண் உட்பட) | .... | 34 |
| ஐரோப்பியர்கள் | ... | 2 |
| வியாபாரம் முதலியன | .... | 2 |
| நிலச்சுவான் தார்கள் | ... | 2 |
| தொழில் | ... | 1 |
| மொத்த தொகுதிகள் | | 60 |

மேலும் ஆங்கில அரசாங்கம் தங்கள் அறிக்கையில் குறிப்பிட்டதாவது: தாழ்த்தப்பட்ட சமூகத்தினருக்குப் பொதுத் தொகுதிகளில் ஓட்டளிக்க, வாய்ப்பிருந்த போதிலும், இச்சமூகத்தினர், இந்த ஒரு வாய்ப்பினுல் மட்டும் தங்களுக்கு வேண்டிய பிரதிநிதித்துவத்தைச் சட்டசபைகளில் தேடிக்கொள்ளமாட்டார்கள். ஆகவே, தனிப்பட்ட இடங்கள் சட்டசபையில் அவர்களுக்கு எல்லா மாகாணங்களிலும் ஒதுக்கப்பட்டன என்று கூறியது. இப்படியாகச் சென்னையில் 18 இடங்களும், பம்பாயில் பின் தங்கிய வகுப்பினர்களுக்கு 200 இடங்களுள்ள சட்டசபையில் 10 இடங்களும், ஐக்கிய மாகாணத்தில் 228 இடங்களுள்ள

[1] Ibid p 236
[2] Ibid

சட்டசபையில் 12 இடங்களும், பீகார், ஒரிஸ்ஸா ஆகிய மாகாணங்களில் 176 இடங்களில் 7 இடங்களும், மத்திய மாகாணத்தில் 112 தொகுதிகளில் 10 இடங்களும், அஸ்ஸாமில் 108 இடங்களில் 4 இடங்களும் ஒதுக்கப்பட்டன. அதுபோலவே முகமதியர்களுக்கும், சீக்கியர்களுக்கும், குறைந்தபட்ச சமுதாயத்தினருக்கும் எல்லா மாகாணங்களிலும் இடங்கள் ஒதுக்கப்பட்டன.[1]

இந்திய அரசியல் சீர்திருத்தத்தின் வழியாக இந்தியாவிலுள்ள ஜாதிமதங்களுக்குச் சமுதாய அடிப்படையிலும், மத அடிப்படையிலும் மாறுதல்ஏற்படுத்துவதற்கு ஆங்கில அரசாங்கம் எடுத்துக் கொண்ட முயற்சிகள் போற்றத் தக்கதாகும். 1913ஆம் ஆண்டு பின்தங்கிய வகுப்பினர்களுடைய பிரதிநிதிகளிடம் பேசும்போது, நீதிபதி மில்லர் என்பவர், இந்திய சமுதாயத்தில் உயர்ந்த ஜாதியினர் சமுதாயத்தைச் சீர்திருத்த முன் வராவிடில் இந்தியாவை ஆளும் வெளி நாட்டினர் இச் சீர்திருத்தங்கள் கொண்டு வருவதற்கு ஏதுவான நடவடிக்கைகள் எடுக்க நேரிடுமென்றும், அதில் உயர்ந்த சமூகத்தினருக்கு அபாயமுண்டு என்றும் எச்சரித்தார்.[2] அதுபோலவே மில்லருடைய எச்சரிக்கையின்படி, தாழ்த்தப்பட்ட சமூகத்தினர்களை முன்னேற்ற ஆங்கிலேயர்களே அரசியல் அடிப்படையில் நடவடிக்கை எடுத்தனர். மில்லருடைய கருத்தாவது: 'வெளி நாட்டினர் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர்களை முன் கொண்டுவர எடுக்கும் நடவடிக்கைகளில், தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் விழிப்படையும்போது அவர்கள் உயர்ந்த ஜாதியின் விரோதிகளாகவே சமுதாயத்தில் முன்னேறுவர் என்றும், அவர்கள் உயர்ந்த ஜாதியினரின் நண்பர்களாக இரார் என்பதுதான். அறிவு பெற்ற தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் உயர்ந்த வகுப்பினர்களுடைய விரோதிகளாகச் சமுதாயத்தில் முன்னேறுவது மட்டுமல்லாமல், சமுதாயத்தையே அவர்கள் தங்கள் வசம் ஆக்கிக் கொள்வர். கொந்தளிக்கும் கடலில் அலைகள் முன்னேறுவது போலக் குறைந்த பட்சமுள்ள உயர்ந்த சமூகத்தினர்களைப் பின் தங்கிய வகுப்பினர்கள் விழுங்கி விடுவர் என்றும் எச்சரித்தார். உண்மையில் அவருடைய எச்சரிக்கை ஆங்கில அரசாங்கத்தின் 1932ஆம் ஆண்டு, அறிக்கையில் காணப்பட்டது. சென்னையில் 215 இடங்களிலுள்ள ஒரு சட்டசபையில் 18 இடங்கள் தாழ்த்தப்பட்ட சமூகத்தினருக்கு

[1] Ibid p. 236

[2] No. 13, The Indian Patriot, Sept. 14, 1913, MNR. Cl. p. 1479

என்று ஆங்கில அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது. முதல் தடவையாக இந்தியாவில் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர்களுக்குப் பெரும் அரசியல் அதிகாரம் இவ் வறிக்கையில் வழங்கப்பட்டது எனக்கூறலாம்.

ஆங்கிலேய அறிக்கையைக் காந்திஜி[1] குறை கூறியபோது கூட, அவர்கள் அறிக்கையைத் தாம் ஒப்புக்கொள்வதாகக் குறிப்பிட்டார். அவர் கூறிய காரணமாவது: 'இந்திய சமூகத்தினர்கள் தங்களுள் ஒரு உடன்படிக்கைக்கு வராததின் காரணமாகத் தானும் சேர்ந்துதான் மாக்டூனல்ட் அவர்களை ஓர் ஆர்பிட்ரேட்டராக, ஓர் அறிக்கையை வெளியிடக்கேட்டுக் கொண்டேன்'. என்றும், பின் இவ் வறிக்கை ஆங்கில மந்திரிசபையின் முடிவு என்றும் காந்திஜி குறிப்பிட்டார். இவ் வறிக்கைக்கு விரோதமாகத் தாம் உண்ணுவிரதம் இருக்கப் போவதாகவும் அறிவித்தார். தாழ்த்தப்பட்ட சமூகத்தினரின் பிரச்சினை சம்பந்தமாக, இந்தியாவிலுள்ள எல்லா ஜாதி மதங்களும் ஓர் உடன்படிக்கைக்கு வராவிடில், தாம் உண்ணுவிரதம் இருந்து இறந்து போவதாக அறிவித்தார். காந்திஜியினுடைய உண்ணுவிரதத்தின் பலனைப்பற்றிச் சந்தேகம் கொண்ட ஜவஹர்லால் நேரு, ஆங்கிலேய அரசாங்கத்தின் வகுப்புவாதப் பிரதிநிதித்துவத் திட்டம், பொதுவாக இந்திய சமுதாயத்தினருக்கு நன்மையே தருவதாக அமைந்துள்ளது எனக் குறிப்பிட்டார்.[2]

## 6

## ஆங்கிலேய அரசாங்கத்தின் வகுப்புவாதத் தீர்ப்பினுல் ஏற்பட்ட சமுதாயப் புரட்சி

### (அ) பூனு ஒப்பந்தமும், தாழ்த்தப்பட்ட சமூகத்தினருக்கு இதர சமூகத்தினர்கள் அளித்த வாக்குறுதியும்

ஆங்கில அரசாங்கம் ஜாதிமதப் பிரதிநிதித்துவத்தைப் பற்றி அளித்த தீர்ப்பின் பலனுக, சமுதாயத்தில் உயர்வு தாழ்வு என்ற வேற்றுமை மாற, எல்லாச் சமுதாயப் பிரதிநிதிகளும், தேசிய அடிப்படையில் இத் தீர்ப்பு எவ்வளவு பெரிய மாற்றத்தை ஏற்படுத்தியதென்பதை அறிவதற்காகப் பூனுவில் கூடினுர். பூனுவில் நடந்த கூட்டத்தின் போது, தாழ்த்தப்பட்ட சமுதாயத்

[1] Gandhiji, Communal Unity (NavaJivan Publishing House) 1949 p.240

[2] Jawaharlal Nehru, Autobiography, (Allied Publishers Pvt. Ltd., Madras)

தினர்களுக்கு வேண்டிய சலுகைகளைச் செய்ய உயர்ந்த ஜாதியினர் முன் வந்தனர், ஆங்கில அரசாங்கத்தின் தீர்ப்பின் அடிப்படையில், தாழ்த்தப்பட்ட சமுதாயங்களுக்கு, ஒவ்வொரு மாகாண சட்டசபைகளிலும் ஒதுக்கப்பட்ட இடத்தை விட, இரட்டியான இடங்கள் தருவதாகவும் வாக்களித்தனர். பூனா ஒப்பந்தத்தின் அடிப்படையில் 215 அங்கத்தினர்கள் கொண்ட சட்டசபையில் 30 அங்கத்தினர்களுக்கு இடம் தருவதாகக் கூறினர்.[1] அதுபோன்று, இந்திய மாகாணங்களில் மொத்தமாக 148 இடங்கள் தருவதாகவும் கூறினர். மேலும், மத்திய சட்டசபையில், ஆங்கில அரசாங்கத்தின் நேரடி ஆளுகைக்கு உட்பட்ட மாகாணங்களில், தேர்வு பெறும் அங்கத்தினர்களின் மொத்த தொகையில், 18 சதவிகிதம் இடங்களைத் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர்களுக்கு ஒதுக்க ஒப்புக் கொண்டனர்.[2] உயர்ந்த சமுதாயத்தினர்கள் கேட்டுக் கொண்டதெல்லாம், தனிப்பட்ட வாக்காளர் பட்டியல் ஒன்று தாழ்த்தப்பட்ட சமூகத்தினர்களுக்கு வேண்டும் என்றும், அதே சமயம் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் அடிப்படையான ஒரு தேர்தலை அவர்களுக்குள்ளாகவே நடத்தி, அத் தேர்தலில் அடிப்படையில் தேர்வாளர்கள் பட்டியல் ஒன்றைப் பொது வாக்காளர்கள் முன்பு தேர்வுக்கு வைத்து, அவர்கள் தேர்ந்தெடுக்கும் அங்கத்தினர்களை மாகாண சட்டசபைக்கும் மத்திய சட்டசபைக்கும் அனுப்பவேண்டும் என்பது தான். இச்சம்பிரதாயம் 10 வருடங்களுக்கு நீடித்து இருக்கலாம் எனவும் அனுமதித்தனர்.[3] அது தாழ்த்தப்பட்டவர்களின் பிரதிநிதிகள் பல ஜாதியினர்களுடைய சம்மதத்தின் பேரில் தேர்ந்தெடுக்க வேண்டுமென்பதே பூனா ஒப்பந்தத்தின் கொள்கை. இதற்கெல்லாம் மேலாகத் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் எக்காரணம் பற்றியும் ஸ்தலஸ்தாபனங்களுக்குத் தேர்வு பெறுவதிலோ அல்லது அரசாங்க அலுவல்களில் பதவி வகிப்பதிலோ எத்தடையும் இருக்காது என வாக்களித்தனர். அன்றியும், தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினரின் எண்ணங்களுக்கேற்றவாறு அரசாங்க நிறுவனங்ளில் அலுவல்கள் கொடுக்க முன் வந்தனர். ஒவ்வொரு மாகாணத்திலும் கல்விக்கென ஒதுக்கும் பணத்தில் ஒரு முக்கியமான பாகம் தாழ்த்தப்பட்ட சமூகத்தினருடைய கல்விக்கென ஒதுக்கப்படும் என்றும் வாக்களித்தனர்.[4]

[1] Dr. B. R. Ambedkar, States and Minorities, (Thacker & Co., Bombay)

[2] Ibid

[3] Ibid

[4] Ibid Page 55

ஆனால், டாக்டர் அம்பேத்கார் பூனா உடன்படிக்கையை ஒத்துக் கொள்ளவில்லை.[1] அவ் வொப்பந்தத்தின் பட்டியலில் பெயர் குறிப்பிடும் சம்பிரதாயம் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினர் களுக்கு ஓட்டுரிமை இல்லாமல் ஆக்கிவிட்டது எனக் கூறினர். ஏனெனில், முதல் அடிப்படைத் தேர்தலில் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் நிராகரித்த தேர்வாளர் கூடப் பொது வாக்காளர் களால் தேர்ந்தெடுக்கப்டுவர் என்பதே (உண்மையில் இவ்வாறே தேர்ந்தெடுக்கப்பட்டனர்). மேலும், காந்திஜீயின் உண்ணு விரதம் தாழ்த்தப்பட்ட சமுதாயத்தினர்களைக் கட்டாயப் படுத்து வது போல் இருப்பதாகவும் கூறினர். என்றாலும், தாழ்த்தப் பட்ட சமூகத்திலுள்ள பிரதிநிதித்துவத்தைத் தேர்ந்து எடுப்ப தற்குப் பொது வாக்காளர்கள் அரசியல் அடிப்படையில் முன் வந்தது. தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்குக் கிடைத்த ஒரு மாபெரும் வெற்றியாகும். எத்தனையோ குறைகள் இருந்த போதிலும் பூனா உடன்படிக்கையை 1932ஆம் ஆண்டு செப்டம் பர் மாதம் 'எரவாடாவில்' நடந்த மாநாட்டில் எல்லாக் கட்சிகளும் அங்கீகரித்தன. அவ் வங்கீகாரத்தின் அடிப்படையில் அம் மாநாடு அரசியலிலும், சமுதாயத்திலும் புரட்சியை உண்டாக்கும் ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. அத் தீர்மானத்தின் அடிப் படையில் மேலும் இந்துக்களுள் எந்தச் சமுதாயத்தினரைத் தீண்டப்படாதவர் எனக் கருதக் கூடாது என்றும், பிறப்பின் காரணமாக அம் மக்களுக்கு எந்த உரிமைகளையும் தடை செய்யக் கூடாது என்றும், மற்ற இந்துக்களைப் போன்று பொதுக் கிணறுகள், பள்ளிகள் பொது வீதிகள், பொதுக் கல்வி நிலையங் கள் இங்கெல்லாம் எவ்விதத் தடையும் இன்றி அனுமதிக்கப்பட வேண்டும் என்றும் அத் தீர்மானம் கேட்டுக் கொண்டது. இவ்வுரி மைகள் சட்டத்தின் அடிப்படையில் உடனடியாக நிறைவேற்றப் படும் என்றும், காலதாமதம் இல்லாமல் சுயராஜ்யம் கிடைக்குமே யானால், முதல் பாராளுமன்றத்திலேயே அவைகள் நிறைவேற்றப் படும் எனத் தீர்மானம் கூறியது.[2]

பூனா உடன்படிக்கையில் பரிசீலனை செய்த பாராளுமன்ற இருசபைக்குழு,[3] 1933ஆம் ஆண்டிலிருந்து 1934ஆம் ஆண்டு வரை இந்திய சீர்திருத்தத்தைப் பரிசீலனை செய்தது. அவர்கள் தங்கள் தணிக்கையில், ஆங்கில அரசாங்கம் கூறிய தீர்ப்பு

[1] Ibid

[2] C.Rajagopalachari, Plighted word-being an account of the history and object of the untouchability abolition and Temple Entry, (Servants of Untouchables Society of Delhi) 1933, P.I.

[3] J.C.I-C.R. Vol.I, Part II, Chairman's draft Report, Page 60

இந்தியாவிலுள்ள ஜாதி மதங்ளிடையே பூனு உடன்படிக்கையை விட நியாயமான அடிப்படையில் அமைந்துள்ளது என்றும், பூனுஉடன்படிக்கை எல்லாச் சமுதாயத்தின் தலைவர்கள் முன்பாக, அச் சமுதாயங்களும் சேர்ந்து ஒப்புக் கொண்டதின் காரணமாக இவ் வுடன்படிக்கையை ஒப்புக் கொள்ளலாம் எனவும் சிபாரிசு செய்தது. என்றாலும், தாழ்த்தப்பட்ட மக்களுக்கு, இதுபோல் ஒரு சூழ்நிலையை உருவாக்கி, மேலும் அச் சமூகத்தினரைக் கட்டாயப்படுத்தக் கூடாது எனவும், அவ் வொப்பந்தத்தில் மேலும் எந்தவிதமான மாற்றங்களும் வரக்கூடாது எனவும், அம் மாற்றங்களை அச் சமுதாயத்தினர் ஒத்துக் கொள்ளக்கூடாது எனவும் அக்கமிட்டி கூறியது.[1] உண்மையில் 1935ஆம் ஆண்டு சென்னை சட்டசபையில் வி.ஐ. முனுசாமிப்பிள்ளை[2] ஒரு வெட்டுப் பிரேரணையைக் கொண்டு வந்து, பூனு உடன்படிக்கையை ஒப்புக் கொள்ள முடியாது என்றும், அது தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் களுக்குப் பெரும் பாதகமாக விளைந்தது என்றும் கூறினார். அவர் ஆங்கில அரசாங்கம் அளித்த தீர்ப்பை ஒப்புக் கொள்ள வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார். ஆங்கில அரசாங்கத்தின் தீர்ப்பில் கூறியுள்ளபடியுள்ள இடங்களை, மாகாண சட்டசபையி லும், மத்திய சட்டசபையிலும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் களுக்குக் கொடுக்க வேண்டும் எனக் குறிப்பிட்டார். ஆனால், சென்னை அரசாங்கம் ஆங்கிலப் பாராளுமன்ற இருசபைக் குழு கூறியது போல, மேலும் பூனு உடன்படிக்கைக்கு எந்த மாற்றமும் செய்வதில்லை எனக் கூறி விட்டது.[3]

### (ஆ) இந்துக்களும், பூனு உடன்படிக்கையும்

பூனு உடன்படிக்கையை இந்துக்கள் எத்துணை மதித்தனர் என்பது 1933ஆம் ஆண்டு ஜனவரி 31ஆம் தேதி டாக்டர் சுப்பராயன் சென்னை சட்டசபையில் கொண்டு வந்த ஆலயப் பிரவேசத் தீர்மானத்தைச் சட்டசபையில் விவாதிக்கும்போது தெரிய வந்தது.[4] ஆலயப் பிரவேசத்தில் இந்து மதத்தில் இருந்து வரும் சில வகுப்பினர்களைத் தடை செய்வதை நீக்குவதற்காக அத் தீர்மானம் கொண்டு வரப்பட்டது. அத்தீர்மானத்தின் அடிப்படையில் சட்டமன்றத்தில் கொண்டுவரப்பட்ட மசோதாவில். பூனு உடன்படிக்கையின் அடிப்படையிலும், நாட்டில் நிலவி

[1] Ibid
[2] G.O, No.734, dated 10-5-1935, Public (Reforms Department), Government of Madras
[3] G.O, No, 734, dated 10-5-1935 public (Reforms) Department, Government of Madras.
[4] G.O.No 114, dated 31-1-1933, public General Department, Miscellaneous, Government of Madras.

வரும் போராட்டங்களின் விளைவாகவும், ஆலயங்களைத் தாழ்த்தப் பட்ட வகுப்பினர்கள் எனக் குறிப்பிடுபவர்களுக்குத் திறந்து விட வேண்டும் எனக் குறிப்பிட்டது.

டாக்டர் சுப்பராயனுடைய தீர்மானம், ஆலயங்களைத் திறப்ப தற்கு இந்துக்கள் செய்த முதல் பகீரதப் பிரயத்தனமாகும்.[1] அத் தீர்மானம் செய்த சிபாரிசுகள் பின்வருமாறு:[2]

(1) இந்தச் சமூகத்தினர்களிடையே ஓங்கி வளர்ந்து வரும் புதிய உணர்ச்சியின் அடிப்படையில், இந்து மதத்தில் உட்பட்ட சில வகுப்பினர்களுக்கு ஏற்பட்டிருக்கும் சமுதாயத் தடையை மாற்றவும், அவர்களுக்குச் சமூக நல்லுறவு அளிக்கவும் ஆலயங் களை அம்மக்களுக்குத்திறந்து விடவும், அம்மக்களுக்கு நியாயமும் வழங்குவது.

(2) பூனாவில் நடந்த ஒப்பந்தத்தின் அடிப்படையில் பொது வழிபாடு நடக்கும் இடங்களைத் தாழ்த்தப்பட்ட சமூகத்தி னருக்குத் திறந்து விடுவது.

(3) கோவில்களைப் பராமரித்து வரும் தர்மகர்த்தாக்கள் ஆலயங்களை அம் மக்களுக்குத் திறந்து விடவும், அம் மக்களுக்கு நியாயமும் வழங்குவது, அம் மக்கள் சுத்தமாகக் கோவிலினுள் சென்று வழிபடுவதற்கு வேண்டிய சட்டங்களை இயற்றுவது.[3]

டாக்டர் சுப்பராயன் அத்தீர்மானத்தைப் பற்றிப் பேசும் போது, பூனா உடன்படிக்கையின் அடிப்படையில் இந்து மதத்தில் உட்பட்ட உயர்ந்த ஜாதியினர், தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் களுக்குப் பெரிதும் கடமைப்பட்டு இருக்கின்றனர் என்றும், தாழ்த்தப்பட்ட சமூகத்தினர்களுக்கு வேண்டிய உரிமைகளை உயர்ந்த வகுப்பினர்கள் ஒப்புக்கொண்டு மேடைகளில் பேசுவ தோடு நின்று விடாமல், அவர்களுக்கு மற்றவர்களைப் போன்று உரிமைகளையும் வழங்க வேண்டும் என்றும் கூறினர். இவர், 'கோவில்களை அசுத்தம் செய்யும் எந்த முற்போக்குக் கொள்கை களையும் ஒப்புக் கொள்ளவில்லை;அங்ஙனமாயின் ஜனநாயகமே தேவை இல்லை' என மேடையில் பேசியவர்களைக் கண்டித்துப்

[1] Ibid

[2] G.O. No.114, dated 31-1-1933, Removal of certain disabilities of certain classes of Hindus rnd Legislation fcr Temple Entry carried, Resolution no.10.10(298)

[3] Ibid P.7

பேசினர்[1] மேலும் அவர் பேசும்போது உயர்ந்த ஜாதியினருக்கு மட்டும்தான் தேசியம் சொந்தமா அல்லது தேசியமென்பது தாழ்த்தப்பட்டவர்களுக்கும் உண்டா என்ற கேள்வியை எழுப்பினர். தேசியம் தாழ்த்தபபட்டவர்களுக்கும் உரித்தானது எனக் குறிப்பிட்டால், இந்து சமுதாயத்தில், உரிமையான நிலையை அவர்கள் எல்லோரும் ஒப்புக்கொண்டாக வேண்டும் எனக் கூறினர். உயர்ந்த ஜாதியினர், தாழ்ந்த சமுதாயத்தினர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளைச் செய்யவில்லை என்றும் சாட்டினர். பூன உடன்படிக்கையைத் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் ஒத்துக்கொண்டதைப் பாராட்டிப் பேசினர். அம் மக்களுக்கு, இந்து மதத்திலுள்ள மற்றவர்கள் பெரிதும் கடமைப்பட்டு இருக்கின்றனர் எனவும் குறிப்பிட்டார். இந்து மதத்தில் எத்தனையோ கொடுமைகளைத் தாழ்த்தப்பட்ட சமூகத்தினர்கள் அனுபவித்த போதிலும், அவர்கள் இந்து மதத்திலிருந்து வராததை அவர் பாராட்டினர். அவ்வாறு தொடர்ந்து இந்துக்கள் எனக் கூறி வருவோருக்குக் கோவில்களைத் திறந்து விடுவது அவசியம் எனக் குறிப்பிட்டார்.[2] ஜனங்கள் மேலோங்கி வளர்ந்து வரும்போது, இந்து மதப் பாரம்பரியங்களை அனுஷ்டிப்பவர், தாங்கள் அனுபவித்து வந்த தனிச் சலுகைகள் மறைந்து போகும் எனக் கருதி ஜனநாயகமே தேவையில்லை எனக் குறிப்பிட்டு வருகின்றனர் என்றும், அங்ஙனமாயின் ஜனநாயக உடன்படிக்கை தேவை என்றும், உயர்ந்த ஜாதியினர் செய்து வரும் கொடுமைகளை மாற்ற உடனடியாகச்சுயாட்சியும் தேவை என்றும் குறிப்பிட்டார், மேலும், இந்துமத ஆகமங்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஆலயங்களுள் செல்வதை ஒத்துக்கொள்ளவில்லை எனக் கூறிய குறைகளைச் சுட்டிக்காட்டிப் பேசும்போது, சமஸ்கிருதநூல்களில் பஞ்சமர்கள் என்ற வார்த்தை இல்லை என்றும், சுத்தம் இல்லாதவர்களைக் குறிப்பிட்டே ஆகமங்களில் கோவிலினுள் செல்லக் கூடாது எனக் கூறியுள்ளனர் என்று தாம் கருதுவதாகக் கூறினர். நீதிக்கட்சியின் மந்திரிசபையில் முதல் மந்திரியாக இருந்த போப்பிலி ராஜா அவர்களைப் பார்த்துப் பேசும்போது, இந்து மதக் கோவில்களையும், அறநிலையங்களையும் பாதுகாக்கும் சட்டத்தில் 40-வது ஷரத்தை உடனடியாக மாற்றியமைக்க வேண்டுமென்றும், அதற்காக மந்திரிசபை உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்.[3]

[1] Ibid P.8
[2] Ibid P 19
[3] Ibid

ராவ்பகதூர் டி. ஏ. ராமலிங்கம் செட்டியார்[1] அவர்கள் மேற் குறிப்பிட்ட பிரேரணையைப் பற்றிப் பேசும்போது, தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்கு ஆலயங்களில் வழங்கும் உரிமையை அளிப்ப தோடு, அம் மக்களின் வாழ்க்கைத்தரத்தை உயர்த்தி அவர் களுக்கு அரசாங்க நிர்வாகங்களில் தகுந்த பிரதிநிதித்துவம் வழங்க வேண்டும் என்றும், மேலும் விவசாயத்தைப் பெருக்க அம் மக்களுக்குப் பொருளுதவி செய்ய வேண்டும் என்றும் குறிப் பிட்டார். அவ்வாறு, கொடுத்த கடனைத் திருப்பிக் கொடுக்கும் முதல் தவணைக் கடன் கேட்டதிலிருந்து ஒரு வருடத்திற்குப் பின்னல்தான் ஆரம்பிக்கப்பட வேண்டும் எனவும் கேட்டுக் கொண்டார். தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் முன்னேறுவதற்கு வேண்டிய பொருளாதார உரிமையையோ, கல்வியையோ, அரசாங்கமோ அல்லது பொதுமக்களோ பெரிய அளவில் செய்து விடவில்லை என்று கூறினர். இந்து மதங்களைப் பாதிக்கும் சட்டதிட்டங்களில் சில இரண்டாயிரம் வருடங்களாகவும், சில திட்டங்கள் 30இ 40 வருடங்களாகவும் மட்டுமே அமுலில் இருந்து வருகிறது எனக் கூறினர். சட்டங்களின் வேற்றுமை களைப் பற்றிப் பேசும்போது, சில ஜில்லாக்களில் எண்ணெய் வியாபாரம் செய்யும் செட்டியார் சமூகத்தினர் கோவிலினுள் செல்ல அனுமதிக்கப்பட்டு இருந்தனர். ஆனல், சில ஜில்லாக் களில் உள்ள கோவில்களில் அவர் அநேக அடி தூரம் நின்று தரிசிக்கவேண்டும் எனக் குறிப்பிட்டிருந்தனர்.[2] இராமேச்சுவரம் கோவிலில் நாயர்கள்கூடப் போகக்கூடாது என்று சட்டமிருந்து வருவதாகக் கூறினர். மேலும் அவர் பேசும்போது, ஒவ்வொரு ஜாதியும், கோவிலுனுள் எந்தெந்தப் பாகத்திலிருந்து தரிசிக்க வேண்டுமென்று இந்துமதச் சட்டங்கள் கூறுவதாகவும், தர்ம கர்த்தாக்களைக் கேட்டு அரசாங்கம், தாழ்த்தப்பட்ட வகுப்பினர், கோவிலில் எவ்விடத்திலிருந்தும் இறைவனைத் தரிசிக்க வேண்டு மென்பதை முடிவு செய்ய வேண்டும் எனக் கேட்டுக் கொண் டார். ஜாதி வித்தியாசங்கள் மறையும் வரை தர்மகர்த்தாக்கள் ஆங்காங்குள்ள பொதுமக்களைக் கேட்டு முடிவு செய்ய வேண்டும் எனக் கூறினர். உயர்ந்த ஜாதியினர் தாங்கள் கோவில்களி னுள் சென்று வழிபாடு செய்வதற்குத் தகுந்த பாதுகாப்பு வேண்டுமெனக் கோரியதை ஒப்புக் கொண்டார். ஆகவே, அவர், அத் தீர்மானததைத் திருத்த வேண்டும் எனக் கேட்டுக் கொண் டார்.

[1] Ibid P 10

[2] Ibid p. 11

ஏ. பி. பாட்ரோ அவர்கள்[1] பேசும்போது, இந்துமத வாதிகள், மதத்தில் மாற்றம் வேண்டும் எனக் கூறும்போதெல்லாம் மத விதிகளைக் காட்டி, மாற்றம், மதத்திற்கு விரோதம் எனக் கூறிவருவதாகவும், இவர்கள் உடன்கட்டைஏறுதல் என்ற மூடப் பழக்கத்தை ஒழிக்கும் சட்டத்தை எதிர்த்தனர் என்றும், விதவைகள் மறுமணத்தை அதுபோல் எதிர்த்தனர் என்றும், குழந்தைகள் விவாகத்தை அரசாங்கம் தடை செய்ய முன் வந்தபோது பெரும் எதிர்ப்புக்கள் காட்டினர் என்றும், ஆனால், மூட சம்பிரதாயங்களை அரசாங்கம் இதற்கு முன்பு சட்ட அடிப்படையில் மாற்றியதாகவும், அதுபோலவே சட்டத்தின் அடிப்படையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்கு ஆலயங்களினுள் பிரவேசிக்கச் சட்டம் இயற்ற வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்.

ஆனால், தீண்டாமையை ஒழிப்பதென்பது வெறும் சமுதாயப் பிரச்சினை இல்லை என்றும், அது ஒரு பொருளாதார முன்னேற்றத்தைச் சார்ந்து இருக்கும் ஒரு பிரச்சினை எனவும் கூறினர். ஆகவே, தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்குப் பல வசதிகள் வழங்க அரசாங்கம் முன் வரவேண்டும் எனக் கேட்டுக் கொண்டார். சமுதாயத்தின் அடிப்படையிலும், பொருளாதார அடிப்படையிலும் அம் மக்களைத் தாழ்ந்த நிலையிலேயே விடுவது தவறு என்றும், அதற்கு வேண்டி அவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்றும் வேண்டிக் கொண்டார்.

ஏ. இராமலிங்க முதலியாரும்,[2] சி. நடேச முதலியாரும் இப் பிரேரணைகளை ஆதரித்துப் பேசினர்கள். நடேச முதலியார் அவர்கள் பேசும்போது ஐயாயிரம் வருடங்களுக்கு முன்பு ஆகமங்கள் இல்லை என்றும், ஆகவே, அதில் குறிப்பிடும் சட்ட திட்டங்கள் தற்காலிகமானது என்றும், தமிழ் நாட்டில் தொல்காப்பியந்தான் ஜாதி மதத்தை முதல் முதலாகக் குறிப்பிடுகிறது என்றும், ஆனல், அத் தொல்காப்பியத்தில் ஆசாரிகளும், மீன் பிடிப்பவர்களும் ஒரே சமுகமாக வாழ்ந்துள்ளனர் என்றும் குறிப்பிட்டார். திருவள்ளுவர் பிறந்த நாட்டிலுள்ள மக்கள், அவர் பிறந்த சமுதாயம், இத்தனை இழிவு பெற ஆக்கியது ஏன் என்ற பிரச்சினையைக் சட்டசபை முன்பு வைத்தார். மத அடிப்படையில் ஏற்பட்ட கொடுமைகளே இதற்குக் காரணம் என்றும், அவர் கூறினர்.[3] இந்த ஆதி திராவிடர்கள் ஒரு காலத்தில் அரசியலிலும், சமுதாயத்திலும் தலைமை வகித்து இருக்க வேண்டுமென்

[1] Ibid p. 14
[2] Ibid p. 19
[3] Ibid p. 19

றும், அவர்கள் அரசியலில் அடிமைப்படுத்தப்பட்டபோது, மதச் சட்டங்களினுல் அடிமைப் படுத்தப்பட்டனர் என்றும் குறிப்பிட்டார். அவ்வாறு கொடுமைப்படுத்தும் ஒரு மதத்தையும், ஒரு மதக் கொடுமையையும் இந்துக்கள் மேலும் சம்மதிக்கக் கூடாது எனக் கேட்டுக் கொண்டார். ஆதி திராவிடர்கள் இந்துக்களின் வீட்டுப் பக்கமே செல்லக்கூடாது என்றும், உயர்ந்த ஜாதி இந்துக்களுக்கு விரோதமாக ஏதேனும் பேசுவார்களேயானல், அவர்கள் நாக்குத் துண்டிக்கப்படும் என்ற நிலையில் இந்துமதம் இருந்தது. அங்ஙனமாயின், அம்மதம் தேவையா? எனக் கேட்டார். உண்மையில் இந்துமதம் ஒரு தாராளக் கொள்கைகளுடைய மதம் என்றும், உண்மையான இந்து மதத்தில் ஜாதி வேற்றுமை இல்லை என்றும் குறிப்பிட்டார்.[1] இந்தியாவைப் பிடித்தடக்கிய டாட்டர்கள் பிற்காலத்தில் இந்துக்களோடு கலந்து விட்டனர். அதுபோன்று மங்கோலியர்களும், கிரேக்கர்களும் இந்துக்களோடு கலந்தனர். மேலும், இந்துமதத்தின் முன்னேற்றத்திற்குப் பாடுபட்ட இராமானுஜர், சங்கரர் போன்றவர்களும், குறிப்பாகத் திருவள்ளுவரும் ஜாதி வித்தியாசங்களைப் பாராட்டவில்லை என்றும், திருவள்ளுவர் ஆதி திராவிடர் சமுதாயத்தைச் சார்ந்தவர் என்றும் குறிப்பிட்டார். உயர்ந்த ஜாதியினர் திருவள்ளுவரின் குறளைப் போற்றும்போது, அவர் பிறந்த குலத்தை இம்சிக்கின்றனர் என்ற உண்மையை எடுத்துரைத்தார். சமுதாயத்திற்குத் தர்மசட்டத்தையே உருவாக்கிய திருவள்ளுவர் குலத்தை அவமதிப்பது தவறு எனக் கண்டித்தார். ஜாதிக்கு விரோதமாகப் போதித்தார் என்றும், தாழ்த்தப்பட்ட சமூகத்தினரைக் கோவிலினுள் அழைத்துச் சென்றார் என்ற சரித்திரத்தைச் சுட்டிக் காட்டினர்.[2] திருப்பாண ஆழ்வார், இராமானுஜரினுல் போற்றப்பட்டார். இதுபோன்றே புத்தர் மகானும், இயேசுவும், நபியும் ஜாதிகளுக்கு விரோதமாகப் பேசி, சமுதாயங்களிடையே சகோதரத்துவத்தை விளக்கி, எல்லாக் கடவுளும் ஒன்றே என்று அப் பெரும்மகான்கள் குறிப்பிட்டதை ஞாபகப் படுத்தினர். ஒரே சமயம் இராமானுஜரிடம் உயர்ந்த ஜாதி வகுப்பினர், தாழ்த்தப்பட்டவர்களுக்கு அறங்களைச் சொல்லிக் கொடுப்பதினுல் இராமானுஜர் நரகத்திற்குப் போக நேரிடும் என்று கூறியபோது, இம் மக்கள் சொர்க்கத்தை அடையட்டும், அவர்களைக் காப்பாற்றியதற்காகத் தான் நரகத்திற்குப் போவதற்குத் தயார் எனக் கூறிய கதையைச் சபை முன் உரைத்தார். சைதன்யரும், தயானந்த

[1] Ibid P. 19
[2] Ibid

சரஸ்வதியும்[1] எல்லாச் சமுதாயங்களுக்கும சம உரிமை வேண்டும் எனப் போதித்ததையும் ஞாபகமூட்டினர். அது போன்று, உயர்ந்த வகுப்பைச் சார்ந்த சர். ஆர். வெங்கட் ராமன் போன்றவர்கள் ஆதிதிராவிடர் குழந்தைகளுக்குத் தாமே கல்வி போதித்ததை எடுத்துக் காட்டினர்.

அவர் மேலும் பேசுகையில், ஜாதியின் அடிப்படையினல் இந்து மதத்திலுள்ளவர்கள் ஜாதி விட்டு ஜாதி திருமணம் செய்ய முடியாது எனக் குறிப்பிட்டுச் சமுதாயம் மிகவும் பிற்போக்கான நிலையில் இருக்கின்றது; அதை மாற்றியமைக்க வேண்டியது அவசியம் எனவும் கேட்டுக் கொண்டார் இந்து மதத்திலுள்ள குறைகளை மேலும் எடுத்துக் காட்டும்போது, ஹரிதாஸ் அவருக்குச் சமுதாயத்தில் மதிப்பில்லை என்றும், ஆனல், அவர் கிறிஸ்தவரான ஜாக்கப் அல்லது ஜோசப்[2] என்று அழைக்கப்படும்போது, ஆங்கிலேயர்களுடைய மதத்தைச் சார்ந்ததினல் அவர்கள் பெருமை படுத்தப் படுகிறுர் எனவும் குறிப்பிட்டார். அரசியல் அதிகாரம் சமுதாய அதிகாரத்தைத் தானகவே வழங்குகிறது. இவ் வடிப்படையில்தான் பிராமண ரல்லாதவர்களுடைய இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது என்றும் எடுத்துரைத்தார். ஆகவே, அரசியல் உரிமைகளும், சலுகை களும், ஆதிதிராவிடர்களுக்கு அதிகமாக வழங்க வேண்டு மென்று கேட்டுக் கொண்டார். எத்தனையோ கொடுமைகளுக் கிடையே சுமார் இரண்டாயிரம் வருடங்களாக மதத்திலிருந்து வரும், ஆதிதிராவிடர்களைத் தாழ்வான நிலையிலிருந்து காப் பாற்றி, மற்ற இந்துக்களைப் போன்று, அவர்களையும் சீர்திருத்த வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்.[3] 10 கஜ தூரத்துக்குள் இந்துக்களின் வீட்டிற்கு வரக்கூடாது என்று புறக்கணிக்கப் பட்ட ஆதிதிராவிடர்களை, இந்திய சக்கரவர்த்தி, பக்கிங்ஹாம் அரண்மனையில் அழைத்து, வட்டமேஜை மாநாட்டின்போது, அவர்களுடன் உரையாடினர். இதுபோன்ற மாற்றம் ஏற்பட் டுள்ளதைச் சுட்டிக் காட்டினர். ஆதிதிராவிடர்களைத் தங்கள் சகோதரர்களாகக் கருத வேண்டுமென அவர் கேட்டுக் கொண் டார்.

மேல் நாடுகளில், சமுதாயத்தில் சமத்துவத்தைப் பெரும் புரட்சியினல் அடைந்தார்கள் என்றும், ஆனல், இந்தியாவில் சமத்துவம், புரட்சி இல்லாமல் அடைய இந்தியர்கள் முயன்று

[1] Ibid 19
[2] Ibid 20
[3] Ibid 21

வருகின்றனர் என்ற உண்மையையும் குறிப்பிட்டார். பிரெஞ்சுப் புரட்சியில் சமுதாயத்தில் சமத்துவமும், அரசியலில் சம வாய்ப்பும் பெறப் பிரெஞ்சுமக்கள் போராடினர்.[1] அவர்கள் தங்கள் எண்ணங்களையும், நிறைவேற்றினர். அங்கு ஏற்பட்டிருந்த ஏற்றத்தாழ்வு களைப் பொறுக்காத மககள் புரட்சிசெய்தனர். ஆனால், அப்படிப் பட்ட புரட்சிகளை இந்தியாவில் நாம் தவிர்க்க வேண்டுமெனக் குறிப்பிட்டார். ஆதி திராவிடர்கள் தங்கள் உரிமைகளைக் கேட்டுப் புரட்சி செய்யாமல் இருப்பது போற்றத்தக்கது எனக் காட்டினார். அவர்களுடைய பொறுமையை மேலும் பரிசீலிக் காமல், அவர்களுடைய பெருந்தன்மையைப் பாராட்டிச், சமுதாயப் புரட்சியைத் தவிர்த்து, கோவில்களைத் திறந்து விட்டு, அவர்கள் இறைவனை மற்றவர்களைப் போன்று சமத்துவமாக வழிபட வாய்ப்பு அளிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்.

திரு. வி. பி. நாராயணன் நம்பியார் அவர்கள், டாக்டர் சுப்பராயனுடைய தீர்மானத்தைப் பற்றிப் பேசும்போது, தீண் டாமை என்பது இந்து மதத்தில் ஏற்பட்ட மிகப் பெரிய சாபத் தீட்டு என்றும், இந்து சமுதாயத்தில் அது ஒரு கறை எனவும் குறிப்பிட்டார். அரசியல் அடிப்படையில், தாழ்த்தப்பட்ட வகுப் பினர்கள், இந்துக்கள் என ஒப்புக் கொள்ளப் பட்டதோடு, அவர் கள் சகோதர, சகோதரிகளுமாக நடத்தப்படுகின்றனர்.[2] இப்படிப் பட்ட அரசியல் அடிப்படையில் சமத்துவம் அளிக்கப்பட்ட வகுப் பினர்கள் பொதுக் கிணறுகளில் தண்ணீர் இறைக்கவும், பொதுக் கோவில்களில் வழிபாடு செய்யவும், தடை செய்யப்பட்டு இருக் கின்றனர். கோவில்கள் மதத்தின் நடுநாயகமாகவும், கடவுளின் இருப்பிடமாகவும் இருக்குமாயின் எல்லோரும் அங்கு வழிபாடு செய்ய அனுமதிக்கப்பட வேண்டும். காந்தியின் கொள்கைப்படி மனித சமுதாயத்தின் ஒரு பாகம், ஜாதிக்குப் புறம்பாக வைக்கப் படுமாயின், கடவுளும் கூட ஜாதிக்குப் புறம்பாகி விடுவார் என் பதை எடுத்துக் காட்டினார். சமுதாய அடிப்படையில், படிப்படி யாக அமைந்த ஜாதி வித்தியாசங்கள் ஒழிக்கப்படாவிடில், தாழ்த்தப்பட்டவர்கள் என்று கூறப்படும் சமுதாயத்தினரை மேற் கதிக்குக் கொண்டு வரமுடியாது எனக் குறிப்பிட்டார்.

யாக்கூப் ஹசன்,[1] இத் தீர்மானத்தை ஆதரித்துப் பேசும் போது, தீண்டாமை என்பது இந்துக்களுடைய பிரச்சினை மட்டு

[1] Ibid Page 22
[2] Ibid Page 24
[3] Ibid Page 25

மல்லாமல் அது ஓர் இந்திய தேசியப் பிரச்சினையாகும் என்று கூறினர். மகாத்மா காந்தி அவர்கள், காங்கிரஸ் சபையில், தீண்டாமையை ஒழிக்கவேண்டுமெனத் தீர்மானத்தைக் கொண்டு வந்தபோது, இந்துமகாசபைத் தலைவர் ஸ்வாமி சிரத்தானந்த் என்பவர் குறுக்கிட்டு, தீண்டாமை என்பது இந்துக்களுடைய பிரச்சினை என்றும், அதில் இந்துக்களல்லாதவர்கள் அப்பிரச்சினையைத் தீர்வு காணத் தலையிடக்கூடாது எனக் கூறினர் என்பதைச் சட்டமன்றத்தின் முன்பு எடுத்துக் காட்டினர். ஆனால், யாக்கூப் ஹசன் சுவாமியினுடைய வாதத்தை ஏற்றுக் கொள்ளாமல் தீண்டாமை என்பது இந்திய நாகரிகத்தில் ஏற்பட்ட ஒரு கறை என்றும், எந்த இந்தியனும், நாகரிகமான மக்களிடையே தலைதூக்க முடியாத நிலையில் இருப்பதாகவும், இப்பிரச்சினை இந்துக்களையும், முஸ்லீம்களையும் பாதிக்கிறது எனவும் குறிப்பிட்டார்.[1] தீண்டாமையை ஒழிப்பதின் மூலம்தான் தீட்டு என்ற ஐதீகமும் அகற்றப்படும் என்றும், முஸ்லீம்கள் இந்தியாவை ஆண்டதின் காரணமாக மட்டும் அவர்களைச் சமுதாயத்தில் புறக்கணிக்க முடியாமல் ஏற்றுக் கொள்ளப்படுகிருர்கள் என்றும், ஆனல், பொதுவாக, முஸ்லீம்களும், தீண்டாமையால் பாதிக்கப்பட்ட சமூகத்தினரைப் போன்றே நடத்தப்படுகிருர்கள் என்றும் குறிப்பிட்டார். சென்னையில் பல இந்து ஓட்டல்களில் முஸ்லீம்கள் அனுமதிக்கப்படவில்லை என்ற நிலையை எடுத்துக் காட்டினர். ஆகவே, தீண்டாமை எல்லாச் சமுதாயத்தினரையும் பாதிப்பதின் காரணமாக அதை ஒழிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்.[2]

மேலும் பேசுகையில், தீண்டாமை மூன்றுஅம்சங்களை உடையதாகவும், அரசியல். சமுதாயம், மதம் என்ற முப்பிரிவுகளையும் பாதிப்பதை விளக்கிக் காட்டினர், அரசியல் அடிப்படையில் 'தாழ்த்தப்பட்டவர்கள்', ஒதுக்கப்பட்டவர்களல்ல என்ற உண்மை அவர்களுக்கு அரசியல் சலுகைகள் கொடுப்பதின் மூலம் உலகம் அறிகின்றது எனக் கூறினர். மதம் மாறுவதால் மட்டும் தாழ்த்தப்கட்டவர்கள் உயர்ந்தவர்களாக ஆக முடியாது என்றும், 'தீட்டு' என்ற பிரச்சினை இருக்கும்வரையில மத அடிப்படையில் நாடு முன்னேற முடியாது என்றும் அறிவித்தார். அதுபோலவே, ஜாதி தொழிலைக் குறிப்பதாக இல்லை என விவாதித்தார். நகரங்களில் புதிதாக அமைக்கப்பட்ட வசதிகளினுல் மிகவும் தாழ்த்தப்பட்டவர்கள் செய்துவந்த வேலைகளையும், உயர்ந்த ஜாதியினர்

[1] Ibid
[2] Ibid

தங்கள் வீட்டினுள் செய்ய வேண்டிய அவசியமுள்ளது என்றும் அதனுல். பிராமணர்கள் என்றே, தாழ்த்தப்பட்டவர்களுள் என்றே, குறிப்பிட வழி இல்லை என்ற உண்மையை எடுத்துரைத் தார். அதுபோலவே, எல்லா ஜாதியினரும், எல்லா விதமான தொழில்களை மேற்கொண்டுள்ளார் என்று கூறினுர். தோல் வியாபாரத்தில் பிராமணர்கள் அதிகமாக ஈடுபட்டிருந்த நிலையை எடுத்துக் காட்டினுர். ஆகவே, தீட்டு என்பது நியாயமற்ற ஒரு ஐதீகம் எனவும், தீண்டாமை என்பதை ஒழிக்க வேண்டும் எனவும் கேட்டுக் கொண்டார்.[1]

டாக்டர் சுப்பராயன்,[2] தீர்மானத்தைப் பற்றிக் கே.அலமேலு மங்கை அம்மையார் அவர்கள் பேசும்போது (தமிழ் சொற்பொழிவு) தாம் சுப்பராயனுடைய தீர்மானத்தை ஆதரிப்பதாகவும், கடவுளி னுடைய படைப்பில் எல்லோரும் சமமாகப் படைக்கப்பட்டார்கள் எனவும், அதில் உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்று இல்லை எனவும் குறிப்பிட்டார். மனிதர்களே சமுதாயத்தில் உயர்ந்தவர் தாழ்ந்த வர் என வேற்றுமையைக் கிளப்பியுள்ளார்கள் எனவும், திருவள்ளு வர் எல்லா மனிதரும் பிறப்பில் சமம் எனக் குறிப்பிட்டுள்ளார் எனவும் குறிப்பிட்டுத் தமிழ் இலக்கியத்தைச் சுட்டிக் காட்டினுர். கடவுள், உயர்ந்த ஜாதியினர்தான் தன்னை வழிபட வேண்டும் எனக் குறிப்பிடவில்லை. சைவர்களும், வைஷ்ணவர்களும் சமத்து வத்தையும், 'எல்லோரும் ஓர் இனம்' என்ற கொள்கையையும் பரப்பி வருகிருர்கள் ·என்றும் குறிப்பிட்டார். 'இந்து மதத்தில் எல்லாக் கொள்கைகளையும் தங்கள் பழக்க வழக்கங்கள் என மேற்கொள்கின்றனர். ஆனுல், வேதத்தில் ஜாதிக்கு மேற்கோள் கள் இல்லை, இராஜாராம் மோகன்ராய் ஆரம்பித்த பிரம்ம சமாஜில், எல்லா மதத்தினரும், ஜாதியினரும் சேர்க்கப்பட்டனர். அவர் ஆரம்பித்த பிரம்மசமாஜம் இந்தியாவில் ஐக்கிய உணர்ச் சியை உண்டாக்கும் ஒரு ஸ்தாபனமாக அமைந்தது. இந்துக்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களை நடத்திய முறையின் காரணமா கவே அம்மக்கள் கிறிஸ்தவ மதத்தையும், முகமதியர்கள் மதத் தையும் சார நேர்ந்தது. ஆகவே, இந்து மதத்தில் நாளடைவில் பலமும், ஐக்கிய உணர்ச்சியும் குறைந்து வந்தது. ஆனுல் இந்தியாவை ஆட்டுகின்ற ஆங்கில அதிகாரிகள் கூட இந்துக் கோவிலில் கண்ணியமாக வரவேற்கப் படுகின்றனர். மற்ற மதத்தினர் வரவேற்கப்படும்போது மதத்தினுள் உள்ளவர்கள் ஏன் வரவேற்கக்கூடாது?'' எனக்கேட்டார்.[3]

[1] Ibid P. 25
[2] Ibid P. 27
[3] IbidP 28

ராவ் பகதூர் ஸ்ரீனிவாசன்[1] பேசும்போது, டாக்டர் சுப்பராய னுடைய தீர்மானம் ஒரு மிதமான தீர்மானம் என்றும், இத் தீர்மானத்தின் அடிப்படையில் பண்டைக் காலத்தில் தாழ்த்தப் பட்ட வகுப்பினர்கள் கட்டிய கோவிலை அவர்களுடைய அதிகாரத் திற்கு விட்டுக் கொடுக்க வேண்டியது அவசியமில்லை எனறும், ஆனுல், அவர்களை அக்கோவிலினுள் அனுமதித்தால் மட்டும் போதுமானது என்றும் கேட்டுக்கொண்டார். ‘திருச்சிராப்பள்ளி யில் சாம்பவ சாம்பான் என்பவர் கட்டிய கோவிலை இந்துக்கள் பிற்காலத்தில் ஜம்புகேச்வரர் என அழைத்தனர். தஞ்சாவூரில் சோழமன்னர் கட்டிய பிரகதீஸ்வரர் ஆலயம் என்பது விருவதை சாம்பவன் என்பவருடைய உடல்தகனம் செய்யப்பட்ட சமாதியில் கட்டப்பட்டது என்றும், இது சோழமதத்தில் குறிப்பிடப்பட்டிருக் கிறது’ என்றும் கூறினுர்.[2] அதுபோலவே, திருவாரூரில் சோழ ராஜாவால் கட்டப்பட்ட கோவில் தாயக சாம்பவான் என்பவ ருடைய சமாதியில் கட்டப்பட்டது. அக்கோவிலை இனறு தியாக ராஜப் பெருமாள் கோவில் என அழைக்கப்படுகின்றது.[3] மராத் தியர்களும், தெலுங்கு மன்னர்களும் தென்னிந்தியாவிற்கு வந்த போது சாம்பவர்களுடைய கோட்டைகளையும், கோவில்களையும், இடித்து அதில் புதியகோவில்கள் கட்டினுர். தஞ்சாவூரில் சோழ மன்னர்களால் கட்டப்பட்ட மாரியம்மன்கோவில் திருவள்ளுவரின் சகோதரி மாரி அம்மன் என்ற பெயரால் கட்டப்பட்டது’ திரு ஸ்ரீநிவாசன்[4] அவர்கள் பேசும்போது, சமாதியின் மேல். கட்டப்படடது என வெங்கடராமையா அவர்கள் கூறிய சரித்திரக் கருத்தை விளக்குவதாக அமைந்தது.

அவர், மேலும் பேசும்போது, தாம் அக்கோயில்களைச் சாம்பவர்களுக்கு விட்டுக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்ளவில்லை எனவும், அக் கோவிலில் அவர்கள் வழிபாடு செய்வதற்கு மட்டும் அரசாங்கத்தை வேண்டிக்கொள்வதாகவும் கூறினுர். இக்கோயில்களிலெல்லாம் பிராமணர்கள் வழிபாடு செய்வதில்லை என்ற உண்மையைச் சுட்டிக் காட்டினுர். சர். ஏ.பி. பாட்ரோ அவர்கள் சுத்தி என்பதைப்பற்றிக் கூறியதை மறுத்துக் கூறும்போது, சுத்தி குறைவாகக் கருதப்படும் தாழ்த்தப்பட்ட சமுதாயத்திலிருந்துதான் திருவள்ளுவரும், அவ்வையும், மாரி அம்மனும் உதித்தனர் எனப் பதிலளித்தார். அப்பெரியார்கள் சுத்தியற்றவர்கள் என்ற கேள்வியை எழுப்பினுர். ஏழ்மை, சுத்தி இல்லாத தன்மைக்குக் கொண்டுபோய் இருக்கும் எனக் காரணம்

[1] Ibid
[2] Ibid
[3] Ibid page 29
[4] Ibid

காட்டினர். என்றாலும், வாய்ப்பு வரும்போது அவர்கள் சுத்த மாகவே இருப்பர் என்றும் குறிப்பிட்டார். ஆகவே, பொருளாதார முன்னேற்றமும், அரசியல் முன்னேற்றமும் ஏற்படும்போது ஆத்மீக முன்னேற்றமும் ஏற்பட வாய்ப்பளிக்க வேண்டும் எனக் கேட்டுக்கொண்டார்.

காலிப் அல்லா சாகிப் பகதூர் அவர்கள்[1] பேசும்போது மைலாப்பூர் கபாலீஸ்வரர் கோவிலில், ஆதி திராவிடர் சமுதா யத்தைத் சார்ந்த மகான்களை உயர்ஜாதி இந்துக்களும் வழிபடு கிறார்கள் என்றும், அவ்வாறு ஆதிதிராவிடர்கள் குறிப்பிட்ட கொள்கைகளைத் தங்கள் வேதம் என்றும் கொள்ளும் தமிழர்கள், அச்சமுதாயத்தைச் சார்ந்த மக்கள் கோவிலினுள் போவதற்கு அனுமதிக்காமல் இருப்பது நியாயத்திற்குப் புறம்பாக இருக்கிறது எனக் கூறினார், தாழ்த்தப்பட்டவர்கள் சமுதாயம் ஒத்துக் கொள்ளாவிட்டால் அவர்கள் அச் சமுதாயத்திலிருந்து பிரிந்து போய்விடுவார் என எச்சரித்தார். ராவ் சாகிப் என். சிவராஜ் பிள்ளை பேசும்போது, ஜாதியின் காரணமாக, ஜாதியில் புறம் பானவர் என்ற பிரச்சினை ஏற்பட்டது எனக் கூறினார். (அப்போது ஸ்வாமி வெங்கடாசலம் குறுக்கிட்டு மந்திரிகள் ஜாதி என்ற பாறையில் மோதிப் பதவிக்கு வந்தனர் என்று கூறினர்) சிவராஜ் பிள்ளை[2] மேலும் தொடர்ந்து பேசும்போது தேசியம் என்பதே ஜாதி என்ற பாறையில் மோதி உடைந்து விடும் என்றும், ஜாதியை ஒத்துக்கொள்வது வரை ஜாதிக்குப் புறம்பான தாழ்த்தப்பட்டவர்கள் என்று இருந்தே வரும் எனக் கூறினர். உயர்ந்த ஜாதியினர் நாலுபேர் சேர்ந்து, பிராமணர் களை அநியாயமாக நடத்தினால் நாளடைவில் அவர்கள் ஜாதிக்குப் புறம்பானவர்களாக ஆகி விடுவார்கள். ஆகவே, இந்துமதம் என்பது ஜாதிகளை ஒழிக்கும் வரையில் நேர்மையுள்ள மதமாக இருக்காது எனக் கூறினார். அதற்கு முதற்படியாகத் தீண்டாமை ஒழிக்கப்பட வேண்டுமெனக் கேட்டுக்கொண்டனர்.[3]

சீமார் எம். சி. பட்நாயக் மஹோராக்ஷியா அவர்கள் பேசும் போது 'சண்டாளர்கள்' என்பது பிராமணர்களுக்கும், சூத்திரர் களுக்கும் பிறந்த குழந்தைகளுக்கு அளித்த பெயர் எனவும், இப்படிப்பட்ட திருமணங்கள் நடக்கக்கூடாது என்பதற்காகவே சண்டாளர்கள் எனப் பெயரிட்டனர் எனவும் பாகவதத்தின் அடிப்படையில் எல்லா ஜாதிகளும் ஒன்று எனவும், எல்லோரும்

[3] Ibid Page 30
[1] Ibid P. 30
[2] Ibid

ஒரு கடவுளையே வழிபட்டனர் எனவும் குறிப்பிட்டார்.[1] இந்து மதத்தில், குருவை வழிபாடு செய்வது என்ற கொள்கை, ஆத்மீகக் குறைவு உள்ளவர்கள், ஆத்மீகக் குருவை ஏற்றுக் கொள்வது என்பதுதான் காரணமாகும். தெய்வத்தின் சிலைகளை வழிபடுவதினால் தனிப்பட்ட மனிதர்களை வழிபடுவதை அகற்றி விட முடியும். ஆத்மீகத்தில் புத்தியிலும் உயர்வதற்கு வாய்ப் பில்லாமல் தாழ்த்தப்பட்டுக் கிடக்கும் மக்களுக்குக் கோவில்களைத் திறந்து விடுவார்களேயானால், அவர்கள் ஆத்மீகத்திலும், புத்தி யிலும் முன்னேற வாய்ப்புள்ளது எனக் கூறினர். கடவுளை இந்துக்கள் 'பதித்த பாவனு' என்று கூறுகின்றனர். (வீழ்ந்த வர்களைக் காப்பாற்றுபவர்); அங்ஙனம், தாழ்த்தப்பட்டவர்கள் சமுதாயத்தில் வீழ்ச்சி அடைந்தவர்கள் என்று கருதினால், அவர்கள் கோவில்களில் வழிபடுவதற்கு முதல் உரிமை பெற்ற வர்கள் எனக் கூறினர். மனிதன் மிருகம் இல்லை எனவும், மனிதனால் மற்றவர் தீட்டு அடையார் எனவும் கூறினர்.[2]

சுப்பராயனுடைய தீர்மானம் கோவில்களைத் திறந்துவிடு வதற்கென ஒரு மசோதாவைக்கொண்டு வரும் சம்பந்தமாகவே பிரேரிக்கப்பட்டது. அத் தீர்மானம் சீரிய மாற்றத்தோடு 56 அங்கத்தினர்கள் ஆதரவோடு தேர்வு பெற்றது. 19 அங்கத் தினர்கள் தீர்மானத்திற்கு ஓட்டளிக்காமல் நடுநிலைமையாக இருந்தனர்.[3]

டாக்டர் சுப்பராயனுடைய தீர்மானத்திலுள்ள முக்கியக் குறைபாடு கோவிலினுள் செல்வதற்கு உயர்ந்த ஜாதியினரால் அமைக்கப்பட்ட கமிட்டிகளின் உடன்பாடு தேவை. மேலும், தர்மகர்த்தாக்களுடைய நல்லெண்ணம் தேவையாக இருந்தது. அதுபோலவே, கோவில்களில் பல ஜாதியினருக்கும் பல இடங்கள் வழிபாட்டிற்கு வேண்டி ஒதுக்கத் தேவையாக இருந்தது. சென்னை சட்டசபையில் தாக்கல் செய்யப்பட்ட டாக்டர் சுப்பராயனுடைய மசோதா வழக்கறிஞருடைய[4] அபிப் பிராயத்தை அறிய அனுப்பப்பட்டது அவர்கள் கோவில்களை நடத்தும் தர்மகர்த்தாக்களே கோவில்களைத் தாழ்த்தப்பட்டவர் களுக்குத் திறந்து வைக்க அதிகாரம் பெற்றவர்கள் எனக் கூறினர். அவர்கள், பலதரப்பட்ட ஜாதியினர்களுக்கும், கோவில் களில் அவரவர் ஜாதி உயர்வுக்கு அல்லது தாழ்வுக்கு ஏற்றவாறு இடம் அளிக்க வேண்டும் என்று குறிப்பிட்டனர்.

[1] Ibid Page 33
[2] Ibid
[3] Ibid
[4] No. 28, The Indian Express, 6th April 1934, MNR. Cl. p. 203

டாக்டர் சுப்பராயனுடைய தீர்மானம் விவாதத்திற்கு அசெம்பிளியில் எடுத்துக் கொள்ளப்பட்டபோதிலும் அத் தீர்மானத்தைக் கவர்னர் ஜெனரல் நிராகரித்தால். இக்காலத்தில் வெளியான 'ப்ரீ ப்ரஸ் ஆஃப் இந்தியா'[1] என்ற பத்திரிகை ஹரிஜனங்களுக்குத் தனிக்கோவில் அமைக்க வேண்டும் எனக் குறிப்பிட்டது. டாக்டர் சுப்பராயன் சமர்ப்பித்த மசோதா, கவர்னர் ஜெனரலால் சட்டசபையில் கொண்டுவர அனுமதிக்கப் படாததின் காரணம், தீண்டாமை என்பது ஒரு தேசியப் பிரச்சினை என்பதேயாகும். ஆனல், 1933ஆம் ஆண்டு இராஜா ஐயர் அவர்களுடைய மசோதா ஒன்று தீண்டாமையை ஒழிக்கும் அடிப்படையில் அனுமதிக்கப் பட்டது.[2] அம் மசோதா சட்ட சபையின் அடிப்படையில் தீண்டாமையை ஒழிப்பதற்கு வழி வகுத்தது. ஆனல், மத அடிப்படையைப் பற்றி அது வெளிப் படையாக ஒன்றும் கூறவில்லை. இந்திய அரசாங்கம் இத் தருணத்தில், மதப்போராட்டத்தைச் சுட்டிக்காட்டி, மக்கள் இன்னும் எத்துணை மனப்பக்குவம் அடைய வேண்டியிருக்கிறது என்பதை எடுத்துக் காட்டியது. தீண்டாமையைப் பற்றியுள்ள விவாதத்துக்குப் பதிலளிக்கையில், நிர்வாகசபை அங்கத்தினர் சர். பி. எல். மிட்டர், இந்துமதச் சட்டங்கள் ஒவ்வொரு மாகாணங்களிலும் அவ்வரசாங்கத்தின் விருப்பம்போல் நடத்தப்பட்டு வருகிறது எனவும், மாகாண சட்டசபைகளுக்கு இந்த உரிமையை வழங்க வேண்டும் எனவும் குறிப்பிட்டார். இராஜா ஐயருடைய மசோதாவிற்கும் பதிலளிக்கும்போது மிட்டர், அவர் மசோதாவின் அடிப்படையில் பல ஜாதியினருக்கும் பல இடங்களில் கோவில்களை அளிக்கக் கேட்டுக் கொண்டதைக் குறித்துத், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் கோவிலில் எந்தப் பகுதியில் நிற்க வேண்டுமெனக் கேட்டார்.[3]

இவ்வாறு தாழ்த்தப்பட்டவர்களுக்கு ஆலயப் பிரவேசத்தைப் பற்றிச் சென்னை சட்டசபையும், மத்திய சட்டசபையும் விவாதிக்கும்போது, எம். சி. இராஜாவின் தலைமையில் தாழ்த்தப் பட்ட வகுப்பினர்கள் ஒரு பிரதிநிதிக் குழுவை அனுப்பி, 1933ஆம் ஆண்டு மார்ச் மாதம் 29ஆம் தேதி வைஸ்ராயைச் சந்தித்தனர்.[4] அவர்கள் ஆலயப் பிரவேச மசோதாக்களை விவாதிக்க மாகாண சட்டசபைகளுக்கு அனுவாதம் கொடுக்கும், அம் மசோதாக்களைத் தேர்வு பெற அரசாங்கம் உதவ

[1] Public (General Department) 1933, Miscellaneous, G. O. No. 205 dated 4-3-33.
[2] No. 11, The Hindu, 23rd January 1933, MNR. Cl. p. 11
[3] Ibid
[4] Ibid

வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார். வைஸ்ராயும் எல்லா உதவிகளையும் செய்ய வாக்களித்தார். ஆனால், எல்லா மனிதர்களும் அரசியல் அடிப்படையிலும், சமுதாய அடிப்படையிலும், மத அடிப்படையிலும் சமத்துவம் பெற வேண்டும் என்ற சட்டம் பரிபூரணமாக 1935ஆம் ஆண்டு சட்டத்தின் அடிப்படையில் மாகாண சுயாட்சி பெற்று, செயல்பட்ட சட்டசபையில் 1937ஆம் ஆண்டு ஆலயப் பிரவேசம் தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் அளிக்கப்பட்டது.[1] ஆனால், திருவிதாங்கூரில் திவானாக இருந்த சர். சி. வி. இராமசுவாமி ஐயர், 1937ஆம் ஆண்டில் திருவிதாங்கூரிலுள்ள கோவில்களை ஹரிஜனங்களுக்குத் திறந்து வைத்தார். சமுதாயத்திலும், மதத்திலும் பெரும் மாற்றம் ஏற்படும் இப்பெரிய சாதனையைச் சென்னை சட்டசபை பாராட்டியது.[2]

## 7

## தாழ்த்தப்பட்ட சமூகத்தினர்களுக்கு மந்திரிசபையில் இடம் அளிப்பதைப்பற்றி அரசாங்கத்தின் வாக்குறுதி

தாழ்த்தப்பட்ட மக்களுக்கு ஆலயப் பிரவேசம் எத்துணை முக்கியமோ, அதுபோன்று மந்திரிசபையில் அச் சமூகத்தினர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பது ஒரு பெரும் பிரச்சினையாக இருந்தது. 1935ஆம் ஆண்டு, சட்டசபையில் பட்ஜெட் விவாதிக்கப்பட்டபோது,[3] வி.ஐ. முனுசாமிப் பிள்ளை ஒரு வெட்டுப் பிரேரணையைக் கொண்டு வந்து கவர்னர்களுக்கு அனுப்பப்பட்ட 'அறிவுறுத்தும் துணைப் பொருளின்' (Instrument of instruction) எட்டாவது பாராவில், கவர்னர் தமது மந்திரிகளைத் தேர்ந்தெடுக்கும்போது, அம்மந்திரிகள் தகுந்த மெஜாரிட்டி எய்துவதற்கு வாய்ப்புள்ள முறையில் தேர்ந்தெடுக்க வேண்டும் எனக் குறிப்பிட்டதைச் சுட்டிக் காட்டியதோடு, சென்னையில் 69 இலட்சம் தாழ்த்தப்பட்ட மக்கள் உள்ளனர் என்றும், அம் மக்களுக்கு 215 பேர் அடங்கிய ஒரு சட்டசபையில் 30 இடங்கள் அளிக்கப்பட்டிருக்கின்றது என்றும், ஆகவே, அம் மக்களின் பிரதிநிதி ஒருவர் மந்திரிசபையில் இடம் பெறுவது உறுதி என்றும் குறிப்பிட்டிருப்பதைச் சுட்டிக் காட்டி, தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்கு மந்திரிசபையில் ஓர் இடம் அளிக்க வேண்டும் என்றும்

[1] The Civil Court Manual Madras Acts, 1940, P.1745

[2] Mitra, op.1937, Vol.II, p.1

[3] Public (Reform) DePartment 1935, Ordinary, G.O.Co.734, dated 5-7-35

கூறினர். அரசாங்கத்தரப்பில் திரு. சௌத்ரி பேசும்போது, மந்திரிசபையில் கூட்டுப் பொறுப்பு செவ்வனே நடப்பதற்கு முக்கியமாகக் குறைந்த சமுதாயத்தினர்களுக்கு மந்திரி சபையில் நிச்சியம் இடம் அளிக்க வேண்டும் எனக் கூறினர், தாழ்த்தப் பட்டவர்களுடைய ஜனத்தொகையைக் குறிப்பிடும்போது சுமார் 70 இலட்சம் மக்களுக்கு ஒரு சமுதாயத்திற்குப் புதிய சீர்திருத்தச் சட்டத்தின் அடிப்படையில் மந்திரிசபைகள் அமைக்கப்படும் போது, அவர்கள் கொண்டுள்ள பிரதிநிதித்துவம், மந்திரிசபை யில் நிச்சயம் ஓர் இடத்தை அளிக்கும் எனக் கூறினர். நிச்சிய மாகக் கவர்னர் இக்கொள்கையை மேற்கொள்வர் என உறுதி அளித்தார்.[2] 1935ஆம் ஆண்டு சீர்திருத்தச் சட்டத்தின்படி மாகாண சுயாட்சி சென்னையில் 1937ஆம் ஆண்டு அமைக்கப்பட் டது. வி. ஐ. முனுசாமிப் பிள்ளை மந்திரிசபையில் தாழ்த்தப்பட் டோரின் பிரதிநிதியாக நியமிக்கப் பட்டார். சுமார் 34 ஆண்டு கள் கழித்துத் திரு.கருணாநிதி தலைமையில் அமைக்கப்பட்ட மந்திரிசபை சூத்திரர்களால் அமைக்கப்பட்ட மந்திரிசபை என விளக்கினர். இப்பெரு மாற்றங்களுக்குக் காரணம் 1935ஆம் ஆண்டு அமுலில் எந்தப் பாராளுமன்றச் சீர்திருத்தச் சட்டமே யாகும்.

## 8

## வகுப்புவாத வாக்காளர் பட்டியல்

1935ஆம் ஆண்டு சீர்திருத்தச் சட்டத்தின்படி மத்திய சட்டசபைக்கும், மாகாண சட்டசபைக்கும் தேர்தல் வகுப்புவாத அடிப்படையிலே நடந்தது.[3] ஆங்கில அரசாங்கத்தின் தீர்ப்பின் அடிப்படையில்தான் இத்தேர்தல் நடைபெற்றது. தாழ்த்தப் பட்ட வகுப்பினர்கள் ஜனத்தொகை அடிப்படையில் வங்காளத் திலும், பஞ்சாபிலும் மிகுதியாக இருந்தனர். சென்னையிலும், பம்பாயிலும் அவர்கள் எண்ணிக்கை மிகக் குறைவு.

## 9

## மத்தியில் கூட்டாட்சியும், மாகாணத்தில் சுயாட்சியும்

1635ஆம் ஆண்டு ஆங்கிலப் பாராளுமன்ற இருசபைக் குழுவின் சிபாரிசுக்கேற்ப, இந்திய அரசு ஒரு கூட்டாட்சியாக

[1] Pulic (Speciol) Deptrtment 1935, Miscellaneous, G.O. NO. 1101, dated 5.7.35

[2] Public (Special Deportment) 1935, Miscellaneous, G.O.No. 1101, dated5.7.35

[3] Law Legislative Department (Elections) 1935, Miscellaneous G.O. No.561, dated 11.12.35

வும் அங்குப் பொறுப்பாட்சிக்கு அடிப்படையாக ஒரு பகுதி இலாக்காக்கள் மக்கள் அதிகாரத்திற்கும் மாற்றப்பட்டன.[1] மாகாணங்களில் நிராகரிக்கப்பட்ட இரட்டையாட்சி மத்தியில் புகுத்தப்பட்டது. மாகாண சட்டசபைகளுக்குப் பொறுப்பாக எல்லா இலாக்காக்களும் மாற்றப்பட்டன. மத்திய அரசாங்கத்தில் நிர்வாகம் பலமாக அமைவதற்கு அவர்கள் காட்டிய காரணம், இந்திய சமுதாயம் ஜனநாயகம் எய்துவது வரை, பலம் பொருந்திய ஒரு நிர்வாகம் தேவையென்றும், புதிய பொறுப்புக்கள் மக்களுடைய தேசிய குணங்களை எய்துவதற்கு ஏதுவாக அமையும் என்றும், ஆனால், அச் சாதனையில், மக்களுக்கு வழி காட்டப் பலம் பொருந்திய அரசாங்கம் தேவையென்றும் கூறியது. ஆனால், மாகாணங்களைப் பொறுத்தவரையில் சுயாட்சி வழங்க மாகாணங்களின் அதிகாரங்கள் வரையறுக்கப்பட்டன. புதிய சீர்திருத்தத்தின் அடிப்படையில் அமையும் மாகாண மந்திரி சபைகள் கூட்டுப் பொறுப்பை முக்கியமான கொள்கையாக அனுஷ்டிக்கப் பாராளுமன்றக் குழு கேட்டுக் கொண்டது. அதுபோலவே எல்லாக் குறைந்தபட்ச சமுதாயத்தினருக்கும் மந்திரிசபையில் இடம் அளிக்கச் சிபாரிசு செய்தது.[2]

1935ஆம் ஆண்டு சீர்திருத்தத்தின்படி மத்திய அரசாங்கத்தில் இருசபைகள் சட்டம் இயற்ற அமைக்கப்பட்டன. மேல் சபையில் சுதேச மன்னர்கள் ஆட்சி செய்யும் பகுதிகளுக்கும் பிரதிநிதித்துவம் வழங்கப்பட்டது. மாகாணங்களிலும் இரு சபைகள் அமைக்கப்பட்டன. மேல் சபையில் அங்கத்தினர்களை ஒரு பகுதியில் நியமனம் செய்யக் கவர்னருக்கு அதிகாரம் வழங்கப் பட்டது.

1935ஆம் ஆண்டு சீர்திருத்தம் 1937ஆம் ஆண்டிலிருந்து நடைமுறையில் ஆக்கப்பட்டது. 10 வருடங்கள் கழிந்ததுமே ஆங்கிலேயர்கள் அதிகாரத்தை இந்தியர் கைக்கு மாற்றிச் சமாதானமாக இந்தியாவை விட்டு வெளியேறினர்.[3] உலகச் சரித்திரத்தில் சமாதானமாக அரசியல் அதிகாரம் கைமாறியது முதற்படியாக இந்தியத் துணைக்கண்டத்திலாகும். இதை உதாரணமாக எடுத்துக் காட்டிப் பல ஆசிய ஆப்பிரிக்க நாடுகள் பின் சுதந்திரம் பெற்றன. இந்தியா இருகூறுகப் பிரிக்கப்பட்டதற்கு இந்திய சமுதாய அமைப்புதான் காரணம் என்பது நாமறிந்த உண்மையாகும்.

[1] J.C.I.C.R.(oP,cit) 1934, Vol.I.P.II,pp.57.58
[2] Ibid
[3] Ibid

# 9. முடிவுரை

இந்தியத் தேசியப் போராட்டத்தின் போக்கை ஆராயும் போதும், குறிப்பாக இரட்டையாட்சிக் காலத்து அரசியல் போராட்டத்தைப் படிக்கும்போதும், இந்தியச் சமுதாயத்திலுள்ள ஜாதி மத வேறுபாடுகள் மக்கள் ஒருமைப்பாட்டிற்குத் தடையாக இருந்ததையும், பலதரப்பட்ட மக்கள் அரசியலில் ஒருமுகமாகச் செயல்பட முடியாமல் அவதிப்பட்ட பெருங்குறை பாட்டையும் தெள்ளத் தெளிவாகக் காண முடிந்தது. இக் குறைகள் காரண மாகத்தான் மக்களிடையே நிரந்தர சகோதரத்துவத்தையும், ஐக்கியத்தையும் ஏற்படுத்த முடியவில்லை. கடினமான கடற்கரை மணலை ஒன்ருகத் திரட்டிச் சேர்க்க முடியாதது போன்று, ஜாதியின் அடிப்படையால் பிரிந்திருந்த மக்களைப் பற்றுதலாலும், பாசத்தாலும், தேசிய உணர்ச்சியாலும் ஒன்ருக இணைக்க முடிய வில்லை.[1] ஜாதி உயர்வு தாழ்வுகள், மக்களிடையே அரசியல் அடிப்படையில் சந்தேகங்களையும், போட்டிகளையும் ஏற்படுத்தியது மல்லாமல், அந்நியர் ஆட்சியை ஒருமுகமாக எதிர்க்கப் பல சந்தர்ப்பங்களில் முடியாமற் போயிற்று. இப் பலஹீனம்தான் இந்திய அரசியல் முன்னேற்றம் படிப்படியாகவும், தவணையாக வும் அமைய முக்கிய காரணமாக இருந்தது. இந்திய மக்கள் தேசிய உணர்வோடு அந்நிய ஆட்சியை ஒருமுகமாக எதிர்த்து இருப்பார்களேயாயின், அந்நிய ஆட்சி வெகு காலத்திற்கு முன் பே ஒழிந்திருக்கும். ஆனல், சமுதாயத்தில் ஏற்பட்ட குறை அரசியலில் பிரதிபலித்தது. இக்குறை, எவ்வாறு பெருமளவிற்குச் சமுதா யத்தை மட்டுமல்லாமல் அரசியலையும் பாதித்தது என்பதை இரட்டையாட்சிக் காலத்து அரசியல் வரலாறு நமக்குத் தெள்ளத் தெளிவாகக் காட்டியுள்ளது. என்ருலும், ஜாதி அடிப்படையில் மக்களிடையேயுள்ள உயர்வு தாழ்வுகளையும், வேற்றுமைகளையும் ஒருவாறு மாற்றியமைக்க, அரசியல் சலுகைகள் அளித்தபோதெல்

[1] See M.A. Sherring, Op. cit., Page 218.

லாம் ஆங்கிலப் பாராளுமன்றம் உதவி அளித்துள்ளது. இவ்வுதவியால் எல்லாச் சாதிகளும் சம நிலை எய்திட ஆங்கிலப் பாராளுமன்றச் சட்டங்கள் எத்துணை உதவியது என்பதைச் சென்னை மாகாணத்தின் வரலாறு விசேடமாக நமக்குத் தெளிவுபடுத்தும்.[1]

ஐதீகத்தின் அடிப்படையில் கோபுரமாக அமைந்த இந்திய சமுதாயம், ஆங்கிலேயர்கள் வெளியேறும்போது, அரசியல் அடிப்படையிலும், சமுதாய அடிப்படையிலும், சமத்துவமடைந்த ஒரு சமதர்ம சமுதாயமாக மாறியது; தாழ்த்தப்பட்டவர்களும் உயர்ந்த நிலையை அடைந்தனர். உயர் ஜாதியினரும் அன்றுவரை தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களைச் சம அந்தஸ்தோடு ஆதரிக்க நிர்ப்பந்தம் ஏற்பட்டது.[2] அரசியல், சமுதாயம், மதம், இம் மூன்றிலும் எல்லா மக்களும் சம உரிமையும், ஜனநாயகமும் அடைந்ததுதான் இந்தியச் சீர்திருத்தச் சட்டங்களின் இரகசியம். அரசியல் அதிகாரத்தைக் கொடுத்துச் சமுதாயத்திலும், மதத்திலும், சமத்துவத்தையும். ஜனநாயகத்தையும் ஏற்படுத்தினர்,

மேலும், இரட்டையாட்சிக் கால அரசியல் நமக்குப் போதிக்கும் உரிமையாவது, ஜாதி என்பது தமிழர் நாகரிகத்திற்குப் புறம்பானது என்பதுதான். வள்ளுவர்பெருமான் ஜாதியின் பேரால் நடத்தப்படும் கொடுமைகளைக் கண்டித்துள்ளார்.[3] புத்தர் பெருமானின் வாழ்க்கை ஜாதிக்கு விரோதமாக நடத்திய பெரும் புரட்சியேயாகும்.[4] சர். வில்லியம் ஆர்ச்சர் என்பவர் ஜாதியால் ஏற்படும் துவேஷமே பல அரசியல், சமுதாய, பொருளாதாரக் கொடுமைகளுக்குக் காரணம் என விளக்கியுள்ளார்.[5] ரெவரண்ட் எம். ஏ. ஷெரிங் (Rev. M. A. Sherring) அவர்கள் ஜாதியால் இந்துக்கள் மனதில் அடிமை உணர்ச்சி ஏற்படுகிறது என்றும், இது கிழக்கிந்திய நாட்டிலுள்ள கொடூரத்தின் விளைவு என்றும், ஜாதி ஆதாரமற்றதும், நற்பலனுமற்றதுமான ஒரு நிகழ்ச்சி எனவும் எடுத்துக் காட்டியுள்ளார்,[6] தற்போதுள்ள இந்திய சமுதாயம் ஓர் ஐக்கியப்பட்ட நாட்டை உருவாக்க உதவாது எனச் செலிக் எஸ். ஹாரிசன்[7] (Seling S, Harrison) என்பவர் விவாதித்துள்ளார். இந்தியச் சரித்திரத்தில் பல தோல்விகள் காணப்படு

1 [Ibid
2 The Hindu, dated 31st Jaunary 1964
3 See V. Kalyanasundaram, Ilamai Virunthu, Madras, page 38.
4 See Rev. .M A. Sherring, OP. cit., Page 225
5 William Archer, India and the future, 1917, Page 87
Rev. M. A. Sherring Op. cit., Page 225
SeligS. Harrison, India the most dangerous decades, 1960, p. 96

கின்றன என்றும், ஆனால், சீன ஆக்கிரமிப்பது முன் இந்திய மக்கள் ஐக்கியப்பட்டு இருக்கவில்லை எனவும் திரு. ஒய். பி. சவான்[1] அவர்கள் சுட்டிக்காட்டியுள்ளார்.

இப்படிப்பட்ட சூழ்நிலையில், இந்தியச் சீர்திருத்தத்தைப் படிக்கும் ஒவ்வொருவரும், சமுதாயத்தில் இதுவரை நடந்த மறுமலர்ச்சியைக் கண்டு திருப்தி அடைந்த போதிலும், இந்திய மக்கள் இன்றும் பெரும் புரட்சியை எதிர்நோக்கியே நிற்கின்றனர் என்ற உண்மையை உணர்வர். ஜாதியை ஒழிப்பதே நம் சமுதாயத்தின் அடுத்த முன்னேற்றச் சீர்திருத்தமாக இருக்கும். ஜாதி ஒழிந்திடாமல் சமுதாயம் ஒன்றுபட்டு முன்னேறுவது கடினம். கலப்புத் திருமணங்கள் மட்டுமே நியாயமான திருமணம் என அரசாங்கம் சட்டத்தின் அடிப்படையில் ஒப்புக்கொண்டால் ஜாதிகள் தானுகவே ஒழிந்துவிடும். கலப்புத் திருமணங்களும் அன்பின் அடிப்படையில்தான் அமைய வேண்டும். புதிதாக இந்தியாவில் உருவாகும் சமுதாயம் காதல் திருமணங்களை மட்டுமே அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டும்.[2] தமிழ்நாடு அரசு கலப்புத் திருமணங்களை ஆதரித்துப் பரிசுகள் வழங்குவது இங்குக் குறிப்பிட்டதாகும். பெற்றோர்கள் பார்த்து ஏற்பாடு செய்யும் திருமணங்களினால்[3] ஏற்பட்ட இன்னல்கள் சமூகத்திலும், குடும்பத்திலும் தேசியத்திலும் பெரும் துன்பங்களை விளைவித்துள்ளது. விரிவு பெற்ற மனப்பான்மைதான் இந்தியத் தேசியம் வளர்வதற்கும், இந்திய மக்கள் ஐக்கியப்படுவதற்கும், சிறுசிறு அரசியல் கட்சிகள் ஒழிவதற்கும், இந்திய அரசியலும், நிர்வாகமும் முற்போக்கு அடைவதற்கும் வழி வகுக்கும். நிரந்தரமான தனியார் திருமணங்களை மாற்றி. அரசாங்கம் கட்டுப்பாட்டுடன் தற்காலிகத் திருமணங்களை மட்டும் அனுமதிப்பதின் மூலம் சுயநலம் ஒழிந்த இரத்தஉணர்வினால் ஐக்கியம் ஏற்படுமென்று பிளாட்டோ[4] கூறிய கருத்து, ஜாதியால் பிளவுபட்ட இந்திய சமுதாயத்திற்குப் பெரிதும் பொருந்தும் எனத் தோன்றுகிறது. இரத்தத்தால் பிணைக்கப்பட்டு, ஒருமைப்பட்ட சமுதாயமே, பண்பட்ட இந்திய தேசியத்திற்கு வழிகோலும். 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற சொல்லின் பொருள் அப்போதுதான் புலனாகும்.

[1] The Hindu dated 23rd Juue 1965.
[2] See L.S.S.O 'MaIIey, Indian Caste customs, 1932, page 89
[3] See Prof. A. L. Basham, The Hindu, dated 31st January 1964
[4] See George H. Sabine. A. History of Political Theory, London, 1954, page 61

# பிற்சேர்க்கை

1920-ம் ஆண்டு முதல் ஆளுநர்கள், முதலமைச்சர்கள், அமைச்சர்கள் பற்றிய பட்டியல்

| ஆளுநர்கள் (1) | முதலமைச்சர்கள் (2) | அமைச்சர்கள் (3) |
|---|---|---|
| 1. சர் ப்ரீமேன் ப்ரீமேன் தாமஸ், பேரன் வெலிங்டன், ரேட்டன் 10-4-1919--12-4-1924 | திரு ஏ. சுப்பராயலு ரெட்டியார், 17-12-1920 (பிற்பகல்) 11-7-1921 | 1. திரு பனகண்டி ராமராயனின்கார், பனகல் ராஜா 17-12-1920 (பிற்பகல்) 19-11-1923<br>2. திரு குர்மா வெங்கட ரெட்டி நாயுடு, 17-12-1920 (பிற்பகல்) 19-11-1923<br>3. திரு ஏ. பி. பாட்ரோ, 11-7-1921—19-11-1923 |

2

| ஆளுநர்கள் (1) | முதலமைச்சர்கள் (2) | அமைச்சர்கள் (3) |
|---|---|---|
| 1. சர் ப்ரீமேன் ப்ரீமேன் தாமஸ், பேரன் வெலிங்டன், ரேட்டன் 10-4-1919—2-4-1924 | திரு பனகண்டி ராமராயனின்கார், பனகல் ராஜா, 19-11-1923—3-12-1926 | 1. திரு ஏ. பி. பாட்ரோ, 19-11-1923—3-12-1926<br>2. திரு டி. என். சிவஞானம், பிள்ளை, 19-11-1923—3-12-1926 |

| | | |
|---|---|---|
| 2. சர் சார்லஸ் டாடண்டெர், 13-4-1921 | | |
| 3. சர் ஜார்ஜ் ஜோசிம் விஸ்கவுண்ட், கோஸ்சன், ஹாக்கர்ஸ்ட் 14-4-1924—29-6-1929 | | |
| **3** | | |
| 1. சர் ஜார்ஜ் ஜோசிம் விஸ்கவுன்ட், கோஸ்சன், ஹாக்கர்ஸ்ட், 14-4-1924—29-6-1929 | டாக்டர் பி. சுப்பராயன் 4-12-1926—27-10-1930 | 1. திரு ஏ. அரங்கநாத முதலியார், 4-12-1926—8-3-1928 |
| | | 2. திரு ஆர். என். ஆரோக்கியசாமி முதலியார், 4-12-1926—8-3-1928 |
| 2. சர் நார்மேன் எட்வர்ட் மார்ஜோரிபேங்ஸ் 30-6-1929—11-11-1929 | | 3. திரு முத்தையா முதலியார், 16-3-1928 (பிற்பகல்) |
| 3. சர் ஜார்ஜ் பிரெடரிக் ஸ்டேன்லி, 12-11-1929—15-5-1934 | | 4. திரு எம். ஆர். சேதுரத்தினம் அய்யர், 16-3-1928 (பிற்பகல்) 27-10-1930 |

This list has been prepared in consultation with the Government Orders preserved in the Tamil Nadu Archives.

| ஆளுநர்கள் (1) | முதலமைச்சர்கள் (2) | அமைச்சர்கள் (3) |
|---|---|---|
| | **4** | |
| 1. சர் ஜார்ஜ் பிரெடரிக் ஸ்டேன்லி, 12-11-1929—15-5-1934 | திரு பி. முனுசாமி நாயுடு 27-10-1930 (பிற்பகல்) 4-11-1932 (முற்பகல்) | 1. திரு பி. டி. ராஜன், 27-10-1930 (பிற்பகல்) 3-11-1932<br>2. திரு எஸ். குமாரசாமி ரெட்டியார் 27-10-1930 (பிற்பகல்) 3-11-1932 |
| | **5** | |
| 1. சர் ஜார்ஜ் பிரடெரிக் ஸ்டேன்லி, 12-11-1929—15-5-1934 17-8-1934—15-11-1934<br>2. சர் முகம்மது உஸ்மான், 16-5-1934—16-8-1934<br>3. லார்டு ஜான் பிரான்ஸிஸ் ஆஷ்லே, எர்ஸ்க்கின் 16-11-1934—18-6-1936 | ராவு சுவெட்டாச்சலபதி ராமகிருஷ்ண ரங்கா ராவ், போபிலி ராஜா 5-11-1932—4-4-1936 (முற்பகல்) | 1. திரு பி. டி. ராஜன், 5-11-1932—4-4-1936<br>2. திரு எஸ். குமாரசுவாமி ரெட்டியார், 5-11-1932—4-4-1936 |

| | | |
|---|---|---|
| **6** | | |
| லார்டு ஜான் பிரான்ஸிஸ் ஆஷ்லே, எர்ஸ்க்கின் 16-11-1934—18-6-1936 | திரு பி. டி. ராஜன், 4-4-1936—24-8-1936 | 1. திரு எஸ். குமாரசுவாமி ரெட்டியார், 4-4-1936—24-8-1936 |
| 2. சர் குர்மா வெங்கட ரெட்டி நாயுடு 19-6-1936—1-10-1936 | | |
| **7** | | |
| 1. சர் குர்மா வெங்கட ரெட்டி நாயுடு 19-6-1936—1-10-1936 | ராவு சுவெட்டாச்சலபதி ராமகிருஷ்ண ரங்கா ராவ், போபிலி ராஜா 24-8-1936—1-4-1937 | 1. திரு பி. டி. ராஜன், 24-8-1936—1-4-1937 |
| 2. லார்டு ஜான் பிரான்சிஸ் ஆஷ்லே எர்ஸ்ர்க்கின் 2-10-1936—11-3-1940 | | 2. திரு எஸ். குமாரசுவாமி ரெட்டியார், 24-8-1936—10-10-1936 |
| | | 3. திரு முத்தையா செட்டியார், 10-10-1936—1-4-1937 |
| **8** | | |
| லார்டு ஜான் பிரான்சிஸ் ஆஷ்லே எர்ஸ்க்கின், 2-10-1936—11-3-1940 | திரு குர்மா வெங்கட ரெட்டி நாயுடு, 1-4-1937—14-7-1937 | 1. திரு எம். ஏ. முத்தையா செட்டியார், 1-4-1937—14-7-1937 |

| ஆளுநர்கள் (1) | முதலமைச்சர்கள் (2) | அமைச்சர்கள் (3) |
|---|---|---|
| லார்டு ஜான்பிரான்சிஸ் (தொடர்ச்சி) | | 2. திரு ஏ. டி. பன்னீர்செல்வம் 1-4-1937—14-7-1937 |
| | | 3. திரு பி. கலிபுல்லா சாகிப் பகதூர், 1-4-1937—14-7-1937 |
| | | 4. திரு மயிலை சின்னதம்பி ராஜா, 1-4-1937—14-7-1937 |
| | | 5. திரு ஆர். எம். பாலட், 1-4-1937—1937 |

9

| ஆளுநர்கள் (1) | முதலமைச்சர்கள் (2) | அமைச்சர்கள் (3) |
|---|---|---|
| லார்டு ஜான் பிரான்சிஸ் ஆஷ்லே எர்ஸ்க்கின், 2-10-1936—11-3-19±0 | திரு சி. ராஜகோபாலாச்சாரி, 14-7-1937 (பிற்பகல்) 29-10-1939 | 1. திரு டி. பிரகாசம் 14-7-1937 (பிற்பகல்) 29-10-1939 |
| | | 2. திரு யாகுப் ஹஸன், 14-7-1937—29-10-1939 |

3. டாக்டர் பி. சுப்பராயன்,
14-7-1937—19-10-1939

4. டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன்,
14-7-1937 (பிற்பகல்)
29-10-1939

5. திரு வி. ஐ. முனுசாமிப் பிள்ளை,
14-7-1937 (பிற்பகல்)
29-10-1939

6. திரு வி. வி. கிரி,
14-7-1937 (பிற்பகல்)
29-10-1939

7. திரு எஸ். ராமநாதன் பிள்ளை,
14-7-1937 (பிற்பகல்)
29-10-1939

8. திரு கே. ராமன் மேனன்,
14-7-1937 (பி. ப.)—3-1-1939

9. திரு பி. கோபால ரெட்டி
14-7-1937 (பி. ப)—3-10-1939

| ஆளுநர்கள் (1) | முதலமைச்சர்கள் (2) | அமைச்சர்கள் (3) |
|---|---|---|
| லார்டு ஜான் பிரான்சிஸ் (தொடர்ச்சி) | | 10. திரு சி. ஜே. வர்கீ, 7-1-1939 (பி. ப.) 29-10-1939 |
| சர் ஆர்தர் ஆஸ்வால்டு ஜேம்ஸ் ஹோப், 12-3-1940—26-2-1946 | — | — |
| **10** | | |
| 1. சர் ஹென்றிபோலே நைட், 27-2-1946—5-5-1946 | திரு. டி. பிரகாசம் 1-5-1946—23-3-1947 | 1. திரு வி. வி. கிரி, 1-5-1946—23-3-1947 |
| 2. சர் ஆர்ச்சிபார்டு எட்வர்டு நை 6-5-1946—6-9-1948 | | 2. திரு எம். பக்தவச்சலம், 1-5-1946—28-2-1947 |
| | | 3. திரு டி. எஸ். அவிஞசிலிங்கம் செட்டியார், 1-5-1946—28-2-1947 |
| | | 4. திரு கே. பாஷ்யம், 1-5-1946—23-3-1957 |
| | | 5. திரு பி. எஸ். குமாரசுவாமி ராஜா, 1-5-1946—28-2-1947 |

6. திரு டேனியல் தாமஸ்,
1-5-1946—28-2-1947

7. திருமதி ருக்மிணி லட்சுமிபதி,
1-5-1946—23-3-1947

8. திரு கே. ஆர். கரந்த்
1-5-1946—23-3-1947

9. திரு கோட்டி ரெட்டி,
1-5-1946—23-3-1947

10. திரு வேமுல கூர்மய்யா,
1-5-1946—28-2-1947

11. திரு பி. வீராசாமி,
18-6-1946 (பிற்பகல்)
3-2-1947

12. திரு பி. ராகவ மேனன்,
18-6-1646 (பிற்பகல்)
23-3-1947

13. திரு. பி. வெங்கடரத்னம்,
6-2-1947—23-3-1947

| ஆளுநர்கள் (1) | முதலமைச்சர்கள் (2) | அமைச்சர்கள் (3) |
|---|---|---|
| | 11 | |
| 1. சர் ஆர்ச்சிபால்டு எட்வர்டு நை, 6-5-1946—6-9-1948 | திரு. ஓ. பி. ராமசாமி ரெட்டியார், 24-3-1947—6-4-1949 | 1. டாக்டர் பி. சுப்பராயன், 24-3-1947—5-4-1948 (முற்பகல்) |
| 2. சர் கிருஷ்ண குமாரசிஞ்ஜி, பவசிஞ்ஜி, பவநகர் மகாராஜா, 7-9-1948—11-3-1952 | | 2. டாக்டர் டி எஸ். எஸ். ராஜன், 24-3-1947—6-4-1949 |
| | | 3. திரு. பி. கோபால ரெட்டி, 24-3-1947—6-4-1949 |
| | | 4. திரு. எம். பக்தவச்சலம், 24-3-1947—6-4-1949 |
| | | 5. திரு. டி. அவிஞசிலிங்கம் செட்டியார், 29-3-1947—6-4-1949 |
| | | 6. திரு. டேனியல் தாமஸ், 29-3-1947—15-6-1948 |
| | | 7. திரு. வேமுல கூர்மய்யா, 29-3-1947—15-6-1949 |
| | | 8. திரு. எச். சீத்தாராம ரெட்டி, 24-3-1947—6-4-1949 |
| | | 9. திரு. கே. சந்திர மௌலி, 24-3-1947—6-4-1949 |

10. திரு. கே. மாதவ மேனன்,
24-3-1947—6-4-1949

11. திரு. கலா வெங்கட ராவ்,
29-3-1947—24-1-1949

12. திரு. ஏ. பி. ஷெட்டி,
29-3-1947—6-4-1949

13. டாக்டர் எஸ். குருபாதம்,
26-6-1947—6-4-1949

## 12

1. சர் கிருஷ்ண குமாரசிஞ்ஜி,
பவசிஞ்சி, பவநகர்
மகாராஜா,
7-9-1948—11-3-1952

2. திரு ஸ்ரீபிரகாசா,
12-3-1952—9-12-1956

திரு. பி. எஸ். குமாரசாமி ராஜா,
7-4-1949—9-4-1952

1. டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன்,
7-4-1949—16-9-1951

2. திரு. பி. கோபால ரெட்டி,
7-4-1949—8-2-1952

3. திரு. எம். பக்தவச்சலம்,
7-4-1949—8-2-1952

4. திரு எச். சீதாராம ரெட்டி,
7-4-1949—9-4-1952

5. திரு கே சந்திர மௌலி,
7-4-1949—8-2-1952

6. திரு கே. மாதவ மேனன்,
7-4-1949—8-2-1952

7. திரு கீலா வெங்கட ராவ்,
26-9-1951—8-2-1952

| ஆளுநர்கள் (1) | முதலமைச்சர்கள் (2) | அமைச்சர்கள் (3) |
|---|---|---|
| | | 8. திரு ஏ. பி. ஷெட்டி, 7-4-1949—9-4-1952 |
| | | 9. திரு பி பரமேஸ்வரன், 7-4-1949—9-4-1952 |
| | | 10. திரு சி. பெருமாள்சாமி ரெட்டியார், 24-4-1949—9-4-1952 |
| | | 11. திரு ஜே. எல். பி. ரோச் விக்டோரியா, 2-6-1949—9-4-1952 |
| | | 12. திரு என். சஞ்சீவ ரெட்டி, 7-4-1949—10-4-1951 |
| **13** | | |
| 1. திரு ஸ்ரீ பிரகாசா, 12-3-1952—9-12-1956 | திரு சி. ராஜகோபாலாச்சாரி, 10-4-1952—12-4-1954 | 1. திரு எம். பக்தவச்சலம், 10-10-1953—12-4-1954 |
| | | 2. திரு ஏ. பி. ஷெட்டி, 10-4-1952—12-4-1954 |
| | | 3. திரு சி. சுப்பிரமணியம், 10-4-1952—12-4-1954 |

4. திரு கே. வெங்கடசாமி நாயுடு,
10-4-1952—12-41951
5. திரு என் ரங்கா ரெட்டி,
10-4-1952—30-9-1953
6. திரு எம். வி. கிருஷ்ண ராவ்,
10-4-1952—30-9-1953
7. திரு வி. சி. பழனிசாமி
கௌண்டர்,
10-4-1952—12-4-1954
8. திரு யு. கிருஷ்ண ராவ்,
10-4-1952—12-4-1954
9. திரு ஆர். நாகண நாயுடு,
10-4-1-52—30-9-1953
10. இராஜா சண்முக ராஜேஸ்வர
சேதுபதி
10-4-1952—12-4-1954
11. திரு. எம். ஏ. மாணிக்கவேலு
நாய்க்கர்,
10-4-1952—12-4-1954
12. திரு கே. பி. குட்டி கிருஷ்ணன்
நாயர்,
13. திரு என். சங்கரா ரெட்டி,
10-4-1952—12-4-1954

| ஆளுநர்கள் (1) | முதலமைச்சர்கள் (2) | அமைச்சர்கள் (3) |
|---|---|---|
| | | 14. திரு எஸ்.பி.பி. பட்டாபிராமராவ் 10-4-1952—30-9-1953 |
| | | 15. திரு டி. சஞ்சீவய்யா, 10-4-195[illegible]—30-9-1953 |
| | | 16. திரு கே. ராஜாராம், 10-10-1953—12-4-1954 |
| | | 17. திருமதி ஜோதி வெங்கடாசலம், 10-10-1953—12-4-1954 |
| | **14** | |
| 1. திரு ஸ்ரீ பிரகாசா, 12-3-1952—9-12-56 | திரு கே. காமராஜ், 13-4-1954—12-4-1957 | 1. திரு எம். பக்தவச்சலம், 13-4-1954—12-4-1957 |
| 2. திரு அனப்பரம்பில் ஜோசப் ஜான், 10-12-1956—1-10-1957 | | 2. திரு. ஏ. பி. ஷெட்டி, 13-4-1954—31-10-1956 |
| | | 3. திரு. பி. பரமேஸ்வரன், 13-4-1954—12-4-1957 |
| | | 4. திரு சி. சுப்பிரமணியம், 13-4-1954—12-4-1957 |
| | | 5. ஸ்ரீ சண்முக ராஜேஸ்வர சேதுபதி ராஜா, 13-4-1954—12-4-1957 |

| | | |
|---|---|---|
| | | 6. திரு எம் ஏ. மாணிக்கவேலு நாயக்கர், 13-4-1954—12-4-1957<br>7. திரு எஸ். எஸ். ராமசாமி படையாச்சி, 13-41954—12-4-1957 |
| **15** | | |
| 1. திரு அனம்பரம்பில் ஜோசப் ஜான், 10-2-1956—1-10-1957<br>2 திரு பாக்காலா வெங்கிட்ட ராஜமன்னர், 2-10-1957—24-1-1958<br>3. திரு பிஷ்ணுராம் மேதி, 25-1-1958—3-5-1964 | திரு கே. காமராஜ், 13-4-1957—14-3-1962 | 1. திரு எம். பக்தவச்சலம், 13-4-1957—14-3-1962<br>2. திரு சி. சுப்பிரமணியம், 13-4-1957—14-3-1962<br>3 திரு எம். எ. மாணிக்கவேலு. நாயக்கர் 13-4-1957—14-3-1962<br>4. திரு ஆர். வெங்கட்ராமன், 26-4-1957—14-3-1962<br>5. திரு பி. கக்கன், 13-4-1957—14-3-1962<br>6. திரு ராமையா, 13-4-1957—14-3-1962<br>7. திருமதி லூர்தம்மாள் சைமன் 13-4-1957—14-3-1962 |

| ஆளுநர்கள் (1) | முதலமைச்சர்கள் (2) | அமைச்சர்கள் (3) |
|---|---|---|
| | **16** | |
| திரு பிஷ்ணுராம் மேதி, 25-1-1958—3-5-1964 | திரு கே. காமராஜ, 15-3-1962—2-10-1963 | 1. திரு எம். பக்தவச்சலம், 15-3-1962—2-10-1963 |
| | | 2. திருமதி ஜோதி வெங்கடாசலம், 15-3-1962—2-10-1963 |
| | | 3. திரு ஆர். வெங்கட்டராமன், 15-3-1962—2-10-1963 |
| | | 4. திரு பி. கக்கன், 15-3-1962—2-10-1963 |
| | | 5. திரு வி. ராமையா, 15-3-1962—2-10-1963 |
| | | 6. திரு நல்ல சேனுதிபதி சர்க்கரை மன்ருடியார். 15-3-1962—2-10-1963 |
| | | 7. திரு பூவராகன், 15-3-1962—2-10-1963 |
| | | 8. திரு எஸ். எம். அப்துல் மஜீத், 85-3-1962—2-10-1963 |

| | | |
|---|---|---|
| 17 | | |
| 1. திரு பிஷ்ணுராம் மேதி, 25-1-1958—3-5-1964. | திரு எம்பக்தவச்சலம், 2-10-1963—5-3-1967 | 1. திருமதி ஜோதி வெங்கடாசலம். 2-10-1963—5-3-1967 |
| 2. மகாராஜா ஸ்ரீ ஜெய சாமராஜ உடையார், 4-5-1964—3-1-1966. | | 2. திரு ஆர். வெங்கடராமன் (2-10-1963-ல் அமைச்சராக நியமனம், பதவி ஏற்றது 23-101963) 23-10-1963—5-3-1967 |
| 3. திரு பி,சந்திராரெட்டி, 4-1-1366—27-6-1966 | | 3. திரு பி. கக்கன், 2-10-1963) |
| 4. திரு சர்தார் உஜ்ஜல் சிங், 28-6-1866—26-5-1971 | | 4. திரு வி. ராமையா, 2-10-1963—5-3-1967 |
| | | 5. திரு நல்லசேனுதிபதி சர்க்கரை மன்ருடியார், 2-10-1963—5-3-1967 |
| | | 6. திரு ஜி. பூவராகவன், 2-10-1963—5-3-1967 |
| | | 7. திரு எஸ். எம். அப்துல் மஜீது, 2-10-1963—5-3-1967 |

| ஆளுநர்கள் (1) | முதலமைச்சர்கள் (2) | அமைச்சர்கள் (3) |
|---|---|---|
| | 18 | |
| திரு சர்தார் உஜ்ஜல் சிங், 28-6-1956—26-5-1971 | திரு சி. என். அண்ணாதுரை, 6-3-1967—3-2-1969 | 1. திரு இரா. நெடுஞ்செழியன், 6-3-1967—3-2-1969 |
| | | 2. திரு எம். கருணாநிதி, 6-3-1967-3-1969 |
| | | 3. திரு கே. ஏ. மதியழகன், 6-3-1967—3-2-1969 |
| | | 4. திரு ஏ. கோவிந்தசாமி, 6-3-1967—3-2-1969 |
| | | 5. திருமதி சத்தியவாணிமுத்து, 6-3-1969—3-2-1969 |
| | | 6. திரு எஸ். மாதவன், 6-3-1967—3-2-1969 |
| | | 7. திரு எஸ். ஜே. சாதிக் பாட்சா, 6-3-1967—3-2-1969 |
| | | 8. திரு எம். முத்துசாமி, 6-3-1967—3-2-1969 |

| | 19 | |
|---|---|---|
| திரு சர்தார் உஜ்ஜல் சிங், 28-6-1969—26-5-1971 | திரு இரா. நெடுஞ்செழியன், 3-2-1969—10-2-1969 | 1. திரு மு. கருணாநிதி 3-2-1969—10-2-1969 |
| | | 2. திரு கே. ஏ. மதியழகன், 3-2-1969—10-2-1969 |
| | | 3. திரு ஏ. கோவிந்தசாமி, 3-2-1969—10-2-1969 |
| | | 4. திரு சத்தியவாணிமுத்து, 3-2-1969—10-2-1969 |
| | | 5. திரு எஸ். மாதவன், 3-2-1969—10-2-1969 |
| | | 6. திரு எஸ். ஜே. சாதிக் பாட்சா, 3-2-1969—10-2-1969 |
| | | 7. திரு எம். முத்துசாமி, 3-2-1969—10-2-1969 |
| | **20** | |
| திரு சர்தார் உஜ்ஜல்சிங் 28-6-1966—26-5-1971 | திரு மு. கருணாநிதி, 10-2-1969—15-3-71 | 1. திரு இரா. நெடுஞ்செழியன், 13-8-1969—15-3-1971 |
| | | 2. திரு கே. ஏ. மதியழகன், 10-2-1969—10-9-1970 |
| | | 3. திரு ஏ. கோவிந்தசாமி, 10-2-1969—18-5-1969 |

| ஆளுநர்கள் (1) | முதலமைச்சர்கள் (2) | அமைச்சர்கள் (3) |
|---|---|---|
| | | 4. திருமதி சத்தியவாணிமுத்து, 10-2-1969—15-3-1971 |
| | | 5. திரு எஸ். மாதவன், 10-2-1969—15-3-1971 |
| | | 6. திரு எஸ். சாதிக் பாட்சா, 10-2-1969—15-3-1971 |
| | | 7. திரு எம். முத்துசாமி, 10-2-1969—10-9-1970 |
| | | 8. திரு ப. உ. சண்முகம், 15-2-1969—15-3-1971 |
| | | 9. திரு சி. பா. ஆதித்தனர், 15-12-1969—15-3-1971 |
| | | 10. திரு கே. வி. சுப்பையா, 15-2-1969—15-3-1971 |
| | | 11. திரு. ஓ. பி. ராமன், 15-2-1969—15-3-1971 |

12. திரு கே. வேழவேந்தன்,
8-8-1969—10-9-1970

13. திரு என். வி. நடராசன்,
8-8-69—15-3-1971

**21**

1. திரு சர்தார் உஜ்ஜல் சிங்,
28-6-1966—26-5-71

2. திரு கோதர்தாஸ்
காளிதாஸ் ஷா,
26-5-1971—

திரு மு. கருணாநிதி,
15-3-1971—

1. திரு இரா. நெடுஞ்செழியன்,
15-3-1971—

2. திரு கே. அன்பழகன்,
15-3-1971

3. திரு. என். வி. நடராசன்,
15-3-71—

4. திருமதி சத்தியவாணிமுத்து,
15-3-1971—

5. திரு ப. உ. சண்முகம்,
15-3-1971—

6. திரு எஸ். மாதவன்,
15-3-1971

7. திரு எஸ். ஜே. சாதிக்பாட்சா,
15-3-1971 --

| ஆளுநர்கள் (1) | முதலமைச்சர்கள் (2) | அமைச்சர்கள் (3) |
|---|---|---|
| | | 8. திரு சி. பா. ஆதித்தனர், 15-3-1971— |
| | | 9. திரு ஏ. பி. தர்மலிங்கம், 15-3-1971— |
| | | 10. திரு. கே. ராஜாராம், 15-3-1971— |
| | | 11. திரு. ஓ. பி. ராமன், 15-3-1971— |
| | | 12. திரு. எஸ். ராமச்சந்திரன், 15-3-1971 |
| | | 13. திரு. எம். கண்ணப்பன், 15-3-1971 |

I

# BIBILIOGRAPHY

## GOVERNMENT

1. G.O.No.148, Legislative Department, dated 30-11-1914
2. G.O.No.305, Public Department, dated 17-3-1917
3. G.O No.1415, Public Department, dated 3-12-1917
4. G.O.No. 788, Public Reform Department, dated15-12-1920
5. G.O.No480, Public Department, dated 16-6-1921
6. G.O.No.584, Ordinary Public Department, bated 10-9-1921
7. G.O.No.613, Public Department, dated 16 9-1921
8. G.O.No.32, Law Legislative, dated 23-6-1924
9. G.O.No.379, Law Legislacive, dated 24-6-1824
10. G.O.No.733, Public Department, dated 3-8-1925
11. G.O.No.521, Law Legislative, dated 8-12-1925
12. G.O.No.272, Law Legislative, dated 5-12-1932
13. G.O.No.114, Public General, dated 31-11-1933
14. G.O.No.205, Public General Department, dated 4-3-1933
15. G.O.No.734, Public Reform Department, dated 10-5-1935
16. G.O.No.1101, Public Special, dated 5-7-1935
17. G.O.No.1120, Public General Department, dated 8-7-1935
18. G.O.No.561, Law Legislative, dated 11-12-35

